உ

சிவமயம்

# அருணாசலப் புராணம்

## (பழைய உரையுடன்)

ஆசிரியர் :

**சைவ எல்லப்ப நாவலர்**

பதிப்பாசிரியர் :

"தமிழ்க்கடல்"

"சிவமணி", "சிவம்பெருக்கும் சீலர்"

**ராய. சொ.**

வெளியீடு :

**அருணாசலேசுவரர் கோயில்**

**திருவண்ணாமலை**

**5 – 12 – 70**

*சாதாரண – கார்த்திகை – 20*

உ
சிவமயம்

# பொருளடக்கம்

| தொடர் எண் | பொருள் | பக்கம் |
|---|---|---|
| 1 | பதிப்புரை - *ராய. சொ.* | க |
| 2 | வாழ்த்துரை - *தவத்திரு இராமனுத சுவாமிகள்* | ரு |
| 3 | அணிந்துரை - *திரு. கே. எஸ். நரசிம்மன், அறநிலைய ஆணையர்* | அ |
| 4 | முன்னுரை - *வாகீசகலாநிதி கி. வா. ஜ.* | கo |
| 5 | நூல் | 1 |
| 6 | பாட்டு முதற்குறிப்பு அகராதி | 294 |
| 7 | பிழை திருத்தம் | 305 |

உ

சிவமயம்

அருணாசலப்புராணம்

# உள்ளுறை

உ
சிவமயம்

அருணாசலப்புராணம்

# பதிப்புரை

தமிழ்க்கடல், சிவமணி, சிவப்பெருக்கும் சீலர், ராய. சொ.

அருணாசலப்புராணம் எல்லப்ப நாவலர் என்ற பெரும் புலவரால் இயற்றப்பெற்றது. இவருடைய அளவுகடந்த சைவப் பற்றுக் காரணமாக, இவர் சைவ எல்லப்ப நாவலர் என்று அழைக்கப்பெற்றார். இப்புலவர் சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன்னே வாழ்ந்தவர் என்ப.

அருணாசலப்புராணம் பாடியவர் எல்லப்ப நயினார் என்ற ஒருவர் என்றும், இவர் எல்லப்ப நாவலருக்குச் சில ஆண்டுகள் முன்னர் வாழ்ந்தவர் என்றும் சிலர் கூறுவர். எல்லப்ப நாவலருக்கே எல்லப்ப நயினார் என்ற பெயரும் உண்டு எனவும், இரண்டு பெயருடையோரும் ஒருவரே என்றும், அவரே அருணாசலப்புராணம் இயற்றியவர் என்றும் வேறு சிலர் கூறுவர். அது எப்படிவேண்டு மானாலும் இருக்கட்டும். தொன்றுதொட்டுக் கூறிவந்த மரபுப்படி சைவ எல்லப்ப நாவலரே அருணாசலப் புராணத்தின் ஆசிரியர் என்று நாம் கொள்வோம்.

இந்நூலாசிரியர் நல்ல பாவலர்; இப்புராணத்தை ஆற்றொழுக்காக, கவிதைச் சுவை நிரம்ப, கற்பனை வளம் செறிய, அருமையாகப் பாடியுள்ளார். சிவபெருமானின் அடி, முடி, தேடிய தந்தையும் மைந்தனுமாகிய திருமாலும், பிரமனும் தமக்குள் யார் பெரியவர் என்பது குறித்துப் போட்டுக்கொள்ளும் சண்டையை, சுவைபட ஆசிரியர் பாடியிருக்கின்றார். இவர்தம் பாடல்கள் பெரிதும் சிவமணம் கமழ்வன.

அருணாசலப் புராணத்திற்குப் பழைய உரை ஒன்று இருக்கிறது. அவ்வுரையாசிரியர் யார் என்று அறியக்கூடவில்லை. நூலுடன் அவ்வுரையும் சேர்ந்து முன்னே அச்சாகியிருக்கின்றது. அப்பதிப்பு இன்று கிடைத்தற்கு அரிதாக இருக்கின்றது. எனவே அருணாசலப் புராணத்தை அச்சிட வேண்டும் என்று, அண்ணாமலையார்கோவில்

அறங்காவலர் விரும்பினர். அப்பணியை யான் செய்யவேண்டும் என்று அவர்கள் வற்புறுத்தலுக்கு இணங்கி ஏற்றுக்கொண்டேன். சிறந்த இறை பணிதான் என்பதில் உவகை.

ஆனால் ஏராளமான நூல்கள் வெளியிட்டுப் பழகிய நான், இப்புராணத்தை வெளியிடுவதில் மிகவும் சிரமப்படவேண்டியதாகி விட்டது. முந்திய பதிப்பிலுள்ள பிழைகளுக்கு எல்லையே இல்லை. அண்ணாமலையார் அடி, முடியைத் தேடி அறிவதைவிட, அப் புராணத்திலுள்ள பிழைகளைக் களைவது அரிதாகிவிட்டது. எனவேதான் எவ்வளவோ முயன்று திருத்தியும், பெரிய பிழை திருத்தம் போடவேண்டிய அவசியம் வந்துவிட்டது. யாப்புக்குக் கட்டுப்படாமல் அச்சிடப்பட்ட பழைய பாடல்களை யெல்லாம் பெரிதும் முயன்று திருத்தினேம். பழைய உரையில் இருந்த வடமொழித் தொடரைக் கணக்கிட முடியாது. கூடுமானவரைக் கருத்து மாறுபடாமல் பற்பல இடங்களில் நல்ல தமிழில் திருத்தம் செய்தேம்.

திருவண்ணாமலை, பெரியார்கள் பலராலும் பெரிதும் போற்றித் துதிக்கப்பெற்ற தலம்.

'அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ணம் அறுமே'

என்பர் சம்பந்தப்பெருமான்.

'ஆதியே! அமரர் கோவே! அணிஅணா மலையுளானே'

என்பர் அப்பர் அடிகள்.

'அண்ணா மலையானைப் பாடுதுங்காண் அம்மானாய்!'

என்பர் மணிவாசகப் பெருமான்.

'அண்ணா மலைமேல் அணிமலையை
ஆரா அன்பின் அடியவர்தம்
கண்ணார் அமுதை'

என்பர் சேக்கிழார் அடிகள்,

'கற்ருர்தொழும் அருணசலம்'

என்பர் வில்லிபுத்தூராழ்வார்.

'ஞானத் தபோதனரை வாஎன்று
அழைக்குமலே அண்ணு மலே'

என்பர் குருநமச்சிவாயர்.

'பெருமானே, அருணகிரிப் பெம்மானே,
அடிபணிந்து பிறவி தீர்ப்பாம்'

என்பர் இந்நூலாசிரியர்.

அண்ணுமலே அத்துணைப் பெருஞ்சிறப்புடையது. அங்கு நடைபெறும் கார்த்திகைப் பேரொளி கண்ணேயும் கருத்தையும் கவர்வது.

இத்தலத்தின் சிறப்புக்களே யெல்லாம் விரித்துப் பாடியிருக்கின்ருர் இந்நூலாசிரியர். நல்ல இனிய பாடல்கள். தலபுராணங்கள் பல இருப்பினும் விரல்விட்டு எண்ணத்தக்க சில நல்ல புராணங்களுள் அருணசலப் புராணமும் ஒன்று. இதனே வெளியிடும் பேறுபெற்றமைக்கு மகிழ்ச்சி.

இப்பணியை மேற்கொண்ட கோவில் அறங்காப்பாளர்களுக்கும், நிருவாக அதிகாரிக்கும் பாராட்டு.

வாழ்த்துரை வழங்கிய, அருணேயில் அமர்ந்து, அரும்பணி ஆற்றிவரும் ஈசானியமடத்துத் தலேவர், தவத்திரு. இராமனுத சுவாமிகளுக்கு வணக்கம்.

இந்நூலுக்கு அணிந்துரை அளித்த அறநிலேயப் பணியைச் சிறப்பாக நடத்திவரும் அறநிலேய ஆட்சித்துறை ஆணையர் நரசிம்மன் அவர்கட்கு அன்பு.

இந்நூலே முழுதும் ஆய்ந்து பல கோணங்களிலும் சிறப்புற விரிவாக முன்னுரை தந்து உதவி, என்பொறுப்பைப் பெரிதும் குறைத்த, சிறந்த புலவர், வாகீச கலாநிதி 'கி. வா. ஜ.' அவர்கட்கு நன்றி.

என் நூல் வெளியீட்டுப் பணியில் உடன் இருந்து, எனக்குப் பெரிதும் ஊக்கம் அளித்து, சிறந்த பணியை மேற்கொண்டுள்ளவரும் இவ் அருணாசலப்புராண வெளியீட்டில் அரும்பாடுபட்டு உழைத்தவருமான என் அருமை மாணாக்கர் இரா. பதுமநாபனுக்கு வாழ்த்து.

திருவண்ணாமலையின் சிறப்புக்குக் காரணமாக விளங்கும் திருக் கார்த்திகையின் இவ் விழாவில், இந்நூல் வெளிவரத் திருவருள் சுரந்த அண்ணாமலை அண்ணலுக்கு,

**வணக்கம்! வணக்கம்!!**

அருணை
5—12—70

**ராய. சொ.**

சிவமயம்

**தவத்திரு. இராமனுஜசுவாமிகள்,**
தலைவர், ஈசானியமடம்—திருவண்ணாமலை.

## வாழ்த்துரை

புராணங்கள் 18 என்பது மரபு. ஆயினும் உபபுராணம், உப புராண உபபுராணம் என்பவை 36ம் சேர்ந்து புராணங்கள் 54 ஆகத் தொகுக்கப் பெற்றுள்ளன. இவை தவிர, இறைவன் திருக் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள திருத்தலங்கள் பலவற்றிற் கும் தனித் தனியாக, சிறப்புப் புராணங்கள் உள்ளன. பக்திஇயலில் புராணங்கள் சிறப்பான இடம் பெறுகின்றன. "புராணம்" என்பது கால எல்லைகடந்த பழமையானது எனப் பொருள்படும். 'முன்னைப் பழம்பொரு'ளான இறைவனின் அருள் விளையாடல்கள் பற்றிய வரலாறு ஆனமையின் "புராணம்" எனப் பெயர் பெறுவதாயிற்று. வரலாறுகள் பழமையான போதினும் அதன் மேலாம் தத்துவக் கருத்துகள் எக்காலத்துக்கும் பொருந்துவனவாக நிலைத்து நின்று மக்கட் சமுதாயம் இறையுணர்வு பெற்று உய்ய உதவுவதாகின்றன.

பக்தி இலக்கியங்களைப் படிப்பவர்கள் அதற்கு உரிய தகுதி யுடையவராதல் வேண்டும்; இறைவன்பால் உண்மையான அன்பு அவன் அருட் செயல்களில் திடநம்பிக்கை, தத்துவக் கண்ணோட் டம் ஆகிய பண்பினராதல் வேண்டும்.

புராணங்களைப் படிக்கும்பொழுது தத்துவக் கருத்துக்களை விட்டு, வெறும் கதையை மட்டிலும் கொள்பவர், சில இடங்களில் தமது சிற்றறிவிற்குப்பொருந்தாமைகண்டு இடர்ப்படுவது இயல்பே. இதற்குச் சிற்றறிவின்பாற் பட்ட அறியாமையே காரணமாகும்.

சான்றோர்களான நமது முன்னோர்கள் தமது ஆழ்ந்த நுண் ணறிவுத் திறத்தாலும், வாழ்க்கையில் எதிர்ப்பட்ட பல்வேறு வகையான வாழ்க்கை அனுபவங்களாலும் அகத்தில் ஆய்ந்து, கண்டறிந்த தத்துவ உண்மைகளைப் பெருநிதியாக நமக்கு அளித் துச் சென்றுள்ளனர். அவைகளில் இறையுணர்வு ஊட்டும் 'இதிகாசங்கள்' 'புராணங்கள்' சிறப்பாகக்குறிப்பிடத்தக்கனவாகும்.

எல்லையற்ற பரம்பொருளான இறைவன் "அருவனுயினும் அன்பர்க்கு உருவனுய் வருவன்" என்பது புராணங்களின் கருப் பொருளாகும். இறைவனது அருள்திறம் விண்ணும் மண்ணும் நிறைந்து பரந்ததாகும். ஊர்வன, பறப்பன, நடப்பன ஆதிய உயிர் வர்க்கங்கள் அனைத்துமே இறைவனிடம் ஈடுபாடு கொள் வதற்குத் தகுதி உடையன என்னும் பரந்த சம நோக்கு, அன்புத் தத்துவம், எல்லாப் புராணங்களிலும் சிறந்து விளங்கக் காண் கிறோம். எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய் நின்றிலங்கும் பராபரன் உயிர் களின் தூய அன்பு ஒன்றையே உவந்து ஏற்று, சிறிய வடிவமைந்த எறும்புக்கும் உருவில் பெரியதான யானைக்கும் அவற்றின் பூசனை யைக் கருதி அருள்பாலித்தான் என்பது புராண வரலாறு. கரிக் குருவிக்கு உபதேசம் செய்தது, நாரைக்கு முத்தி கொடுத்தது, பன்றிக்குட்டிகளுக்கு முலையூட்டியது, ஏழை வந்தியின் பிட்டுக்கு மண் சுமந்தது போன்ற புராண வரலாறுகள் இறைவனது எல்லை யற்ற தனிப் பெருங் கருணைத் தத்துவத்தை நமக்கு நன்கு புலப்படுத்துவதாகும்.

அருணுசலப்புராணத்தில் சிறப்பாக இடம்பெறுவது "அரியொடு பிரமற்கு அளவறியொண்ணுன்" என்ற தத்துவக்கோட்பாடு. இந்த வரலாற்றினை வெறும் கதை வடிவில் நோக்குவார் புராணத்தில் கூறப்பெறும் அரியும் அயனும்போல் பிணக்குறுவது இயல்பு. இவ் வரலாற்றைத் தத்துவநோக்குடன் பார்ப்பதே முறையாகும்.

'செல்வத்தால் எதையும் சாதிக்க இயலும்' என்று செருக் குறுவர் ஒரு சாரார். 'அறிவுத்திறத்தாலே எதையும் ஆக்கிப் படைத் திடலாம்' என ஆணவம் பேசுவர் மற்ருெரு சாரார். இரு சாராரும் 'என் நிகர் எவருமிலர்' என்று இறுமாப்பு அடையுங்கால், இறை யருள் முன்வந்து, பொருட்செல்வம் அறிவுச்செல்வம் ஆகிய இரண்டினும் மேம்பாடுடையது. அருட்செல்வமேஎன்பதை உணர்த் துகிறது. இவ் உண்மைக் கருத்தையே செல்வத்தின் தனியரசியான திருமகளை மார்பிலே தாங்கிய திருமாலும் அறிவுத்தெய்வமாகிய கலைமகளைத்தேவியாக நாவிலே கொண்ட பிரமனும், செல்வத்தாலும் அறிவாலும் தோன்றக் கூடிய அகங்காரத்தால் கொண்ட சண்டையே அடிமுடிதேடிய கற்பனை. தத்துவநோக்கில் காண்பார்க்கு இதில் எவ்விதப் பிணக்கும் ஏற்படுவதற்கில்லை. இதேமுறையில் புராணங்களில் ஆங்காங்கு வலியுறுத்தப் பெறும் தத்துவக் கருத் துக்களை உணர்ந்து சிந்திப்பவர் இறையருள் பெற்று நலமடைவர்,

அருணசலப் புராணம் முன்னர் அச்சிடப்பெற்றுள்ளது. பின்னர் பல்லாண்டுகளாகப் பதிப்புகள் வெளிவராமல் மறைந்து விடக்கூடியதாக விருந்த தருணத்தில், திருவண்ணுமலை அருணசலேசுவரர் தேவஸ்தான அறங்காவலர்கள் முன்வந்து மீண்டும் சிறப்பான முறையில் புதுப்பித்து வெளியிடக் கருதியது பெரிதும் பாராட்டுதற்குரியது. அவர்களுக்கு எமது உளம் கனிந்த நல் வாழ்த்துக்கள்.

இதனைக் கண்கவர் வனப்புடன் புதிய நல்ல பதிப்பாக வெளியிடுவதில், தமது உடல் தளர்ச்சியைச் சிறிதும் பொருட்படுத்தாமல் முழுப் பொறுப்பையும் மேற்கொண்ட 'தமிழ்க்கடல்' 'சிவமணி' 'சிவம் பெருக்கும் சீலர்' அழகப்பா கல்லூரித் தமிழ் ஆராய்ச்சித்துறை இயக்குநர், உயர்திரு. இராய. சொ. அவர்களுக்கு அண்ணுமலையார் ஆலய அறங்காவலர்கள் சார்பாக உளம்நிறைந்த நன்றியையும் பாராட்டுதலையும் உரியவாக்குகிறேம்.

**இராமனுதசுவாமிகள்.**

# அணிந்துரை

**திரு. கே. எஸ். நரசிம்மன்,** B. A., B. L., I. A. S.
ஆணையர், அறநிலைய ஆட்சித்துறை, தமிழக அரசு •

அமிழ்தினும் இனிய நமது தமிழ் மொழியின்கண் உள்ள இலக்கியங்கள் பற்பல. அவைகளுள் தலபுராணங்கள் என்பனவும் ஒருவகையாகும். நம் தமிழ்நாட்டில் பழமையும் பெருமையும் மிகுந்த பற்பல தலங்கள் உள்ளன. அத்தலங்களில், ஆழ்வார்களும், நாயன்மார்களும் அன்புடன் பாடிப் போற்றிய அழகிய சிறந்த கோயில்கள் அமைந்து திகழ்கின்றன. அக்கோயில்கள் தெய்விக அருட் சிறப்பும், வரலாற்றுச் சிறப்பும் வாய்ந்தன. அவை, பல்லாயிரக்கணக்கான மக்கள் வந்து வணங்கி மகிழும் மாண்புடன் விளங்கி வருகின்றன.

இத்தகைய பல பெரும் சிறப்புக்களை உடைய தலங்களைக் குறித்த, பழம்பெரும் செய்திகளை யெல்லாம், ஒருங்கினிது தொகுத்து விளக்கும் சிறந்த இலக்கியங்களே தலபுராணங்கள் என வழங்கப்பெற்று வருகின்றன. இவைகள் அவ்வத் தலங்களின் பெருமைகளையும், வரலாறுகளையும், அவற்றை வழிபடும் முறை, வழிபடுவோர் எய்தும் பயன், முதலிய பல செய்திகளையும்பற்றி நன்கினிது எடுத்து விளக்குகின்றன. சிறந்த பெரும் கவிஞர்களால் பாடப்பெற்றுள்ளன. இலக்கியச்சுவை, வரலாற்றுச் சுவை, சமய தத்துவக் கருத்து நுட்பச்சுவை, கவிதைச் சுவை முதலிய பற்பல அரிய சுவை நலங்கள், தலபுராணங்களில் அமைந்திருத்தலைக் காணலாம்.

திருவிளையாடற் புராணம், காஞ்சிப் புராணம், தணிகைப் புராணம், திருக்குற்றாலத் தலபுராணம் முதலிய, பல புகழ்பெற்ற தல புராணங்களைப் போல, அருணாசலப்புராணம் தமிழறிஞர்களால் பெரிதும் போற்றிப் பாராட்டப் பெற்று வரும் புகழ்மிக்க சிறந்ததொரு தல புராணமாகும். இதனை இயற்றி யருளிய ஆசிரியர், சைவ எல்லப்பநாவலர் என்னும் தமிழ்ப் பெருங்கவிஞரும் சான்றோரும் ஆவர். அண்மைக் காலத்தில் விளங்கிய அரும்பெருங் கவிஞர்களுள், மிக்க சிறப்பும் முதன்மையும் இவருக்கு உண்டு. இவர் இயற்றி யருளிய 'திருவருணைக் கலம்பகம்' என்னும்

பிறிதொரு நூலும், கவிதைச் சுவையும் கற்பனைச் சுவையும் மிகுந்து விளங்குவதொன்றாகும். பழைய காலத்துக் குருகுல முறையில் தமிழ் பயிலும் மாணவர்கள், இவ்விரு நூல்களையும் இனிது போற்றிக் கற்கும் வழக்கம் இருந்துவந்தது. இஃது ஒன்றே, சைவ எல்லப்ப நாவலரின் கவிதைத் திறனையும், அருணசலப் புராணத்தின் அளப்பரிய சிறப்பையும், அறிவிக்க வல்ல நற்பெரும் சான்றாகும்.

"அரகர என்பது கடலின்
முழங்கியது அருணை வளம்பதியே"
"அளகை வளம்பதி தனிலும்
வளம்பதி அருணை வளம்பதியே"

என்பனபோன்று வரும் அருணசலப்புராண வரிகளின் இனிய ஓசை நயம், எவருள்ளத்தையும் கொள்ளைகொள்வனவாகும். "ஒரு மானைக் கரத்தினில் வைத்து, ஒரு மானைச் சிரத்தினில் வைத்து, உலகம் ஏழும் தரும் மானை இடத்தினில் வைத்து" என்பன போன்று வரும் பாடல்களின், சொல்லழகும் பொருளழகும், தொடர்நயமும், அணிநயமும் எவரும் வியக்கத் தக்கனவாம்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த அருணசலப் புராணத்தினைத் திருவண்ணமலை அருணசலேசுவரர் தேவஸ்தானத்தார், "தமிழ்க் கடல்" "சிவமணி" "சிவம்பெருக்கும் சீலர்" திரு. ராய. சொ. அவர்களைக் கொண்டு, பழைய உரையுடன், மிகவும் சிறந்த முறையில் திருந்திய பதிப்பாக வெளியிட்டுள்ளமை கண்டு பெரிதும் மகிழ்கின்றேன். பக்தர்களுக்கு மிகவும் பயன்படும் இந்நூலை, மிகவும் நல்லமுறையில் பதிப்பித்துதவிய திரு. ராய. சொ. அவர்களுக்கும், இதனைப் பதிப்பித்தற்கு முயற்சி எடுத்துக்கொண்ட அறங்காவலர் பெருமக்களுக்கும் என்னுடைய பாராட்டுதல்களையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

K. S. நரசிம்மன்.

உ
சிவமயம்

# முன்னுரை

## வாகீச கலாநிதி திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள்

சிவபெருமானுக்குரிய திருவடிவங்களில் முதலாவதாக அமைவது இலிங்கோற்பவ மூர்த்தி. அது அருவுருவாகும். இறைவன் அருவாகவே நின்றால் உலகுயிர்களுக்குப் பெரு நன்மை விளைக்க முடியாது என்று திருவுள்ளம் கொண்டு, அவர்களின் கண்காணத் தோன்ற நினைத்தபோது முதலில் அருவுருவாகவும் பின்பு உருவாகவும் தோற்றியருளினான். அருவுக்கும் உருவுக்கும் இடைநின்றதே அருவுருவம். கட்புலனாகிய திருவடிவம் அது. ஆதலின் அதுவே முதல் மூர்த்தி ஆயிற்று.

சிவாலயங்களில் பெரும்பாலானவற்றில் சிவலிங்கப்பெருமான் எழுந்தருளியிருக்கும் கருப்ப இல்லுக்குப் பின்னுள்ள புரையில் (கோஷ்டத்தில்) இந்த இலிங்கோற்பவ மூர்த்தி எழுந்தருளியிருப்பதைக் காணலாம். கருப்ப இல்லின் அகத்தே உள்ள மூர்த்தியின் வரலாற்றைப் புறத்தே உள்ள இத்திருவுருவம் காட்டுகிறது. மாலும் அயனும் தேடச் சோதிமலையாக நின்ற வரலாற்றையே இலிங்கோற்பவத் திருவுருவம் புலப்படுத்துகிறது. திருஞான சம்பந்தப்பெருமான் தாம் பாடிய ஒவ்வொரு திருப்பதிகத்திலும் ஒன்பதாவது பாசுரத்தில் இந்த மூர்த்தியைக் குறிப்பது வழக்கம்.

இந்த மூர்த்தியின் வரலாற்றை நினைப்பூட்டிக்கொண்டு நிற்பது திருவண்ணாமலை. அங்கே அயன், திருமால் என்னும் இருவருடைய தருக்கைத் தவிர்க்க அவர்களால் அளவிடமுடியாமல் சோதிமலையாக இறைவன் நின்றானென்றும், அதுவே மாணிக்க மலையாகவும், பொன்மலையாகவும், கல்மலையாகவும் ஒவ்வொரு யுகத்திலும் ஆயிற்றென்றும் அருணாசலப் புராணம் கூறும்.

பெரும்பாலான சிவாலயங்களின் கருப்ப இல்லின் பின்னே இலிங்கோற்பவமூர்த்தி இலங்குவதால் அவ்வாலயங்களில் எல்லாம் திருவண்ணாமலையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருப்பதாகக் கொள்ளலாம். அப்படியே திருஞானசம்பந்தர் எந்தத் தலத்துக்குப் பதிகம் பாடியிருந்தாலும் அப்பதிகத்தில் அண்ணாமலை அரனும்

இருப்பதை அறியலாம். ஆகவே தமக்கென்று தனியே தலமும் பதிகங்களும் உடைய சிவபெருமான் எல்லாக் கற்கோயில்களிலும் சொற்கோயில்களிலும் விரவியிருக்கிருன் என்று ஒருவாறு சொல்லலாம்.

இத்தகைய சிறப்பையுடைய திருவண்ணுமலை நடு நாட்டில் நிலவுகிறது; நினைக்க முத்தி தரும் தலம் என்ற பெருமை உடையது. இந்த மலைஉள்ள ஊருக்குப் பழங்காலத்தில் அண்ணு என்பது பெயர்; ஆகாரஈறு அத்துச்சாரியை பெறுவதற்கு எடுத்துக் காட்டாகத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் கூறும் 'அண்ணுத் தேரி' என்பது அண்ணு என்னும் ஊரில் உள்ள ஏரி என்ற பொருளை உடையது. அதிலிருந்து அண்ணு என்பது இந்நகரின் பழம்பெயர் என்பது புலனுகும். இவ்வூரையுள்ளிட்ட நாட்டுக்கு அண்ணு நாடு என்று பெயர். இவ்வூரில் உள்ள மலைக்கு அண்ணுமலை என்று பெயராயிற்று.

திருவண்ணுமலையில் ஆண்டுதோறும் கார்த்திகைத் திருநாளில் மலையின்மேல் விளக்கு ஏற்றி வழிபடுவது வழக்கம். சங்ககாலம் முதலே 'குன்றில்மேல் இட்ட விளக்கு' என்ற பழமொழி வழங்கி வருகிறது. பதினெண் கீழ்க்கணக்கில் ஒன்ருகிய பழமொழியில் அது வருகிறது. அந்த நூல் எழுந்த காலத்திலேயே அது பழைய மொழியாக இருக்குமானுல், அதற்குமுன் பல பல காலமாகக் குன்றில்மேல் விளக்கு ஏற்றும் மரபு இருந்திருக்க வேண்டும் என்பதில் ஐயம் ஏது? அப்படியே கார்த்திகை விளக்கு என்பதும் சங்க நூல்களில் குறிக்கப்பெறுகிறது. செங்காந்தட் பூவுக்குக் கார்த்திகை விளக்கை உவமை கூறுவது சங்கச் சான்ருேர் மரபு. அதிலிருந்து திருக்கார்த்திகையில் திருவிளக்கு ஏற்றும் வழக்கம் மிகமிகப் பழமையானது என்று தெரியவரும்.

சங்க காலத்திலேயே குன்றின்மேல் இட்ட விளக்கினுலும் கார்த்திகை விளக்கினுலும் தமிழ்நாடு எங்கணும் புகழ்பெற்றதாக விளங்கியது திருவண்ணுமலை என்பதை இந்தச் சான்றுகள் காட்டும்.

தேவார காலத்தில் இதன் பெருமை பின்னும் மிகுதியாயிற்று. திருஞானசம்பந்தரும் அப்பர் சுவாமிகளும் இதற்குத் திருப் பதிகங்கள் பாடியிருக்கிருர்கள். மாணிக்கவாசகப் பெருமான்

இத் தலத்தில் எழுந்தருளிச் சில பதிகங்கள் திருவாய்மொழிந் தருளியிருக்கிறுர். இத்தலத்தில் முருகவேளுடைய பேரருளைப் பெற்ற அருணகிரிநாதப் பெருமான் பாடிய திருப்புகழ்ப் பாடல்கள் பல. இவற்றையன்றிக் குருநமச்சிவாயர், குகைநமச்சிவாயர், ரமணபகவான் முதலிய அருளாளர்களும், சிவப்பிரகாசர், எல்லப்ப நயினுர் முதலிய புலவர் பெருமக்களும் பாடிய பிரபந்தங்களும் தனிப் பாடல்களும் பலப்பல. இத்தலத்தைப் பற்றிய புராணங்கள் இரண்டு; ஒன்று அருணகிரிப் புராணம்; மற்றொன்று அருணுசலப் புராணம். வடமொழியிலும் இதற்கு ஒரு மான்மியம் உண்டு.

பிற தலங்களைப்பற்றிய நூல்களிலும் வேறு நூல்களிலும் திருவண்ணுமலையைப் பற்றிய செய்தி அங்கங்கே காணப்படும்.

அருணுசலப் புராணம் என்பது பதினுரும் நூற்ருண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த எல்லப்ப நயினுர் என்பவர் இயற்றியது. தாழைமா நகரில் தோற்றிய அவரை எல்லன், எல்லநயினுன், எல்லப்ப நாவலர், எல்லபூபதி, உண்ணுமுலை எல்லப்ப நயினுர் என்று வெவ்வேறு வகையில் வழங்கி வந்தனர். காலிங்கராயன் கோத்திரத்தில் உதித்தவராதலின் அவரைக் காலிங்கராயன் உண்ணுமுலை எல்லப்ப நயினுர், எல்லன் காலிங்கனெனவும் வழங்குவதுண்டு. திருவிரிஞ்சைப் புராணம், செவ்வந்திப் புராணம் இவரால் இயற்றப் பெற்றவை. திருவண்ணுமலையைப் பற்றி அருணை அந்தாதி, அருணைக் கலம்பகம் என்ற இரண்டு சிறு நூல்களையும் இவர் இயற்றியுள்ளார். திருவாரூர்க்கோவையும், சௌந்தரியலகரியின் உரையும் இவரால் இயற்றப்பெற்றவை.

காந்த புராணத்தில் உள்ள உருத்திரசங்கிதையிலும், இலிங்க புராணத்திலும் இந்தத் தலத்தின் பெருமை வருகிறது. அவற்றைத் தொகுத்துத் தமிழ்ப் பாவினுல் எல்லப்ப நாவலர் இப்புராணத்தை இயற்றினுர். இப்புராணத்தில் பதின்மூன்று சருக்கங்களும், 649 பாடல்களும் உள்ளன. முதல் ஏழு சருக்கங்களும் உருத்திர சங்கிதையில் உள்ளவற்றையும், பின் ஆறு சருக்கங்களும் இலிங்க புராணத்தில் உள்ளவற்றையும் தழுவி எழுதியவை.

"தேங்கும் அன்பில் சிவபுரா ணந்தனில்
ஓங்கு ருத்திர சங்கிதை ஓதினன்;
பாங்குஇ லிங்க புராணப் பரப்பினும்
ஈங்குஅ றிந்த படியும் இயம்புவேன்" (514)

என்ற செய்யுள் இதைத் தெளிவுறுத்தும்.

திருஞான சம்பந்தப் பெருமான் பாடிய "வாழ்க அந்தணர்" என்னும் பாட்டில், "அரன் நாமமே சூழ்க" என்று அருளினர். அவர் திருவாக்குப் பலித்தது. சிவபெருமான் நாமத்தை "நமப் பார்வதீ பதயே" என்று தொடங்கி ஒருவர் கூறினுல், யாவரும் "ஹரஹர மகா தேவா" என்று கூறும் வழக்கம் நெடுங்காலமாகத் தமிழ்நாட்டில் நிலவுகிறது. ஹரஹர என்பது தமிழில் 'அரோகரா!' என்று வழங்குகிறது. இது திருவண்ணுமலையில் தான் மிகுதியாகக் கேட்கப் படுகிறது. "அண்ணுமலைக்கு அரோகரா!" என்ற முழக்கம் அத்தலத்தில் பெருக வழங்கும். இப் புராணத்தில்,

"அரகர என்பது கடலில் முழங்கியது,
அருணை வளம்பதியே" (3)

என்பதில் இச்செய்தி குறிக்கப் பெறுகிறது.

இந்தப் புராணத்தைப் பார்க்கும்போது என் இளமைக்காலத்து அநுபவம் ஒன்று நினைவுக்கு வருகிறது. நாற்பத்தெட்டு ஆண்டு களுக்கு முந்திய செய்தி அது. சேந்தமங்கலத்தில் சில இளைஞர் களுக்குத் தமிழ் சொல்லிக்கொடுத்துக் கொண்டிருந்தேன். எழுத் தையும், சொல்லையும் திருத்தமாக உச்சரிப்பதற்கு முதலில் அவர் களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டியிருந்தது. முக்கியமாக ல, ள, ழ என்ற எழுத்துக்களை அதனதன் வேறுபட்ட ஒலி புலப்படச் சொல் வதற்குப் பழக்கவேண்டும். இதற்கு வாய்ப்பாக எனக்குஒரு பாட்டுக் கிடைத்தது, அதைப் பலமுறை அந்த இளைஞர்களைச் சொல்லச் சொல்லி எழுத்துக்களின் உச்சரிப்புத் தெளிவாக அமையும்படி செய்தேன். அதில் லகர ளகர ழகரங்கள் மிகுதியாக வந்துள்ளன. அந்தப்பாட்டு அருணுசலப் புராணத்தில் உள்ளது.

"கார்ஒழுகும் குழலாளைக் கருணைவழிந் தொழுகும்இரு
கடைக்கண் ணுளை
சூரல்இள நிலவொழுகப் புழுகொழுக அழகொழுகும்
முகத்தி ஞளை
வாரொழுகும் தனத்தாளை வடிவொழுகித் தெரியாத
மருங்கு லாளைச்
சீரொழுகும் பதத்தாளை அருணைஉண்ணு முலையாளைச்
சிந்தை சேர்ப்பாம்" (9)

என்ற உண்ணுமுலையம்மையின் துதியாக உள்ள பாடலே அது.

இந்த நூலாசிரியர், செம்பாகமான கவியைப் பாடுவதில் வல்லவர்; சிவபக்தி நிரம்பியவர்; இந்தத் திருத்தலத்தைப் பற்றிய வரலாற்றை விரிவாகக் கூறுவதோடு இங்குள்ள மூர்த்தி, தீர்த்தப் பெருமைகளை நன்கு எடுத்து ஓதுகிறார்; சைவ சித்தாந்தக் கருத்துக்களையும், சைவ சமயத்தோடு தொடர்புடைய பல அரிய உண்மைகளையும் அங்கங்கே எடுத்துச் சொல்லுகிறார். இவர் கூறும் சில வருணனைகள் சொல்லோவியங்களாக இருக்கின்றன. தன்மை நவிற்சி, உவமை, உருவகம், சிலேடை முதலிய பொருளணிகள் அமையவும், மடக்கு முதலிய சொல்லணிகள் பொருந்தவும் பல பாடல்களைப் பாடியுள்ளார்.

திருமலைச் சருக்கத்தில் பிரமனுக்கும் திருமாலுக்கும் நடைபெறும் வாக்குவாதம் சுவையாக உள்ளது. மலைமகள் திருவவதாரச் சருக்கத்தில் தக்கயாக சங்காரத்தைப் பற்றிச் சொல்லும் பகுதி வீரச் சுவைமிக்கதாக விளங்குகிறது. இறைவன் இடப்பாகம் பெற்ற சருக்கத்தில் துர்க்கை மகிடாசுரனை அழித்த வரலாற்றைச் சுவைபடப் பாடியிருக்கிறார். சில சுவையான இடங்களைப் பார்க்கலாம்.

அவையடக்கத்தில் ஓர் அருமையான கருத்தைச் சொல்கிறார். 'புதிய நூலாக இதைச்செய்துள்ளேன். பழைய நூல்கள் பல உள்ளன. பழையவற்றைச் சிறப்பித்தும் என் நூல் புதியதென்று இகழ்ந்தும் யாரேனும் சொல்லக்கூடும். எட்டிமரம் வளர்ந்து பழையதாக நின்று கனிதருகிறது. அதில் இனிமை உண்டா? கரும்பு புதியது; அதற்குச் சுவை இல்லாமல் போகுமா? செய்யுளில் சுவையில் உயர்வு, இழிவு என்று பார்ப்பதையன்றிப் பழமை, புதுமை என்பதற்காகச் சிறப்பிப்பதோ இழிப்பதோ முறையாகாது' என்ற கருத்தை வைத்துப் பாடுகிறார்.

''அழுகுதரக் கனிந்தநச்சு மரம்பழைய தெனினும்அதில்
அமுதுண் டாமோ?
இழைவுதரு சுவைக்கரும்பு புதியதுவே எனினும் அதில்
இரசம் போமோ?
இழிவுறுபா டலும்உயர்வு தங்கியசெய் யுளும்அவைபோல்
இருக்கும் ஆகில்
பழமைஎன நலந்தருமோ? புதுமைஎன இகழ்படுமோ?
பயன் கொள்வோர்க்கே'' (19)

இந்த அவையடக்கம் சித்தாந்த சாத்திரமாகிய சிவப் பிரகாசத்தில் வரும் அவையடக்கத்தைப் பின்பற்றி அமைத்தது. அது வருமாறு:

''தொன்மையவாம் எனும்எவையும் நன்ருகா; இன்று
தோன்றியநூல் எனும்எவையும் தீதாகா; துணிந்து
நன்மையினர் நலங்கொள்மணி பொதியுமதன் களங்கம்
நவையாகா தெனஉண்மை நயந்திடுவர்; நடுவாம்
தன்மையினர் பழமைஅழ காராய்ந்து தரிப்பர்;
தவறுநலம் பொருளின்கட் சார்வாராய்ந் தறிதல்
இன்மையினர் பலர்புகழின் ஏத்துவர்;ஏ திலருற்
றிகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர்; தமக்கெனஒன் றிலரே''. (12)

பிரமனுக்கும் திருமாலுக்கும் வாக்குவாதம் நிகழ்கிறது. பிரமன் "நான் எல்லாவற்றையும் படைத்தேன். படைப்புத் தொழில் இல்லாவிட்டால் நீஎப்படி அளித்தல் தொழிலைச் செய்வாய்? ஆகவே உன் தொழிலுக்கும் ஆதாரம் என் தொழில்தான்"என்றனன். "என்னுடைய உந்தியில்தானே நீ முளைத்தாய்? என்னிடம் தோன்றிய நீ என்னைவிட எவ்வாறு வலிமையுடையவனுவாய்?"என்று திருமால் கேட்க, அதற்கு ஏற்ற விடையைச் சொல்கிருன். 'நான் உந்தித் தாமரையில் உதித்தேன் என்ருல், நீ தூணில் உதிக்கவில்லையா? நானுவது உயிருள்ள தாமரையில் உதித்தேன். உன் தாயோ சடமான தூண். உன்னிடம் பிறந்ததனுல் உன்னினும் வலியவனுக முடியாதோ? மூங்கிலிலே பிறக்கும் தீ அந்த மூங்கிலையே அழித்து விடுகிறதே!'—இப்படிப் பேசுகிருன் பிரமன்.

"உந்திமல ரோன்என இகழ்ச்சிஉரை யாதே;
முந்தஒரு தூணிடை முளைத்தனை; உனக்குத்
தந்தைஎன வோ?அலது தாய்அதுஎன வோ? சொல்;
செந்தழல் பிறந்துகழை தீப்பதறி யாயோ?" (101)

அதற்குத் திருமால் தக்கவிடை சொல்கிருர், "தந்தை தம் மைந்தர் பிழையைப் பொறுப்பர் என்ருே இப்படிப் பேசுகிருய்? தவறு செய்தால் மைந்தன் என்று பார்க்கமாட்டேன். மதுவும் கயிடவும் என் மைந்தர்களாகப் பிறந்தவர்க ளாயினும் அவர்களை அழித்தேன். உடம்பிலே நோய் தோற்றுகிறது. அந்த நோய் நம்மிடம் தோற்றியது என்று சும்மா விட்டு விடுவார்களா? அதை அறுத்துப் போக்கமாட்டார்களா?" என்கிருர்.

"கன்றும்மது வும்கயிட வப்பகடு தானும்
என்தனையர் ஆகவும் இகழ்ந்துஉயிர் குடித்தேன்;
மன்றஒரு தீமைசெயின் மைந்தன்என உண்டோ?
அன்றிஉடல் நோயையும் அறுத்தெறிகி லாரோ?" (26)

பிரமன் தன் அகந்தை நீங்கிச் சிவபெருமானை வணங்கித் துதிக்கின்றான். (148–152) அங்கே வரும் ஐந்துபாடல்களும் மிக அழகியவை. இறுதியில் உள்ளபாட்டில் ஓர் அருமையான கருத்து வருகிறது. "நான் உன்னை அளந்து உன் முடியைக் கண்டு பிடிப்பேன் என்று எண்ணியதே பிழை; அப்படி எண்ணியதற்கு அப்பொழுதே தண்டனை கிடைத்தது. அந்த எண்ணம் தோன்றிய அளவில் படைப்புத் தொழிலாற்றும் நிலையில் உள்ள நான் வெறும் பறவையாகி விட்டேன்; இதுவே அந்த எண்ணத்தின் தீமையைப் புலப்படுத்துகிறது'' என்ற கருத்துப்பட அவன் புலம்புகிறான்.

"அறிதற்கரி தாம்உன்முடி அறிவேன்எனும் அளவே
பறவைப்படிவு ஆனேன்இனி; மேலோஇடர் படுவேன்?'' (152)

இதே கருத்தை அருணைக் கலம்பகத்திலும் இவ்வாசிரியர் ஆளுகிறார். அங்கே பிரமன், திருமால் ஆகிய இருவரும் தங்கள் நினைப்புக்குரிய தண்டனையை, அப்போதே பறவையாகியும் விலங் காகியும் பெற்றுவிட்டனர் என்கிறார்.

''யாதவர் குலத்துநெடு மாதவன் மருப்புடைய
ஏனமிரு கத்துருவமாய்
வேதமொழி பெற்றஅயன் ஓதிமம் எனப்பறவை
வேடமும் எடுத்ததிலையோ?
ஓதருணை வித்தகரை மூவரில்ஒ ருத்தர்என
ஓதியிடும் அற்பமதியீர்!
சீதமதி வைத்தமுடி பாதமல ரைச்சிறிது
தேடுதல் நினைத்தபரமே." (6)

என்பதைக் காண்க.

சோதிலிங்கமாக நின்ற பெருமான் யாராலும் அளவிடற் கரியவன். அவனுக்கு யார் பூசை செய்யமுடியும்? அந்த லிங்கம் அண்டலிங்கமாக விரிந்திருப்பது. அண்டலிங்கத்தைப்பற்றித் திருமூலர் ஒரு பாடல் பாடுகிறார். இந்த நிலமே ஆவுடையாராம் (சத்தி); வட்டமாக நிலத்தை, தன் விளிம்பு தொடத் தோற்றும்

வானமே இலிங்கமாம்; கடலே மஞ்சனசாலையாம்; மேகமே திருமஞ்சனக்குடமாம்; மழையே திருமஞ்சனமாம்; நட்சத்திர வரிசையே மாலையாம்; திசைகளே பரிவட்டமாம்.

"தரைஉற்ற சத்தி; தனிலிங்கம் விண்ணும்
திரைபொரு நீரது மஞ்சன சாலை;
வரைபொரு மஞ்சுநீர்: வான்உடு மாலை:
கரையற்ற நந்தி கலையும் திக்காமே."

இந்த அண்டலிங்கத்துக்கு அகண்ட பூசை நடைபெறுகிறதாம். திருவண்ணாமலைச் சோதிலிங்கத்துக்கும் அப்படி ஓர் அகண்ட பூசை நடைபெறும். "வழிபடுவார்க்கு ஏற்றபடி அவர்கள் பூசைக்கு எளிய பிண்டலிங்கமாகவும் எழுந்தருள வேண்டும்" என்று தேவர்கள் வேண்டிக்கொண்டார்களாம். அண்டலிங்கத்துக்கு நடைபெறும் பூசையை இவ்வாசிரியர் சொல்லுகிறார்.

"அடுத்துஅருண கிரியானே! உனக்குவிண்நீர்
அலதுபுனல் ஆட்டு வார்ஆர்?
தொடுத்தஉடுத் திரள்அலது திருமுடிக்கு
மணிமாலை சூட்டு வார்ஆர்?
கடுத்திகழும் மிடற்றானே! கதிர்களன்றி
மணித்தீபம் காட்டு வார்ஆர்?
எடுத்திறைஞ்சிப் பூசைசெய்ய, இதன்கீழ்ஓர்
இலிங்கவடி வெடுப்பாய் என்றார்." (161)

பார்வதி தேவியைத் திருமணம் செய்துகொள்ளும் பொருட்டு இறைவன் ஒப்பனை செய்துகொள்ளுகிறான். அவன் புறப்படுவதற்கு முன் திருமால் முதலிய தேவர்கள் வந்து பணிகிறார்கள். நாட்டுக்கு அதிபதியைக் கண்டு வணங்குவார் பலரானாலும், அவரவர்களுக்கு ஏற்றவகையில் தலைவர் அவர் அன்பை ஏற்றுத் தம் மகிழ்ச்சியைப் புலப்படுத்துவது வழக்கம். வந்தவர் தகுதிக்கு ஏற்ப அந்த மகிழ்ச்சி வெளியீடு இருக்கும். இன்றும் குடியரசுத் தலைவர் முன் இத்தகைய முறைகள் இருப்பதைக் காணலாம். அதுபோல, இறைவன் தன்னை வந்து பணிந்தவர்களுக்கு அவரவர் தகுதிக்கு ஏற்பத் தன் அருளைக் காட்டினானும். திருமால் வந்துபணிய அவரிடம் சில வார்த்தைகள் பேசினான். பிரமன் வணங்க அவனைக்கண்டு தலையை அசைத்தான். இந்திரன் ஏத்தியபோது புன்முறுவல் பூத்தான். பிறதேவர்கள் இறைஞ்ச அவர்களைக் கண்ணால் பார்த்தான்.

"குலவுமால் அணுகிப் போற்றக்
குமுதவாய் மலர்ந்தான், கஞ்ச
மலரினன் வணங்கச் சற்றே
மணிமுடி அசைத்தான்; விண்ணோர்
தலைவனர் எதிர்நின்று ஏத்தத்
தனிநகை புரிந்தான்; தேவர்
பலரும்வந்து இறைஞ்சி ஏத்த
அவர்க்கெலாம் பார்வை ஈந்தான்" (237)

காஞ்சீபுரத்தில் எம்பெருமாட்டி மணலால் சிவலிங்கம் செய்து பூசிக்க, அப்போது கம்பையாறு பெருகிவந்தது. அம்பிகை அஞ்சி இறைவனைத் தழுவினள்; அப்போது இறைவன்மேல் இறைவியின் நகில்தழும்பும். வளைத்தழும்பும் படிந்தன. அதைக்கண்ட உமா தேவி நாணினள். அப்போது இறைவன் விடையின்மேல் எழுந்தருளினன். அங்கே இறைவன் பாண்டியன் அடித்த அடித்தழும்புடைய தோளும், தேவர் முடித்தழும்புள்ள தாளும், அம்மை நகிலும் வளையும் செய்த தழும்புள்ள மார்பும் கொண்டு தோன்றினன் என்று சொல்கிறுர்.

"அப்பொழு தரனும் மாறன்
அடித்தழும்பு இருக்கும் தோளும்,
முப்பொழுது இறைஞ்சும் தேவர்
முடித்தழும்பு இருக்கும் தாளும்,
மைப்பொலி குழலாள் கொங்கை
வளைத்தழும்பு இருக்கும் மார்பும்
மெய்ப்பொலி நீறும் ஆகத்
தோன்றினன் விடையின் மீது." (276)

'நீசெய்த தழும்புகள் உள்ளனவே என்று நாணவேண்டியது இல்லை. பல தழும்புகளைப் பெற்றுப் பழக்கப்பட்டவன் நான் என்று தெரிவிப்பதற்காக இவ்வாறு தோன்றினன்' என்று கொள்ளும்படி நயமாக இந்தப்பாடல் அமைந்திருக்கிறது.

அம்பிகை தவம் புரிவதற்குக் கோதமன் இருந்த வனத்தை அடைந்து அவர் ஆசிரமத்திற் புக்காள். அப்போது கோதம முனிவர் வெளியில் சென்றிருந்தார். மீண்டு வருகையில் எங்கும் மலர்ச்சிபெற்று விளங்கும் காட்சியைக்கண்டு, "என்ன நிகழ்ந்தது?"

என்று தம் புதல்வனாகிய சதானந்த முனியைக் கேட்டார். "அம்பிகை இங்கே எழுந்தருளியிருக்கிருள்" என்று புதல்வன் சொன்னவுடன் கோதம முனிவரிடம் உணர்ச்சி பெருகுகிறது; அந்த உணர்ச்சி வேகத்தில் பேசுகிருர்; செயல் செய்கிருர்.

"தாதைஇவை கேள்;இறைவர் தங்களை அளிக்கும்
சோதிஇவண் எய்தினள் எனத்தொழுது சொன்னுன்;
நாதமறை தேடும்அவள் நம்குடிலின் மேவற்கு
ஏதுதவம் ஏதுதவம்? ஏதுதவம்? என்ருன்." (337)

'ஏது தவம்?' என்று மும்முறை அடுக்கியதில் அவர் உள்ளத்தில் உள்ள உணர்ச்சி புலனுகிறது; வேகம் தெரிகிறது. அடுத்த பாடலில் செய்கையில் விரைவும் உணர்ச்சியும் ஒலிக்கின்றன.

"ஓடினன்: அணைத்துமகன் உச்சியை முகர்ந்தான்;
ஆடினன் மகிழ்ச்சியெனும் ஆர்கடல் புகுந்தான்;
பாடினன்; எடுத்தகுசை பார்மிசை எறிந்தான்;
'வீடினது நந்தம்வினை வேரினுடன்' என்ருன்." (328)

அவனுடைய மகிழ்ச்சியினுல் உண்டான பரபரப்பை ஒவ்வொரு செயலும் காட்டுகிறது. 'கையிலுள்ள தர்ப்பையை நிலத்தின்மேல் வீசி எறிந்தான்' என்பதில் அதன் உச்சநிலை நன்ருகப் புலப் படுகிறது.

மகிடாசுரன் செய்த கொடுமையால் தேவர்கள் பலரும் பல இன்னல்களுக்கு ஆளாயினர். எல்லாரும் அஞ்சுதற்குரிய யமனும் அஞ்சி நடுங்கினுன். அந்த அசுரன் எருமை வடிவுடையவனுக இருப்பதனுல் அவன் எருமை வாகனத்தில் ஏருமல் காலினுல் நடந்தே சென்ருன் என்று நயமாகக் கூறுகிருர்.

''அன்னவன் மகிட மான
ஆற்றினுல் அஞ்சிக் காலத்
தென்னவன் மகிடம் ஏருன்;
காலினுல் திரிந்தான் என்ருல்
என்அவன் கொடுமை நம்மால்
இயம்பலாம்?'' (338)

துருவாசமுனிவர் வாழும் ஆச்சிரமத்தின் அருகில் உள்ள நந்தவனத்தில் அவரை அறியாமல் இரண்டு கந்தருவர் புக்கனர். செடிகளை ஒருவன் மிதித்துக் கொண்டு சென்றான்; ஒருவன் மலரைப் பறித்தான். அது கண்டு துருவாச முனிவர் வெகுண்டு வருகிறார். அந்தக் கோப நிலையை அதற்குரிய மெய்ப்பாட்டுடன் இவ்வாசிரியர் ஓவியம் போலக் காட்டுகிறார்:

"அக்கணம் உணர்ந்துமுனி அங்கிவிழி யாலே
கக்கஒளி மிக்கசடை கட்டவிழ வந்தான்." (428)

சடை கட்டவிழ வந்தாராம் - கோபத்தின் படபடப்பு அதில் வெளியாகிறது.

அவர் முகத்தில் முத்து முத்தாக வியர்க்கிறது; இதழ்கள் துடிக்கின்றன; மேலாடை நழுவுகிறது; அதை அடிக்கடி எடுத்து மேலே இழுத்துக் கொள்கிறார்.

"முத்துமணி யாம்என முகத்தினில் வியர்ப்ப
வித்துருமம் வைத்தனைய மெல்இதழ் துடிப்ப
உத்தரியம் வீழ்வதை அடிக்கடி உயர்த்திச்
சித்திர அழல்பொறி தெறிக்கஇவை சொன்னான்." (430)

உருத்திரச் சுவைக்கு ஏற்ற எடுத்துக்காட்டு இது. வெகுளியின் கோலம், உத்தரியம் வீழ்வதை அடிக்கடி உயர்த்தும் செய்கையில் முழுமை பெறுகிறது.

திருவண்ணாமலையைச் சார்ந்த இடங்களில் கிணற்றிலுள்ள இராட்டினங்களில் தாம்புக் கயிற்றின் இரு நுனியிலும் இரண்டு குடங்களைக் கட்டி ஒன்று கீழே சென்று மொள்ள மற்றொன்று மேலே இருக்க, மீட்டும் மேலிருப்பதைக் கீழிறக்கி மொள்ளச்செய்து கீழிருப்பதை மேல் ஏற்றித் தண்ணீர் எடுப்பார்கள். இந்த வழக்கத்தை ஒரு செய்யுளில் உவமையாக ஆளுகிறார்.

சோதிமலையாய் நின்ற இறைவனை அன்னமும் பன்றியுமாக உருவெடுத்து முடியும் அடியும் தேட அயனும் மாலும் செல்வது, முத்துக்குடமும் நீலமணிக்குடமும் மேலும் கீழும் போவது போல இருந்ததாம்.

''மெத்தும்அரைக் கணத்தினுக்குஆ யிரம்காதம்
பறந்தயனுர் விரைந்து போனுர்;
துத்திஅரா எடுத்தபுவி கணத்தினுக்கா
யிரம்காதம் தொளேத்துப் போனுர்;
அத்தகையோர் செயல்உரைக்கின், கனகமணி
நெடும்பூட்டுக்கு அருகில் ஓடும்
நித்திலப்பொற் குண்டிகையும் நீலமணிக்
குண்டிகையும் நிகர்த்த மாதோ!'' (123)

ஒருவரிடம் ஒருபகாரம் செய்ய வேண்டும் என்று நயந்து கேட்கும் போது, அவர் கைகளேப்பிடித்துக் கொண்டு கேட்பது வழக்கம். இந்திரன் மன்மதனே, சிவபிரான்மேல் மலரம்பு எய்யும்படி வேண்டுகிருன். அப்போது மன்மதனுடைய இரண்டு கைகளேயும் பற்றி வேண்டினுன் என்று அமைக்கிருர் இப்புலவர்.

''சொல்வது மறுக்க வேண்டாம்
எனச்சொல்லித் துணேக்கை பற்றி
நல்வரம் இதுதா என்ன'' (217)

பொருள் வேண்டுபவர்கள் தம்மிடத்தில் உள்ள மனே, நிலம், அணிகலன் ஆகியவற்றைக் கொதுவை வைத்துப் பெறுவர்; பிறகு வாங்கின பொருளே வட்டியுடன் கொடுத்து அவற்றை மீட்பர். இந்த வழக்கத்தை,

':கொதுவைமனே நிலம்பணதி கொற்றவனே அதைமீட்டுக்
கொடுஎன் ருேர்க்குஅத்
தததியில்ஈ ராயிரம்பொன் தந்து'' (465)

என்பதில் குறிப்பிட்டிருக்கிருர்.

ஏதேனும் ஒன்றை விரித்துச் சொல்லி முடிக்கும்போது, ''வளேத்து வளேத்துச் சொல்லுவானேன்; இதுதான் சமாசாரம்'' என்று சொல்வது மக்கள் இயல்பு. அன்னே தவம்செய்வது கண்டு யாவரும் வருந்திஞர்களாம். அதைச் சொல்லிவிட்டு இறுதியில்,

''வளேத்துவளேத்து உரைப்பதுஎன்?தாய் வருந்து மானுல்
வயிற்றில்உள்ள கருப்பம்எல்லாம் வருந்தி டாதோ?'' (331)

என்று சொல்கிருர். இதில் அந்த வழக்காறு இருப்பதைக் காண லாம்.

இவர் ஆளும் உவமைகள் சிறப்பும் நயமும் பொருந்தியவை. 'திருவண்ணுமலையில் பூசை நடந்தால் எல்லாத் தலங்களுக்கும், பூசை நடந்ததாகும்' என்ற கருத்துக்கு ஏற்ற உவமை ஒன்றைச் சொல்கிருர். வேரில் நீர் சொரிந்தால் பூ, இலை எல்லாம் குளிர்ச்சி பெறுவது போல என்கிருர்.

''வீசுஅலர் இலைமெய் குளிர்ந்திடும் கொடியின்
வேரில்நீர் சொரிந்திடின்; அதுபோல்
பூசனை அருணை நகரிலே சிறிதும்
புரைஅற நடக்குமே ஆகில்
காசியே முதல்எத் தலமெலாம் பூசை
கனம்பெற நடந்ததாம்.'' (76)

தக்க யாக சங்காரத்தில் வீரபத்திரர், அங்கேவந்த தேவர்களில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகையில் தண்டனை வழங்கினர். அக்கினியின் கைகள் ஏழையும் அறுத்தார்; அதற்கு உவமை கூறுகிருர் இப்புலவர்.

"அழற்பிரான்,
பெருங்கை ஏழும் ஈசன்அன்பர் பிறவிபோல் அறுத்தனன்'' (185)

பிறவி ஏழு என்று ஒரு கணக்குச்சொல்வதுண்டு. அக்கினியின் கை ஏழும் அற்றதற்குச் சிவனடியார் பிறவி ஏழும் அறுவது எவ்வளவு பொருத்தமான உவமையாக அமைகிறது!

வீரபத்திரதேவர் சந்திரனைத் தேய்த்தார். அவன் அமுத கிரணன்; வெண்ணிறமுடையவன்; அவனைத் தேய்த்தது எப்படி இருந்தது? 'வேள்வித் தீயை மிதித்ததனல் உண்டாகிய வெம்மையைப் போக்குவதற்குத் திருவடிகளில் வெண்ணெயை அப்பியதுபோல இருந்தது' என்கிருர்.

"கழல்அமைத்த கால்மிதிக்க அமுதமுண்ட கலைநிலா
அழல்அவிக்கு மாறுதாளில் அப்புவெண்ணெய் ஒத்ததே.'' (189)

உருவாலும் தொழிலாலும் ஒப்புமையுடைய உவமையாக இது அமைகிறது.

திருவண்ணுமலை அக்கினிமலை; இதைக்கொண்டு ஓர் உருவகத்தை அமைக்கிருர்.

"பங்க மலந்தீர் வழிஅடியார்
கொடிய வினையாம் பஞ்சமலைக்கு
அங்கி மலையாய் விளங்கியசீர்
அண்ணு மலைகண்டு அடிதொழுதார்" (294)

மருத நிலத்தை வருணிக்கிருர். மருத நிலத்தின் தெய்வம் இந்திரன். இந்திரன் மருதத்திணையில் வீற்றிருக்கிருன். அவனுடைய வாகனம் ஐராவதம். அதன்மேலும் அவன் வீற்றிருக்கிருன். இந்த இயைபு கருதி மருத நிலத்துக்கு இந்திரனுடைய யானையை உவமையாகக் கூறுகிருர். அங்கே உருவகம் சிலேடை ஆகிய அணிகளையும் ஆளுகிருர்.

"மூசுவண் டினங்கள் எல்லாம்
முடித்தசங் கிலிகள் ஆகக்
காசுநெற் கதிர்கள் எல்லாம்
கன்னசா மரைகள் காட்டத்
தேசுவாய்க் கவளம் பெற்றுத்
தேறுகட் பாகைச் சிந்தி
வாசவன் களிறு போல
மருதம்வீற் றிருந்த மாதோ!" (302)

இந்தப்பாடலில் வண்டினங்களைச் சங்கிலியாகவும் நெற்கதிர்களைச் சாமரையாகவும் உருவகம் செய்தார். "தேசுவாய்க் கவளம் பெற்றுத் தேறுகட் பாகைச் சிந்தி" என்பதில் இருபொருள் அமைந்து சிலேடைநயம் தோன்ற வைத்தார். மருத நிலத்துக்குக் கொள்ளும் போது, 'ஒளி வாய்க்கும்படி வளத்தைப் பெற்று, தெளிந்த கள்ளையும் வெல்லப்பாகையும் சிந்தி' என்று பொருள் கூறவேண்டும். கரும்பாலைகள் உள்ள இடத்தில் வெல்லப்பாகு சிந்தியது. யானைக்குக் கொள்ளும் போது, 'ஒளி மிக்க வாய்க்கு ஏற்ற கவளத்தைப் பெற்று, தெளிந்த கண்ணையுடைய பாகனைத்தள்ளி' என்று பொருள் கூறவேண்டும்.

தவம்புரிந்த உமாதேவியாருக்கு அருள எம்பெருமான் எழுந்தருளுகிருன். தன் திருமேனியில் பாதியை அருளப் போகிருன். அவன் வரும் கோலத்தை எடுத்துரைக்கையில் அவன் திருமார்பில்

உள்ள முந்நூலுக்கு ஓர் உவமை கூறுகிறார். இனி நடைபெறப் போகிறதை எண்ணி அதற்கு ஏற்ற உவமையை ஆளுகிறார்.

"புவியைப்
பெற்ற மாதினுக்கு ஒருபுறம் அளித்திடப் பிடித்த
ஏற்று நூல்எனப் புரிமுந்நூல் மார்பகத்து இலங்க" (395)

மரம் முதலியவற்றை அளவுபிடித்து அறுக்க மையிலே தோய்த்த நூலைப்பிடித்து ஏற்றி அடையாளம் செய்வது வழக்கம். அந்த நூலுக்கு ஏற்றுநூல் என்று பெயர். இங்கே, அம்பிகைக்குத் தன் உடம்பை அளந்து கொடுக்க வாய்த்த ஏற்றுநூலைப் போல இருந்தது பூணூல் என்ற உவமையின் நயம் அறிந்து இன்புறற்குரியது.

சொல்லாலும் பொருளாலும் முரண்பாடு தோன்ற நயமாகச் செய்திகளைக் கூறுவதிலும் இவர் வல்லவர்.

சண்டேசரைச் சொல்லும்போது, "அவன் தந்தையின் இரு பதம் சிதைத்தான்; அதனால் சிதையாத பதத்து இருந்தான்" என்கிறார்.

"தந்தையிரு பதஞ்சிதைத்துச் சிதையாத
பதத்திருந்த தண்டி" (16)

பதம் என்பதற்கு அடியென்றும் பதவியென்றும் வெவ்வேறு பொருள் கொள்ள வேண்டும்; சிதைத்தபதம், சிதையாதபதம் என்ற முரண் நயம் இதில் தோன்றுகிறது.

திருவாரூரில் சிவபெருமான் புற்றிடங்கொண்ட நாயகனாக எழுந்தருளியிருக்கிறான். அதை,

"போகியொரு புற்றிடங்கொண் டிருப்பதுகண் டிடுதல்அல்லால்
புனிதர் போற்றும்
யோகியொரு புற்றிடங்கொண் டிருந்ததலம் கண்டதுண்டோ? (33)

என்கிறார். பாம்புக்குரிய போகி என்ற சொல், போகத்தைத் துய்ப்பவர் என்று வேறொரு பொருளும் தொனித்து யோகி என்பதனோடு முரண் நயம் தோன்ற அமைந்திருக்கிறது.

கழனிகளின் வருணனை இது:

''மழைதவழும் தலைப்பலவின் பழமதுவாய்
விரிந்தாலும் மகர வாழைப்
பழமதுவாய் விரிந்தாலும் புதுமதுவாய்
விரிந்தொழுகும் பழனம்'' (268)

இங்கே பழமது (பழையமது) புதுமதுவாய் விரிந்தொழுகும் என்று முரண் தொனிக்கச் சொல்கிறார். சொல்லளவில் உள்ள இந்த முரண் பொருள் கொள்ளும்போது பழம் அது வாய் விரிந்தாலும் என்று பிரியும்; அது: பகுதிப்பொருள் விகுதி.

நாரி என்பது வில் நாணுக்குப் பெயர்; சிலை என்பது வில்லுக்குப் பெயர். நாண் வேறு; வில் வேறு. நாணை வில்லாக்க முடியுமா? கோதமன் அப்படிச் செய்தானாம்.

''நாரிதனைச் சிலையாக்கும் முனிவனும்''

என்கிறார் இப்புலவர். தொனியளவில் நாரி, சிலை என்பன நாணையும் வில்லையும் குறிப்பன போலத் தோற்றினாலும் பொருளளவில் நாரி பெண்ணையும் சிலை கல்லையும் குறிக்கும்; அகலியை என்னும் பெண்ணைக் கல்லாக்கினவன் கோதமன்.

"தருநிழலும் கனக நாடும்
தந்தானை அலர்கடப்பந் தாரானை" (11)

என்பதில் தந்தானை, தாரானை என முரண் வந்தது.

236-ஆம் பாடலைத் திருநதிக்கும் திருமாலுக்கும் சிலேடையாக அமைக்கிறார்.

வச்சிராங்கத பாண்டியன் ஒரு புழுகுபூனையைத் துரத்திக் கொண்டு சென்றபோது அந்தப்பூனை விழுந்து இறந்தது. அவன் குதிரையும் விழுந்து இறந்தது. அவனும் கீழே விழுந்தான். விழுந்த இடம் திருவண்ணாமலையின் அடிவாரம். அதைச் சொல்கிறார்.

"கைவி லங்கனை யான்பரிக் காலில்வீழ்ந்து
அவ்வி லங்கை அரசனைப் போலவே
செவ்வி லங்கல் அடியினில் தேம்பினான்;
வெவ்வி லங்குடன் ஓடின் விழார்களோ?'' (421)

இங்கே இறுதியடி சிலேடையொடு பொருந்திய வேற்றுப்பொருள் வைப்பணி அமைந்து சுவைதருகிறது.

விலங்கு என்பதற்குக் காலில் பூட்டும்தளை என்றும், மிருகம் என்றும் இரண்டு பொருள்கள் இங்கே கொள்வதற்குரியன.

8- ஆவது பாடலில் மானை என்ற சொல்லை ஏழுமுறை மீட்டும் மீட்டும் ஒலிக்கும் வண்ணம் வைத்துச் சொற்பின் வருநிலையணி யமையச் செய்கிருர். அப்படியே,

> ''செந்தபனர் தங்கதிர் உருது, சிறுகாலும்
> நந்தும்அறு காலும்ஒரு காலும்இதை நண்ணு'' (431)

என்பதில் கால் என்னும் சொல் வெவ்வேறு பொருளில் மும்முறை வந்தது. இதுவும் சொற் பின் வருநிலை.

எத்தனையோ வகையாக மடக்கு என்னும் சொல்லணியை ஆளுகிருர். ஒரே சொல்லோ தொடரோ வெவ்வேறு பொருளில் அடுத்தடுத்து வருவது மடக்கு.

> ''கணிகொண்ட ஒருவரையாம் ஒருவரையாம்
> அகலாது'' (7)
> ''பதமூன்று மருந்தவர்க்குப் பதமூன்றும் கடந்தபதம்
> பாலிப்பானை'' (10)
> ''அனந்தமுனி முதலனந்த முனிவார்'' (29)
> "மாதவர்கள் மாதவர்கள் பூசைபுரி மாநகரம்" (50)
> "எச்சனுர் எச்சனுக" (186)
> "கனகலம் — கனகலமே ஆன'' (199)
> "அந்த வேளையில் வேளை நோக்கி'' (215))
> "அஞ்சி, நாணினன் அறுகால் வண்டு நாணினன்''(222)

மன்மதன் அம்பிகையைக் கண்டு, "நமக்குச் சிவனைவெல் வதற்கு ஒரு பலம் இருக்கிறது, என்று எண்ணினனும்; 'ஒரு கரும்பு உருவத்தில் உள்ள வில் ஒடிந்து போனுல் இரண்டு கரும்பு உருவத்தில் உள்ள வில் இருக்கிறது' என்று எண்ணினன் என்று தோன்றும்படி மடக்கை அமைக்கிருர். கரும்புஉருவம், கரும்

புருவம் என்ற இரு வேறு தொடர்கள் ஒன்று போலவே தோன்றி மடங்கி வருகின்றன.

''ஒருகரும் புருவச் சாபம் ஒடியினும் உலகம் ஈன்றுள்
இருகரும் புருவச் சாபம் உளஎனும் எழுச்சியாலே!'' (224)

இவற்றை யன்றி,

"அம்புயன் கொடி கொடி ஆனது'' (262)
"வெற்பா னிமய வெற்பான் " (273)

"எழுவரையும் அதிலிருக்கும் எழுவரையும்" (291)
"மழலைவண் டானத் தோடு மருதவண் டானத் தோடும்
குழலிசை யறுகால், மாதர் குழலிசை யறுகால் கூட்டம் (301)

எனவரும் மடக்குகளும், 380, 406, 407, 415, 416, 445, 552, 562, 571, 610, 625, 644, என்பவற்றில் உள்ள மடக்குகளும் இப்புலவரின் புலமையை எடுத்துக் காட்டும்.

எதுகை நயம் அமைய இவர் பாடிய பாடல்கள் பல. சில எடுத்துக் காட்டுகள்:

''மருவாரூர் தனைஎரித்தார் திருவாரூரே'' (33)
''ஒருவகையாய் இருவரையும் தடுப்பதானுன்'' (118)
''தவமதிப்பால் அவமதிப்பாய்'' (380)
''மேற்றிசையும் காற்றிசையும்'' (393)
''தருமலையும் ஒருமலையும்'' (513)

திருவண்ணமலையின் பெருமையை உருவக வகையால் பிறவிக் கடற்குத்தோணி என்றும், முத்திக்கு ஏணி என்றும் அரும் பொருட்குக் காணி என்றும் கூறுகிருர். (554) இங்கே கூறும்தோணி, ஏணி, காணி என்பன ஒரே எதுகையில் அமைந்திருப்பது அறிந்து மகிழ்தற் குரியது.

யமகம், திரிபு என்பன அமையப் பாடல்கள் சில உள்ளன.

பொருளுக்கு ஏற்றபடி சந்தம் அமைந்த செய்யுட்களை இவர் பாடியுள்ளார்.

தமிழை நினைக்கும் இடங்கள் சில. தென்றலைச் சொல்லும் போது தமிழையும் இணைத்துப் பாடுவார்,

"சந்தன மணமும் தெய்வத் தமிழ்ப்புது மணமும் கொண்டு
வந்தது மலயத் தென்றல்" (219)

"தோடுகமழ் சந்தன வனத்திடை துளைந்தே
நீடுதமி ழின்சுவை அளைந்துநெடு நாளாய்
ஆடுமயில் அன்னவர்கள் அன்னநடை போல
வாடைமிசை தென்றல்புகும் வையையள நாடு." (403)

என்பவற்றைக் காண்க.

திருநாவுக் கரசரைத் தமிழ்க்கடல் என்பார் (12); பாண்டியனை "வாரமாய்கலைச் சங்கம் வளர்த்தவன்" (416) என்றுகூறி, அவன் தமிழ்ச் சங்கம் வளர்த்த செய்தியை நினைப்பிக்கிறார். இத்தலத்தில் அகத்திய முனிவன் அமைத்தது அகத்திய தீர்த்தம். அதில் மூழ்கிய வர்களைப் பார்த்தாலே தமிழ்க் கவியரசர் ஆகிவிடலாமாம்; அகத்தியர் தமிழ்முனிவர் அல்லவா? (529)

தமிழ்முறைப்படி ஐந்து திணைகளைச் சொல்கிறார் (295); மருதத் திணையை விரிவாக வருணிக்கிறார் (290-302)

இவ்வாசிரியருக்குச் சைவ எல்லப்ப நாவலர் என்ற பெயர் வழங்குவதிலிருந்து இவருக்குச் சைவப் பற்று மிகுதியாக இருந்தது என்று தெரிந்து கொள்ளலாம். இந்த நூலில் சைவத்தின் ஏற்றத்தைப் பலவாறு எடுத்துச் சொல்கிறார். சைவசித்தாந்தக் கருத்துக்களைக் கூறுகிறார். திருநீறு, உருத்திராக்கம், அஞ்செழுத்து, சிவலிங்கம் முதலியவற்றைப் பற்றிப் பல இடங்களில் சிறப்பித்துப் பேசுகிறார்.

சிவபெருமான் கூறுவதாக உள்ள,

"நமக்கொப் பான
தெய்வம், ஐந் தெழுத்து மானத்
திருந்துமந் திரமும் இல்லை;
சைவமே அனைய தான
சமயமும், இலை" (282)

என்பதிலிருந்து இவருடைய சைவப்பற்று நன்கு விளங்கும். சிவபிரான் இயல்பை,

"பெண்அலான் அலிஆண் அல்லன்,
பிறப்பிலான், இறப்பும் இல்லான்
கண்ணினல் அளவை நூலால்
கருத்தினுல் அளவா அந்தத்
தண்ணிலா முடியான்" (212)

என்று சிறப்பிப்பார். சிவபிரான் பிரமசாரியாகவும் அம்பிகை கன்னியாகவும் இருந்து உலகத்தையெல்லாம் ஈன்று வளர்க்கிருர்கள் என்றும் அவ்விருவரும் தத்துவத் தோற்ற முறையில் ஒருவரை ஒருவர் அளித்து ஒருவரை ஒருவர் ஈன்றவரைப் போல நிற்பர் என்றும் சாத்திரம் கூறும்.

"சிவம்சத்தி தன்னை ஈன்றும் சத்திதான் சிவத்தை ஈன்றும்
உவந்திரு வரும்பு ணர்ந்திங் குலகுயிர் எல்லாம் ஈன்றும்
பவன்பிரம சாரி யாகும்; பான்மொழி கன்னி ஆகும்
தவந்தரு ஞானத் தோர்க்கித் தன்மைதான் தெரியும் அன்றே",

என்பது சிவஞான சித்தியார்.

இதில் உள்ள கருத்துக்களை இந்தச் சைவப் புலவர் பின் வருமாறு அழகாக எடுத்துரைப்பார்.

"கன்னிகை கவுரி; ஈசன் கதம்இலாப் பிரம சாரி;
சந்நிதி மகிமை யாலே உயிர்எலாம் தழையா நிற்கும்" (213)

"நின்நிலைமை கன்னி; இறை நீள்பிரம சாரி;
என்னும் மறை; அன்றுமுதல் இன்றுவரை எல்லாம்
உன்னிடை யுதித்துலகு உயிர்த்தொகைகள் எல்லாம்
அன்னையெனும்" (320)

"நித்தனை முதல்தருவை: நித்தன திடத்தே
சத்திஎன நீவருவை; சத்திசிவம் என்றே
இத்தகைமை கொண்டுயிர்கள் யாவையும் அளிப்பாய்" (321)

இறைவனும் இறைவியும் ஒன்றிய அர்த்த நாரீசத் திருக் கோலத்தை எவ்வளவு அழகாகத் தண்டமிழ்ச் சொற்களால் வடித்துக் காட்டுகிருர்:

"அடுத்த செஞ்சடை ஒருபுறம்; ஒருபுறம் அளகம்;
தொடுத்த கொன்றைஓர் புறம்;ஒரு புறம் நறும் தொடையல்;
வடித்த சூலம்ஓர் புறம்;ஒரு புறம்மலர்க் குவளை;
திடத்தில் ஆர்கழல் ஒருபுறம்; ஒருபுறம் சிலம்பு" (399)

"பச்சை வண்ணம்மற் றொருபுறம்; ஒருபுறம் பவளம்;
கச்சு லாமுலை ஒருபுறம்; ஒருபுறம் கவின்மார்பு;
அச்சம் நீங்கிய வரதம்ஒன்று; அபயம்ஒன்று அங்கை;
இச்சை யாகுவர் உறுதல்கண்டு இறைஞ்சினர் இமையோர்."

சொல்லைத் தூரிகையாகவும் பொருளை வண்ணமாகவும் கொண்டு இந்தத் தெய்வ ஓவியத்தை நம் அகமென்னும் கிழியில் அற்புதமாகத் தீட்டிவிடுகிறார் இப்புலவர்.

உலகமெல்லாம் ஆணாகவும் பெண்ணாகவும் அமைய வேண்டுமென்றே இறைவன் சத்தியும் சிவமுமாக இருக்கிறான். அவ்விருவருள்ளும் வேற்றுமை இல்லை.

"பெண்ணும் ஆணுமாய் உலகுயிர்ப்
பொருளெலாம் பிரித்தோம்;
அண்ணலி தாகிய பீடமும்
இலிங்கமும் ஆனோம்;
எண்ணும் நீஎன நான்என
இரண்டிலை; மரமும்
உண்நி லாவிய வயிரமும்
நிகர்த்துடன் உறைவோம்". (397)

என்பதில் இக்கருத்தைக் காணலாம். 84– ஆம் பாடல் முதல் சிவத்திடமிருந்து மூர்த்திகளும் தத்துவங்களும் தோற்றுவதை வரிசையாகச் சொல்கிறார். மும்மலத்தையும் (375), அத்துவாக்களையும் (63) குறிக்கிறார். இருடிகள் நிறுவிய ஆரிடலிங்கம், அரக்கர் நிறுவிய ஆசுரலிங்கம், தேவர் நிறுவிய தேவதலிங்கம், மானிடர் நிறுவிய மானிடலிங்கம், தானே தோன்றிய சுயம்புலிங்கம் என்றும் ஆறு லிங்கங்களை ஓரிடத்தில் சொல்கிறார் (52); சிவபூசையில் சூரிய பூசையை முதலில் தொடங்கிச் சண்டேசர் பூசையை இறுதியில் முடிக்கும் முறையை ஒரு பாடலில் குறிப்பிக்கிறார் (310);

அஞ்செழுத்தை ஓதும் அடியாரை ஓரிடத்தில் காட்டுகிருர் (310); அது வாழ்க என்று வாழ்த்துகிருர் (647); திருநீறு அணிவதைக்கூறி (330), வாழ்த்துகிருர் (647); தோளிலும் காதிலும் கழுத்திலும் உருத்திராக்கம் பூணும் வழக்கத்தைத் தெரிவிக்கிருர் (330).

இறுதியில் வாழ்த்துக் கூறும்போது, "சைவம் வாழி வாழியே!" என்று ஒருபாடலை முடிக்கிருர்.

அம்பிகையின் பெருமையையும் (202) அவளும் சிவபிரானும் வேற்றுமையின்றி அத்துவிதமாக இருப்பாரென்பதையும் (321) சிவபிரான் மகேசனுனல் சத்தி மகேசியாகவும், அரனுனல் உமையாகவும், பிரமனுனல் வாணியாகவும், திருமால் ஆனுல் திருமகளாகவும் விளங்குவாள் (322), அம்பிகையை மாயை வந்தணுகாது (265) என்னும் கருத்துக்களையும், அவருக்கு எட்டுப் பயிரவர் காவல் இருப்பார் (340), தாக்கணங்கு, நோக்கணங்கு என்பவர்கள் அன்னையின் படைத்தலைவியர் (344), அறுபத்து நான்கு கோடி யோகினிகள் அன்னையின் பரிவாரங்கள் (356) முதலிய செய்திகளையும் அங்கங்கே எடுத்துச் சொல்கிருர். அன்னையின் பெருமையை உரைக்கும் நூல்களில் இந்தச் செய்திகள் இருப்பதைக்காணலாம்.

அங்கங்கே இவர் அமைக்கும் துதிவகைகள் பக்திச்சுவை செறிந்தவை. வருணனைகள் தமிழ்ச்சுவை பொருந்த அமைந்தவை.

தமிழ்ச்சுவையும் சிவபக்தி யுணர்வும் மிக்க பாடல்கள் இந் நூலில் உள்ள பாடல்கள். இவற்றிற்குப் பழைய உரை ஒன்று உண்டு. அது மழவை மாகலிங்கையர் எழுதியது என்று தெரிய வருகிறது. அருணசலப்புராணத்திற்கு நல்ல பதிப்பாக ஏதும் இப்போது கிடைக்க வில்லை. கிடைக்கும் பழம்புத்தகங்கள் பலவகைப் பிழைகள் மலிந்தனவாக உள்ளன.

இந்த அரிய புராண நூலை, யாவரும் எளிதில் படித்துப் பொருள் அறியும் வகையில் சொற்களைப் பிரித்தும், பழைய உரையிலுள்ளபிழைகளை நீக்கியும் ஒழுங்குபடுத்திப் பதிப்பித்த திரு. தமிழ்க்கடல். ராய. சொக்கலிங்கனுர் அவர்களுக்குத்தமிழுலகமும் சைவஉலகமும் நன்றி பாரட்டும் கடப்பாடு உடையன. சிவபக்திச் செல்வமும் தண்டமிழ்ப் புலமையும் ஒருங்குடைய அவர்கள், தம் குலத்தோருக்கு மிக்க உரிமையுடைய தலமாகிய அருணசலத்தின்

புராணத்தைப் பதிப்பிக்க மிக்க தகுதியுடையவர். இதனை எளிதில் யாவரும் பெற்றுப் படித்து இன்புறலாம். அருணாசலேசுவரர் திருவருளால் இந்தப் பதிப்பு, தக்கார் ஒருவரால் வெளியாகிறது. இதனை நல்ல முறையில் அழகாகப் பதிப்பிக்க வசதி செய்து தந்த திருவண்ணாமலைத் திருக்கோயில் அறங்காவலர்களைப் பாராட்டுகிறேன். இப்படியே இத்தலத்துக்குரிய பிற தமிழ் நூல்களும் நல்ல முறையில் வெளி வருமானால் தமிழ் மக்களுக்குப் பெருஞ் செல்வம் கிடைத்தது போலாகும்.

'காந்தமலை'
சென்னை-28

கி. வா. ஜகந்நாதன்
27—10—70

சிவமயம்

# அருணாசலப் புராணம்

(மூலமும் உரையும்)

## பாயிரம்

### ஆனைமுகன் வணக்கம்

1 மிக்க வேத வியாசர் விளம்பிய
இக்க தைக்குஇ யைபு இன்றுஅருள் செய்திட,
முக்கண் வெற்பினை, மும்மத வாரியை,
கைக்க ளிற்றினைக் கைதொழுது ஏத்துவாம்.

(பொருள்) அநேக மறைகளை இயல்பாகவே உணர்ந்த வியாசரால் அருளிச் செய்யப் பட்ட (ஸ்காந்த புராணத்தில் உருத்திர சங்கிதையிலிருக்கும்) இந்த அருணாசல மான்மியத்தை, இக்காலத்தில் தமிழில் இயற்ற (இதற்கு இணையில்லையென்று சொல்லும் படி) அருள்பாலிப்பதற்கு, மூன்று கண்களையுடைய மலைபோன்றவரும், கடல் போன்ற மும் மதத்தையுடையவரும், தும்பிக்கை வாய்ந்தவருமாகிய யானைமுகம் பொருந்திய விநாயகரைக் கையினால் தொழுது (எடுத்த நூல் இடையூறின்றி இனிது முடித்தற் பொருட்டுத்) துதி செய்வாம். 1

### கூத்தப்பிரான் வணக்கம்

2 முதிருஞ்சுவை மதுரம்பெற மொழியும்தமிழ் விரகன்புகழ்
பதிகம்புனை பவன்; பவபஞ்சனன்; அமலன்;கதிர்
உதிரும்படி, பகிரண்டமும் உடையும்படி, இலகும்படி
அதிரும்படி நடனம்புரி அதிருங்கழல் அதிருங்கழல்.

(பொருள்) மிகுந்த இனிய சுவை உண்டாகப் பாடுகின்ற திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளால் போற்றிப் பாடப்பட்ட பதிகமாகிய மாலையை அணிகின்றவராகியும், தம்மை அடைந்தவர்களது பிறவியைக் கெடுப்பவராகியும், மனமாசற்றவராகியும் விளங்கி, சூரியனுதிரவும், பகிரண்டமுடையவும், விளங்குகின்ற பூமி குலுங்கவும், நடனத்தைச் செய்யா நின்ற, மிகவும் ஒலிக்கின்ற வீரகண்டாமணியை அணிந்த கூத்தப்பிரானின் சிறந்த திருவடியை வணங்குவோம். 2

## தலப் பெருமை

3 இரவிகள், சந்திரர், வயிரவர்,
விஞ்சையர், இமையவர், எண்திசையோர்
உரகர், அருந்தவர், முனிவரர்,
பங்கயர், உவணநெ டுங்கொடியோர்,
பரவி நெருங்கலில், உலகம்
நிறைந்தவர் பணியும் இடங்கிடையாது
"அரகர" என்பது கடலின்
முழங்கியது, அருணை வளம்பதியே.

(பொருள்) கதிரவர்களும், சந்திரரும், வயிரவரும், வித்தியாதரரும், தேவரும், எட்டுத் திக்குப் பாலகரும், நாகலோகத்தாரும், அரியதவசிகளும், முனிவர்களும், தாமரைப்பூவில் வசிக்கும் பிரம்மர்களும், பெருமை மிக்க கருடக் கொடியுடைய விட்டுணுக்களும், பரந்து நெருங்குதலினால், உலகம் நிறைந்து அவர்கள் வணங்குதற்கு இடங்கிடையாததாய் (அவர்களாலே சொல்லப்பட்ட) "அரகர" என்கின்ற - ஒலியானது, கடலினும் மேம்பட்டு முழங்கும் வளப்பத்தையுடையது அருணாசலமென்னுந் தலமாம். 3

4 இளமுலை மங்கையர் முகமும்,
நெருங்கிய இருகுழை யும்,பகலே
ஒளிர்ஒரு சந்திரன் உடன்இரு
செங்கதிர் உதயமெ னும்தனியூர்,
தலைஅவி ழுந்தொடை மகபதி
தன்பதி, தனபதி தன்பதியாம்,
அளகை வளம்பதி தனிலும்
வளம்பதி அருணை வளம்பதியே.

(பொருள்) இளமையாகிய தனங்களையுடைய பெண்கள் முகமும், அவர்கள் அணிந்த இரண்டு இரத்தினக் குண்டலங்களும், பகலிலே ஒளிவிடுகின்ற ஒரு சந்திரனுடனே இரண்டுசூரியர்கள் உதயமானார்களென்று சொல்லும்படியாகிய ஒப்பற்ற ஊர், முறுக்கவிழ்ந்த கற்பகமாலையை அணிந்த தேவேந்திரனுடைய நகரமாகிய அமராவதியையும், குபேரனுடைய நகரமாகிய வளப்பமுள்ள அளகாபுரியையும் விட வளப்பத்தையுடையது அண்ணாமலை என்னும் சிறந்த தலம். 4

5 காலன் எதிர்த்திட மார்பில்
உதைத்தவர், காமன் உருப்பொடியா,
ஆலம் மிடற்றினர், மாலை
மதிக்குறை ஆடுஅர வப்பணியார்;
நாலு முகத்தவன் ஞாலம்
அளிப்பவன் நாடும் அதற்குஅரியார்,
சூலம் எடுப்பவர் மேவு
திருப்பதி சோண கிரிப்பதியே.

(பொருள்) எமன் எதிர்க்க மார்பிலுதைத்தவரும், மன்மதனுடைய உடலைப் பொடியாகச் செய்தவரும், விடத்தைக் கழுத்தில் அணிந்தவரும் இளம்பிறையைச் சூடியவரும், ஆடுகின்ற அரவத்தை அணியாகப்பூண்டவரும், பிரம்மனும் விட்டுணுவும் தேடுதற்கரியவரும், சூலத்தைக் கையிலெடுத்தவருமாய் விளங்குகின்ற பரமசிவன் தங்கிய அழகிய நகர் அருணாசலமென்னும் தலம். 5

## பரசிவ வணக்கம்

6 உறவொடு பகையறும் ஒருமுதல் எவன்?அவன்
இறுதியில் உலகருள் இறையவன் எவன்?அவன்
மறைமுடி வினில்நடம் வளர்பவன் எவன்?அவன்
அறிவினில் அறிபவன் அடியிணை தொழுதனம்.

(பொருள்) உறவும் பகையுமில்லாத ஒப்பற்ற முதன்மையானவன் எவன்? ஊழிக்குப் பின்பு உலகத்தை உண்டாக்குகின்ற தலைவன் எவன்? மறைமுடியிலே நடனஞ் செய்கின்றவன் எவன்? தன்னியற்கையறிவினாலே எல்லாவற்றையும் அறிகிறவன் எவன்? (பரசிவன்) அப்படிப்பட்ட தன்மையுடைய பரசிவனது திருவடிகளை யாம் வணங்கினோம். 6

# அண்ணமலையார் வணக்கம்

7 மணிகொண்ட நெடுங்கடலில் விழிவளரும்
திருமாலும் மறையி ஞனும்
பணிகொண்ட பாதலத்தும் பூதலத்தும்
மீதலத்தும், பரிந்து தேட,
அணிகொண்ட பிரமாண்ட கோளகைபொன்
கோளகையாய் அழகு காட்ட,
கணிகொண்ட ஒரு,வரையாம் ஒருவரை,யாம்
அகலாது கருத்துள் சேர்ப்பாம்.

(பொருள்) இரத்தினங்களுக்கு இருப்பிடமாகிய பரந்த கடலிலே யோகநித்திரை செய்கின்ற விட்டுணுமூர்த்தியும், வேதங்களை வெளியிட்ட பிரம்மதேவரும் நாகங்கள் உறையும் பாதாளத்திலும் பூஉலகத்திலும் மேலுலகத்திலும்வருந்திந்தேட அவர்களால் எட்டப்படாத அழகாகிய பிரமாண்ட கோளகையானது பொன்னுற் செய்யப்பட்ட கோளகை போலாகி அழகு காண்பிக்க எண்ணங்கொண்ட ஒப்பற்ற நெருப்பு மலையாகிய பரசிவத்தை யாங்கள் நீங்காது உள்ளத் தாமரையில் சேர்த்துக்கொள்வோம். 7

8 ஒருமானைக் கரத்தினில்வைத்து, ஒருமானைச்
சிரத்தினில்வைத்து, உலகம் ஏழும்
தரும்மானை இடத்தினில்வைத்து அருள்வானை,
பவளநெடும் சயிலம் போல
வரும்ஆனை முகத்தானை அளித்தானை,
பொரும்ஆனை மகிழ ஏறும்
பெருமானை, அருணகிரிப் பெம்மானை
அடிபணிந்து, பிறவி தீர்ப்பாம்.

(பொருள்) தாருகாவன இருடிகள் வரவிட்ட மானைக் கையிலே வைத்தும் மான்கண்போன்ற விழியினையுடைய கங்கையை முடியில் வைத்தும் ஏழு உலகத்தையும் பெற்றருளிய உமாதேவியை இடப்பாகத்தில் வைத்தும் அடியார்க்கு அருள்செய்கின்றவரும் நீண்ட பவளமலையைப் போல் வருகின்ற ஆனைமுகத்தையுடைய கணபதியைப் பெற்றவரும், போர் செய்கிற இடபவாகனத்தில் எழுந்தருளுகின்ற ஆண்டவருமாகிய அருணசலத் தலத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கி, இனிவரும் பிறப்பைத் தீர்த்துக்கொள்வாம். 8

## உண்ணுமுலையம்மை வணக்கம்

9 கார்ஒழுகும் குழலாளை, கருணைவழிந்து
ஒழுகும்இரு கடைக்கண் ணாளை,
மூரல்இள நிலவுஒழுகப் புழுகுஒழுக
அழகுஒழுகும் முகத்தி னாளை,
வார்ஒழுகும் தனத்தாளை, வடிவுஒழுகித்
தெரியாத மருங்கு லாளை,
சீர்ஒழுகும் பதத்தாளை, அருணைஉண்ணு
முலையாளைச் சிந்தை சேர்ப்பாம்.

(பொருள்) மேகம் போன்ற கூந்தலையும், கருணை வழிந்தொழுகும் இரண்டு கடைக் கண்களையும், பற்களின் ஒளி இளமையாகிய சந்திரன்போல் ஒளிவிடப் புழுகுதங்கிய அழகு பொருந்திய முகத்தையும், கச்சணிந்த தனங்களையும், அதிக அழகையுடையதாய் ஒருவருக் கும் தெரியாத இடையையும், சிறப்புப் பொருந்திய திருவடிகளையும் உடைய, அருணாசலத் தில் வீற்றிரா நின்ற உண்ணுமுலை அம்மையை மனத்தில் பதித்துக்கொள்ளுவோம். 9

## யானைதிறைகொண்ட விநாயகர் வணக்கம்

10 மதம்மூன்றும் ஆருக வரும்களிற்று
முகத்தானை, மனத்தி லேதான்
பதம்ஊன்றும் அருந்தவர்க்குப் பதம்மூன்றும்
கடந்தபதம் பாலிப் பானை,
விதம்மூன்று புரங்கடிந்தார் அளித்துஅருளும்
ஒருமுதலை, வேரோ டேசஞ்
சிதமூன்று பிறப்புஒழிக்கும் ஆனைதிறை
கொண்டவனைச் சிந்தை சேர்ப்பாம்.

(பொருள்) மும்மதங்களும் ஆருகி ஓடிவருகின்ற யானைமுகமுள்ளவரும், மனத்தில் தம்முடைய சீர்ப்பாதங்களைச் சிந்திக்கின்ற அரியதவத்தையுடையர்களுக்குச் சாலோபம், சாமீபம், சாரூபம் என்னும் மூன்று பதங்களுக்கும் மேற்பட்ட நான்காம் பதமாகிய சாயுச்சியத்தைக் கொடுப்பவரும், முப்புரத்தை நீறு செய்த சிவபெருமான் ஈன்றருளிய ஒப் பற்ற முதற்கடவுளும், சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியமென்னும் மூவகைப்பட்ட வினைகாரண மாக உண்டாகும் பிறவித்துன்பத்தை அடியோடே நீக்குபவருமாகிய, யானை திறைகொண்டா ரென்னும் விநாயகக் கடவுளை மனத்திற் கொள்வாம். 10

## சிவசுப்பிரமணியர் வணக்கம்

11 கொந்தாரும் மலர்ச்சோலை அருணைநெடும்
கோபுரத்தில் குமர வேளை,
வந்தாரை வாழ்விக்க, வடவீதி
தனில்உறையும் மயிலி னானை,
கந்தாரும் கடக்களிற்று மகவாற்குத்
தருநிழலும் கனக நாடும்
தந்தானை, அலர்கடப்பம் தாரானைப்
பணிபவர்தாள் தலைமேல் கொள்வாம்.

(பொருள்) பூங்கொத்துக்களையுடைய சோலைசூழ்ந்த அருணாசலத்தின் கிழக்கு கோபுர வாசலுக்கு அடுத்த மேற்புர மண்டபத்திலிருக்கின்றவரும், தம்மை அடைந்தவர்களைப் பிழைப்பிக்கச் செய்ய, வடவீதியிலே வாழ்கின்ற மயில்வாகனத்தையுடையவரும், தறியிற் கட்டப்பட்ட மதம்பொருந்திய வெள்ளையானையிலேறுகின்ற தேவேந்திரனுக்குத் தேவ லோகத்தையும், கற்பகத்தருவின் நிழலையும் கொடுத்தவரும், கடப்பமலர் மாலையைத் தரித்தவருமாகிய சிவசுப்பிரமணியக் கடவுளை வணங்குகின்ற அடியார்களுடைய பாதங்களைத் தலைமேல் வைத்துக்கொள்ளுவோம். 11

## மூவர் வணக்கம்

12 வாதுகொண்ட பரசமய கோளரியை
அடிவணங்கி, வன்கல் தூணில்
தீதுகொண்ட கருங்கடலைக் கடந்தசெழும்
தமிழ்க்கடலின் திருத்தாள் போற்றி,
காதுகொண்ட விழிப்பரவை திருமனைக்குஎம்
பெருமானைக் கால்கள் நோவத்
தூதுகொண்ட சுந்தரனைத் தம்பிரான்
தோழனை,யாம் துதிசெய் வோமே.

(பொருள்) வாதுகொண்டு வெல்லவந்த சமணர்களாகிய யானைகளுக்குச் சிங்கமாகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளது திருப்பாதங்களை வணங்கி, வலிய கருங்கல்தூணொடு பிணித்துச் சமணர்கள் கடலிற்போட, அக்கல்தூணையே தெப்பமாகக் கொண்டு கடலைக் கடந்த செந்தமிழ்க்கடலென்று சொல்லப்பட்ட அப்பர் சுவாமிகளது திருவடிகளை ஏத்தி, காதளவும் தாவிய கண்களையுடைய பரவை நாச்சியாருடைய திருமனைக்கு இரண்டு அடிகளும் வருந்த, எமது ஆண்டவனைத் தூதராக அனுப்பிய தம்பிரான் தோழராகிய சுந்தர மூர்த்தி சுவாமிகளை நாம் வணங்குவோம். 12

## திருவாதவூரடிகள் வணக்கம்

13 அத்தனார் பெருந்துறைபுக்கு அரியவினைக் கடல்கடந்து,
புத்தனார் மதங்கடிந்து, புனிதமா கியசீவன்
முத்தனார், மாணிக்க வாசகனார், முத்திக்கு
வித்தனார், வாதவூர் வித்தகனார் தாள்போற்றி.

(பொருள்) பரமசிவன் குருவடிவமாக எழுந்தருளியிருந்த திருப்பெருந்துறைக்குப்போய் அவ்இறைவனுடைய அருளைப்பெற்று, அரிதாகிய தீவினைக் கடலைத்தாண்டி, அந்தக்காலத்தில் பரவியிருந்த பௌத்தர்களுடைய மதத்தைக் கண்டனம் செய்து, பரிசுத்தமாகிய சீவன் முத்தியை அடைந்தவரும், அம்முத்தியாகிய நிலத்திற்கு விதையாகியும், திருவாதவூரில் பிறந்த ஞானவடிவாயுமிருக்கின்றவரும் ஆகிய மாணிக்கவாசக சுவாமிகளுடைய பாதங்களை வணங்குவோம். 13

## திருத்தொண்டர் வணக்கம்

14 மனையாளை அரற்குஅளித்து மனங்களித்த
இயற்பகையார் மலர்த்தாள் போற்றித்
தனைஆளும் பெருமானுக்கு எச்சிலிடும்
கண்ணப்பர் சரணம் போற்றி,
வினையாளர் அறியாத திருநீல
கண்டர்அடி விரும்பிப் போற்றி!
எனைஆளும் இளையான்தன் குடிமாறர்
இணைஅடியை இறைஞ்சு வோமே.

(பொருள்) பரமசிவன் அடியார் வேடந்தாங்கி வந்து "உன்மனைவியை எனக்குக் கொடுத்துவிடு" என்று கேட்க, தன் மனைவியாரை அவர்க்குக் கொடுத்து, அதனால் அதிக மகிழ்ச்சியடைந்த இயற்பகை நாயனாருடைய மலர்போன்ற பாதங்களை வணங்கி, தன்னை ஆட்கொண்ட சிவபெருமானுக்குத் தான் தின்று உருசி பார்த்து, எச்சிலைக் கொடுத்த கண்ணப்பதேவரது திருவடிகளைக் கும்பிட்டு, வினையை உடையவர்கள் அறியாத திருநீலகண்ட நாயனாருடைய திருவடிகளைப்பரவி, அடியேனை ஆட்கொண்டருளும் இளையான்றன்குடிமாற நாயனாருடைய திருவடிகட்கு வணக்கம் செய்வோம். 14

15 ஐயடிகள் காடவர்கோன் ஈரடியை
வணங்கி,மகவு அறுத்து அரற்கு
நெய்யடிசில் உடன்படைத்தார் திருவடியைத்
தொழுது,திரு நீற்றுச் சோழன்
மெய்யடியைப் புகழ்ந்து,தெய்வ உலாச்சொன்ன
சேரன்அடி விரும்பி ஏத்திப்
பொய்யடிமை இல்லாத புலவர்முதல்
அனைவரையும் போற்று வோமே.

(பொருள்) ஐயடிகள் காடவர்கோன் நாயனாரது இரண்டு பாதத்தையும் வணங்கி, எமது சிவபிரானுக்குப் பிள்ளையை அறுத்துச் சமைத்த கறியை நெய்விட்ட அன்னத்துடன் படைத்த சிறுத்தொண்டநாயனாருடைய அழகிய சீர்ப்பாதங்களை வந்தித்து, திருநீற்றுச் சோழன் என்னும் உண்மை அடியாரது திருவடிகளை வாயாரத் துதித்து வணங்கி, தெய்வீகம் பொருந்திய திருவுலாப் பிரபந்தம் பாடிய சேரமான் பெருமாள் நாயனாருடைய பாதத்தை ஆசையுற்றுப் பணிந்து, மெய்யடிமையுடைய புலவர்கள் முதலாகிய யாவரையும் வணங்குவோம், 15

## நந்திதேவர், துர்க்கை, கௌதமர், சண்டேசுரர் வணக்கம்

16 நந்திதிரு அடிஇறைஞ்சி, விந்தைஅடி
புகழ்ந்து,மறை நான்கிற்கு ஐந்தாய்
வந்தருளும் கோதமனார் மலரடிஎன்
முடிக்குமுடி மாலை ஆக்கி,
தந்தைஇரு பதஞ்சிதைத்துச் சிதையாத
பதத்துஇருந்த தண்டிதாளைச்
சிந்தைமிசைக் குடிஇருத்தி, அருணகிரி
நினைப்பவர்தாள் சென்னி சேர்ப்பாம்.

(பொருள்) நந்திகேசருடைய அழகிய பாதங்களைத் தொழுது, துர்க்காதேவியின் பாதங்களை வணங்கி, நான்கு வேதத்தினின்றும் திரண்டெழுந்த ஐந்தாம் வேதவடிவென்று சொல்லப்பட்ட கௌதமருடைய தாமரை போன்ற பாதத்தை என் தலைக்குத்தரிக்கப்பட்ட மாலையாக அணிந்து, தம்முடைய தகப்பனாரது இரண்டு பாதங்களையும் வெட்டி அதனால் கெடாத முத்திப்பதத்திலிருந்த சண்டேசருடைய பாதத்தை இதயத்தில்குடியிருக்கச்செய்து, அருணாசலத்தை நினைப்பவருடைய பாதத்தைத் தலைமேல் சேர்த்துக் கொள்வோம், 16

## அவையடக்கம்

17 தேறுகின்ற பலகலையும், தெளிந்தசுவை
இருநான்கும் திகழும் பாடல்
கூறுகின்ற புலவர்முன்னே, தமியேனும்
சிலபுகலக் குறித்த வாறு,
வீறுகின்ற மறைவிரிஞ்சன் ஏறிவரும்
அனத்தின்முன்னும், விரிஞ்சன் தாதை
ஏறுகின்ற கருடன்முன்னும், ஒருமசகம்
பறவைஎனத் திரிதல் போலும்.

(பொருள்) பெரியோர்களால் தெரியத்தக்க பலநூல்களையும் குறைவறக் கற்று எட்டுச் சுவையும் பொருந்திய தமிழ்ப் பாடல்களைச் சொல்லுகின்ற புலவர்கள் முன்னே, ஒன்றும் அறியாத யானும் சிலபாடல்களைப் பாடநினைத்தவிதம், விளங்கிய நான்கு வேதங்களையுடைய பிரமன் ஏறி நடத்தும் அன்னத்தின் முன்னும், அவன் தகப்பனாகிய விட்டுணு ஏறும்படியான கருடனின் முன்னும், ஒரு சிறிய கொசு தானுமொரு பறவையெனப் பறத்தல் போலும். 17

18 நீர்இருக்குது எனப்பழித்து விடுவரோ
அதுபாலின் நிகழும் ஆனால்?
நார்இருக்குது எனக்கழித்து விடுவரோ
அதுமலரின் நண்ணும் ஆனால்?
ஆர்இருக்கும் சடைமுடியார், விடம்இருக்கும்
திருமிடற்றார், அருணை நாதர்
பேர்இருக்கும் தகைமையினால், எனதுஉரையை
இகழுவரோ பெருமை யோரே?

(பொருள்) பாலொடு கலந்திருக்கின்றநீரைச் சேர்க்கைவிசேடத்தால் தள்ளாமல் எடுத்துக்கொள்வார்கள்; மலர்மாலையோடு சேர்ந்த நாரையும் அப்படியே கொள்ளுவார்கள்; மாலையைச் சூடிய சடைமுடியையும், ஆலகாலமிருக்கும் கண்டத்தையுமுடைய அருணாலேசருடைய திருப்பெயர் இருக்கிற பெருமையினாலே, என்னாற் செய்யப்பட்ட புன்பாடல்களையும் பெரியோர்கள் ஒப்புக்கொள்வார்களேயன்றி இகழார்கள். 18

19 அழகுதரக் கனிந்தநச்சு மரம்பழையது
எனினும்,அதில் அமுதுண் டாமோ?
இழைவுதரு சுவைக்கரும்பு புதியதுவே
எனினும்,அதில் இரசம் போமோ?
இழிவுறுபா டலும்உயர்வு தங்கியசெய்
யுளும்,அவைபோல் இருக்கும் ஆகில்,
பழமைஎன நலந்தருமோ? புதுமைஎன
இகழ்படுமோ? பயன்கொள் வோர்க்கே.

(பொருள்) அழகிய சிவப்பு நிறம் பொருந்தப் பழம் பழுத்த எட்டிமரம் வெகுநாளைய மரமாயிருந்த போதிலும் அதில் இனிப்பு உண்டாகாது; யாவராலும் விரும்பப்பட்ட இனிப்புள்ள கரும்பு கொஞ்சநாளையதாயிருந்தாலும் அதில் கசப்புண்டாகாது; அதுபோல் குற்றத்தோடுகூடிய செய்யுள், பழமையாய் இருப்பதனால், நன்மையைக் கொடுக்காது; யாதொரு குற்றமுமில்லாத உயர்வான பாடல் சில நாளைக்கு முன்னர் உண்டாகியிருப்பதனால் இகழப்படாது பயன் காண்கின்றவர்கட்கு. 19

20 திணையளவும் தமிழ்மிடியற்று அதிமதுரம்
பிறந்தகல்வித் திறமை யோரும்
நினையும்இயல் சுவையறியா மூடர்பருஉ
அறிவின்முன்னே நிற்க லாமோ?
வினைஅடரும் குவளைவிழி அனிச்சமலர்
அனையதிரு மேனி மாதர்
புனைவில்மதன் மலர்க்கணையைப் பொறுப்பதல்லால்
அமரின்அம்பு பொறுத்தி டாரே.

(பொருள்) கொல்லுந் தொழிலடைகின்ற நீலோற்பலம் போன்ற கண்களையும் அனிச்சப்பூவை ஒத்த உடம்பினையுமுடைய பெண்கள், அழகிய கரும்புவில்லைத் தாங்குகின்ற மன்மதனாலே விடப்பட்ட மலர் அம்புகளைப் பொறுப்பார்களே அல்லாமல், கொடியதாகிய போரில் விடுகிற அம்பைப் பொறுக்கார்கள்; அதுபோல, தினையளவுகூடச் செந்தமிழ்த் தரித்திரம் இன்றி, அதிக மதுரம் பிறந்த கல்வி வல்லவர்களும் கற்றற்கு அரியதெனப் பலரும் நினைக்கின்ற இலக்கணரசமே அறியாத மூடர்கள் மிகுந்த அறிவையுடைய கல்விப் பிரசங்கத்தின் முன் நிற்கார்கள். 20

## நூல் வரலாறு

21 கருத்துஉருக இறைவன்நந்திக்கு அருள்புரிய,
நந்தியும்,மார்க் கண்டர்க்கு ஓத,
விருத்திமறை வியாதமுனிக்கு அவன்உரைக்க,
சூதனுக்கு வியாதன் சொல்லப்
பொருத்தமனத்து இருடியருக்கு அருட்சூதன்
மொழிந்த.சிவ புராணங் கோடி;
உருத்திரசங் கிதைஉரைத்த அருணகிரி
வளத்தினை,நான் உரைக்கல் உற்றேன்.

(பொருள்) மனமுருகப் பரமசிவன் நந்திகேசருக்கு அருள்புரிய, நந்திகேசரும் மார்க் கண்டேயருக்குப் புகல, மார்க்கண்டேயர் வேதங்களை ஒழுங்குசெய்த வியாசருக்குப் பகர, வியாசர் சூத முனிவருக்குச் சொல்ல, சூதர் ஒரு வழிப்பட்ட மனமுடைய சௌனகர் முதலிய முனிவர்களுக்கு அருள்செய்த சிவபுராணங் கோடியாகும்; அவைகளில் (ஒன்றான) காந்தத்தில் உருத்திர சங்கிதையில் சொல்லிய அருணாசலத் தலச்சிறப்பை யான் சொல்லத் தொடங்கினேன். 21

22 அருணை நகர் வளமையும்,மால், அயன்அகந்தை
விட,அழல்வெற்பு ஆன வாறும்,
பொருவில்மகம் அழித்ததுவும், அரன்உமையை
மணந்ததும்,கண் புதைத்த வாறும்
வருமகிடன் இறுகலைந்ததுவும், இறைவிஇடம்
கலந்ததுவும், வயிரப் பூணன்
இருவினையை அகற்றியதும், மற்றுமுள
சரிதைஎலாம் இயம்பு வேனே.

(பொருள்) அருணாசலத் தலச்சிறப்பும், பிரம்ம விட்டுணுக்களுடைய கருவமடங்க அக்கினிமலையானதும், ஒப்பில்லாத தக்கனுடைய யாகத்தை அழித்ததும், சிவன் பார்வதியைக் கலியாணம் செய்ததும், அப் பார்வதி தேவியார் சுவாமியினுடைய திருக்கண்களை மூடியதும், மகிடாசுரனை உமாதேவி கொன்றதும், அவ் உமையவள் இடப்பாகத்தில் சேர்ந்ததும், வச்சிராங்கத பாண்டியனுடைய பாவத்தை நீக்கினதும் மற்றுமுள்ளனவும் சொல்லுவேன் 22

23 அங்கிகுலம் ஓங்கவரும் வல்லாள
பூபன்தன் அரிய தொண்டும்,
துங்கமிகும் தீர்த்தமுடன் திருமலையை
வலம்புரியும் சுடரோன் பேறும்,
பொங்குபிர தத்தனொடு வினைதீர்த்த
வாறு,புள காதி யாவும்
இங்கிதஞ்சேர் வடகலையில் இருந்ததனைத்
தென்கலையால் இயம்பல் உற்றேன்.

•

(பொருள்) உலகின்கண் ஓங்கு முக்குல வேந்தருள் அக்கினி குலோத்துங்கனென்று வழங்கும் சேரகுலாதிபனாகிய வல்லாளராசனுக்குப் பிள்ளைக் கலி நீக்கி முத்தியளித்ததும் அத்தலத்தில் ஓங்கும் தீர்த்தங்களின் பெருமையும், அவ்வருணாசலத்தை வலஞ் செய்பவர்கள் பெறும் பேறும், கதிரவனுடைய ஆணவத்தை அடக்கி முத்தியளித்தவாறும், புகழ் பொருந்திய பிரதத்தன் என்னும் வேந்தனது சரித்திரமும், புழுகு பூனையாக இருந்து மூன்று உலகங்களினும் சுற்றி வந்த புளகாதிபன் என்னும் அரக்கனுடைய சரிதமும், இங்கிதம் மிகுந்த வடமொழியிலிருந்ததைத் தென்மொழியாகிய தமிழினால் சொல்லத் தொடங்கினேன். 23

பாயிரம் முற்றிற்று

## 1. திருநகரச் சருக்கம்

24 துங்கமழு, உழை,பிரம்பு, சுரிகை,அகலாத,கையான், துகிர்க்குன்று அனடே
திங்கள்உமிழ் நிலவனைய வெண்பொடியான்; சடைமுடியான்; செறிமுக் கண்ணன்;
பொங்குதிரு அரைஅகலாப் புலித்தோலான்; புயம்நாலான்; புரிமுந் நூலான்;
கங்கைமதி தவழ்சடையான், திருஆணை செலுத்தி,வெள்ளிக் கயிலை காப்பான்.

(பொருள்) உயர்வாகிய மழுவும் மானும் பிரம்பும் உடைவாளும் நீங்காத கையை யுடையவன்; பவழமலையில் சந்திரன் பொழிகின்ற நிலவு போலத் தேகத்தில் அணிந்த திருநீற்றை உடையவன்; சடைமுடியையுடையவன்; நெருங்கிய மூன்றுகண்களையுடையவன் விளங்குகின்ற இடுப்பில் என்றும் நீங்காத புலித்தோலை யுடையவன்; நான்கு தோள்களை; யுடையவன்; மூன்று புரியாகிய பூநூலை யுடையவன்; கங்கையும் சந்திரனும் தவழ்கின்ற சடையை யுடையவன் ஆகிய பரமசிவனது கட்டளையைச் செலுத்திக்கொண்டு வெள்ளி மயமாகிய கைலைமலையைக் காக்கின்றவன். 1

25 கொய்வனச மலர்நிறத்தான்; மைவளரும் திருமிடற்றான்; குலவெள் ஏற்றான்;
சைவம்எனும் பயிர்தழைக்கக் கருணைமழை பொழிமேகம் தன்னை ஒப்பான்;
ஐவரையும் அகத்தடக்கும் சிலாதரற்குப் புறத்துஉலவும் ஆவி போல்வான்;
தெய்வமெலாம் தொழச்சிவந்த மலர்ப்பதத்தான்; நந்திஎன்னும் திருநா மத்தான்.

(பொருள்) கொய்யப்பட்ட செந்தாமரை மலரையொத்த நிறத்தையும், கருமை வாய்ந்த விடம் பொருந்திய கண்டத்தையும், நல்ல வெண்மையாகிய இடபவாகனத்தையும் உடைய பரமசிவனுக்குச் சம்பந்தமாகிய சைவசமயமென்னும் பயிர் தழைப்பக் கருணையாகிய மழையைப் பொழிகின்ற மேகம் போன்றவரும், ஐம்பொறிகளையும் அகத்தினின்றும் புறத்தில் தீமையாகிய பொருள்களில் செல்ல ஒட்டாமல் தம்மனத்தகத்தே அடக்கிய சிலாதரரிவிக்குப் புறத்தில் சஞ்சரிக்கின்ற உயிர்போன்றவரும், திருமால் முதலான தேவர்கள் எல்லாம் வணங்க, அதனால் சிவப்பேறிய தாமரை மலரை ஒத்த பாதங்களை உடைய நந்திதேவரென்கிற அழகிய திருநாமத்தைப் பெற்றவர். 2

26 ஈசன்அணி நதிமதியும், திருவுருவும்,
திருஉருவின் இசைந்த நீறும்
தேசுஎன விளங்கும்ஒரு கயிலாயச்
சிலம்புஉளது;அச் சிலம்பின் மீதே
வாசவனே முதல்இமையோர் நெருங்குதலால்
மகுடமொடு மகுடம் தாக்கி,
ஓசையுடன் கனகமணிப் பொடிஉதிர்ந்து,
கனகமலைக்கு உவமை யாமே.

(பொருள்) பரமசிவன் தரிக்கின்ற கங்கையும் சந்திரனும், அவரது திருவுருவமும், அவ்வுருவத்தில் இயற்கையாய் அமைந்த திருநீறுமாகிய இந் நான்கினுடைய ஒளியைப் போலப் பிரகாசிக்கும் கயிலாயம் என்னும் ஒப்பற்ற திருமலையுண்டு; அத்திருமலைமேல் வணங்குவதற்காகத் தேவேந்திரன் முதலாகிய தேவர்கள் வந்து நெருங்குகிறபடியால், கிரீடத்தோடு கிரீடம் இடிபட்டுச் சத்தத்துடனே, தங்கப்பொடிகளும் இரத்தினப்பொடிகளும் உதிர்ந்து மகமேருமலைக்கு நிகராகக் குவியும். 3

27 இந்திரநீ லச்சிலையால் இசைத்தகடந்
தெரியாமல் எழுதிச் சேர்த்து,
மந்தரமாம் எனவயிரத் தூண்நிறுத்தி,
மாணிக்க மதலை கூட்டிச்
செந்துகிரால் போதிகையும், மரகதத்தால்
உத்திரமும் செறித்து, மீதே
சந்திரகாந் தத்தகடு பரப்பிய,மண்
டபம்உளது,அச் சயிலம் மீதே.

(பொருள்) இந்திரநீல ரத்தினக் கற்களினாலே ஒன்றோடொன்று சேர்த்த சந்து தெரியாமல், சித்திரமெழுதிச் சுவர்வைத்து, மந்திரகிரிபோல் வயிரத்தூண்களை நிறுத்தி, மாணிக்கத்தினால் செய்த கொடுங்கை சேர்ந்துச் சிவப்பாகிய பவளத்தினால் போதிகையும் மரகதத்தினால் உத்திரமும் சேர்த்து அதன்மேல் சந்திரகாந்தத் தகடு பரப்பிய மண்டபம் ஒன்று அந்த மலையின்மேல் இருக்கின்றது. 4

28 இருமருங்கும் தரளமணி இழைத்தஅரி
ஆதனத்தில் இருந்து, நீலப்
பருமணியால் இழைத்தஒரு பாதபீ
டிகையின்மலர்ப் பதத்தை ஊன்றி,
மருவுபெருங் கயிலேயின்மீது இருந்துமுய
லகன்முதுகில் வலத்தாள் ஊன்றி,
அருமறையை முனிவரருக்கு உரைக்கும்இறை
எனஇருந்தார்; அந்த வேளே.

(பொருள்) நந்திகேசுரர், அந்த மண்டபத்தில் இரண்டு பக்கமும் முத்துக்களி ழைத்த சிங்காதனத்திலிருந்து, பருத்த நீலரத்தினத்தினலே இழைக்கப் பட்டிருக்கிற மேன்மை அமைந்த பாதக் குறட்டின்மேலே மலர்போன்ற திருவடிகளே வைத்துக்கொண்டு, சிவகணங்கள் சூழப்பட்ட பெருமையுடைய கைலாயகிரிமேல் எழுந்தருளியிருந்து, முயலக னது முகின்மேல் வலப் பாதத்தை வைத்து, அரிதாகிய வைதிக சைவ சித்தாந்தப் பொருளே முன் விரும்பிக்கேட்ட முனிவர்களுக்குத் திருவாய் மலர்ந்தருளிய சிவபெருமான் போல் இருந்தார்; அந்த வேளேயில். 5

29 குற்சன்,உரோ மசன்,குமுதன் குமுதாக்கன்,
சகடாயன், கும்ப சாதன்,
வற்சர்,வைசம் பாயனர்,க ணுசிமுனி,
புலிக்காலன், வாம தேவன்,
நற்சனகன், சனற்குமரன், வாதரா
யணன்,மதங்கன் நடனத் தாளே
அர்ச்சனேசெய் அனந்தமுனி முதல்அனந்த
முனிவரர்தம் அருகில் சூழ.

(பொருள்) குற்சன், உரோமசன், குமுதன், குமுதாக்கன், சகடாயன், குடத்தில் தோன்றிய அகத்தியன், வற்சன், வைசம்பாயவன், கணுசிமுனிவன், புலிக்கால்முனிவன், வாமதேவன், மெய்ஞானியாகிய சனகன், சனற்குமாரன், வியாசன், மதங்கன், சுவாமியி னுடைய நடனம் பொருந்திய திருடிகளில் அர்ச்சனே செய்கின்ற ஆதிசேடவதாரமாகிய பதஞ்சலி முதலாகிய முடிவிலா முனிவர்கள் தம்முடைய பக்கத்தில் சூழ. 6

30 மன்னியமார்க் கண்டமுனி உடன்எழுந்து
பணிந்து"உயிர்கள் மழைமின் போல
இந்நிலத்தில் பிறப்பதுவும் இறப்பதுவும்,
இருவினையும் எமக்குத் தோன்றச்
சொன்னஒரு தனிமுதலே! முத்திபெறும்
பரிசுஎமக்குச் சொல்வாய்!" என்றான்;
அன்னவுரை செவிப்புகலும், நந்திஅருள்
சுரந்து,முனிக்கு அருள்வ தானான்.

(பொருள்) என்றும் பதினாறாக நிலைபெற்ற வயதினையுடைய மார்க்கண்டேய முனிவர் விரைவாக எழுந்திருந்து, நந்திதேவரை வணங்கி, சுவாமி! மேகத்தில் தோன்றி அதிசீக்கிரத்தில் அழியும் மின்னல் போல, உயிர்கள் இவ்வுலகத்தில் பிறப்பதும், இறப்பதும் இவைகளுக்குக் காரணமாகிய நல்வினை தீவினைகளாகிய இரண்டும் எங்களுக்கு விளங்படியாக அருளிச் செய்த ஒப்பற்ற கடவுளே! நாங்கள் வீட்டுலகை அடைவதற்குத் தக்க வழியை அருளவேண்டும் என்று கேட்க, அந்தவார்த்தை அவர் திருச் செவியில் விழுந்த உடனே, மிகுந்த கருணையுடையவராகி நந்தி தேவர் மார்க்கண்டேயருக்கு அருளிச்செய்யத் தொடங்கினார். 7

31 கம்பைநதி, கும்பநதி, காவிரி,கோ
தாவிரியே, கன்ன வேணி,
பம்பைநதி, வேகவதி, வேதவதி,
சரயுநதி, பரமாம் கங்கை,
செம்புநதி, பொன்முகரி, யமுனைநதி,
நருமதை,மேல் செப்பும் சோணை
அம்புவியின் மிகவுள;அங்கு ஆடினர்தம்
வினைஅகற்றும்; அதுவல் லாமல்.

(பொருள்) கம்பநதி, கும்பநதி, காவிரி, கோதாவிரி, கிருஷ்ணவேணி, பம்பைநதி, வேகவதி, வேதவதி, சரயுநதி, எல்லா நதிகளுக்கும் மேலாகிய கங்காநதி, தாம்பிரவர்ணி, பொன்முகரி, யமுநாநதி, நருமதைநதி, மேன்மையாகச் சொல்லப்பட்ட சோணை நதியென்று அழகான பூவுலகத்தில் அநேக நதிகளுண்டு; அவைகள் தம்மிடத்தில் வந்து நீராடுபவர்களுடைய பாவத்தை நீக்கும்; அதுவல்லாமல். 8

32 காசிஎனும் ஒருதலம்இக் கயிலையினும்
சிறப்புளது; கங்கை நீத்தம்
வீசுதிரைக் கொழுந்தோட்டிப் பரகதிக்கு
வேர்ஓட்டும் வியந்து மூழ்கின்;
மாசினுடல் அதிலிறந்தால், மரமேனும்
விலங்கேனும் மனித ரேனும்
ஈசன்அருள் உபதேசம் செவிப்புகலால்
இறைவன்என இருக்க லாமே.

(பொருள்) காசி என்ற ஒரு புனிதத் தலம் இந்தக் கைலாயத்தைப் பார்க்கிலும் சிறப்புள்ளது. அக்காசியில் வருகின்ற கங்கை வெள்ளம், வீசுகின்ற அலைகளைக் கொழுந்தாக ஓடச்செய்து, தன்னிடத்தில் விரும்பி முழுகினல் அவர்களுக்கு வீட்டுலகிற்கு வழி காட்டும்; களங்கம் உள்ள தேகம் அவ்வூரில் இறந்துபட்டால், மரமாவது, விலங்காவது மனிதராவது, பரமசிவனுடைய தாரகப் பிரமோபதேசம் செவியில் சேர்தலாலே சிவ நிலையை அடைந்திருக்கலாம். 9

33 போகி,யொரு புற்றிடங்கொண் டிருப்பதுகண்
டிடுதல்அல்லால், புனிதர் போற்றும்
யோகியொரு புற்றிடங்கொண் டிருந்ததலம்
கண்டதுஉண் டோ? உரைப்பக் கேளும்;
நாகமிசை நடித்தவருக்கு உயிர்வேண்டித்
திருத்தவம்செய் நளினக் கோயில்
ஏகுமனத் தவரான மருவார்ஊர்
தனைஎரித்தார் திருவா ரூரே.

(பொருள்) பாம்பு, புற்றை இடமாகக் கொண்டிருந்ததைப் பார்த்ததேயல்லாமல், ஞானிகள் போற்றுகின்ற யோகி புற்றினிடத்திலே இருந்த தலத்தைப் பார்த்த துண்டோ? அது யாதெனில், சொல்லக் கேளுங்கள்; காளிங்கன் என்னும் பாம்பின் மேலேறி நடனஞ் செய்த திருமாலுக்கு உயிர்ப்பிச்சை வேண்டி, செந்தாமரையாகிய ஆலயத்தில் வசிக்கும் இலக்குமி பூசை செய்துகொண்டிருந்த கமலாலயம் என்னும் தலமாகி, வஞ்சம் பொருந்திய மனமுடைய முப்புரத்தினரை நகைத்து எரித்த சிவபிரான் தங்கும் ஊராகிய திருவாரூர் என்னும் திவ்விய தலந்தான். 10

34 தக்கவிராட் புருடன்மனத் தலம்எனும்ஓர்
தலம்உளது;அத் தலத்தின் மீதே
முக்கணஞர் நடிப்பர்;அவர் மூர்த்தியில்ஆ
யிரத்திலொரு மூர்த்தி தானே
இக்கயிலே இடத்துறைவது; அந்நிலத்தின்
பெருமை,நம்மால் இசைக்க லாமோ?
அக்கனக சபைகண்டார், அரி,அயன்கா
ணுதமுத்தி அடைகு வாரே.

(பொருள்) பெருமை பொருந்திய விராட்புருடனுடைய இதயதலமாகிய சிதம்பர மென்று சொல்லப்பட்ட ஒரு தலமுண்டு; அதிலுளதாகிய கனகசபையில் மூன்றுகண்களை யுடைய பரமசிவன் ஆனந்தத் தாண்டவம் செய்வார்; அவருடைய திருவுருவச்சிறப்பில் ஆயிரத்திலொன்றுதான் இக்கைலாய பதத்தில் இருக்கு மென்ருல், அத்தலத்தின் பெருமையை நம்மால் சொல்லக் கூடுமோ? அப்படிப்பட்ட அழகு பொருந்திய பொன்னம் பலத்தைக் கண்டு தரிசித்தவர்கள் திருமாலாலும் பிரமனலும் காணப்படாத முத்தியை அடைவார்கள். 11

35 தாங்குஆழி யவன்சிவனை வழிபடு,மு
துவரை;அந்தத் தலத்தைப் பார்க்கில்
ஓங்கார வடிவு;அதிலே உயிரிழந்தால்
உடல்அழியாது; ஒளிகெ டாது;
வீங்காது; நெகிழாது; பிறஉயிரால்
வருந்தாது; வெடித்தி டாது;
தீங்கான மணம்கிருமி பிறவாது;
கிடக்கும்வலச் செவிமே லாக.

(பொருள்) சக்கரத்தைக் கையில் ஏந்தியுள்ள மாலோன் சிவனைப் பூசை செய்து பேறு பெற்ற விருத்தாசலம் என்ற ஒரு தலமுண்டு; அந்தத் தலத்தைப் பார்க்குமிடத்தில், அது ஓங்காரவடிவமா யிருக்கும்; அத்தலத்தில் உயிர்விட்டால், தேகம் அழியாது; நிறம் குன்ருது; வீக்கம் உண்டாகாது; கட்டுநழுவாது; பறவைகளாலும் விலங்கினங்களாலும் ஊறு ஏற்படாது; வெடிபடாது; கெட்டநாற்றமும் புழுவும் உண்டாகா; வலது காது மேலாகக் கிடக்கும். 12

36 பொய்ம்மகிட முகனைவென்ற அம்மைஇடம்
அகலாத புனித மூர்த்தி,
செம்மையிடம் என்றிருந்த கருமகிட
முகமாகச் செறி,கே தாரம்.
இம்மையிடர், மறுமையிடர், ஞானமில்லாச்
சிறுமைஇடர் எல்லாம் தீர்க்கும்
மும்மைஇடம் பெறும்உலகுக்கு எளிதாகத்
தனிஇருந்த முத்தி போலும்.

(பொருள்) பொய்ம்மையாகிய எருமைக்கிடா முகத்தினையுடைய மகிடாசுரனை வெற்றி கொண்ட அம்பிகையை இடப்பக்கத்தில் நீங்காத தூயராகிய பரமசிவன், "செம்மையாகிய இடம் இதுவே" என்று எழுந்தருளியிருக்கின்ற, கருப்பாகிய எருமையினது முகம் போல் விளங்கிய திருக்கேதாரமென்னும் தலம். இப்பிறப்பில் வருகிற துன்பமும், மறுமையில் வருகிற துன்பமும் ஞானமில்லாததாலே உண்டாகிற துன்பமுமாகிய எல்லாத் துன்பங்களையும் தீர்ப்பதற்கு மூன்றுலகத்தாருக்கும் எளிதாகித் தனியே இருந்த முத்தி இடம்போல் இருக்கின்றது. 13

37 இருப்பன்அத்தன் பருப்பதத்தில் பிரமராம்
பிகையுடனென்று இரண்டு போதும்
விருப்புஅனத்தன், பணிந்து,இமையோர் உலகுமுதல்
அனைத்துஉலகும் விதித்தான்; மற்றைத்
திருப்பதிக்கே இருப்பவனும் தேவர்களும்
சராசரமாய்ச் செனித்துஅவ் ஊரில்
இருப்பதற்கு முயல்வர் என்றால் எத்தலமும்
அத்தலத்துக்கு இணைய தாமோ?

(பொருள்) திருப்பருப்பதம் (மல்லிகார்ச்சுனம்) என்னும் மலையில் பிரமராம்பிகையுடனே பரமசிவன் எழுந்தருளி யிருக்கிறாரென்று, அன்னவூர்தியையுடைய பிரமன் வந்து, பக்தியோடு இரண்டு வேளையும் வணங்கி, அவருடைய அருள்பெற்றுத் தேவலோகம் முதல் எல்லாஉலகங்களையும் படைத்தான்; மற்றைத் திருப்பதியில் இருக்கிற வேங்கடாசலபதியும், தேவர்களும், அந்தத் தலத்தில் அசைபொருள் — அசையாப் பொருளாகப் பிறந்து இருப்பதற்குத் தவஞ்செய்வார்கள் என்றால், எப்படிப்பட்ட தலங்களும் அந்தத் திருத்தலத்திற்கு ஒப்பாகுமோ? 14

38 விருப்புஅடியார் சொரிந்தஅறுகு அலருடனே
விழிஇடந்த வேடர் காலில்
செருப்படியும் உகந்தபிரான், காளத்தி
நகரம்என்னும் தெய்வ பூமி,
பருப்பதமா கியும்விளங்கும்; தண்நறுக்
கொழிக்குமலர்ப் பதுமை யோடு
மருப்படியும் துழாய்மார்பன் வடமலைமேல்
இருந்துகண்டு வணங்க மாதோ.

(பொருள்) திருக்காளத்தி என்னும் தெய்வீகம் பொருந்திய தலத்தில் ஆதிசைவப் பிராமணராகிய சிவகோசரியார் பக்தியோடு மிகுதியாக அர்ச்சனை செய்த அறுகு மலர்கள் இவையுடனே கண்களைப் பிடுங்கிப் பதிந்த கண்ணப்ப தேவரது காற் செருப்பையும் விருப்பமாக ஏற்றுக்கொண்ட சிவபெருமான், தானே குளிர்ச்சி பொருந்திய தேனைச் சொரிகின்ற தாமரை மலரிலிருக்கின்ற இலக்குமியோடு, மணமுள்ள துளசிமாலையையும் அணிந்த மார்பினையுடைய திருமால், திருவேங்கடம் என்னும் திருப்பதியில், நின்ற வண்ணம் அங்கிருந்து தரிசனம் செய்து வணங்கும் பொருட்டு, அந்தக் காளத்தியில் மலைவடிவாகியும் விளங்குகின்றார். 15

39 தேக்குநால் இருதிசையும் புகழ்ந்ததொண்டை
நாடுஎனும்ஓர் தெய்வ நாட்டில்,
நோக்கினர் வினையகற்றும் ஒருதலமுண்டு;
அதன்பெயரை நுவலக் கேளும்;
வாக்குநா யகிகணவன் படைத்தபுவி
தழைக்கஅறம் வளர்த்துஎந் நாளும்
காக்குநா யகியுடனே கம்பநா
யகர்உறையும் கச்சி மூதூர்.

(பொருள்) அகன்ற எட்டுத் திக்கிலுள்ளவர்களும் புகழ்ந்துகொண்டிருக்கின்ற தொண்டை மண்டலம் என்னும் தெய்வீகம் பொருந்திய ஒப்பற்ற நாட்டில், கண்டவர்களுடைய பாவத்தைப் போக்குகின்ற ஒரு தலம் உண்டு; அதன் பெயரைச் சொல்லக் கேளுங்கள்; கலைமகளின் கணவனாகிய நான்முகன் படைத்த உலகத்தில் உள்ள உயிர்கள் அனைத்தும் பிழைக்கும்படி முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்து, எந்நாளும் காக்கின்ற தலைவியாகிய காமாட்சி அம்மையுடனே, ஏகாம்பர நாதர் எழுந்தருளியிருக்கின்ற காஞ்சீபுரமாகும். 16

40 பழுதறவே எழுகடலும் எழுகிரியும்
எழுதலமும் படைத்த வேதக்
கிழவன்அறி யாமுடியை, ஒருபாலன்
அறிந்தபடி கிளத்தக் கேளும்;
அழகுதரு நடம்புரியும் இறைவருக்கு,அம்
பிகைபூசை, அயனுர் பூசை,
விழைவுதரும் அரிபூசை, கரன்பூசை,
புரிந்த,திரு விரிஞ்சை மூதூர்.

(பொருள்) யாதொரு பழுதும் இல்லாமல் ஏழுகடலையும், ஏழுமலையையும், ஏழு உலகத்தையும், படைத்த நான்மறைக் கிழவனுகிய நான்முகனுல் அறியக்கூடாத திருமுடியை, ஓர் ஆதிசைவ அந்தணப் பிள்ளை அறிந்த தலத்தைச் சொல்லக் கேளுங்கள்; அழகு பொருந்த ஆனந்தத் தாண்டவம் செய்த பிரானை, மலைமகளும், நான்முகனும், சிவநேயம் மிகுந்த திருமாலும் கரனும் பூசித்த விரிஞ்சிபுரம் என்னும் தலமாம். 17

41 பொய்யாது புனல்பெருகும் காவேரி
நதிக்கரையில், பூந்த ராயும்
ஐயாறும் இடைமருதும் திருக்குடந்தை
வளநகரும் ஆனைக் காவும்
மையாரும் மிடற்றர்திரி சிரமலையும்
மாணிக்க மலையும் தோன்றும்;
மெய்யாக அவற்றினது பெருமைஎல்லாம்
விரித்துரைக்கும் வேதம் தானே.

(பொருள்) பொய்க்காமல் எந்நாளும் பெருகி வருகின்ற காவிரி நதியின் இரு கரையிலும் சீர்காழி, திருவையாறு, திருவிடைமருதூர், வளம்பொருந்திய கும்பகோணம், திருவானைக்கா, விடம்பொருந்திய கழுத்தையுடைய தாயுமானவர் எழுந்தருளியிருக்கின்ற திரிசிரபுரம், இரத்தினகிரி (வாட்போக்கி) இவை முதலான தலங்கள் விளங்கிக் கொண்டிருக்கும்; அந்த உயர்ந்த தலங்களினுடைய பெருமை எல்லாம் நான்கு மறைகளும் மெய்ம்மையாக விரித்துச் சொல்லும். 18

42 பருவளை ஆர்ப் பரிக்கும்வைகை நதிக்கரையின்
மதுரை,அறு பத்து நாலு
திருவிளையாட்டு இறைவன்இயற் றியதலமாம்;
அதன்பெருமை செப்ப லாமோ?
கருவிளையாட்டு அகற்றும்இரா மேச்சுரம்தென்
கடல்கரையில் காணும்; அங்கே
செருவிளையாட்டு இராகவனார் இராவணனைத்
தொலைத்தபழி தீர்ந்திட் டாரே.

(பொருள்) பெரிய சங்குகள் முழங்குகின்ற வைகையாற்றின் கரையில் சோமசுந்தரக் கடவுள் அறுபத்து நாலு திருவிளையாடல் செய்தருளிய மதுரை என்னும் ஒரு நகர் உண்டு; அந்த நகரின் பெருமை யாராலும் சொல்லப் பெறுமோ? தென்கடல் கரையில், பிறவித்துன் பத்தைப் போக்குகின்ற இராமேச்சுரம் என்னும் ஒரு தலம்உண்டு; போரை விளையாட் டாகச் செய்கின்ற இராமபிரான் இராவணனைக் கொன்றதனால்வந்த பாவத்தை அந்தத் தலத்தில் சிவனை வணங்கி நீக்கிக் கொண்டார், 19

43 அத்தகைய தலங்கள்தம்மில் பிறக்க,உடல்
இறக்க,விழி அமையக் காண,
சுத்தவெளி தனில்ஆடும் சுடர்ஒளிக்கு
மனம்களிக்க, தூய்நீர் ஆட்ட,
வித்தம்அதை எடுத்துஇறைத்துச் சிவாலயமும்
விரிபொழிலும் மிகவுண் டாக்க,
உத்தமம்ஆ கியபரம கதிஉளதுஎன்று
உரைக்க,முனி உரைப்பது ஆனான்.

(பொருள்) அப்படிப்பட்ட தன்மையுடைய நகர்களுக்குள்ளே யாவரானாலும், பிறந் தாலும், உடலைவிட்டு இறந்தாலும், போய்க் கண்கள் களிக்க வணங்கினாலும், தூய்மை யாகிய மனவெளியில் ஐந்தொழில் ஆடல் புரியும், மிகுந்த ஒளியே வடிவமாகிய, பரம சிவனுக்குத் திருவுளம் களிக்கும்படி, தூய்மையாகிய நீரினால் முழுக்காட்டினாலும், செல் வத்தைச் செலவு செய்து சிவனுக்குக் கோயில் கட்டுவித்தாலும், விரிந்த பூஞ்சோலை மிக வைத்தாலும், மிக உயர்வான மேல்நிலை உண்டாம் என்று நந்திதேவர் கூறக் கேட்டு மார்க்கண்டேயர் சொல்லத் தொடங்கினார். 20

44 இந்நிகரா நதிதோறும் தலம்தோறும்
இப்படியே இயற்ற என்ருல்,
முன்னியசீர் அமரருக்கும் சித்தருக்கும்
முனிவருக்கும் முடிவு உருது;
மின்னிகரும் சிறுவாழ்க்கை மனிதர்தமக்கு
எளிதாமோ? மேவி ஞலும்,
அன்னியமாம் பிறஉயிர்க்கும், மரத்தினுக்கும்
கிடையாதே அமல! என்ருன்.

(பொருள்) இப்படிப்பட்ட தன்மையையுடைய சிறந்த நதிகள் தோறும் நகர்கள் தோறும், தேவரீர் கட்டளையிட்ட விதமாகவே நீராடி, வழிபாடு முதலானவைகளைச் செய்ய வேண்டும் என்ருல், மிகுந்த சிறப்புப் பொருந்திய தேவர்களாலும், சித்தர்களாலும், முனிவர்களாலும் முடியாது; அப்படியானுல் மின்னல்போல் தோன்றி, நொடியில் அழியும் சிறிய வாழ்நாளை உடைய மனிதர்களுக்கு எளிதில் முடியுமோ? அப்படி முடிந்தாலும் விலங்குகட்கும், பறவைகளுக்கும், மரங்களுக்கும் அவ்விதப் புண்ணியம் கிடைக்க மாட்டாதே; மாசற்றவரே! (கடவுளே) என்று சொன்னர் மார்க்கண்டேயர். 21

45 ஆடும்அந்த நதிதோறும், இனிதுஎனும்அத்
தலம்தோறும், அனந்த காலம்
தேடுகின்ற பயன்உதவும் சிவஞானம்,
வருந்தாமல், சிறிது போதில்
நாடுகின்ற உறுப்புஇலர்க்கும், அறிவிலர்க்கும்,
புலையருக்கும், நரகுஆள் வார்க்கும்,
ஓடுகின்ற விலங்கினுக்கும், மற்றவைக்கும்
தரும்ஊர்ஒன்று உரைப்பாய் என்ருன்.

(பொருள்) மனிதர்கள் ஆடுகின்ற அந்த நதிகள்தோறும், இனியதாகிய அந்த ஊர்கள்தோறும், அநேக காலமாக நீராடி வணக்கம் முதலியவைகளைச் செய்ததனுல் உண்டாகிய பயனுகிய சிவஞானத்தை, வருத்தப்படாமல் கொஞ்ச காலத்தில் (தானே சுற்றிவருதல், கும்பிடுதல் கண்டுகளித்தல் முதலியவற்றிற்கு ஏதுவாகிய) கை, கால் கண்கள் அற்றவர்களுக்கும், அறிவற்றவர்களுக்கும், சண்டாளர்களுக்கும், நரகத்தில் வீழத்தகுந்த பாவம் செய்தவர்களுக்கும், சுற்றித்திரியும் விலங்கினங்களுக்கும் மற்றும் உள்ள உயிர்ப் பிராணிகளுக்கும், கொடுக்கின்ற ஊர் ஒன்றினைச் சொல்லவேண்டும் என்ருர் மார்க்கண்டேயர். 22

46 இப்படியே நமனைவென்ற பெருந்தவனும்
இருந்தவரும் இயம்பி ஏத்திக்
கைப்பதுமம் மலர்கொடுதன் கால்பதுமம்
தீண்டுதலும், கருணை ஆகி,
அப்படியே முத்திதரும் ஒருதலம்உண்டு;
உரைக்குதும்என்று அமைத்தான்; பின்னை
மைப்படியும் கண்டத்தான் அருணகிரி
நினைந்து,பர வசத்தன் ஆனான்.

(பொருள்) எமனை வென்ற பெருமைபொருந்திய தவத்தினையுடைய மார்க்கண்டேயரும், மற்றும் உள்ள முனிவர்களும், இந்தவிதமாகச் சொல்லித் துதிசெய்து, தாமரை மலர்போன்ற கைகளால் திருநந்திதேவருடைய பங்கய மலர்போன்ற திருவடிகளைத் தொட்டு வணக்கம் செய்தனர்; அப்போது அவர் பேரன்புடையவராய், நீங்கள் சொன்னபடியே முத்திதரும் நகர் ஒன்று உண்டு; அதைச் சொல்லுகின்றோம் என்று கை அமர்த்தினார். பின்னர் நந்திதேவர் விடம்தங்கிய கண்டத்தையுடைய சிவபெருமான் தங்கி இருக்கின்ற அருணாசலம் என்னும் நகரை நினைந்து தன்னை மறந்தார், 23

47 அங்கம்எல்லாம் மயிர்பொடிப்ப, நடுநடுங்கி,
விழிஇரண்டும் அருவி பாயச்
செங்கைஇணை மலர்குவிய, மொழிதளர,
நெடும்போது தெளிவுஇல் லாமல்,
கங்கைஅணி சடையானே! அருணகிரிப்
பெருமானே! கனற்கண் ணானே!
எங்களைஆள் உடையானே! எனத்துதித்து
விழித்ததன்பின் இசைப்பது ஆனான்.

(பொருள்) நந்திதேவர், உடல்முழுவதும் மயிர்க்கூச்செறிய நடுநடுங்கிக்கொண்டு இரண்டு கண்களிலும் அருவிநீர்போல் ஆனந்தக்கண்ணீர் பெருக, மலர்போன்ற இரண்டு கைகளும் ஒன்றாகக்குவிய, மொழிதடுமாற, பல நாழிகை தன் நிலை இழந்து, மகிழ்ச்சியடைந்தவராய், கங்கையைச்சூடிய சடையை உடையவரே! அருணைமலையில் வீற்றிருப்பவரே! நெருப்புக் கண்களை உடையவரே! எங்களை ஆள்கொண்டவரே, என்று போற்றி செய்து, விழித்துக்கொண்டபின் சொல்லத் தொடங்கினார், 24

48 சத்தியஞ் தான்மொழிவன்; முத்திதரும் ஊர்அது;
தனக்குரிய நாமம் மிகவுண்டு;
அத்தனையும் நான்மொழிய எத்தனைவல் லேன்? அதில்ஓர்
அற்ப அளவே புகலுவேன்;
சித்திஉத வும்கவுரி; தேசுநகர் என்றுபெயர்;
தென்அருணை என்று பெயர்;சீர்
வைத்தசிவ லோகநகர் என்றுபெயர்; நீடுசதுர்
வாயுநகர் என்று பெயரே.

(பொருள்) அப்படிப் போற்றிப்புகழ்ந்தபின்பு நந்திதேவர் சொல்வார்; கேளும் மார்க்கண்டேயரே! உண்மையாகச் சொல்கிறேன்; முத்தியைக் கொடுக்கிற ஊர் ஒன்று உண்டு; அதற்குரிய பெயர்களோ பல; அத்தனை பெயரையும் சொல்லுவதற்கு, நான் எவ்வளவு வலிமையுடையவன்? ஆனாலும் அவைகளில் சில பெயர்களை மாத்திரம் சொல்லுகின்றேன்; சித்திகளைக் கொடுக்கிற கௌரிநகர் என்றும், தேசு நகரம் என்றும், அழகிய அருணாசலம் என்றும், சிறப்புப்பொருந்திய சிவலோகநகர் என்றும், நாகரிகம் மிகுந்த வாயு நகரம் என்றும், நூல்களில் சொல்லப்பட்ட சிறந்த பெயர்களை உடையது, 25

49 சத்தபுரி யேமுதல் எடுத்ததலம் யாவும்ஒரு
தட்டும், ஒருதட்டு அதனிலே
அத்தலமும் இட்டுஎதிர் நிறுக்க,அவை கட்குஅதிகம்
ஆனதுஒளிர் அந்த நகரம்;
முத்திநகர் என்றுபெயர்; ஞானநகர் என்றுபெயர்;
முந்தியத லேச்சுரம் எனும்
சுத்தநகர் என்றுபெயர்; தென்கயிலை என்றுபெயர்;
சோணகிரி என்று பெயரே.

(பொருள்) பின்னும் நந்திதேவர் சொல்வார்; ஏழுபுரிகளென்கிற அயோத்தி, மதுரை, மாயாபுரி, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை, முதலாகிய எல்லா நகரங்களையும் ஒரு தட்டிலும், அந்த அருணாசலத்தை ஒரு தட்டிலும் வைத்து நிறுக்க, அந்த நகர்களுக்கு எல்லாம் அதிக கனத்தை உடையதாய் இருந்து ஒளிர்கின்ற அந்த நகரத்துக்கு முத்திநகரமென்றும், அறிவுநகரம்என்றும், முதன்மையாகிய ஊரென்றும் தூய்மை நகரம் என்றும், தென்கயிலாயம் என்றும், சோணமலை என்றும் பெயராம். 26

50 வாதம்மிகு காலம்,அழல், ஊழிஅலை, ஏழுபுயல்,
வாதைபுரி யாத நகரம்;
சீதம்முதல் ஆனபிணி, தீமை,இடை யூறு,பசி
சேரஅரிது ஆன நகரம்;
மாதவர்கள் மாதவர்கள் பூசைபுரி மாநகரம்;
மாதவர்கள் நாபி மலராம்
போதில்உறை வேதியர்தொண் ணூறுபெய ரோடுஅறுவர்
பூசைபுரி தேவ நகரம்.

(பொருள்) இறுதிக் காலத்தில் உண்டாகிய மிகக் கொடிய காற்றினாலும் ஊழித் தீயாகிய வடவைக்கனலாலும், கடல் கொந்தளிப்பினாலும், யுகமுடிவில் பொழிகின்ற ஏழு மேகங்களினாலும், யாதொரு கெடுதியும் அடையாத நகர்; வாத பித்த சிலேத்துமங்களால் உண்டாகிற பிணிகள், தீமையாகிய இடையூறுகள், பசி முதலானவைகள் சேராத ஊர்; பெருமைவாய்ந்த தபசிகள், அநேக மாலோர்கள் பூசை செய்த ஊர்; அப்படிப்பட்ட மாலோர்களுடைய உந்திகளாகிய தாமரை மலர்களில் உண்டாகிய தொண்ணூற்ருறு நான்முகர்கள் பூசித்த தெய்வீகம் பொருந்திய நகர்;—அருணசலம் என்னும் நகராம். 27

51 ஒன்றுஉளது பூமிதனில்; இன்றுபுதிது அன்று;உலகும்
உம்பரும் உயர்ந்த வெளியும்
என்றுஉளதுஅந் நாள்உளது; வேதமுடி மீதினில்
இருப்பதுஅக லாமல்; அதில்ஓர்
குன்றுதல்இல் லாதஒரு வெற்புளது; புண்டரிக
கோளகையும் ஊடு உருவியே
நின்றுஉளது தென்திசையில் என்றும்அழி யாதுநெடு
நீருலகு வாழ்வு பெறவே.

(பொருள்) இப்படிப்பட்ட தன்மையுடைய நகர் ஒன்று உண்டு; அந்த நகர் இன்றைக்குப் புதிதாக வந்ததல்ல; இப்பூவுலகமும், மேலுலகமும், வானவெளியும் என்றைக்கு உண்டாயினவோ அன்றே உண்டா யிருக்கின்றது; நீங்காமல் மறையின் முடிவில் உள்ளது, அந்த நகரில் கெடுதல் இல்லாத ஒரு மலை உண்டு; அது தென் திசையில் என்றும் நிலை பெற்று மிகப்பெரிய பூமியை ஊடுருவி, நெடியகடல் சூழ்ந்த பூமியில் உள்ளவர்கள் வாழும்படி நிற்கின்றது: 28

52 ஆரிடம், இராக்கதம், அசுரம், தேவதம்,
தாருடை மானிடம், சுயம்பு என்றுநாம்
பேரிடும் இலிங்கமே பிறங்கும் எங்கணும்;
ஊருடைப் பருப்பதம் இலிங்கம் ஆவது.

(பொருள்) ஆரிடம் என்றும், இராக்கதம் என்றும், ஆசுரமென்றும் தைவதம் என்றும், மாலையை அணிகின்ற மானிடம் என்றும் நாம் காரணம்பற்றி இடப்பட்ட பெயர்கள் பெற்ற இலிங்கங்கள் எந்த ஊர்களிலும் ஒளிவிட்டு விளங்கும். இந்த நகரிலோ என்றால், மலையே இலிங்கமாக இருக்கின்றது. 29

53 செங்கனல் முதல்உகம்; திரேதை மாமணி;
பொங்கிய துவாபரம் பொலிந்த பொன்னிறம்;
தங்கிய கலியுகம் தன்னி லேசிலை
அங்கமாம்; அதன்பெயர் அருணப் பூதரம்.

(பொருள்) முதல் உகமாகிய கிருத யுகத்தில் சிவப்பாகிய நெருப்பு மலையாகவும், திரேதாயுகத்தில் மாணிக்க மலையாகவும், துவாபரயுகத்தில் மிகுந்த ஒளியுடைய பொன்மலை யாகவும், கலியுகத்தில் கல்மலையாகவும் திருஉருக்கொள்ளும்; அந்த மலைக்கு அருணசலம் என்னும் திருப்பெயராம். 30

54 கருவியாம் உகக்கடை சொரியும் கார்இனம்
உருவம்ஏழு அன்றிஒவ் வொன்று கோடியாய்ப்
பருவம்ஆ யிரம்துளி பனையில் பெய்யினும்
அருவியாய் அடங்கும்அவ் அசல மீதினில்.

(பொருள்) எல்லா உயிரினங்களும் கருஅறும்படி உகம் முடிவில் உலகு அழி வதற்குக் காரணமாக மழையைப் பொழிகின்ற மேகங்கள் ஏழு என்ற எண்ணிக்கை இல்லாமல், ஒவ்வொன்று கோடியாகி ஆயிரம் வருடம் ஒவ்வொரு துளி பனையின் கனி போலப் பருமனைகப் பெய்தாலும், அந்த மலையின்மேல் சிறிய அருவியாகச் சுவறி அடங்கிப் போமல்லாமல் புறத்தில் வரமாட்டாது. 31

55 அரி,அயன் அளவிடா அனந்த காலமாய்த்
திரிதலின் அதற்குஇணை செப்பல் ஆகுமோ?
சுரநதி பரவுஅதில் சுனையின் நீர்உண்ண
இரவிதன் புரவிமேல் ஏறிச் செல்லுமே.

(பொருள்) மால் பன்றியாகவும், நான்முகன் அன்னமாகவும் அநேக கோடி காலமாய்த்தேடி அடிமுடி காணுமல் வருந்துவார்களானல், அந்த அருணசலத்துக்கு ஒன்றை ஈடாகச் சொல்லக்கூடுமோ? அது அல்லாமல் வான கங்கையும் (தன்னிலும் முக்கியம் என்று) துதி செய்கின்ற அந்த மலையில் இருக்கின்ற சுனையிலே நீரை உண்ணச் சூரியன் தேரில் கட்டிய குதிரைகள் தாவிச்செல்லும். 32

56 வெண்மைசேர் புயல்அதன் அடியில் மேவுதல்
எண்மகிழ் கயிலைமீது இருப்பது ஒக்குமால்;
தண்மைசேர் கார்த்திகை விளக்கை ஏற்றுதல்
மண்மகள் மகுடமாம் மணியில் தோன்றுமே.

(பொருள்) வெள்ளை நிறமாகிய மேகங்கள் அந்த மலை அடிவாரத்தில் சேருதல் யாவரும் எண்ணி மகிழும்படி, கைலாய மலைமேல் அந்த மலை இருக்கிறதை ஒக்கும்; குளிர்ச்சி பொருந்திய கார்த்திகைத் திங்களில் கார்த்திகை விளக்கை அந்த மலைமேல் ஏற்றுதல், யாவராலும் புகழப்பட்ட நிலமகளினுடைய திருமுடியில் பொருந்திய இரத்தினம்போல் தோன்றும். 33

57 அன்றுமால் திசைமுகன் அளவி டாமுதல்,
மன்றல்சேர்ந் திடுமலை வடிவு கொள்கையால்,
நன்றுநம் மருகனும் நாமும் ஓர்குலம்
என்றுஉளம் மகிழ்ந்ததே இமய பூதரம்.

(பொருள்) முற்காலத்தில் திருமாலாலும் நான்முகனாலும் அறியப்படாத பரமசிவன், புகழ்பொருந்திய அந்த மலையுருவங்கொண்டதினால், இமயமலை என்பான், இத்தனைக்காலம் வரைக்கும் வேறு சாதியாய் இருந்த நம்முடைய மருமகனும் நாமும் இப்போது ஒரு குலத்தவரானோம் என்று மனம் மகிழ்ந்தான். 34

58 பன்னிரு திங்களும் பரிதி யானதும்
மன்னிய மதியதும் வலம தாய்வரும்;
அந்நிலை உரைக்களென் அறிவு போதுமோ?
உன்னிய ஆசையால் உரைக்கல் உற்றனன்.

(பொருள்) பன்னிரண்டு மாதமும் சூரியனும், நிலைபெற்ற சந்திரனும் மகாமேரு மலையை வலம் செய்தல் போலச் சுற்றிவருவார்கள் என்றால், அந்த அருணாசலத்தின் பெருமையைச் சொல்லுவதற்கு என்னுடைய சிற்றறிவு போதுமோ? ஆனாலும் சொல்ல வேண்டும் என்ற நினைவு கொண்ட அவாவினால் சொல்லத் தொடங்கினேன். 35

59 அர்க்கமா மலைஉளது அடுத்த கீழ்த்திசை;
நற்கண்ஆ யிரத்தவன் நண்ணி வாழ்த்துவன்.
தெற்கிலே உளதுபுத் தேளிர் மாமலை;
பொற்கைஅந் தகன்தினம் புகழ்ந்து போற்றுவான்.

(பொருள்) அருணாசலம் என்னும் மலைக்கு அடுத்த கீழ்ப் பக்கத்தில் அர்க்க மலை என்று ஒருமலை உண்டு; அதில் ஆயிரம் கண்களை யுடைய தேவேந்திரன் இருந்து கொண்டு இறைவனைத் துதிசெய்வான். அந்த அருணமலைக்கு அடுத்த தென்பக்கத்தில் தெய்வமலை என்று ஒன்று உண்டு; அதில் சிவந்த கைகளையுடைய எமன் நாள்தோறும் புகழ்ந்து கொண்டு வணங்குவான். 36

60 மேல்திசைத் தண்டமா விலங்கல் உண்டு;அதில்
சேல்திசை வருணன்முன் செங்கை கூப்புவன்.
தோற்றிடும் வடதிசைச் சூல மால்வரை;
போற்றிய அளகையான் பொருந்தி வாழ்த்துவான்.

(பொருள்) அந்த அருணாசலம் என்னும் திருமலைக்கு மேற்குப் பக்கத்தில் தண்டமலை என்று சொல்லப்பட்ட பெரிய ஒருமலை உண்டு; அதில் மீன் வாகனத்தில் ஏறுகின்ற வருணராசன் முற்காலத்தில் சிவந்த கையைக் கூப்பி அந்த மலையை வணங்குவான்; வடபாகத்தில் சூலமலை என்று ஒரு மலை உண்டு; அதில் எவராலும் போற்றப்பட்ட குபேரன் இருந்துகொண்டு துதி செய்வான். 37

61 மற்றுநால் வரைகளில் வாயு, தீயவன்
நெற்றிசேர் விழியவன், நிருதி போற்றுவர்;
சுற்றுள மலைதொறும் சுரரும் சித்தரும்
உற்றுசீர் வசுக்களும் உறைந்து போற்றுவர்.

(பொருள்) மற்ற நான்கு திக்குகளிலும் இருக்கின்ற மலைகள் நான்கிலும் இருந்து கொண்டு வாயு, அக்கினி, ஈசானன், நிருதி இந்த நால்வர்களும் வணங்குவார்கள். அவைகளைச் சுற்றி இருக்கிற மலைகளில் எல்லாம் தேவர்களும், சித்தர்களும், சிறப்புப் பொருந்திய அட்டவசுக்களும் தங்கி இருந்து வணங்குவார்கள். 38

62 தன்னை,யே நிகரும்அத் தலத்தி லேபுவிக்கு
அன்னை,மா தவம்புரிந்து அதிக மாகவே
என்னைஆள் உடையவன் இடம்க லந்தனள்.
பின்னையும் அதன்நலம் பேசல் ஆகுமோ?

(பொருள்) தனக்குத் தானே ஒப்பாகிய அந்த அருணாசலத்தில், நில உலகத்துக்குத் தாயாகிய பார்வதியம்மை, பெருமை பொருந்திய அரிய தவம் செய்து, என்னை அடிமை கொண்ட பரமசிவனுடைய இடப்பாகத்தில் சேர்ந்தாள். அதனாலே, அந்தஅருணாசலத்தின் பெருமையைச் சொல்லமுடியுமோ? 39

63 தன்னிகர் மந்திரம் புவனம் தத்துவம்
வன்னமாய் விளங்கும்அவ் வரையை, மால்அயன்
அன்னமும் ஏனமும் ஆகி நாடினர்;
இன்னமும் அளவுஇடாது இடும்பை நீங்கினர்.

(பொருள்) தனக்குத் தானே ஒப்பாகிய மந்திரம், புவனம், தத்துவம் இவைகளின் உருவமாய் விளங்கும் அருணாசலத்தை, மால் நான்முகன் இருவரும் பன்றியும் அன்னமும் ஆகித் தேடி, இத்தன்மையையுடைய தென்று அறியக் கூடாமையினாலே தங்களுடைய ஆணவம் நீங்கப்பெற்றனர். 40

64 மருவிய பெரும்புகழ் வச்சி ராங்கதன்
அருணையை வலம்புரிந்து அமலன் ஆயினன்;
கருவிய கலாதரன், காந்தி சாலிஎன்று
இருவரும் பரகதி எய்தினர் அதில்.

(பொருள்) மிக்க புகழ்பெற்ற வச்சிராங்கத பாண்டியன், அருணாசலத்தைச் சுற்றி வந்ததினாலே தன்னுடைய பாவத்தை நீங்கினன்; பெருமை பொருந்திய கலாதரன் காந்திசாலி இவ்விருவரும் வலம் வந்து முத்தி அடைந்தார்கள், 41

65 ஆதியாம் இவர்கள் தொடங்கிஇன்று அளவுக்கு
அனேகர்உண்டு; அருணையை நினைத்தும்,
காதலால் உரைத்தும் கேட்டும்,முன் கண்டும்,
கால்களால் வலம்செய்தும், அதிலே
நீதியாய் இருந்தும், நெறியினல் நடந்தும்
நெடுங்கயம் படிந்து,அறம் புரிந்தும்
சோதிதாள் தொழுதும் பணிவிடை செய்தும்,
துளக்குஇலா முத்திபெற்று இருந்தார்.

(பொருள்) முன் சொல்லப்பட்ட இவர்கள் ஆதியாகத் தொடங்கி அன்றுமுதல் இன்றளவும் அநேகம்பேர் அருணாசலத்தை நினைந்தும், விருப்பத்தோடு துதிசெய்தும் கேள்விப்பட்டும், கண்டு வணங்கியும், கால்களாலே சுற்றிவந்து வணங்கியும் அதில் நீதி பொருந்திய மறைவழியைப் பின்பற்றியும், பெருமை பொருந்திய குளங்களிலே முழுகியும், அறங்களைப் புரிந்தும் ஒளிவடிவமாகிய சிவனை வணங்கியும், திருத்தொண்டுகள் செய்தும் கெடுதலில்லாத முத்தியைப்பெற்றிருந்தார்கள், 42

66 அப்பதி தமிழ்நாட்டு உளது;இடை பெண்ணை
ஆறு;செய் யாறுபிங் கலையாம்;
செப்பிய கமலை நதிசுழி முனையாம்;
செய்ததொன்று ஆயிரம் பலமாம்.
முப்பது மூன்று கோடிதே வர்களும்
முனிவரும் தவம்செய்வார். அதற்கோர்
ஒப்புவேறு இல்லை, இம்பர்நாட்டு இடத்தும்
உம்பர்நாட் டிடத்தும்என்று உரைத்தார்.

(பொருள்) அந்த அருணாசலநகர் தமிழ் நாட்டில் இருக்கிறது; அப்பதிக்கு வலப் பக்கத்தில் வருகிற பெண்ணையாறு இடகலை என்னும் நாடியாகும்; இடப்பக்கத்தில் வருகிற செய்யாறு பிங்கலை என்னும் நாடியாகும்; பலரும் புகழத் தக்க கமலை என்னும் நதி சுழிமுனை என்னும் நாடியாகும்; அந்த நதிகளில் முழ்கினால் ஒன்றுக்கு ஆயிரம் பங்கு பலன்வரும், முப்பத்து முக்கோடி தேவர்களும், முனிவர்களும் அந்த நகரில் தவம் செய்வார்கள்; அதற்கு ஒப்பு இந்த உலகத்திலும், மேல் உலகத்திலும் இல்லை என்று சொன்னார் நந்திதேவர். 43

67 அற்றம்இல் அவன்சொல் அருணையின் சிறப்பால்
அகம்மகிழ்ந்து உருகிய முனிவன்,
மற்றுள தலத்தில் அதிகம்என்று உரைத்த
வாய்மையை மனங்கொளாது உரைப்பான்;
சிற்றறிவு உடையேன் ஆதலால் ஒருசொல்
தெளிந்திலேன், எனச்சொன்னான்; அதனை
முற்றுஉளம் உணர்ந்தான், மொழிஎன, மொழிந்தான்;
முனிவனும் அவற்குஇவை மொழிவான்.

(பொருள்) சிவஅன்பில் சோர்வில்லாத நந்திதேவரால் சொல்லப்பட்ட அருணாசலத்தின் வரலாற்றுச் சிறப்பினாலே மனம் மகிழ்ந்து உருக்கத்தை அடைந்த மார்க்கண்டேயர், மற்ற சிவநகர்களைக் காட்டிலும், அருணாசலநகர் மேலானது என்று சொன்னதை மனதில் ஒத்துக்கொள்ளாமல் "தேவரீர்! நான் சிறிய அறிவை உடையவன் ஆதலால் நீங்கள் திருவுளம்பற்றி அருளியது நன்றாகப் புலனாகவில்லை என்று சொன்னார்; அவற்றை முற்றிலும் உள்ளத்தில் உணர்ந்த நந்திதேவர்" உமக்கு உண்டான ஐயத்தைக் கூறும்" என்று கேட்க, மார்க்கண்டேயர் சொல்லுவார். 44

68 தில்லையைக் காண, காசியில் இறக்க,
சிறக்கும்ஆரூர்தனில் பிறக்க,
எல்லையில் பெருமை அருணையை நினைக்க,
எய்தலாம் முத்திஎன்று உரைத்தீர்!
ஒல்லையில் நாலு தலங்களும் தம்மில்
ஒக்கும்என்று உரைத்திடாது அடிகேள்!
அல்லிசூழ் அருணை அதிகம்என்று உரைத்தது
அருள்என, அருள்செய்வான் அவனும்.

(பொருள்) சிதம்பரத்தைக் காண்பதாலும், காசியிலே உடலை விடுவதாலும், சிறப்புள்ள திருவாரூரிலே பிறப்பதனுலும், அளவில்லாத பெருமையையுடைய அருணுசலத்தை நினைப்பதனுலும் முத்தி கிடைக்கும் என்று சொன்னீர்; இந்த நான்கு நகர்களையும் ஒன்றுக்கொன்று ஒப்பு என்று திருஉளம் பற்ருமல், அடிகளே! அகஇதழினையுடைய தாமரை முதலிய நீர்ப்பூக்களையுடைய தடாகம் சூழ்ந்த அருணுசலத்தை மாத்திரம் அதிகம் என்று கட்டளை இட்டதைச் சொல்ல வேண்டும் என்று மார்க்கண்டேயர் கேட்க, அதற்கு நந்திதேவரும் சொல்லலாஞர் 45

69 இறந்திடும் தொழிலும் பிறந்திடும் தொழிலும்
எண்ணிய படிஅவை முடியா;
பறந்திடும் அவைக்கும் சிலவிலங் கினுக்கும்
பாதவம் முதலஓர் உயிர்க்கும்
நிறைந்தபுன் நீசர் அந்தகர் தமக்கும்
நிருத்தமண் டபம்தொழ நேராது;
அறம்திகழ் பயனுல் சிலசிலர்க்கு எளிதாம்;
அல்லவர்க்கு அரியதாம் அதுவே.

(பொருள்) கேளும், மார்க்கண்டேயரே! ஒருவன் இறத்தலும், பிறத்தலும் தான் நினைத்தபடி முடியா; பறவைச் சாதிகட்கும், சிற்சில விலங்கினங்கட்கும், மரம் முதலாகிய ஓர் அறிவு உயிருக்கும், புன்மை நிறைந்த கீழோருக்கும், குருடருக்கும் நடராசனது நடனசபையைக் கண்டு வணக்கம் செய்ய நேரிடாது. முற்பிறவியில் செய்த புண்ணியத்தினுலே அந்தச் சபைக்குப் போய்க் காணச் சிற்சிலர்க்கு மாத்திரம் கிடைக்கும்; மற்றவர்களுக்கு அரியதாகும் அந்த நகர். 46

70 குண்டகர், பதிதர், கோளகர், புலையர்,
கொலையினர், உறுப்பினில் குறைந்தோர்,
கண்டகர், நெடும்தூ ரத்தினில் இருப்போர்,
கருணைசேர் அருணபூ தரத்தை,
எண்தக ஒருகால் நினைத்திட முத்தி;
இவரலால் விலங்கு,புள், மரங்கள்,
முண்டகம் முதலா யினவும்முன் காண
முளைத்திட முத்தியே பெறுமால்.

(பொருள்) (ஒரு பெண் தன் கணவனுக்கு அன்றி வேறு ஒருவனுக்குப் பெறப்பட்ட) குண்டகர்களும், பாவிகளும், (விதவையால் பெறப்பட்ட) கோளகரும், தாழ்ந்தவரும், கொலை செய்கிறவர்களும், உடல் உறுப்புக்கள் குறைந்தவரும், தீமைசெய்கிறவர்களும், நெடுந்தூரத்தில் இருப்பவர்களும், அருள்பொருந்திய அருணுசலத்தை நன்ருக ஒரு தரம் நினைக்க, முத்தி உண்டாகும்; இவர்கள் தவிர விலங்குகள், பறவைகள், மரங்கள் தாமரை முதலிய கொடிபூண்டுகளும் அவ்வூரில் முளைத்தால் முத்தியை அடையலாம். 47

71 சிலைஎலாம் இலிங்கம், அதுசிவ லோகம்;
தேவர்பா தவங்கள்,பா தவங்கள்;
அலைஉலாம் புனல்கள், சடைஉலாம் கங்கை;
அருந்தும்ஊண், அமரர்உண் அமுதாம்;
உலவியே வருதல், புவிவலம் வருதல்;
உரைத்தசொல், சுருதியாம்; உறங்கல்,
மலைவுஅறு சமாதி ஆகும்;அத் தலத்தை
மானுமோ மற்றுஒரு தலமே.

(பொருள்) அவ்வூரில் இருக்கிற கற்களெல்லாம் சிவலிங்கங்கள்; எனவே அது சிவலோகமாகும். அவ்வூரில் இருக்கிற மரங்கள் எல்லாம் கற்பக மரங்களாகும். அவ் ஊரில் உள்ள அலை பொருந்திய நீரெல்லாம் சிவபிரானின் சடையில் இருக்கிற கங்கையாகும். அவ்வூரில் உள்ளவர்கள் உண்ணும் உணவுகள் எல்லாம் தேவாமிருதம் ஆகும். அவ் ஊரில் உலாவுதல் பூமியை வலமாகச் சுற்றி வருதலாகும்; அவ் ஊரில் சொல்லும் சொற்கள் வேதமாகும். அவ் ஊரில் துயிலுதல் தவநிட்டைகூடிச் சமாதி இருத்தலாகும் ஆகவே அதற்கு (அருணாசலத்துக்கு) மற்றொரு ஊர் ஒப்பாகுமோ?

72 முத்தழல் புரிந்தோர், நான்மறை தெளிந்தோர்,
ஐவகை வேள்வியும் முடித்தோர்,
எத்தவம் புரிந்தோர், எவ்அறம் செய்தோர்,
எண்வகை யோகியர், எனினும்
அத்தலம் நினையா தவர்க்கிலை முத்தி;
ஆதலால் அமரர்வான் இருந்தும்
சுத்தமா னிடராய்ப் பிறந்துஅதை நினைத்தும்
துளக்குஇலா முத்திபெற்று இருப்பார்.

(பொருள்) காருகபத்தியம், ஆகவநீயம், தக்கணாக்கினியம் என்கிற மூன்று தீயை வளர்த்தவர்களும், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு மறைகளைப் படித்து உணர்ந்தவர்களும் பிரமயாகம், தெய்வயாகம், பூதயாகம், பிதுர்யாகம், மானுடயாகம் என்னும் ஐவகை யாகங்களை நிறைவேற்றினவர்களும், எத்தன்மையாகிய தவம் செய்தவர்களும், எப்படிப்பட்ட அறம் செய்தவர்களும், இயமம், நியமம், ஆசனம் பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி எனப்படுகிற அஷ்டாங்க யோகம் செய்தவர்களாகிய எப்படிப்பட்டவர்களாய் இருந்தாலும், அவ் அருணாசலத்தை நினைக்காவிட்டால் அவர்களுக்கு முத்தி இல்லை; ஆகையினால்தான் தேவர்களாய் மோக்கத்தில் இருந்தவர்களும், ஞானம் உள்ள மனிதராகப் பூமியில் பிறந்து அவ் அருணாசலத்தை நினைவு கூர்ந்து, கெடுதல் இல்லாத முத்தியை அடைந்திருப்பார்கள்.

73 பொருவுஇலாச் சுவர்க்கத்து அமிர்தம்உண்டு இருப்போர்,
போகபூ மியைத்தனி புரப்போர்,
அருணைமா நகரில் கிருமியாய்ப் பிறப்பது
• அதிகம்என்று ஆதரம் கொள்வார்;
மருவும்அப் பதியில் பிறப்பது நூறு
மகம்புரிந் தவர்க்கலால் கிடையா;
திருஅருள் படைத்தார்க்கு எளிதுஅலால் மற்றுஅத்
தேவர்கள் யாவர்க்கும் அரிதே.

(பொருள்) ஒப்பில்லாத மோக்க உலகில் நரை, திரை, மூப்பு உண்டாகாதபடி இன்னமுது உண்டிருப்போர்களாகிய தேவர்களும், போகத்தை அனுபவித்தற்குரிய அந்த மோக்க உலகம் முதலான உலகங்களைத் தனித்தனி ஆளுகின்ற தேவேந்திரன் ஆகிய திசைக் காப்பாளர்களும் அருணசலத்தில் புழுவாய்ப் பிறத்தல், மோக்க நிலையைத் துய்ப் பதைப் பார்க்கிலும் மேலானது என்று அவ் ஊரில் பிறப்பதற்கு விரும்புவார்கள். தெய்வத்தன்மை பொருந்திய அந்த ஊரில் பிறப்பதற்கு நூறு வேள்வி இயற்றியவர் களுக்கு அல்லால் கிடைக்கா. ஆயின் இறைவனுடைய அருளைப்பெற்றவர்களுக்கோ எளிதாகும்; அவர்களை அன்றி மற்றய தேவர்கள் முதலான பெருமை பொருந்திய யாவர்க்கும் அப்படிப் பிறப்பதற்குக் கிடைக்கமாட்டாது. 50

74 வெற்றுஇரும்பு இடத்தில் செம்பில்வெண் கலத்தில்
வெள்ளியில் வெள்ளிய பொன்னில்
குற்றம்ஒன்று இல்லாக் குயிற்றிய மணிபோல்
குலவிய சிவன்இருந்து இடுவன்,
மற்றைய தலத்தில்; அருணைஎன்று உரைக்கும்
. வளம்பதி தனில்எழுந்து அருள்வன்
பொன்தகட்டு இடத்து மணிஎன, உரைத்தான்;
புனிதன்ஆ கியஅருள் நந்தி.

(பொருள்) சொற்ப விலைபெற்ற இரும்பிலும், செம்பிலும், வெண்கலத்திலும் வெள்ளியிலும், வெள்ளைப்பொன்னிலும் பதிக்கப்பட்ட யாதொரு குற்றம் இல்லாத மாணிக்கரத்தினம்போல், மற்ற நகர்களில், எங்கும் நிறைந்த பரமசிவன் எழுந்தருளி இருப்பார்; பொன்னால் செய்த தகட்டில் பதிக்கப்பட்ட அந்த இரத்தினம்போல் அருணசலம் என்று சொல்லப்பட்ட வளம் பொருந்திய நகரத்தில் எழுந்தருளியிருப்பார் என்று, தூய அருளே திருமேனியாகக்கொண்ட நந்திதேவர் திருஉள்ளம் பற்றினர். (ஆதலால் எல்லா நகர்களிலும், இந்த நகர் மேலானதாகும்.) 51

75 கண்ணினால் விளங்கும் திருமுகம்; முகத்தால்
கரியகண் விளங்கும்;அவ் இரண்டின்
பண்ணினால் விளங்கும் உடல்எலாம்; அவைபோல்
பரமனால் விளங்கும்அவ் அருணை;
அண்ணல்தான் விளங்கும் அருணைமா நகரால்;
அமலனோடு அருணைமா நகரால்
எண்இலாப் பதிகள் எவைகளும் விளங்கும்;
எவற்றினும் சிறந்ததுஎன்று இசைத்தான்.

(பொருள்) கேளும், மார்க்கண்டேயரே! கண்கள் இருப்பதால் முகம் ஒளிவீசும்; முகத்தினிடத்தில் இருப்பதால் அக்கண்கள் விளங்கிக்கொண்டிருக்கும்; இந்த இரண்டினுடைய சேர்க்கை அழகினாலே உடலெல்லாம் விளங்கும், அவைபோல் பரமசிவனாலே அருணாசலம் சிறப்படைந்திருக்கும்; அந்த அருணாசலத்தால் இறைவனும் சிறப்பினை உடையவராய் விளங்குகிறார்; அந்த நகரினாலும், அதில் எழுந்தருளியிருக்கிற சுவாமியினாலும், எண்ணிக்கை இல்லாத எல்லா நகரங்களும் சிறப்பாய் விளங்கும்; ஆகையினால் எல்லா நகரங்களிலும் அது (அருணாசலம்) சிறந்ததென்று திருவாய் மலர்ந்து அருளினார். 52

76 வீசுஅலர் இலைமெய் குளிர்ந்திடும் கொடியின்
வேரில்நீர் சொரிந்திடின்; அதுபோல்
பூசனை அருணை நகரிலே சிறிதும்
புரைஅற நடக்குமே ஆகில்,
காசியே முதல்எத் தலம்எலாம் பூசை
கனம்பெற நடந்ததாம்; இலையேல்
ஈசர்வாழ் அந்தத் தலம்எலாம் பூசை
இயற்றிஎன்? இயற்றிடாது இருந்துஎன்?

(பொருள்) ஒரு கொடியினது வேரில் தண்ணீர் ஊற்றினால் அக்கொடியும் அதில் இருக்கிற மணம் வீசுகின்ற மலர்களும், இலைகளும், தளிர்களும் குளிர்ச்சியை அடையும்; அதுபோல் அருணாசல நாயகருக்கு எவ்வளவாகிலும் பூசை குற்றம் இல்லாமல் நடக்குமானால், காசி முதலாகிய எல்லாநகர்களிலும் மேன்மையாகப் பூசை நடந்ததாகும். அத்திருவண்ணாமலையில் பூசை நடவாவிட்டால் சிவன் உறையும் மற்ற நகர்களில் நடந்தால் என்ன? நடவாவிட்டால் என்ன? ஒரு பயனுமில்லை. 53

77 நிலம்தொழும் அருணை சலந்தனில் இருந்து
நெஞ்சினில் ஐயமாய்ப் பிரிந்து,ஓர்
தலம்தனை விரும்பி நடந்தவர், முன்செய்
தவங்களும் அறங்களும் தவரும்;
குலம்தனில் உதித்தோர் ஆயினும் புலையர்;
குணத்தவர் ஆயினும் கொடியர்;
உலந்தவர் உயிரோடு இருக்கினும்; அதற்குஓர்
உவமைசொன் னவர்க்கும்ஈது ஒக்கும்.

(பொருள்) உலகத்தார் போற்றுகின்ற அருணசல நகரிலிருந்து இதைவிட உயர்ந்த நகர்கள் இருக்கும் என்று மனதில் சந்தேகம் கொண்டு பிரிந்து சிவன்உறையும் ஒரு நகரை நாடி நடந்தவர்களுக்கு அவர்கள் அதற்குமுன்னே செய்யப்பட்ட தவங்களும், அறங்களும் பயன்படமாட்டா; அவர்கள் நல்ல குலத்தில் பிறந்தவர்களானாலும், தாழ்ந்தவர்கள் ஆவார்கள்; நல்ல குணங்களை உடையவர்களானாலும் கொடிய குணத்தராவார்கள்; அவர்கள் உயிரோடு இருந்தாலும், : இறந்தவர்கள் ஆவார்கள்; அந்த அருணசலத்துக்கு வேறொரு நகரை ஒப்பாகச் சொன்னாலும் இந்தக் குற்றங்கள் எல்லாம் உண்டாம். 54

78 என்றுதான் அருணைச் சிறப்புஎலாம் முனிவற்கு
ஏதுவோடு எடுத்துஇனிது இயம்பிக்
கன்றுமான் மழுவும் சுரிகையும் தரித்த
கடவுள்நன் கு இருந்தனன்; அவனைச்
சென்றுசென்று இறைஞ்சி நெக்குநெக்கு உருகிச்
சென்னிமேல் செங்கைவே ரோட்டி,
என்றும்ஆ னந்தப் பெருங்கடல் இடைப்புக்கு
உணர்ச்சியாய் முனிவன்ஈது உரைப்பான்.

(பொருள்) இப்படி அருணசலத்தின் பெருமை முழுவதும் ஏதுவோடு முனிவர்களுக்கு இனிதாக எடுத்து அருளிச்செய்து, மான் கன்று, மழு, உடைவாள் இவைகளை ஏந்திய நந்திதேவர் களிப்புற்று இருந்தார். அந்த நந்திதேவரைப் பலதரம் வணக்கம் செய்து, நெக்குவிட்டுருகித் தலைமேல் சிவந்த கைகளை நெடுநேரம் கூப்பி ஒன்றுபட்டவராய்க் களிப்புக் கடலில் முழுகித் தன்னை மறந்தவராகிப் பின்பு நினைவு வந்து இதனைச் சொல்லுவார் மார்க்கண்டேயர். 55

முதலாவது
திரு நகரச் சருக்கம் முற்றிற்று.

## 2 திருமலைச் சருக்கம்

79 எந்தை யே! அருள் நந்தியே!
அடியவர்க்கு எளியாய்!
சிந்தை யானது மகிழ்ந்தனன்;
அருணையின் சிறப்பால்;
அந்த மாநக ரிடத்திலே
சிவன்,அழல் வடிவாய்
வந்த வாறு,உடன் அதுமலை
ஆகிய வகையும்,

(பொருள்) அருணாசலத்தின் சிறப்பைக் கேள்வியுற்ற மார்க்கண்டேயர் சொல்லுவார்: ''எம்முடைய ஆண்டவரே! அடியேனுக்கு அருள் செய்த நந்திதேவரே! அடியார்க்கு எளியவரே! நீர் அருளிச்செய்த திருவண்ணாமலை என்னும் தலத்தின் சிறப்பைக்கேட்டு மனமகிழ்ந்தேன்; அத் தலத்தினில் சிவபெருமான் அனல்வடிவாய் திருஉருக்கொண்டதும், அதன்பின்பு அவ்வடிவு மலை உருவமானதும்;" 1

80 அம்ம லைச்சுடர் அடி,தலை
தெரிகலாது, அயன்,மால்
விம்மல் உற்றதும், அவர்க்குஅருள்
செய்ததும் விளம்பாய்!
கைம்ம லைக்கட கரிஉரி
புனைந்திடும் கயிலைச்
செம்ம லைத்தொழும் செல்வனே!
என,அவன் செப்பும்.

(பொருள்) ''அந்த அனல் மலையின் அடியும் முடியும் அறியக்கூடாமல், பிரமனும், திருமாலும் வருத்தப்பட்டதும், பின்பு இறைவன் அவர்களுக்குத் திருவருள் புரிந்ததும் குறித்து இயம்புவீராக! கையுள்ள மலையை ஒத்த மதத்தையுடைய யானையின் தோலை அணிந்துள்ள கைலாயபதியாகிய பரமசிவனை வணங்கும் செல்வரே!" என்று சொல்ல, நந்திதேவர் கூறத் தொடங்கினார், 2

81 பஞ்ச பாதகம் ஒருவன்அப்
பதியிலே பண்ண
நெஞ்சி னால்நினைத் திடுகினும்,
நினைத்ததே பரமாய்த்
தஞ்சம் ஆகிய முத்தியாம்
என,மறை சாற்றும்;
அம்சொ லால்அது மொழிந்தபேர்க்கு
என்னபேறு அரிதே.

(பொருள்) ஒருவன் அவ் அருணாசலத்தில் ஐம்பெரும் கொடுமைகளைச் செய்ய வேண்டும் என்று மனத்தால் நினைத்தாலும், அப்படி நினைந்ததே மேற்பட புண்ணிய மாகி, அதனால் பற்றுக்கோடாகிய முத்தி உண்டாகும் என்று வேதங்கள் முறையிடும். (அப்படியிருக்க) நல்ல சொற்களினால் அத்திரு மலையைத் துதிப்போர்க்கு என்ன பேறு கிட்டாது? 3

82 ஆகையால் உமக்கு அன்றியே
எமக்கும்உண்டு அதிகம்;
சோக மோகங்கள் தவிர்ப்பவன்,
ஒருபரஞ் சுடராய்
மாகம் ஊடுற வளர்ந்ததும்
மால்அயற் காக;
போக லிங்கம்என் றுனதும்,
ஒருவகை புகல்வேன்.

(பொருள்) ஆதலால், (மார்க்கண்டேயரே!) இந்தச் சிறப்பைக் கேட்கும் உமக்கு மட்டுமே அல்லாமல், எனக்கும் அதிகப்பலன் உண்டாம்; துயரத்தையும் ஆசையையும் நீக்கிவிடும் பரமசிவன், ஒப்பற்ற பெரிய சோதி வடிவமாய், பிரம-விட்டுணுக்களுக்கு ஆக வானளாவ வளர்ந்ததும், (யாவருக்கும்) போகத்தை நல்கும் இலிங்க வடிவுகொண்டதும், எனக்குத் தெரிந்தவாறு இயம்புவேன். 4

83 ஒடுங்கு நாளினில் அயன்,அரி,
உருத்திரன், மகேசன்,
நெடும்ச தாசிவன், விந்து,நா
தம்,சத்தி நெறியே,
அடங்கி டும்பர சிவத்தினில்;
பரசிவம் அனைத்தும்
கடந்த தத்துவ முடிவிலே
நின்றது கருதி.

(பொருள்) அனைத்தையும் அழிக்கும் காலத்தில் முறைப்படி எல்லா உயிர்களும் பிரமனிடத்தில் ஒடுங்கும்; அப்பிரமர் திருமாலிடத்தில் ஒடுங்குவார்; உருத்திரன் மகேசனிடத்தில் ஒடுங்குவார்; அம் மகேசன் சதாசிவனிடத்திலும், அச் சதாசிவன் விந்துவிடத்திலும் ஒடுங்குவார்கள். அவ்விந்து நாதத்தினிடத்தில் ஒடுங்கும். அந் நாதம் சத்தியினிடத்தில் ஒடுங்கும். அச்சத்தி பரமசிவனிடத்தில் ஒடுங்கும். அப் பரமசிவன் திருஉளம்கொண்டு எல்லாம் கடந்த தத்துவ இறுதியிலே நின்றது. 5

84 பரசி வத்தினில் வருபரா
சத்திபால், குடிலை
விரவி டும்;பர தத்துவம்
அடைவிலே விரிந்த;
மருவும் ஐவரும் ஒடுங்கிய
முறையிலே வந்தார்;
அரிம கன்படைத் திடுவது
நினைந்தனன் அகத்தில்.

(பொருள்) (அப்படி எல்லாம் ஒடுங்கின காலத்தில் தனியாய் நின்ற பரமசிவம் உலகம் உண்டாக வேண்டுமென்று, திருஉளம் கொண்ட அளவில்) அந்தப் பரமசிவனிடத்தில் தோன்றிய, பராசத்தியினிடத்தில் குடிலை என்னும் சத்தி தோன்றியது; அப்பராசத்தியின் பெருமை அமைந்த மற்றத் தத்துவங்கள் முறையே உண்டாயின. ஐந்தொழில்களுக்கு உரிய பிரமன், மால், உருத்திரன், மகேசன், சதாசிவன் முதலிய ஐவரும் முன்னே ஒடுங்கிய முறையே உண்டானார்கள். திருமாலின் தனயனான பிரமன் உலகத்தைப் படைப்பதற்கு மனத்தில் எண்ணினான், 6

85 மரிசி, அங்கிரன், புலத்தியன்,
புலகன், நான் மறையோர்,
கிருது, அத்திரி, சனபதி,
எழுவரும் கிளைத்தார்;
உரிய தக்கனும் வலப்பதப்
பெருவிரல் உதித்தான்;
பிருகு மார்பினும், அறத்துஇறை
முகத்திலும் பிறந்தார்

(பொருள்) (அப்படிப் பிரமன் நினைத்தவுடனே) நான்கு வேதங்களிலும் வல்லவர்களான மரீசி, அங்கிரர், புலத்தியர், புலவர் கிருது. அத்திரி, சனபதி என்னும் இருடிகள் எழுவரும் பிறந்தார்கள். தக்கன் வலக்கால் பெருவிரலில் பிறந்தான்; பிருகு மார்பில் பிறந்தான்; தருமதேவதை முகத்தில் பிறந்தது. 7

86 உன்னும் மைந்தரில் மரீசிபால்
காசிபன் உதித்தான்;
பன்னு தக்கனும் அறுபது
பெண்களைப் பயந்தான்;
அன்ன காசிபன் அவர்பதின்
மூவரை அணைந்தான்;
முன்ன ளாகிய அதிதிபால்
இமையவர் முளைத்தார்.

(பொருள்) பிரமனிடத்தில் பிறந்த பிள்ளையாகிய எழுவரில், மரீசி முனியினிடத்தில் காசிபமுனி பிறந்தார்; தக்கன் என்பவன் அறுபது பெண்களைப் பெற்றான்; அந்த அறுபது பெண்களில் பதின்மூன்று பெண்களைக் காசிபர் மணந்தார்; மூத்தவளாகிய அதிதி வயிற்றில் முப்பத்து முக்கோடி தேவர்களும் பிறந்தார்கள். 8

87 இருமை சேர்ந்திடும் இரணிய
இரணியாக் கர்களைத்
தெரிய ஈன்றனள், சிறப்புறும்
திதிஎனும் இளையாள்;
தருண மைந்தரில் இரணியன்
பிரகலா தன்னோடு
அருமை மைந்தர்கள் நால்வரைப்
பயந்தனன்; அவருள்,

(பொருள்) அதன்பின்பு அதிதிக்கு இளையாளாகிய சிறப்புள்ள திதி என்பவள் இரணியன், இரணியாக்கன் என்னும் இருவரையும் புகழோடு பெற்றாள்; இந்த இளமைப் பருவமுள்ள மக்கள் இருவரில் இரணியன் என்பவன் பிரகலாதன், அநு கிலாதன், கிலாதன், சங்கிலாதன் என்னும் நான்கு பிள்ளைகளைப் பெற்றான். அவருள், 9

88 பிரக லாதன்நல் தவத்தினால்
மூவரைப் பெற்றான்;
அருளு மைந்தரில் விரோசனன்
மாவலி அளித்தான்;
பரவு மாவலி வாணன்என்று
ஒருவனைப் பயந்தான்;
அரன்அ ருச்சனை புரிந்துஅவன்
அயன்தொழ இருந்தான்.

(பொருள்) பிரகலாதன் தவத்தினால் மூன்று பிள்ளைகளைப் பெற்றான். அந்த மூவரில் விரோசனன் என்பவன் மாவலி என்பவனைப் பெற்றான். யாவரும் கொண்டாடத்தக்க மாவலி வாணாசுரனைப் பெற்றான். அவ்வாணாசுரன் பரமசிவனைப் பூசித்து, பிரமன் தொழும்படி வாழ்வு பெற்றிருந்தான், 10

89 தனுஅ ளித்தவன் சம்பரன்
முதலினோர் பதின்மர்
அனைய தானவர்ப் பெற்றனன்;
சிங்கிகை அணங்கும்
பனிஇ ராகுவே முதல்ஒரு
நால்வரைப் பயந்தாள்;
இளையள் ஆங்குஒரு மூன்றுபேர்
அசுரரைப் பெற்றாள்.

(பொருள்) மலைகளினுடைய சிறகை அறுப்பதற்குத் தேவேந்திரனுக்குத் தன் முதுகெலும்பைக் கொடுத்து, தேகத்தை விட்டவராகிய ததீசி முனிவர் என்பவர், சம்பரன் முதலாகிய பத்து அசுரர்களைப்பெற்றார். அப் பத்துப்பேரில் சிங்கிகை என்னும் பெண்ணானவள் இராகுமுதல் நான்கு பிள்ளைகளைப் பெற்றாள்; அவளுக்கு இளையவள் மூன்று பெரும் அசுரர்களைப் பெற்றாள். 11

90 கால கேயர்கள் அறுவரைப்
பயந்தனள் காலை;
சால நீள்சிறைக் கருடனும்
அருணனும் தவிர,
நாலு பாலரைப் புதல்வரா
வினதையும் நயந்தாள்;
ஆல நேர்விழிக் கத்துரு
பணிஎலாம் அளித்தாள்

(பொருள்) காலை என்பவள் காலகேயர்கள் என்ற ஆறு பேர்களையும் பெற்றாள். மிகவும் நீண்டிருக்கின்ற சிறகினையுடைய கருடன் அருணனோடுகூட, நான்கு பிள்ளைகளை வினதை என்பவள் பெற்றாள். விடத்தை ஒத்த கண்களையுடைய கத்துரு என்பவள் பாம்புகள் எல்லாவற்றையும் பெற்றாள். 12

91 அரிட்டை என்பவள் இடத்திலே
அரம்பையே முதலா
இரட்டி மங்கையர் பிறந்தனர்;
இலங்குஇளை முனிதன்
அருள்த வத்தில்எண் இரட்டிகந்
தருவரை அளித்தாள்;
உருட்டு வாள்விழி கபிலைபால்
பதின்மர்வந்து உதித்தார்.

(பொருள்) அரிட்டை என்பவளிடத்தில் அரம்பை, ஊர்வசி முதலான பெண்கள் பிறந்தார்கள். விளங்கா நின்ற இளை என்பவள் முனியினது அருளாலே பதினறு வகையாகிய கந்தருவர்களைப் பெற்ருள். உருட்டிப்பார்க்கும் சுபாவம் அமைந்த வாள் போன்ற கண்களையுடைய கபிலையிடம் பத்துப் பிள்ளைகள் பிறந்தனர். 13

92 அங்கி ரர்,சன பதிகள்காந்
தருவரை அளித்தார்;
தங்கும் அத்திரி கதிர்மதி;
புலத்தியன் தனையர்
பொங்கு இராக்கதர், வானரர்,
கின்னரர்; புலகன்
அங்கு மைந்தர்கிம் புருடர்,பின்
விலங்கையும் அளித்தான்.

(பொருள்) அங்கிரர், சனபதி இருவரும் காந்தருவரைப் பெற்ருர்கள். நிலைபெற்ற அத்திரி என்பவர் சூரிய-சந்திரர் இருவரையும் பெற்ருர். புலத்தியருக்கு மக்களாக இராக்கதர், வானரர், கின்னரர் ஆகியோர் பிறந்தனர். புலக முனிவர் கிம்புருடரையும், மிருகங்களையும் புதல்வர்களாகப் பெற்ருர். 14

93 தருண ராகிய வசுக்களைச்
சனபதி தந்தான்;
பிருகு என்பவன் கவியுடன்
சனகரைப் பெற்றான்;
இருவ ரோடுசெந் திருவையும்
பிறகுபெற் றெடுத்தான்;
பருவ மைந்தரிற் கவியுமோ
வெள்ளியைப் பயந்தான்.

(பொருள்) சனபதி என்பவர் பின்னும் தருணப் பருவம் பொருந்திய அட்ட வசுக்களைப் பெற்றார். பிருது என்பவர் கவி என்பவனையும் சவுகரையும் பெற்றார். இவ் இருவரைப் பெற்றதோடு, பின்னர் இலக்குமியையும் பெற்றார். அப்பருவம் பொருந்திய பிள்ளைகளில், கவி என்பவர் சுக்கிரனைப் பெற்றார். 15

94 பரிய தான,தன் தேவிமூக்கு
இரண்டினும் பரிதி
உரிய ஆண்பரி ஆகி,இந்
திரியத்தை ஊற்ற,
வரிசை பற்றிய மருத்துவர்
இருவரும் வந்தார்;
விரிச ராசரம் பிறந்தன
பலபல விதமாய்.

(பொருள்) சூரியன் தன் மனைவியைச் சேருகிறதற்கு முயன்றபோது, அவள் அதற்குப் பொருந்தாமல் பெண் குதிரையாய் ஓடினாள். சூரியன் ஆண்குதிரையாய்த் துரத்த, அவள் திரும்பிப் பார்த்தாள். அப்போது சூரியன் தன் மனைவியின் இரு மூக்கிலும் இந்திரியத்தை ஊற்ற, வரிசையாக அசுவினிதேவர்கள் இருவர் பிறந்தார்கள். அதன்பின்னர் விரிந்த அசையும் பொருள்களும் அசையாப் பொருள்களும் பலவிதமாக உண்டாயின, 16

95 கண்டுஉலகெ லாம்நமது கற்பனைகள் என்றே
புண்டரிக வேதியன் மதத்து,அரி புரத்தில்
தண்டிஎதிர் கொண்டுபகை தங்க இசை,வண்டுஆர்
வண்துளப மாயவனை வைது,உரை வழங்கும்.

(பொருள்) (இப்படி எவற்றையும் உண்டாக்கிய தாமரையானான பிரமன் தன்னால் படைக்கப்பட்ட பொருள்களைப் பார்த்து) இவ்உலகெல்லாம் நம்முடைய படைப்புக்களே என்று செருக்கடைந்தான்; அதனால் திருமாலுக்கு உரியதான வைகுந்தத்தில் வலிதில் போனான்; பகை கொள்ளுமாறு, இசை எழுப்புகின்ற வண்டுகள் சூழ்ந்த துளபமாலையை அணிந்த திருமாலைப் பார்த்து, அவமதித்துச் சில பேசலானான். 17

96 ஏழுலகம், ஏழுபிலம், ஏழுபுயல், ஓர்ஏழ்
ஆழி,முதல் ஏழுகிரி யாம்வகை இயற்றி,
வாழும்உயிர் யாவையும் வகுத்திட மனத்தால்
பாழிகொள் மரீசிமுதல் மைந்தர்கள் படைத்தேன்.

(பொருள்) திருமாலே! பதினான்கு உலகங்களையும், கருத்த ஏழு மேகங்களையும். ஏழு கடல்களையும், முதன்மையாகிய ஏழு குல பருவதங்களையும் உண்டாகும்படி மனத்தினால் படைத்தேன்; (பின்னர்) இப்பொழுது வாழ்கின்ற அசை பொருள் அசையாப் பொருள் ஆகிய எல்லாவற்றையும் உண்டாக்க மரீசி முதலிய முனிவர்களைப் பெற்றேன். 18

97 மைந்தரது மைந்தர்கள் குருக்களுடன் வானோர்
சந்திரன் முதல்பெரிய தானவர்கள் ஆனோர்
கந்தருவர் கிம்புருடர் சித்தர்,கண நாதர்,
இந்திரன் முதல்திசைகள் எட்டினும் இருப்போர்.

(பொருள்) திருமாலே! என்னுடைய பிள்ளைகளுடைய பிள்ளைகள் குருவாகிய பிரகஸ்பதியுடனே எல்லாத் தேவர்களும், சந்திர சூரியர்களும், அசுரர்களும், கந்தருவர் கிம்புருடர், சித்தர், கணநாதர்களும், தேவேந்திரன் முதலாகிய திசைக்காப்பாளர் எட்டுப் பேரும் ஆகி உள்ளார்கள். இவர்கள் அனைவரும் என்னால் அல்லவோ உண்டானார்கள். 19

98 எஞ்சுதல்இ லாஇறைவன் என்பதனை என்பேர்
கஞ்சன்எனும் மைந்தனை மறந்திடு; கரத்தால்
அஞ்சலில் படைப்புஒழியில் எப்படி அளிப்பாய்?
செஞ்சுவர் இலாதுஎழுது சித்திரமும் உண்டோ?

(பொருள்) குறைவில்லா எல்லாவற்றிற்கும் நானே கர்த்தா என்பதையும், என் பிள்ளைதான் கஞ்சன் என்னும் பிரமன் என்பதையும் மறந்துவிடு. நான் என் கையினால் உலகத்தைப் படைக்காவிட்டால், நீ எப்படிக் காப்பாற்றுவாய்? அழகிய சுவர் இல்லாமல் எழுதுகிற ஓவியமும் உண்டோ? (என்று பின்வருமாறு சொல்வான் பிரமன்) 20

99 . அளித்திடு களிப்பினை; அகத்தினில் விடாயேல்;
வெளிப்பட ஒருத்தனை அளித்திட விதிப்பேன்;
குளிர்ச்சிய கடற்குஇடை குதித்திடு;அத னுள்ளே
ஒளித்திடு; சுரத்திரள் உனைச்சருவு முன்னே.

(பொருள்) திருமாலே! யாவற்றையும் காக்கின்றோம் என்கிற செருக்கினை விட்டு விடு; அங்ஙனம் உன் மனதிலிருக்கும் எண்ணத்தை நீ விடாமல் போனால், உன் பதவியை நீக்கி மற்றொருவனை உண்டாக்கி, காக்கும் தொழிலுக்கு நியமித்துவிடுவேன். நம்முடைய புத்திர-பௌத்திரர்களாகிய தேவ கூட்டங்கள் வந்து, உன்னைக்கொல்லும்படி வளைத்துக்கொள்வார்கள். அதற்கு முன்னே குளிர்ச்சி பொருந்திய திருப்பாற்கடலுக்குள்ளே குதித்து, ஒளித்துப் போ என்று பகர்ந்தான், பிரமன். 21

100 வித்தக முனிப்பிருகு இட்ட முனிவாலே
பத்துஉரு எடுத்தனை; பகுத்துஅறி கிலாயோ?
அத்தனை உடற்களும் அமைத்தபடி யால், என்
கைத்தலமும் இப்படி கறுத்தபடி பாராய்.

(பொருள்) ஞானத்தின் உருவான பிருகுமுனி இட்ட சாபத்தினால் பத்துத்தரம் பூமியில் (திருமாலே!) பிறந்தாய். நீ அதைப் பகுத்து அறியவில்லையோ? (அப்படி நீ பிறந்தபோதெல்லாம்) அவ்வளவு பெரிய உனது உடலகளை எல்லாம் படைத்துப் படைத்தல்லவோ என் கைகள் காய்ப்பேறி இப்படிக் கருத்துப்போயிற்று; நீ பார்! 22

101 உந்திமல ரோன்என இகழ்ச்சிஉரை யாதே;
முந்தஒரு தூணிடை முளைத்தனை; உனக்குத்
தந்தைஎன வோ?அலது தாயதுஎன வோ?சொல்!
செந்தழல் பிறந்து,கழை தீய்ப்பதுஅறி யாயோ?

(பொருள்) "நம்முடைய உந்தியிலேதான் இவன் தோன்றினான் என்று பழிக்காதே; முன்னர் நீ ஒரு தூணினிடத்தில் பிறந்தாயே; அத் தூணை உனக்குத் தகப்பன் என்று சொல்லட்டுமா? அல்லது தாயென்று சொல்லட்டுமா? அந்தத் தூண் உனக்குத் தந்தையானால் எனக்கு நீ தந்தையாவாய்! செந்நிறம் பொருந்திய நெருப்பு மூங்கிலினிடத்தில் பிறந்து, மூங்கிலைத்தானே எரித்துப் போடுகிறதை அறியாயோ? அப்படி உன்னிடத்தில் நான் பிறந்தாலும் உன்னை அழித்துப்போடுவேன்" என்றார் பிரமர். 23

102 வேதன்இவை சொற்றன கொடும்படை வெதுப்பிக்
காதிடை துளைத்துஅனல் புகட்டின கடுப்ப,
கோதமோடு எழுந்தபுகை கொண்டநகை கொண்டே
மாதவன் மதித்தனன்; மறுத்துஇவை உரைப்பான்.

(பொருள்) பிரமன் இவ்வாறு இகழ்ந்து பேசிய வார்த்தைகள் விட்டுணுவுக்கு இரண்டு காதிலும் கொடிய வேலாயுதத்தைப் பழுக்கக் காய்ச்சித் தொளைக்கவிட்டு உள்ளே செலுத்திய நெருப்புப்போல் எரிக்க, மிகுந்த கோபம் கொண்டு, புகையெழ நகைத்து, இவனுக்கு இச் செருக்கு வந்தது எதனால் என்று ஆலோசித்து, சில சொன்னார். 24

103 வந்தவழி தன்னையும் நினைத்திலை; மனத்துஎன்
உந்திஉனது அன்னைஎன உன்னுதலை இல்லாய்;
தந்தை,சிறு மைந்தர்பிழை தன்னைஉண ரார்என்று
இந்தஉரை சொல்லினை; இகழ்ந்ததுபொ றேனே.

(பொருள்) பிரமனே! நீ வந்த வழியையும் நினைத்தாயில்லை; என்னுடைய கொப்பூழை உனது தாய் என்று உன் மனதில் சிந்திக்கவும் இல்லை; தந்தையர் பிள்ளைகள் செய்த பிழையை ஒரு குற்றமாகக் கருதார்கள் என்று, இந்த வார்த்தைகளைக் கூறினையோ? இனி இப்படி இகழ்வாயாகில் பொறுக்கமாட்டேன். (என்றார் திருமால்) 25

104 கன்றும்மது வும் கயிட வப்பகடு தானும்
என் தனைய ராகவும் இகழ்ந்துயிர் குடித்தேன்;
மன்றஒரு தீமைசெயின், மைந்தன்என உண்டோ?
அன்றி,உடல் நோயையும் அறுத்துஎறிகி லாரோ?

(பொருள்) கோபத்தையுடைய மது என்பவனும், யானைபோன்ற கைடவன் என்பவனும், எனக்குப் பிள்ளைகளாயிருந்தும், என்னை இகழ்ந்து எதிர்த்ததால் கொன்று விட்டேன். நிலைபெற்ற ஒரு தீங்கு செய்தால் மகன் என்று பார்க்கக் கூடுமோ? அஃதல்லாமல், உடலிலே ஒரு கட்டி கண்டால் அதை அறுத்து எறிந்து குணப்படுத்துவார்கள் அல்லவா? 26

105 பித்தன், உனது ஓர்தலை பிடுங்கி,எறி போதில்,
அத்தலை உனக்குஎன அமைக்க,விதி இல்லாய்!
எத்தலைவன் என்பதுஉனை? இத்தகைமை கொண்டோ,
பைத்தலை அராமுடிகொள் பாரிடம் விதித்தாய்!

(பொருள்) பிரமனே! பித்தனாகிய சிவன் உன்னுடைய தலைகளில் ஒன்றைப் பிடுங்கி எறிந்த காலத்தில் அத்தலையை மறுபடியும் உண்டாக்கிக்கொள்ள வகையில்லை உனக்கு. அப்படியிருக்க நீ உன்னை எப்படித் தலைவன் என்று சொல்கின்றது? இந்தத் தகுதியைக் கொண்டுதானோ படத்தையுடைய ஆதிசேடன் முடியிலிருக்கின்ற பூமியைப் படைத்தாய்! (என்றார் திருமால்) 27

106 மச்சஉரு வம்கொடு மறைத்தொகுதி தந்தேன்;
விச்சைஉள தானவரை வென்றுஉயிர் குடித்தேன்;
நச்சுமர மாம்எனினும் வைத்தமரம் என்றே
அச்சம்உறு கின்றனன்; அழிக்கஅரிது அன்றே.

(பொருள்) பிரமனே! சோமுகாசுரன் உன்னிடத்தில் வேதங்களைப் பிடுங்கிக் கொண்டு போனபோது, நான் மச்சாவதாரம் கொண்டு, அவ்அசுரனைக் கொன்று, மறையனைத்தையும் வாங்கித் தந்தேன்; கெட்டிக்காரத்தனமுள்ள அனேக அசுரர்களைக்கொன்று, வெற்றிகொண்டு, தேவர்களோடு உன்னையும் காப்பாற்றினேன் எட்டிமரமானாலும் வைத்தமரமாக இருப்பின் வெட்டார்கள்! அதைப்போன்று பிள்ளையான உன்னைக் கொல்லக் கூடாது என்று அஞ்சுகிறேன்; (இல்லையெனில்) உன்னை அழிப்பது எனக்கு அரிய காரியமா? என்றார். 28

107 என்றுஒருவ ருக்கொருவர் எத்தனை உரைத்தார்;
கன்றினர் புயத்தின்மிசை கைத்தலம் அடித்தார்;
நின்றுலகு குதித்தனர்; நெருங்கினர்; நிமிர்ந்தார்;
துன்றிய கனல்பொறி சுருக்கென விழித்தார்.

(பொருள்) இப்படி ஒருவர்க்கொருவர் எத்தனை வார்த்தைகளையோ சொல்லிக் கொண்டிருந்தனர். கோபித்துக்கொண்டு தோள்களின்மேல் கைகளால் அடித்துக்கொண்டனர். நின்று உலகில் குதித்தனர்; நெருங்கினர்; நிமிர்ந்தார்; நெருப்புப்பொறிகள் நெருக்கமாய்விழச் சுருக்கெனக் கண்களை விழித்தனர். 29

108 வெற்புகள் பொடித்தன; வெடித்தது கடாகம்;
பற்பல சுடர்க்கதிர் பனிக்கதிர் ஒளித்த;
சர்ப்பமும் நெளித்தது தலைச்சுமை பொருதே;
கற்பமுடிவு என்றுஅமரர் கண்களை இமைத்தார்.

(பொருள்) (பிரமனும் திருமாலும் சண்டை செய்கையில்) மலைகளெல்லாம் பொடியாய்ப் போயின; அண்டகடாகம் படீரென்று வெடித்தது; பற்பல வெப்பம் பொருந்திய கிரணங்களுடைய சூரியர்களும், குளிர்ச்சி பொருந்திய கிரணங்களுடைய சந்திரர்களும் ஒளித்தார்கள். ஆதிசேடன் தலைச்சுமை பொறுக்கமாட்டாமல் உடல் நெளித்துக்கொண்டான். கற்பகாலம் வந்து உலகம் அழியப்போகிறது என்று (இமையா நாட்டமுடைய) தேவர்கள் கண்களை இமைத்துக்கொண்டார்கள். 30

109 உடுக்கணம் முகிற்கணம் உதிர்ந்த;உலகு எல்லாம்
இடுக்கணில் விழுந்தன; எழுந்தன பராகம்;
அடக்கின பகீரதிமுன் ஆனநதி எல்லாம்;
திடுக்கொடு முழங்கின திசைக்கரிகள் எட்டும்.

(பொருள்) நட்சத்திரக் கூட்டங்களும், மேகக் கூட்டங்களும் உதிர்ந்தன; உலகமெல்லாம் துன்பங்களோடு அடுக்குக் குலைந்து விழுந்தன; செந்தூள் கருந்தூள்கள் எழும்பின; கங்கை முதலிய ஆறுகளெல்லாம் தண்ணீர் இல்லாமல் வற்றிப்போயின; எட்டுத் திக்கிலும் இருக்கிற எட்டுத்திசை யானைகளும் திடுக்கிட்டு அலறின. 31

110 மேல்இனிது எடுத்துஎறிவர்; வீழ்வர்;கடிது ஓடிக்
கோலிஎதிர் குத்துகஎன நின்றிடுவர்; குத்திச்
சாலமடி தொட்டுஅளவில் சாரிகை திரிந்தார்;
மாலையும் இருட்டும்வல மாய்வருதல் மான.

(பொருள்) ஒருவரை ஒருவர் மேலே எடுத்து எறிவார்கள்; கீழே விழுவார்கள்; மறுபடியும் எழுந்து விரைவில் ஓடி வளைந்து, எதிரே நின்று குத்தென்று சொல்வார்கள்; அப்படிக் குத்திக்கொண்டு மிகவும் கோபத்துடனே மடியைப் பிடித்து ஒருவருக்கொருவர் இழுத்துச் சூறைக்காற்றுப் போல் அனேக விசை சுழன்று திரிந்தார்கள்; மாலை நேரமும், இருளும் வலம்-இடமாக வருதலை ஒத்திருந்தது. 32

111 ஊருவன, தத்துவன, செல்வன,விண் ணோடே
சேருவன; நின்றன திரிந்தன; திரட்டுஆர்
தாருவகை இற்றன; தழைந்தது இருள் எங்கும்;
மேருவரை உக்கது;எழு வேலைஅள றாக.

(பொருள்) அவ்வேளையில் உலகத்தில் ஊர்ந்து போகின்ற உயிரினங்களும், தவழ்கின்றவைகளும், நடக்கின்றவைகளும், பறக்கும் உயிரினங்கள்போல் வானில் பறந்தன; நிலையாக நின்ற மரங்களும், மலைகளும் நிலைபெயர்ந்தன; திரளாக நிறைந்த ஐந்து வகையாகிய தேவருலகமரங்கள் பொடிப்பொடியாகப் போயின; எவ்விடமும் இருள் நிறைந்தது. மாமேருஅசைந்தது, ஏழு கடல்களும் சேருயின. 33

112 அந்தமுடிவு எல்லைதனில் அஞ்சி, இமை யோர்தாம்
இந்திரனை எய்தினர்கள்; எய்தியது உரைக்கும்
முந்தி,அவன் உற்றதுயர் யாவையும் மொழிந்து
வந்தவரவு ஏதென வகுத்துஉரைசெய் கின்றார்.

(பொருள்) அனைத்தும் அழியும்காலம் வந்தது என்று சொல்லும்படி இருவரும். சண்டைசெய்யும் அந்தவேளையில் தேவர்களெல்லாம் பயப்பட்டுத் தேவேந்திரனிடம் போய்த் தங்களுடைய துயரைச் சொல்லுவதற்கு முன்னே, தேவேந்திரன் தான் பட்ட துன்பங்கள் அனைத்தையும் சொல்லி, பின்பு நீங்கள் வந்த காரியம் ஏதென்று கேட்க தேவர்கள் சொல்வார்கள். 34

113 ஆரணனும் நாரணனும் ஆனஇரு வோரும்
தாரணியி லேமிகு சமர்த்தொழில் விளைத்தார்;
ஏரணிய வேறுகதி இல்லை;எவ ருக்கும்
காரணனை யேதொழுதல் காரியம்இது என்றார்.

(பொருள்) நான்கு மறைகளுக்குரிய பிரமனும், திருமாலும் ஆகிய இருவரும் பூமியில் மிகுந்த போரைச் செய்கிறார்கள்; எங்களுக்குப் பிழைக்க வேறு வழியில்லை; எல்லோருக்கும் காரணமாயிருக்கிற பரமசிவனைத் தொழுது, இந்தச் செய்தியைச் சொல்வதே காரியம் என்று தேவர்கள் சொன்னார்கள். 35

114 நாயகன் இசைந்து,பினர் நாகஉல கத்தோர்
தூயமலர் போல்அடி துதித்து,அரிவை பாகா!
மாயமுடன் மால்,அயன் வருத்தம்அது தீராய்!
தாய்அலது மைந்தர்துணை தாரணியில் உண்டோ?

(பொருள்) இப்படிச்சொல்லத் தேவேந்திரனும் சம்மதித்து, பின்னர் அவனுடன் விண்ணுலகத்தோர் அனைவரும் போய், சிவனுடைய தூய தாமரை மலர்போன்ற திருவடியைத் தொழுது, உமாதேவியை இடப்பாகத்தில் உடையோனே! மாயமாகத் திருமாலும் பிரமனும் சண்டை செய்வதனால் எங்களுக்கு ஏற்படும் துயரத்தைத் தீர்க்க வேண்டும். பிள்ளைகளுக்குத் தாயே துணை அல்லாமல் மற்றோர் துணை பூமியில் உண்டோ? 36

115 உருட்படு சகட்டைநிகர் உற்று,உலகின் மீதே
இருட்படு பிறப்பினை இறப்பினை உறாதே,
பொருட்பெற உனக்குஅடிமை புக்கு,அளவி லாஉன்
அருட்கடல் குளித்திட அடைக்கலம்அ தானோம்.

(பொருள்) உருண்டுகொண்டு போகின்ற வண்டியினுடைய சக்கரம்போல் இவ்வுலகத்தின்கண் தோன்றி, அஞ்ஞானம் பொருந்திய பிறப்பையும் இறப்பையும் மாறி மாறி அடைந்து, வருத்தத்தை நுகராமல், மோக்கத்தைப் பெற உமக்கு அடிமையாகப் புகுந்து, உன்னுடைய அளவிலாத அருட்கடலில் குளிக்குமாறு அடைக்கலமானோம் என்றனர் இமையோர். 37

116 புழுக்குடை உடல்சுமை பொறுக்கமுடி யாத
இழுக்குடைய விச்சைகெட இச்சைஅருள் வானே!
முழுக்கடல் இடைத்தினம் முழுக்குறினும் மாரு
அழுக்குமலம் அற்றிட அடைக்கலம தானேம்.

(பொருள்) அநேகம் புழுக்கள் குடைந்துகொண்டிருக்கின்ற உடலாகிய சுமையைப் பொறுக்கமுடியாத இழுக்காகிய அஞ்ஞானம் கெடப் பிரியத்திஞல் அருள்செய்கின்ற கடவுளே! பெருங்கடலில் நாளும் முழுகிஞலும் போகாத மும்மலமாகிய அழுக்கு அற்றுப் போக அடைக்கலமாய் உம்மை அடைந்தோம். 38

117 எண்ணம்இனி வேறிலை; எமக்குஅருள்செய் என்றே
கண்ணுதலை விண்ணவர்கள் கற்றுமொழி போதில்,
அண்ணலும் உணர்ந்தனன்; அனைத்துஉயிரின் உள்ளே
எண்ணெய்என நிற்கும்அவன் ஈதுஅறிகி லானே?

(பொருள்) இனிமேல் வேறு ஆலோசனை இல்லை. எங்களுக்கு அருளும் என்று நெற்றிக் கண்ணராகிய சிவபெருமானைத் தேவர்கள் புகழ்ந்து துதிக்கையில் அவரும் அவ்விருவருக்கும் வந்த சண்டையின் மூலத்தை அறிந்தார். எல்லா உயிர்களினிடத்தும் எள்ளினுள் எண்ணெய்போல் நிற்கும் கடவுள் இதை அறியமாட்டாரோ? 39

118 நடுக்கமுறு முனிவர்எலாம் அமரர்எலாம்
பயம்தவிர, நாகம் மீது
படுக்கைபுரி திருமாலும் பங்கயத்தில்
உறும்அயனும் பகைமைதீர,
அடுக்கியிடும் புவனமெலாம் அடுக்கழியாது
இருக்க,மனத்து அருள்வ தாகித்
தடுக்கரிய தழல்உருவத்து ஒருவரையாய்
இருவரையும் தடுப்ப தானேன்.

(பொருள்) நடுக்கமடைந்த முனிவர்கள், தேவர்கள் எல்லோரும் அச்சம் நீங்கு மாறும் பாம்பணையில் உறங்குகின்ற திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரம தேவரும் ஒருவருக்கொருவர் பகைநீங்கவும், அடுக்கடுக்காய் இருக்கும் அண்டகோடி களெல்லாம் அடுக்கு அழியாமல் இருக்கவும், அருள்செய்வதற்கு மனத்தில் எண்ணி, தடுத்தற்கு அரிய தழல்உருவோடு கூடிய ஒருமலையாகி, அவ்இருவரையும் தடுக்கும்படி எழுந்தருளினர், பரமசிவன். 40

119 பாதலத்தில் பணிகளெலாம் விழுதாக
அதன்கீழில் பருவேர் ஓடிப்
பூதலத்தில் கிளைத்துஇமையோர் உலகெல்லாம்
மலர்ந்துமலர்ப் புண்ட ரீகன்
மீதலத்து முகடுஉடைத்துக் கடாகவெளி
கடந்துபெரு வெளிக்கு மேலாய்
மாதலத்துக்கு இதுவும்ஒரு கனல்மேரு
அடுத்ததென வளர்ந்த மாதோ!

(பொருள்) கீழுலகத்துள்ள பாம்புகள் எல்லாம் அம்மலைக்குச் சல்லிவேராக, அதன்கீழ்ப் பருத்தவேர் ஓடிப் பூமியில் பெரிதாய்க் கிளைத்து விண்ணுலகங்களெல்லாம் தாண்டி, பிரம்மலோகத்து முகட்டையும் உடைத்து, அண்டகடாக வெளியைக்கடந்து, அதற்கு அப்பாலிருக்கும் பெரிய வெளிக்கு மேலாயிருக்கிற இடத்துக்கும், அனல் உருவாகிய மகாமேரு அடுத்தது என்று சொல்ல வளர்ந்தது. 41

120 முளைக்குநெடுஞ் சுடர்இரவி புரவிஉல
வாஉலகம் முழுதும் ஓடி,
கிளைக்குமணி இருள்அகற்ற ஏற்றிவைத்த
விளக்குஎனவே கிளர்க்கை யாலே,
அளக்கர்எலாம் அளப்பரிய வடவைஅழல்
பரந்ததென அரத்தம் மானத்
திளைக்கும்எழு கிரிகளெல்லாம் அதுசொரிந்த
சிறுபொறிபோல் சிவந்த மாதோ!

(பொருள்) உதயமாகி நெடும்தூரம் கிரணங்களை வீசுகின்ற சூரியனுடைய தேரில் கட்டிய குதிரைகள் சுற்றிவரக்கூடாத உலகம் எல்லாம் கடந்து, கிளைத்த நீலமணி போலும் கரிய இருளை ஓட்டுவதற்கு ஏற்றிவைத்த விளக்கு என்று சொல்லுமாறு ஒளி வீசுவதால், கடல்களெல்லாம் சொல்லுவதற்கு அரிய வடவைக்கனல் பரந்தது போலச் சிவப்பு நிறம் பொருந்த, ஏழுகுலபருவதங்களெல்லாம் அந்த ஒளியினால், அந்த அழல்மலை சொரிந்த தழற்பொறிகள் போலச் சிவந்தன. 42

121 வானக் கண்அழல் ஆயது கண்ட மலரோனும்
கானக் கண்ணனும் அஞ்சி, அகன்றார்; கரைகாணார்.
ஞானக் கண்ணினர் காணுவ தல்லால் நவைசேரும்
ஈனக் கண்ணின ருக்குஎளி யாரோ எம்மானே.

(பொருள்) இப்படி விண்ணளவு அழல் வடிவாயுள்ளதைக் கண்ட பிரமனும், புல்லாங்குழல் இசைக்கும் கண்ணனாகிய திருமாலும் அதனுடைய முடிவைக் காணாதவர்களாய், பயப்பட்டு ஒதுங்கி நின்றார்கள். ஞானக் கண்களையுடையவர் காணுதலன்றி, குற்றம் பொருந்திய ஈனமாகிய முகக்கண்ணுடையவர் காண எளியவரோ எமது பரமசிவனார்? 43

122 கண்ணில்அள விடஅரிய சுடரினைக்கண்டு
இருவருமாய்க் கவலை யானார்;
'எண்ணில்இதன் அடிமுடியை அறிபவரே
பெரியவர்'என்று இசைத்தார்; 'இந்த
மண்ணின்அடி அறிவென்'எனப் பணவிடையில்
தூக்கமிக்கோன் வராக மானான்;
'விண்ணின்முடி அறிவென்'என எகினவடிவு
எடுத்துஅயனும் விரைந்து போனான்.

(பொருள்) கண்களாலே இவ்வளவு தூரம் இந்தமலைபோய் இருக்கிற தன்மையை அறியக் கூடாத, ஒளிமயமான மலையைப் பார்த்து, இருவரும் துன்பமடைந்து, 'அளவு கடந்துள்ள இந்த மலையினது அடியையாவது, முடியையாவது அறிகின்றவரே பெரியவர்' என்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டார்கள். அப்பொழுது படத்தையுடைய அரவில் துயில்கொள்ளும் திருமால், 'இந்த மலையின் அடியை நான் அறிந்து வருகிறேன்' என்று வராக (பன்றி) வடிவானார். 'விண்ணில் சென்று இந்தமலையின் முடியைக் காணுகிறேன்' என்று பிரமனும் அன்னப் பறவையாகி வானில் விரைவாகப் பறந்தார். 44

123 மெத்தும்அரைக் கணத்தினுக்குஆ யிரம்காதம்
பறந்து,அயனார் விரைந்து போனார்;
துத்திஅரா எடுத்தபுவி கணத்தினுக்குஆ-
யிரம்காதம் தொளைத்துப் போனார்;
அத்தகையோர் செயல்உரைக்கில், கனகமணி
நெடும்பூட்டுக்கு அருகி லோடும்
நித்திலப்பொற் குண்டிகையும் நீலமணிக்
குண்டிகையும் நிகர்த்த மாதோ!

(பொருள்) சொல்லப்பட்ட அரைக்கணத்தில் பிரமதேவர் ஆயிரம் காதவழி, அதிக, வேகமாய்ப் பறந்து மேலே போனார்; படத்தையுடைய ஆதிசேடன் சுமந்த பூமியை ஒருநொடியில் ஆயிரம் காதம் தொளைத்துக்கொண்டு திருமால் கீழாகப்போனார். அக்காட்சி எப்படியிருந்தது எனின், அம்மலை தங்கமயமாகிய ராட்டினப் பூட்டைப் போலவும், அதில் இறைத்தற்குக் கட்டிவிட்டுள்ள நீலரத்தினத் தோண்டியைப் போலவும் முத்துக்கள் இழைத்திருக்கிற அழகிய தோண்டியைப் போலவும் இருந்தது. 45

124 பூஉலகை அரிஅகன்று கீழ்உலகின்
முறைமுறையே புகுந்து போந்து,
காவல்உறு மாவலிதன் போகவதி
எனும்புரமும் கடந்து மேவித்
தேவர்தொழும் பரஞ்சுடர்வாழ் ஆடகே-
சுரம்கரத்தும் சிரத்தும் போற்றி,
மூஉலகை முதல்அளந்தோன், ஏழுலகம்
அளந்தும்,அதன் முடிவு காணான்.

(பொருள்) வராகவடிவுஎடுத்த திருமால் பூ உலகைக்கடந்து, அதன் கீழிருக்கின்ற ஏழு உலகத்தையும் முறையே தொளைத்துக்கொண்டே கடந்துபோய். மாவலிச் சக்கரவர்த்தி காவல் இருக்கும் போகவதி நகரைத் தாண்டிச் சென்று, அப்புறம் தேவர்கள் வணங்கும் பரப்பிரம வடிவாய் விளங்குகின்ற சிவன் வசிக்கும் ஆடகேசுரத்தைக் கண்டு, கைகளினாலும், தலையினாலும் வணங்கி, முன்னே மூன்று உலகத்தையும் அளந்தவர், இப்பொழுது ஏழு உலகங்களையும் அளந்தும், அந்த மலையின் அடியைக் காணாமல் போனார். 46

125 வளர்ப்புடைய பிறைபோல வளர்மருப்பும்,
தேய்பிறைபோல் மழுங்கிப் போக,
குளப்படியும் முகநுனியும் பினைத்தேடும்
ஆசையைப்போல் குறைந்து போக,
அளப்பரிய துயர்அளவி, ஒருநூறுஆண்டு
அகன்று, அதற்பின் அரனைவாழ்த்தி,
இளைப்பதுவும் சலிப்பதும்அற்று எழுதலமும்
இடர்க்கடலும் ஏறினனே.

(பொருள்) அப்படித் திருமால் பன்றி வடிவம் கொண்டு தேடுகிறபோது, வளர் பிறைபோல் நாளுக்குநாள் வளர்ச்சியுற்ற இரண்டு கொம்புகளும், தேய்பிறைபோல் குறைந்து மழுங்கிப்போகவும்,குளம்புகளும் முகத்து நுனிகளும்பின்னே அம்மலையைத்தேடும் ஆசைபோன்று குறைந்துபோயின. அவ்வாறு தேய்ந்து குறைய, எண்ணக்கூடாத துயர்க்கடலில் விழுந்து நூறு தேவஆண்டு காலம் தேடியும் காணுமல், பின்பு தெளிவு வந்து, இது சிவனுடைய செயல் என்றறிந்து, அவரைப்போற்றி, தனது இளைப்பும் சலிப்பும் நீங்கப்பெற்று, துயர்க்கடலையும் ஏழுதலத்தையும் தாண்டிவந்தார். 47

126 தம்போரை முதல்தடுக்கத் தழல் பிழம்பாய்
எழுந்த அந்தத் தலத்தைச் சார்ந்தான்
அம்போதன், இதன்முடியின் அளவுஅறியான்
என மனத்தில் ஐயம் தீர்ந்தான்;
நம்பாருக்கு அரியானைச் சேயானைத்
தனதுவிழி நயனத் தோடே
பைம்போதைப் புனைவானைப் பலகாலும்
பணிந்துஉருகிப் பரவி நின்ருன்.

(பொருள்) தனக்கும் பிரமனுக்கும் வந்த கலகத்தை நீக்கும்படி சிவபெருமான் அக்கினி வடிவமாகத் தோன்றிய அந்தத் தலத்தைச் சேர்ந்து, அழகிய தாமரைப் பூவிலிருக்கின்ற பிரமன் இந்த மலையின் முடி அளவை அறியமாட்டான் என்று, தன் மனதில் ஐயமற முடிவுசெய்து, நம்பாத மனிதர்களுக்கு அரியவரை, எப்படிப்பட்டவர் களுக்கும் தொலைவாய் இருக்கின்றவரை, தம்முடைய கண்ணுகிய புட்பத்தோடு, அழகிய புட்பங்களை அணிகின்றவரை, பலமுறை வணங்கி, உள்ளமுருகிப் போற்றினுர் திருமால், 48

127 இன்னதா இவன்செயல் இருக்க, இங்குஇதன்
முன்னமே அழல்கிரி முடியைத் தேடவே
அன்னமாய்ப் பறந்தவன் அரைக்கணத்திலே
மன்னும்ஓர் ஆயிரக் காதம் வாவினான்.

(பொருள்) இவ்வாறு இந்தத் திருமால் செயல் இருக்க, இதற்கு முன்னே அவ் அழல் மலையின் முடியைத் தேட அன்னப்பறவை வடிவாகிப் பறந்த பிரமன், அரை வினாடியிலே நிலைபெற்ற ஆயிரம் காதவழி தாண்டினான். 49

128 கீறியே அண்டகோளகையும் கீழுற
ஏறியோர் ஆயிரம் ஆண்டு மேவினான்;
நூறுநூறு ஆயிரம் காதம் நோக்கினும்
ஈறிலாது இருந்தஅவ் எரியின் தூணமே.

(பொருள்) அண்டகோளகையும் பிளவுபடக் கிழித்து, அவ் அண்டகோளகை கீழுறுவதற்கு மேலும் பறந்துபோய், ஆயிர வருடம் தேடினான்; அப்படி அனேக நூறாயிரம் காதம் தாண்டிப்போய்ப் பார்த்தாலும், முதல் பார்த்தது போலவே முடிவில்லாமல் இருந்தது அந்தத் தழல்தூண். 50

129 சிறைஎலாம் உதிர்ந்தன; விசையும் தீர்ந்தன;
நிறைவதாம் இடுக்கணும் உயிர்ப்பும் நீண்டன;
குறையெலாம் வளர்ந்திடத் தனிமை கூர்தலால்,
மறையினான் இவைஇவை மனத்தின் எண்ணினான்.

(பொருள்) அப்படிப் பிரமன் அன்னமாய்ப் பறந்து போம்போது சிறகுகள் எல்லாம் உதிர்ந்துபோயின; வேகமும் அடங்கிற்று; குறைவிலாத துயரமும் பெருமூச்சும் அதிகப்பட்டன; மனக்குறை மிகவும் வளர, ஒருவருமின்றித்தான் தனி ஆனபடியால், பிரமன் சிலவற்றை மனத்தில் எண்ணினான். 51

130 'அரியமால் இதன்அடி அறிந்து மீளுமோ?
தெரிவுறாது இடையிலே திரும்பு மோ?என
அரியதா கியதுயர் ஊசல் ஆடினான்,
எரிஉறு மெழுகுபோல் இளகும் சிந்தையான்.

(பொருள்) அரியதிருமால், இந்தத் தழல்மலையின் அடியை இந்நேரம் அறிந்து திரும்புவாரோ? கொஞ்சதூரம் தேடி, இனிமேல் தேட இயலாது என்று திரும்பி வருவாரோ? இவ்வாறு துக்கமாகிய ஊசலில் இருந்து ஆடினான், நெருப்பிலே இட்ட மெழுகுபோல் இளகிய மனமுடைய பிரமன். 52

131 மற்றிது சிவன்என மனத்தில எண்ணிலேன்;
உற்றுஅரி தன்னையும் உறவு கொண்டிலேன்;
இற்றைநாள் வரைக்கும்இவ் இடர்க்குள் மூழ்கினேன்;
சிற்றறிவு உடைமையோ? செய்த தீமையோ?

(பொருள்) இந்தமலையைச் சிவன் என்று சிறிதும் மனத்தில் நினைத்திலேன்! பகைத்துக்கொள்ளப்பட்ட திருமாலிடமாவது உறவுகொள்ளாமல் போனேன்; அன்று முதல், இன்றுவரையிலும் நீண்ட காலமாக இத்துயரத்துள் மூழ்கினேன்; என்னுடைய சிற்றறிவினாலோ? முன்னம் நான் செய்த பாவத்தினாலோ? 53

132 எய்தினேன் முடிஅறிந்து ஏகி லேன்,எனும்
பொய்களை உரைக்கினும் பொருந்த வேஉரை
செய்துணை பிறிதிலை என்று தேம்பினான்,
கைதையின் மடல்வரப் பின்பு கண்டனன்.

(பொருள்) இவ்வளவுதூரம் தேடிவந்தும் இம்மலையினது முடியை அறியாமல் போனேன். ஆயினும் இனிமேல் போய் திருமாலினிடத்தில் 'பார்த்தேன்' என்றுபொய் சொன்னாலும், ஒத்தாசையாகப் 'பார்த்தான்' என்று பொய்ச் சாட்சி சொல்வதற்கு வேறு ஒரு துணையுமில்லையே என்று வருந்தினான். அச்சமயம் தாழம்பூ மடல் ஒன்று மேலிருந்து இறங்கப் பார்த்தான் பிரமன். 54

133 இம்மடல் எங்குற்று வருவது என்னுமுன்
அம்மடல் அணைந்தது;அங்கு அதனை ஏற்றனன்;
செம்முடிச் சடைமுடியில்வீழ் கைதைச் செம்மலர்
மெய்ம்மைசேர் உயிர்ப்பதாய், 'விடுமின்' என்றதே.

(பொருள்) இந்தத் தாழைமடல் எங்கேயிருந்து வருகிறது என்று எண்ணு முன்னே, தாழம்பூ பிரமனுக்கு அருகில்வர, அதைக் கையினாலே பிடித்தான். பரம சிவனுடைய தலையிலிருந்து தவறிவிழுந்த அத்தாழம்பூ, மெய்ம்மையான பெருமூச் சோடு 'என்னை விரைவில் விட்டுவிடுவாய் என்று சொல்லிற்று. 55

134 ஏரணி கைதையே! இங்கு நீவரும்
காரணம் ஏதெனக் கமலன் கூறினன்;
ஆரணன் நாரணன் அளவி டாமுதல்
தார்அணி முடியினும் தவறி வீழ்ந்தனன்.

(பொருள்) அந்தத் தாழம்பூ சொல்லியதைக் கேட்டு, அழகான தாழம்பூவே! நீ எங்கிருந்து இங்கு வந்தாய்? அவ்வாறு வருவதற்கான காரணம் என்னை? எனப்பிரமன் கேட்டான். (அதற்குத் தாழம்பூ) பிரமனாலும், திருமாலாலும் அறியக்கூடாத சிவபெரு மானுடைய கொன்றைப்பூ மாலையை அணிந்த தலையிலிருந்து தவறிவிழுந்தேன் என்று சொல்லிற்று. 56

135 தார்ப்பொலி முடியினும் தவறி வீழ்ந்தபின்
நாற்பதி னாயிரம் வருடம் நண்ணினேன்;
ஏற்பது விடுகஎன்று இசைப்ப, எந்தையைப்
பார்ப்பது விடுத்து,அயன் பகர்வதுஆ யினன்.

(பொருள்) கொன்றைமாலை பிரகாசிக்கின்ற சிவபெருமான் திருமுடிமேலிருந்து விழுந்து, நாற்பதினாயிரம் ஆண்டுகளாக வந்தேன்; இன்னும் நான் நில உலகை அடையவில்லை; என்னைப் பிடிக்கவேண்டாம்; விட்டுவிடு என்று தாழம்பூ கூற, பிரமன் அம்மலையின் திருமுடியைத் தேடுவதை விட்டுச் சில சொல்லத்தொடங்கினன். 57

136 துன்னிய கைதையே! துணையு மாய்நமக்கு
இன்னமும் அலைவுறு து இடுக்கண் நீக்கினாய்!
உன்னிலும் உயிர்த்துணை உறவு வேறிலை;
*அன்னியன் அல்லன்;நான் அனமும் அல்லனே.

(பொருள்) என் அருகிலடைந்த தாழம்பூவே! நீ எனக்குத் துணையாயிருந்து நான் இன்னமும் தேடி அலையாமல் என் வருத்தத்தை நீக்கினாய்; உன்னைப்பார்க்கிலும் உயிர்போன்ற நண்பனும் உறவும் வேறில்லை; நானும் வேறானவன் அல்லன்; அன்னப் பறவையும் அல்லன் என்றான் பிரமன். 58

137 நாமமோ நான்முகன்; நானும் மாலுமாய்
ஏமமாம் இதற்குஅளவு இசைக்க எண்ணினோம்;
பூமி,கீழ் இடந்துஅவன் போயி னான்;மனத்
தீமையேன் திருமுடி தேடிக் காண்கிலேன்.

(பொருள்) என் பெயரோ பிரமன். நானும் திருமாலும் கூடி அழல் உருவான இம்மலையின் அளவை அறிந்துகொள்ள எண்ணினோம். பூமியின் கீழ்இடத்தைப்பிளந்து கொண்டு, அடியை அவன்தேடப் போனான். பாவியாகிய நான் அதன் திருமுடியைக் காண வெகுநாள் தேடி அலைந்தும் காண்கிலேன். 59

138 அடி,தலை வரவுஇது; அதுகொண்டு என்பயன்?
நெடியநின் வரவினால் நினைத்தது எய்தினால்;
படிஅளந் தவனுடன் பறவை யாம்இவன்
முடிஅறிந் தான்என மொழிதல் வேண்டுமே.

(பொருள்) முதலும் முற்றுமாக நடந்த செய்தி இது. அதைக்குறித்துப் பேசுவதினால் பயன் என்ன? பெருமை பொருந்திய உன்னுடைய வரவினாலே நினைத்த செயல் முடிந்தால்தான் பயன். பூமியை அளந்த திருமாலுடன் பறவையாய் உருவெடுத்த இப் பிரமன் சிவனுடைய முடியைக் கண்டான் என்று, நீ சொல்லவேண்டும் என்று சொன்னான் பிரமன். 60

139 வஞ்சம்என்று இகழ்ந்திடேல்; வருந்தி னூர்க்குஉயிர்த்
தஞ்சமாம் எனில்,பெரும் பொய்யும் சாற்றலாம்;
அஞ்சியே சொலத்தகா மொழியும் அன்று,இது;
நஞ்சும்உண்டு அமைவரே நண்பு வேண்டினர்.

(பொருள்) தாழம்பூவே! இது வஞ்சனைத்தொழில் என்று இகழ்ந்து தள்ளிவிடாதே; யாதேனும் ஒரு துன்பத்தை அடைந்தவர்க்கு உயிர் இழப்பு வருமாயின், அது பிழைத்தற்குப் பெரிதாகிய பொய்யையும் சொல்லலாம்; இது அஞ்சிக் கூறும் வார்த்தை அல்ல; நட்பு வேண்டுபவர்கள் தம்முடைய நண்பன் விடத்தைத் தின்பாய் என்றாலும் தின்று நண்பனின் பேச்சைத் தட்டமாட்டார்கள். 61

140 கண்ணுதல் முடியில்வாழ் கைதை யே!பிறிது
எண்ணுவது ஒழிகென இயைந்து போந்தது;
விண்ணினும் இருந்துகீழ் விரைந்து வேதியன்
மண்ணுலகு அளந்தமால் மருங்கு நண்ணினன்.

(பொருள்) நெற்றிக்கண்ணை உடைய பரமசிவனது முடியில் வாழ்கின்ற தாழம் பூவே! வேறு ஓர் நினைப்பும் செய்யவேண்டாம்; இதற்கு உடன்படுவாய் என்று பிரமன் சொல்ல, தாழம்பூ அதற்கு இசைந்து வந்தது; ஆகாயத்திலிருந்து விரைவாகப் பிரமன் மண்ணளந்த திருமாலிடத்தில் வந்து சேர்ந்தான். 62

141 சீதரா! கேட்டி,என் வரவின் செய்கையை;
காதநூறு ஆயிரம் கணத்தி லேகடந்து,
ஆதியான் முடிஅறிந்து அணுகி னேன்என
ஓதினன்; கைதையும் உள்ளது என்றதே.

(பொருள்) இலக்குமியைத் தாங்கிய மார்பினைஉடைய திருமாலே! என்னுடைய நல் வரவைக்கேள்; ஒரு நொடியிலே நூறாயிரம் காதம் பறந்து, எல்லோருக்கும் ஆதியாகிய சிவபெருமானுடைய திருமுடியைக் கண்டு வந்தேன் என்று சொன்னன், பிரமன். தாழம் பூவும் உண்மைதான்; பிரமன் பார்த்தான் என்று சொல்லிற்று. 63

142 அக்கணம் அழற்கிரி வெடித்தது; வெடித்தஅர-
-வத்தினில் அரக்கர் இமையோர்
உக்கனர்; திசைக்களிறு கக்கின அருக்கரை
உருக்கியது எனக்கு ருதிநீர்;
செக்கர்ஒளி மட்கிட முருக்குஇதழ் கறுக்க,மெய்
சிவப்பொளி வெளுத்த வடிவாய்
முக்கணன் அதற்கிடை முளைத்தனன், முகத்தில்அவன்
முப்புரம் எரித்த நகையே.

(பொருள்) அப்படிப் பிரமன் சொன்ன அக்கணமே, தழல்மலை படீரென்று வெடித்தது; வெடித்த ஓசையில் இராக்கதர், தேவர் ஆகியோர் திடுக்கிட்டு உயிர் சோர்ந்தனர்; எட்டுத் திசையானைகளும், சூரியர்களை உருக்கிச் சாய்த்தால் எப்படியோ, அப்படி இரத்தத்தைக் கக்கின; செக்கர் வானத்து ஒளி மழுங்கிப் போகுமாறும் முருக்கம்பூ இதழ் கறுக்கும்படியும் சிவந்த தமது திருவுருவின் ஒளி பொருந்திய நிறம், திருநீற்றால் வெளுத்த வடிவமாய்த் தோன்றவும், அந்த வெடிப்பினின்று பரமசிவன், முப்புரத்தை எரித்த நகை அவர் முகத்தில் தோன்ற, எழுந்தருளினர். 64

143 முண்டக! அகந்தையின் மொழிந்தஉரை நன்று!என
மொழிந்துநகை கொண்ட அளவே,
அண்டபகி ரண்டமும் நடுங்கின, ஒடுங்கின,
அடங்கின, விடும்சு டர்எலாம்;
கொண்டலும் மறைந்தன; சிறந்தன இறந்தன;
குறைந்தன நிறைந்த ன;குலா
எண்திசை திரிந்தன; கரிந்தன, பொரிந்தன
எரிந்தன; விரிந்த தருவே.

(பொருள்) தாமரை வாழ் பிரமனே! உன்னுடைய ஆணவத்தால் சொன்ன பொய் வார்த்தை நன்றாக இருக்கிறது என்று சொல்லி, சிவபெருமான் நகைத்த காலத்தில், அண்டபகிரண்டங்கள் எல்லாம் கிடுகிடு என்று நடுங்கிப் போயின; சூரிய சந்திரருடைய ஒளி மழுங்கிப்போயின; மேகங்களும் மறைந்தன; சிறந்து நிலையாய் இருக்கின்றவைகளும் இறந்தன; குறைந்தவைகள் எல்லாம் நிறைந்தன; கூட்டமாகிய திசைகள் அலைந்தன; பரவியிருந்த மரங்களெல்லாம் கரிந்தும், பொரிந்தும், எரிந்தும் போயின. 65

144 அழிந்தனன் அயன்என அமரர் அஞ்சினர்;
குழிந்தது நிலம்எனக் கொள்ளை யாமலர்
பொழிந்தனர்; நெடியவற்கு உவகை பூத்தது;
கழிந்தது மலரவர்க்கு இடும்பைக் கங்குலே.

(பொருள்) தேவர்கள் எல்லோரும் பிரமன் இன்றே அழிந்து போனன் என்று அஞ்சினர்கள்; பூமி பள்ளமாகும்படி கொள்ளை கொள்ளையாகப் பூமாரி பெய்தார்கள்; நீண்ட திருவுருவத்தினையுடைய திருமாலுக்கு மகிழ்ச்சி பிறந்தது; தாமரையானுக்கு (பிரமனுக்கு) ஆணவம் என்னும் இருள் நீங்கிற்று. 66

145 பாடினன்; பரவினன்; பரவ சத்தினல்
ஆடினன்; ஓடினன்; அளவி டாமுதல்
கூடினன்; எவ்வரம் கொள்ளு கேன்எனத்
தேடினன்; சிவனைஅத் தெளிந்த செங்கண்மால்.

(பொருள்) அப்போது, தாம் முதற் கடவுள் அல்ல என்று தெளிவடைந்த திருமால், அழல்மலையிடத்திருந்து எழுந்தருளிய சிவபிரானைப் பாடினர்; வந்தித்தார்; பரவசம் கொண்டு ஆனந்தக் கூத்தாடினர்; நான்கு திசைகளிலும் ஓடினர்; யாராலும் அளவிட முடியாத இவ் இறைவனைக் கூடினன்; இனி நான் என்ன வரம் கேட்பேன் என்று சிந்தனை செய்தார். 67

146 ஆசையால் உருகும்அவ் அரிதன் அன்புகண்டு
ஈசனும் பலவரம் இனிது நல்கினன்;
வாசமா மலரவ! உனக்கு மண்ணின்மேல்
பூசையும் கோயிலும் போக! என்றனன்.

(பொருள்) இவ்வாறு மிகுந்த பத்தியினல் உடல் உருகி நின்ற திருமாலின் அடிமைத் திறத்தைப் பார்த்து, அவர்கோரிய வரங்கள் எல்லாம் சிவபெருமான் அருளிச் செய்தார்; பின்னர் பிரமனைப் பார்த்து, மணம் தங்கிய சிறந்த தாமரையில் இருப்பவனே உனக்குப் பூமியிலே கோயிலும் பூசையும் இல்லாமல் போகக்கடவது என்று திருவுளம் பற்றினர். 68

147 கைதையே! இவனொடு கரவு நீஉரை
செய்ததால், தீண்டிலேம் என்று தீர்த்தனன்;
எய்திய முனிவுகண்டு ஏங்கி, நான்முகன்
மெய்தரை உறப்புறம் வீழ்ந்து போற்றினன்.

(பொருள்) தாழம்பூவே! இப்பிரமனோடு சேர்ந்து பொய்ச்சாட்சி சொன்னாய்; அதனால் உன்னை இன்று முதல் தீண்டேன் எனத் தள்ளினார். அதன்பிறகு, நான்முகன் இறைவனுக்கு இவ்வாறு கோபம் வந்ததைப் பார்த்து ஏங்கி, தனது உடல் நிலத்தில் நன்றாய்ப் பதியும்படி விழுந்து வணங்கித் துதித்தான். 69

148 பொடிமூடிய தழலே;நிகர், புலைஆணவ மலமாம்
செடிமூடுகை யாலேஉழல் சிறியேன்ஒரு பொருளோ?
வடிவே!பெரு வெளியே!சதுர் மறையே!சதுர் மறையின்
முடிவே!தனி முதலே!எனை முனியேல்!எனை முனியேல்!

(பொருள்) நீறு பூத்த நெருப்பை ஒத்தகடவுளே! கீழ்மையான ஆணவ அழுக்கு எனும் செடி மூடிக்கொண்டிருப்பதினால், சிறியேனாகிய யான் ஒரு பொருளோ? உருவமானவரே! அகண்ட வெளியானவரே! நான்கு வேதமானவரே! நான்கு வேதத்தின் முடிவாகிய உபநிடதப் பொருளானவரே! ஒப்பற்ற முதலோனே! அடியேனைச் சினக்க வேண்டாம்! அடியேனைச் சினக்கவேண்டாம்! 70

149 எந்நீர்களும் ஒன்றாகிய எழுவாரியும் மறுகி
வெந்நீரது வானால்,உடன் விளாவப்புனல் உண்டோ?
நின்நீர்மைஇது என்றால்உலகு உயிர்எப்படி நிகழும்?
முந்நீர்விடம் உண்டோய்!எனை முனியேல்!எனை முனியேல்!

(பொருள்) எல்லா நதிகளின் நீரும் விழுந்து ஒன்றாகிய ஏழு கடல்களும் காய்ந்து வெந்நீராய்ச் சுட்டால், அதை ஆற்றுவதற்கு வேறே தண்ணீர் உண்டோ? உமக்கே இப்படிப்பட்ட கோபம் வந்தால் உலகமும், அதில் உள்ள உயிரினங்களும் எப்படிப் பிழைக்கும்! முன்னே திருப்பாற் கடலில் பிறந்த ஆலகால விடத்தை உண்ட மூர்த்தியே! அடியேனைக் கோபிக்க வேண்டாம்! அடியேனைக் கோபிக்க வேண்டாம்! 71

150 பிறையே!முழு மதியே!உறை பெண்ணே!பிற ஆணே!
நறையே!நறு மலரே!என நானாவிதம் ஆவை;
பொறையே!திரு அருளே!பொழி புயலே!இயல் இசையே!
முறையோ?பல முறையேஎனை முனியேல்!எனை முனியேல்!

(பொருள்) இளம் பிறையாகியும், முழுத் திங்களாகியும், பெண்ணாகியும் ஆணாகியும், தேனாகியும், வாசனை தங்கிய நல்ல மலர்களாகியும், பொறுமையில் மலைகளுக்கொப்பாகியும், அருளை மழைபோல் பொழிகின்றவராகியும் விளங்கி நின்ற எழிசையாய், நாதமாகியும், மற்றும் பல்வேறு உருவாகியும் இருக்கின்றவரே! உமக்கு முறையோ? பல முறை என்னைக் கோபிக்க வேண்டாம்! என்னைக் கோபிக்க வேண்டாம்! 72

151 வெம்மைச்சர மலராகிய வில்வேடனும் அன்றே!
கொம்மைத்தலை மதஆறுஎழு கோபங்களிறு அன்றே!
செம்மைக்கனல் அன்றே!கொலை செயும்அந்தகன் அன்றே!
மும்மைப்புரம் அன்றே!ஒரு பொருளாய்எனை முனியேல்!

(பொருள்) மிகுந்த வெப்பத்தைக் கொடுக்கின்ற மலரம்புகளையுடைய மன்மதனுடைய உடல் அல்லவே! தாருக வனத்து முனிவர்கள் ஏவ வந்து, எழும்பின தலையும், ஆறு போன்ற மதத்தையும் உடைய கோபமாகிய யானை அல்லவே! அந்த முனிவரர் பின்னர் விட்ட சிவப்பாகிய அக்கினி அல்லவே! கொலைசெயும் தொழிலையுடைய எமனல்லவே! திரிபுரம் அல்லவே! நான் உமக்கு எவ்வளவு? என்னை ஒரு பொருளாகக் கருதிக் கோபம் செய்யவேண்டாம்! 73

152 அறிதற்கரி தாம்உன்முடி அறிவேன்எனும் அளவே,
பறவைப்படுவானேன்;இனி மேலோஇடர் படுவேன்;
சிறுமைப்படும் என்பால்அருள் செய்!என்றுஉரை செய்தான்;
மறுகிக்குளிர்அனல்போல்இறை மகிழ்வாய்இவைமொழிவான்.

(பொருள்) யாவராலும் அறியக் கூடாத உம்முடைய திருமுடியை அறிகிறேன் என்ற உடனே பறவை உருவானேன். இனிமேலோ துயரடைவேன். சிறுமை உற்ற என்னிடத்தில் அருள் பாலிப்பீர் என்று சொன்னார். அப்போது, மறுகக் காய்ந்து குளிர்ந்த தண்ணீர் போல, சிவபெருமான் மகிழ்ச்சியோடு திருவாய் மலர்ந்தருளினர். 74

153 அம்போருக! அஞ்சேல்இனி! அவனித்தல மறையோர்
தம்பூசனை உன்பூசனை ஆகித்தம னியமாம்
சம்பூதர உலகுஏழையும் விதிஎன்றுஅருள் செய்தான்;
கம்பூர்கடல் விடம்உண்டருள் கருணைக்கட லானுன்.

(பொருள்) திருமாலின் கொப்பூழில் தோன்றிய பிரமனே! இனிமேல் நீ அஞ்சாதே! பூவுலகிலுள்ள அந்தணர்களுக்குச் செய்கின்ற பூசை உன் பூசையாகக் கொண்டு, பொன் உருவமாய் உண்டாகிய மகாமேரு மலை தாங்கும் ஏழுலகத்தையும், எப்போதும்போல் படை என்று அருளிச் செய்தார், சங்குகள் தவழ்கின்ற கடலில் தோன்றிய விடத்தையுண்ட அருட் கடலாகிய சிவபெருமான். 75

154 இத்தலத்தில் உமக்குவரம் கொடுத்தலினுல்
யோசனைமூன்று எல்லை தூரம்
சுத்தபவித் திரஞானத் தலமாகப்
பொலிக!இந்தச் சோதி தானும்
சிற்றுருவ மலையாகி வரம்உதவக்
கடவது;இன்பம் சிறந்த தான
முத்திதனைத் தகையாமல் உதவும்இதற்கு
அருணைபுரி மொழியும் நாமம்.

(பொருள்) பிரமவிட்டுணுக்களே! உங்களுக்கு இத்தலத்திலே அருள்பாலித்து வரம் கொடுத்தபடியினுல், இன்றுமுதல் இத்தலத்தைச் சுற்றி மூன்று யோஜனை தூரம் வரைக்கும் தூய்மையான புனிததலமாக இருக்கவேண்டும். இந்தஅகண்ட ஒளிவடிவா யுள்ள மலை, சிறிய உருவத்தோடும் கூடிய மலையாகக் கடவது; பேரின்பம் சிறந்த மோக் கத்தைத் தடையில்லாமல் கொடுக்கும் இந்தலத்திற்கு அருணைபுரி என்று பெயராம். 76

155 வாதைபடும் இந்திரனும் இமையவரும்
நினைக்கஅவர் வருத்தம் தீர்த்தோம்;
ஆதலினுல், இத்தலத்தை நினைப்பவர்க்குப்
பிறப்பிடும்பை அகற்று வோம்;இப்
பூதரமும் இத்தலமும் பிரளயத்தும்
அழியாத பொற்ப தாகி,
மோதியகாற்று அடைந்ததிசைச் சராசரங்கள்
எவையும்உயர் முத்தி சேர்க்கும்.

(பொருள்) துன்பத்தை யடைந்த தேவேந்திரனும், தேவர்களும் நம்மை நினைக்க அவர்களுடைய மனத்துன்பத்தைத் தீர்த்தோம். ஆகையால் இந்தத் தலத்தை நினைக் கின்றவர்களுக்குப் பிறவி நோயை நீக்குவோம். இந்த மலையும், இத்தலமும் பிரளய காலத்திலும் நாசமடையாத அழகை உடையதாகி, இதினின்றும் மோதுகின்ற வாயு இயங்கும் திசைகளிலுள்ள அசைபொருள் அசையாப் பொருள்கள் எல்லாவற்றையும் மேலான முத்தியிலே சேர்க்கும். 77

156 வையகத்தில் அரியதவம் புரிந்தவருக்கு
இனியமுத்தி வழங்க வேண்டி,
செய்யஇந்தத் திருநகரில் அவதரிக்க
வரம்தருவோம்; செய்த தானம்
மெய்பெறஒன்று ஆயிரமாய் வளரும்;இதில்
கொடும்பாவம் விளையாது; ஈதை
ஐயம்என உணர்வார்க்குப் பரகதிகிட்
டாது;நமது ஆணை தானே.

(பொருள்) பூமியில் அரிதாகிய தவத்தைச் செய்தவர்களுக்கு இனிமையான வீடு பேற்றைக் கொடுக்க விரும்பி அழல்வடிவமாகிய இத்தலத்தில் பிறக்கும்படி வரத்தைக் கொடுப்போம்; இத்தலத்தில் ஓர் தானம் செய்தால் ஒன்று ஆயிரம் ஆகப் பெருகும்; இந்தத் தலத்தில் கொடிய பாவமே உண்டாகாது; இதை ஐயப்பாட்டுடன் நினைப்பவர்களுக்கு வீடுபேறு கிட்டாது; இது நம்முடைய ஆணை என்றார். 78

157 அண்ணல்இவை மொழிஅளவில் அழல்தூணம்
அதுகுறுகி, அசலம் ஆகி,
வண்ணநெடுஞ் சுடர்விரிந்து விளங்குதல்கண்டு,
அயன்,திருமால் வணங்கிச் சொல்வார்;
விண்ணவர்க்கும் எங்களுக்கும் இதன்சோதிக்கு
எதிர்குறுகி விழிக்கப் போகாது;
எண்ணரிய சுடர்கள்எல்லாம் உள்கரந்த
மலையாக இருக்க என்றார்.

(பொருள்) இவ்வாறு சிவபெருமான் சொன்ன அளவில், தழல்மலை குறுகி. ஒரு சிறிய மலையாய், நிறம்பொருந்திய மிகுந்த ஒளிவிரிந்து பரவுவதைப் பார்த்த பிரமனும் திருமாலும் இறைவனை வணங்கிச் சொல்வார்கள்: தேவர்களுக்கும் எங்களுக்கும் இந்த மலையின் தேசுக்கு எதிராகப் போய்க் காணக்கூடவில்லை; ஆகையால் எண்ணுதற்கு அரிய கிரணங்கள் எல்லாம் மறைந்து, ஒருமலையாய் இருக்கவேண்டும் என்றார்கள். 79

158 அன்னமிசை வருவானும் கருடன்மிசை
வருவானும், அமலமூர்த்தி!
வன்னிஒளி மறைத்து,மற்றை மலையாக
இருத்திஎன, மலையாய்ச் செய்தார்;
சென்னியிலே ஒருசோதி அனுதினமும்
தெரியஅருள் செய்வாய் என்றார்;
என்னும்அந்த அடியவர்க்கா இறையவனும்
இரங்கி,இவை இயம்பல் உற்றான்.

(பொருள்) அன்னஊர்தியில் ஏறுகின்ற பிரமனும், கருடன்மேல் வருகின்ற திருமாலும், மாசற்றவராகிய பரமசிவன் தமது தழல் ஒளியை மறைத்து, மற்ற மலைகள்போல் இருக்கவேண்டுமென்று கேட்க, அப்படியே மலை உருவாகச் செய்தார்; இந்தமலையின் உச்சியில் ஒரு ஒளி எந்நாளும் தெரியுமாறு அருளவேண்டும் என்றார்கள்; அங்ஙனம் சொன்ன தொண்டர்களுக்காக இரங்கி, இறைவனும் திருவாய் மலர்ந்தார். 80

159 கார்த்திகைக்குக் கார்த்திகைநாள் ஒருசோதி
மலைநுனியில் காட்டா நிற்போம்;
வாய்த்துவந்த சுடர்காணில் பசிபிணிஇல்
லாது,உலகில் மன்னி வாழ்வார்;
பார்த்திவர்க்கும் அருந்தவர்க்கும் இடையூறு
தவிரும்;இது பணிந்தோர், கண்டோர்
கோத்திரத்தில் இருபத்துஓர் தலைமுறைக்கு
முத்திவரம் கொடுப்போம் என்றார்.

(பொருள்) கார்த்திகை மாதத்தில் கிருத்திகை நட்சத்திரத்தில் மலையின் உச்சியில் ஒரு ஒளி காண்பிப்போம்; அப்படிப் பொருந்திய சுடரைக் கண்டால், பசியும் நோயும் இல்லாமல் உலகத்தில் நிலைபெற்று வாழ்வார்கள்; இப் பேரொளியைக் கண்ட அரசர்களுக்கும், அரியதவசிகளுக்கும் இடையூறு நீங்கும், இதைப் பணிந்தவர்கள், பார்த்தவர்கள் ஆகியோரது கோத்திரத்தில் இருபத்து ஒரு தலைமுறையிலுள்ளவர்களுக்கும் முத்திஅடையுமாறு வரம் அளிப்போம் என்றார் சிவபெருமான். 81

160 மரணபவம் அறுக்கவல்ல மருந்தாகும்;
அதற்குமலே மருந்துஎன்று ஓர்பேர்;
அருணவடிவு ஆதலினல் அருணகிரி
எனும்ஒருபேர்; அதனே ஓர்கால்
தரணியிலே உரைத்தவர்க்கு முக்கோடி
அஞ்சுஎழுத்துஉச் சரித்த தாம்என்று
இருள்நிலவு மிடற்றுஇறைவன் இசைக்க,மகிழ்ந்து
இறைஞ்சி,அவர் இசைப்ப தானர்,

(பொருள்) இறப்பினேயும் பிறப்பினேயும் நீக்குதற்கு மேலான மருந்து; ஆகையால் இந்தமலேக்கு மலேமருந்து என்றும் பெயர்; இந்தமலே சிவப்பு நிறமானதால் அருணகிரி என்றும் ஒரு பெயர்; இம்மலேயை ஒருதரம் பூமியில் சொன்னவர்க்கு, திருஐந்தெழுத்தை மூன்றுகோடிதரம் உச்சரித்ததற்கு ஒப்பாகும் என்று, நீலகண்டத்தையுடைய சிவபெருமான் அருளிச்செய்தார். அதைக்கேட்டுத் திருமாலும் பிரமனும் மகிழ்ச்சியடைந்து, இறைவனே வணங்கிக் கூறுவார்கள், 82

161 அடுத்து,அருண கிரியானே! உனக்குவிண்நீர்
அலதுபுனல் ஆட்டு வார்ஆர்?
தொடுத்தஉடுத் திரள்அலது திருமுடிக்கு
மணிமாலே சூட்டு வார்ஆர்?
கடுத்திகழும் மிடற்றுனே! கதிர்களன்றி
மணித்தீபம் காட்டு வார்ஆர்?
எடுத்துஇறைஞ்சிப் பூசைசெய்ய, இதன்கீழ்ஓர்
இலிங்கவடிவு எடுப்பாய் என்ருர்.

(பொருள்) அருணமலேயானே! (மலேவடிவமாய் விளங்கும்) உமக்கு ஆகாயத்தினின்றும் பெய்கின்ற மழையே அன்றி, தூநீர் கொண்டுவந்து அபிடேகம் செய்கின்றவர்கள் யார்? நட்சத்திரக் கூட்டங்களே முத்துமாலே ஆவதல்லாது, வேறே முத்துமாலே சூட்டுகிறவர்கள் யார்? நீலகண்டனே! சூரியஒளியே தீபம ஆவதல்லால தீபம் கொண்டு வந்து வேறே காட்டுகிறவர்கள் ஆர்? ஆகையால், நாங்கள் அபிடேகம் முதலியவைகள் செய்து பூசை செய்யுமாறு, மலேயின் கீழ் ஓர் இலிங்க வடிவமாய் எழுந்தருளவேண்டும் என்று வேண்டினர்கள், 83

162 அன்னதுவாய் இருக்குதும்;நீர் காமியத்தில்
அருச்சியும்என்று அசலம் புக்கார்;
எந்நிலமும் புகழ,அங்குஓர் சிவன்உருவம்
முளைத்ததுகண்டு, இறைஞ்சி, ஏத்தி,
மன்னியபூ மழைபொழிந்து, பரவசமாய்
மகிழ்ந்து,ஆடி, மயனைக் கூவித்
தன்னிகரில் கோபுரமும், மண்டபமும்,
மணிமதிலும் சமைப்பித் தார்கள்.

(பொருள்) அப்படியே இலிங்கமாகிறோம்; நீங்கள் காமியமுறைப்படி பத்தியுடன் பூசியுங்கள் என்று, அந்த மலையினுள்ளே மறைந்தருளினர். பின்பு எந்தத் தேசமும் புகழுமாறு அவ்விடத்தில் ஒரு இலிங்கம் தோன்றிற்று. அதைக்கண்டு வணங்கித் தோத்திரம் செய்து, மலர்மாரி பொழிந்து, தம்மை மறந்து, உவகையுடன் ஆடி. மயன் என்ற வானோர் தச்சனை விளித்து, ஒப்பில்லாத கோபுரங்களும் மண்டபங்களும் அழகு பொருந்திய திருமதிலும் செய்வித்தார்கள். 84

163 அழியாத வளநகரும் தீர்த்தம்முந்நூற்று
அறுபதும்கண்டு, அழகு செய்தார்;
வழியாநீர்ச் சுரநதியும் சுரதருவும்
கேணிகளும் மரமும் ஆன;
ஒழியாமல் இமையவரும் இருடியரும்
மனிதரென உருவம் கொண்டார்;
விழிஆல விடம்அனைய கணிகையராய்
அரம்பையரும் மேவி னாரே.

(பொருள்) ஒருகாலத்தும் அழியாத வளப்பமுள்ள நகரும், முந்நூற்று அறுபது வகையான தீர்த்தமும் உண்டானதுகண்டு, அவைகளை ஆங்காங்கு அழகுபெறச்செய்தனர். வழியாத புனலை உடைய ஆகாயகங்கையும், கற்பகமரங்களும், கிணறுகளும் மரங்களும் ஆயின. நீங்காமல் வானவர்களும், முனிவர்களும் மனிதவடிவம் கொண்டு பிறந்தார்கள். விடம் போன்ற கண்களையுடைய விலை மாதர்களாக அரம்பைப் பெண்கள் பிறந்தார்கள். 85

164 காலையிலே முழுகி,மர உரிஉடுத்து,
சிவந்தசடை கட்டி, நீறு
மேல்அணிந்து, கண்டிகைபூண்டு, அனமுதலா
மஞ்சனத்தால், மிகுந்த சாந்தால்,
மாலையினால், சிவபூசை புரிந்து,அண்ணா
மலையதனை வலங்கொண்டு ஏத்தி,
ஏலஒரு பதினாலா யிரம்ஆண்டு
கழிந்ததற்பின் இறைவர் ஆனார்.

(பொருள்) (பிரமன், திருமால் இருவரும்) காலையில் முழுகி, மரஉரிஅணிந்து, சிவந்த சடையைச் சிவலிங்க வடிவாகக் கட்டி திருநீற்றைத் தேகமெல்லாம் தரித்து, உருத்திராக்கமாலை பூண்டுகொண்டு, அன்னம் முதலாகிய திருமஞ்சத்தினாலும், சந்தனத்தினாலும், மலர்மாலைகளினாலும் சிவபூசை செய்து, திருவண்ணாமலையை வலம் வந்து வணங்கி, பதினாலாயிரம் ஆண்டுகள் ஆனபின்பு சிவபிரானிடத்தில் விடைபெற்றுக் கொண்டு, தங்கள் தங்கள் பதிக்குச் சென்று மீண்டும் தங்கள் அதிகாரத்தைப் பெற்றுக் கொண்டார்கள், 86

165 ஆசைதரும் திருஅருணை சமைத்ததற்பின்,
கயிலைமலை ஆசை போயிற்று
ஈசனுக்கும்; கனகமலை இதுவாயின்
வெள்ளிமலை இனிமேல் என்ஆம்?
காசிமுதல் எடுத்துரைக்கும் சிறப்புடைய
தலம்ஏழும், கனக நாடும்,
மாசுஅகன்ற கதிர்தோன்ற ஒளியிழந்த
உடுக்கணம்போல், வளமை தேய்ந்த.

(பொருள்) (சிவபெருமானுக்கு) ஆசைகொள்ளும்படி திருவண்ணாமலை அமைந்த பிறகு, திருக்கைலை மலையிலிருக்கும் ஆசை வெறுத்தது; இந்தமலையே பொன்னுருவம் கொள்ளுமாயின் வெள்ளிமலைமேல் ஆசை உண்டாகுமா? காசிமுதலாகச் சொல்லப்பட்ட ஏழு தலங்களும், பொன்மயமாக விளங்கும் தேவலோகமும் குற்றம் நீங்கிய சூரியன் உதயமாக ஒளி இழந்த நட்சத்திரங்கள்போல் தேசு மழுங்கிப் போயின, 87

166 அரிஅயனும் அளவிடுதற்கு அரியமலை
நிலைஉரைக்க அரிது;என் றாலும்,
தெரியஉனக்கு அறிந்தபடி சிறிதுஉரைத்தேன்;
இனிஉரைக்கும் திறம்ஏது என்றான்.
வரிசைபெறு மார்க்கண்ட முனிமகிழ்ந்து
பணிந்து,உமையாள் மலையில் தோன்றி
உரியசிவன் இடம்கலந்த கதையும்உரைத்து
அருளுகஎன உரைப்ப தானான்.

(பொருள்) நந்திதேவர் மார்க்கண்டேய முனியைப் பார்த்து, திருமாலும் பிரமனும் அறிதற்கு அரிதாகிய திருமலையின் சிறப்பை என்னால் சொல்லுதற்கு அரியது; என்றாலும் எனக்குத் தெரிந்த அளவில் சிறிது, உமக்குத் தெரியும்படி சொன்னேன்; இனிச்சொல்ல வேண்டியது என்ன என்றார். அதுகேட்ட புகழ்மிக்க மார்க்கண்டேய முனிவர் மகிழ்ச்சி அடைந்து, வணங்கி, நந்திதேவரே! பார்வதியார் இமாலயத்தில் அவதாரம் செய்ததுவும் இறைவனை நோக்கித் தவம்செய்து இடப்பாகம் பெற்றதுவும் சொல்லவேண்டும் எனக் கேட்க, அவரும் சொல்லத்தொடங்கினார். 88

இரண்டாவது

திருமலைச் சருக்கம் முற்றிற்று

## 3· மலைமகள் திருஅவதாரச் சருக்கம்

167 பன்னிருவர், பதினொருவர் எழுவர்,எண்மர்,
திசைக்குஇறைவர், பணிநாட் டுள்ளோர்,
கின்னரர்,கிம் புருடர்,சித்தர். இயக்கர்,இமை
யவர்,முனிவர், கிளையில் உள்ளோர்,
மன்னுமல ரவன்,திருமால், கலைமடந்தை
மலர்மடந்தை மகிழ்ந்து சூழ
முன்னவனை இகழ்ந்து,தக்கன் முடியாத
பெருவேள்வி முடிக்கல் உற்றான்.

(பொருள்) பன்னிரண்டு சூரியர்கள், பதினொரு உருத்திரர்கள், ஏழு இருடிகள், எட்டுத்திசைக் காவலர். நாகலோகத்தார், கின்னரர், கிம்புருடர். சித்தர். இயக்கர், தேவர்கள், முனிவரர்கள், நிலைபெற்ற பிரமன், திருமால், சரசுவதி, இலக்குமி ஆகிய இவர்கள் மிகவும் மனமகிழ்ச்சியுடன் சூழ்ந்து நிற்கவும், எல்லாருக்கும் முதல்வராகிய பரமசிவனை வைது, நிறைவேற்றாத பெரிய வேள்வி செய்யத் தொடங்கினான், 1

168 "எந்தைசெயும் மகம்பார்க்க விடைஅருள்!"என்று
இறைக்கு,இறைவி இசைத்தாள்; "உந்தை
புந்தியிலாது இகழ்ந்தனன்"என்று உரைத்தனன்;"நீ
எனைவேண்டிப் பொறுப்பாய்" என்று
வந்தனைசெய் தனள்;அவனை நகைபுரிந்து,
"கடிதுசென்று வருவாய்" என்றான்;
கந்தமலர்க் குழலாளும் தந்தைமகம்
தொடங்குகள தலத்தைச் சார்ந்தாள்.

(பொருள்) பார்வதி அம்மையார் தமது தகப்பனாகிய தக்கன் யாகம் பண்ணுவதைக் கேட்டு, "இறைவனே! என்னுடைய தந்தை செய்யும் வேள்வியைக் கண்டுவர உத்தரவு கொடும்" என்று எம்பெருமானைக் கேட்டாள். அதற்கு அவர், "உன் தந்தை புத்தி யில்லாமல் என்னை மிகவும் ஏசியிருக்கிறான்" (எனவே நீ போகலாமா என்றார்) அதைக் கேட்ட இறைவி, "சுவாமி! என் தந்தை செய்த குற்றத்தை எனக்காகப் பொறுத்தருள வேண்டும்" என்று கூறி வணங்கினாள். உடனே சிவபெருமான் அவளைபபார்த்து, நகைத்து, "நல்லது நீ போய் விரைவில் வந்துசேர்" என்றார். அதைக்கேட்ட பார்வதியும் தகப்பன் வேள்வி செய்யும் இடத்துக்குச் சென்றடைந்தாள், 2

169 தாயரைக்கண்டு அடிதொழுதாள்; அவள்தழுவாது
இருந்தனள்;தன் தந்தை யான
தீயவனைப் பணிந்தனள்;அங்கு அவனும்இகழ்ந்
தான்;இகழ்ந்த செயலைநோக்கிப்
பேயிருக்கும் சுடலைஎனப் பிழைபிறந்து
விடுகஉங்கள் பெருவாழ்வு என்று
வாய்பிறக்கும் கொடுமைசொலி மறைந்தனள்;அச்
செயல்அறிந்தான் மங்கை பாகன்.

(பொருள்) பார்வதி தக்கன் யாகசாலைக்குப்போய்த் தன்னுடைய தாயை வணங்கினாள்; அவள் இந்த அம்மையைத் தழுவி உபசாரம் சொல்லாமல் இருந்தாள்; அதன் பின்பு தீமை பொருந்திய தகப்பனை வணக்கம் செய்தனள்; அவனும் இகழ்ச்சி செய்தான்; அதைப் பார்த்துப் பார்வதி, கோபங்கொண்டு, உன்னுடைய வேள்விச் சாலையின் வாழ்வு பேயிருந்து விளையாடும் சுடலையாகி நாசமடையக் கடவது என்று தனது வாக்கினால் கடின சாபம்கொடுத்து, அங்கிருந்து மறைந்தாள். அதனை அறிந்தனர் உமாதேவி நாயகரான சிவபெருமான். 3

170 உள்நிலாவு வஞ்சிசெல்ல ஒருவனாகி உய்யுமோ?
தண்நிலா, முடிக்குள்நின்று தழலைமொண்டு இறைக்கையால்,
அண்ணல்வெம்பிமுனிவுகொள்ளும்அளவில்நெற்றிவிழிதனில்
விண்நடுங்க, மண்நடுங்க, வீரன்வந்து தோன்றினான்.

(பொருள்) தம்முடன் இரண்டறக் கலந்த அம்பிகை இங்ஙனம் கோபித்துவர, தனியாய், இறைவன் பிழைக்குமோ? சிவனது குளிர்ந்த சந்திரன், முடிமேலிருந்து நெருப்பை வாரிச் சொரிகின்றபடியினாலே அதிக வெம்மை அடைந்து, இந்தத் தக்கனாகிய பாவியினால் அல்லவோ இவ் வருத்தம் ஏற்பட்டது என்று கோபித்துக் கொள்ளும்போது, அவருடைய நெற்றிக்கண்ணிலிருந்து, வீரபத்திரர் வான் உலகமும் மண் உலகமும் நடுங்குமாறு தோன்றினார். 4

171 மஞ்சுபற்றி உடல்கறுத்து மணிமயூர முடியுடன்
சஞ்சரிக்கும் மேருஎன்ன இடிமுழங்கு தழலின்வாய்
நஞ்சுகொப் புளிக்கநெற்றி நயனமும் கொதிக்கவே
அஞ்சலித்த கையொடுஎங்கள் ஐயன்வந்து தோன்றினான்.

(பொருள்) மேகத்தைப் பார்க்கிலும் கருமையாக உடம்புகறுத்து, மயிலின் நிறம் போன்ற மரகதரத்தினம் இழைத்த கிரீடத்துடன் உலவுகின்ற மேருவுக்கு ஒப்பாகி, இடிபோல் முழங்குகின்ற நெருப்பாகிய சொல்லையுள்ள வாய் நஞ்சைக் கொப்புளிக்க நெற்றிக்கண் கொதிக்க முடியின்மேல் வைத்துக் கூப்பிய கைகளோடு எம்ஐயராகிய வீரபத்திரர் வந்து தோன்றினார். 5

172 ஒழித்தசிங்க உரிபுயத்தில் உத்தரீயம் ஆகவே,
கழித்தெறிந்த வல்லியத்தின் அதள்இசைத்த கச்சையால்,
'விழித்துஇமைக்கும் முன்னம்விண்ணின் வெளிஅடைத்த மேனியாய்,
அழைத்ததென்னஎன்ன'என்றே ஐயன்வந்து தோன்றினான்.

(பொருள்) இரணியனைக்கொன்ற நரசிங்கத்தை உரித்து எடுத்ததோல் உத்தரீயமாகவும், தாருகாவனத்து முனிவர்களால் விடப்பட்டுச் சிவபெருமானால் மரணம் அடைந்த புலியின்தோல் இடுப்பில் கட்டிய கச்சையாகவும், விழித்து இமைப்பதற்கு முன்னே, ஆகாயமெல்லாம் மறைத்த தேகத்தினுடனே, என்னை அழைத்தது என்ன காரணம்? என்னகாரணம்? என்று வீரபத்திரர் வந்தார். 6

173 முக்கண்அத்தன், 'நீர்கொடாது கனல்கொடுக்கும் முகில்எனத்
தக்கன்வேள்வி யைத்தகர்த்து மீள்தி'என்று சாற்றினான்;
அக்கணத்தில் உவகைபொங்கி அடிவணங்கி ஏகினான்;
பக்கம்நின்ற பூதநாதர் பாரிடங்கள் சூழவே.

(பொருள்) 'என்னை அழைத்த காரியம் யாது?' என்று கேட்ட வீரபத்திரரைப் பார்த்து, மூன்று கண்களையுடைய பரமசிவன், 'நீரைப்பொழியாமல் நெருப்புக்களைக் கக்கும் மேகம்போல் சென்று, தக்கனுடைய யாகத்தை அழித்துவரக்கடவாய்' என்று அருளிச்செய்தார். அக்கணமே வீரபத்திரர் அதிக மகிழ்ச்சியடைந்து, எம்பெருமானின் திருவடியைத்தொழுது, பக்கத்தில் நின்ற பூதக்கூட்டங்களும் பேய்க்கூட்டங்களும் சூழப் போனார். 7

174 நஞ்சுகொப் புளிக்குநாகம் நால்இரண்டு மாலையா,
அஞ்சுஇரட்டி பூதம்நீல ஆலவட்டம் விசவே,
குஞ்சரங்கள் எட்டையும் குதம்பையாக இட்டவெண்
கஞ்சுகத்தர் நால்வர்,தூய கவரிநின்று வீசவே,

(பொருள்) விடத்தினைக் கக்குகின்ற அட்டமா நாகங்களையும் மாலையாக அணிந்துகொண்டு, பத்துப் பூதங்கள் நீல நிறமான ஆலவட்டம் வீசிக்கொண்டு வரவும், எண் திசைகளிலிருக்கும் யானைகள் எட்டையும் காதிலே குண்டலங்களாக இட்டுக்கொண்டு, வெள்ளைச் சட்டை அணிந்த நால்வர் தூய வெண்சாமரம் விசவும் புறப்பட்டார் வீரபத்திரர். 8

175 · தீஇருந்த உதரவெம்மை விண்பிழிந்து தீர்த்திடும்
பேய்இரண்டு நூறுநூறு காகளம் பிடிக்கவே,
வாய்இரண்டு போலும்மாலை மதிஇடந்த பூதம்ஓர்
ஆயிரம் கவிக்கமுத்தின் ஆதபத்தி ரங்களே,

(பொருள்) வடவைக் கனல் குடிகொண்டிருந்த வயிற்றின் பசியை, மேகங்களைப் பிழிந்து குடித்து ஆற்றிக்கொள்ளுகின்ற இருபது ஆயிரம் பேய்க்கூட்டங்கள் எக்காளம் பிடிக்கவும், சந்திரனை இரண்டாகப் பிளந்து ஒழுங்காக இரண்டு கடைவாயிலும் வைத்தது போன்ற வளைந்த பற்களையுடைய ஆயிரம் பூதங்கள் முத்துக் குடைகள் பிடிக்கவும் புறப்பட்டார். 9

176 மாயும்மாயர் தந்தசங்கு கோடிகோடி மறுகவே,
தீயின்வாயின் ஊர்திதந்த சிங்கநாதம் ஊதவே,
சாயும்எண்ணரில் காலர்மேதி தந்தகொம்பு இசைக்கவே,
ஆயிரம்க ளிற்றுஇழுத் தணைத்ததேரில் ஏறினன்.

(பொருள்) இறந்து இறந்து பிறக்கிற அநேக கோடி கோடி திருமாலர்களுடைய கையிலிருந்த சங்குகளை அநேக பூதங்கள் வாயில்வைத்து ஊதிக்கொண்டு வரவும், இறந்த அக்னி பகவான், வாயுபகவான் இவர்கள் ஏறுகின்ற ஆட்டுக்கடா, கலைமான் இவைகளுடைய கொம்புகளை வாயில்வைத்து அனேக பூதங்கள் ஊதவும், இறந்துபோன அளவற்ற எமராசர்கள் ஏறிய எருமைக்கடாக்களுடைய கொம்புகளை வாயில்வைத்து அனேக பூதங்கள் ஊதவும், ஆயிரம் ஆண் யானைகள் கட்டியிருக்கிற தேரில் ஏறினார் வீரபத்திரர். 10

177 சிலகணங்கள் ஆனையான, சிலகணங்கள் தேரதாய்,
உலவுகின்ற சிலகணங்கள் ஓடுகின்ற வாசியாய்,
மலைவுகொண்டு சிலகணங்கள் மனிதர்தேவ ராயின;
அலகைதானும் அளவிலாது அனந்தவேடம் ஆன்தே.

(பொருள்) அப்படி வீரபத்திரர் தேறில் ஏறினபோது, சில பூதங்கள் யானை உருவம் கொண்டன; சில பூதங்கள் தேரின் உருவம் கொண்டன; சில பூதங்கள் குதிரையாயின; சில பூதங்கள் தேவரும் மனிதரும் ஆயின; எண்ணிலாத பேய்கள் எண்ணிறந்த உருவம் கொண்டு புறப்பட்டன. 11

178 வீரைஏழ் அடங்கஉண்டும் விடாய்கெடாது மீளுமே;
பாரஏழு பாரும்உண்டு பசிகெடாது படருமே;
கூரவேல் எறிந்துகாலன் நாடுகொள்ளை கொள்ளுமே
போரையே விரும்பிமுன் நடந்துசென்ற பூதமே.

(பொருள்) வீரபத்திரர் புறப்பட்டவுடனே, போர் செய்ய விரும்பி அவருக்கு முன்னே நடந்த பூதங்கள், ஏழு கடல் நீரையும் ஒருங்கே குடித்தாலும் விடாய் தீராமல், திரும்பும்; சுவையாகிய ஏழு உலகத்தையும் சாப்பிட்டும் பசி அடங்காமல், அலைந்து கொண்டிருக்கும்; கூர்மை பொருந்திய வேலாயுதத்தை எறிந்து எமனுடைய நாட்டையே கொள்ளைகொள்ளும். 12

179 கொண்டல்ஏழை யும்சிவந்த குஞ்சிமீது சுற்றுமே;
புண்டரீகர் அண்டமும் புகைகொளுத்தி மீளுமே;
எண்திசா முகத்தைநாடி யாகசாலை தேடுமே;
சண்டவாயு என்ன அங்கை தட்டிஓடு பூதமே.

(பொருள்) பூதங்கள் ஏழு மேகங்களையும் பிடித்து, சிவந்த தலைமயிரிலே சுற்றிக் கட்டிக்கொள்ளும். அனேக பிரமாண்டங்களையும் புகை எழ நெருப்பினால் கொளுத்தும். எட்டுத் திசைகளிலும் சென்று, யாகசாலை எங்கே என்று தேடும். சண்டமாருதம்போல் கைகளைக் கொட்டிக்கொண்டு, வீரபத்திரர் பின்னர் ஓடும். 13

180 வெள்ள ஆழி மதுநுகர்ந்து வீறுகின்ற; சிலகணம்,
துள்ளவந்து புவனமுற்றும் சுற்றுகின்ற; 'இறையையார்
தள்ளுகின்ற பேர்கள்'என்று சாய்க்கநின்று நகைசெயும்;
புள்ளிகொள்ளும்; உடனெழுந்து, பரிவுகொண்டு பாடுமே.

(பொருள்) வெள்ளமாகிய கடல்போன்ற மிகுந்த மதுவைக் குடித்து, அதனால் வீறுப்பு மேலிட்டு, சில பூதங்கள் சண்டைக்கு எழுந்தன; சில பூதங்கள் துள்ளிக் கொண்டு உலகமெலாம் சுற்றிவரும்; சில பூதங்கள் 'நம் ஐயனைத் தள்ளுகிறவர்கள் யார்' என்று கேட்டு, அவர்களைக் கொல்லுகிறதற்காக நின்று வீரநகை கொள்ளும்; சில பூதங்கள் தூங்கும்; சில பூதங்கள் உடனே எழுந்து அன்புகொண்டு சிவனைக் குறித்துப் பாடும். 14

181 வெதிர்சிலம்பு, முரசு,சங்கம், விருதுபம்பை, அதிரவே,
புதியகண்ட மணி,தவண்டை, புரிமதங்கம் மறுக,நீள்
கதிகடந்து யாகசாலை கண்டுபூத கணம்எலாம்
அதிதிமைந்த ரானபேர்கள் ஆவிவாரி வீசின.

(பொருள்) வீரபத்திரர் புறப்பட்டவுடனே புல்லாங்குழல், சிலம்பு, முரசு, சங்கங்கள் விருதாகிய உடுக்கை முதலான வாத்தியங்கள் முழங்கவும், விநோதமான பெரிய மணி, தவண்டை, முறைப்படி அமைத்த மிருதங்கம் இவை ஒலிக்கவும், விழி முழுதும்போய் தக்கனுடைய வேள்விச் சாலையைக்கண்டு, எல்லாப் பூதக் கூட்டங்களும், அதிதியினுடைய பிள்ளைகளாகிய எல்லாத் தேவர்களையும் தூக்கி வாரி விசின. 15

182 காரிலேறி, மையில்ஏறி, கடாவில்ஏறி, அலகைமேல்
ஏறின்ஏறி, மகரமேறி, இரலைஏறி, அளகையாம்
பாரில்ஏறி மானம்ஏறி, பசுவில்ஏறி எண்மரும்,
தேரில்ஏறி வந்தவீரர் சேனைமாள மோதினர்.

(பொருள்) மேக வாகனனாகிய தேவேந்திரனும், ஆட்டுக்கடாவில் ஏறுகின்ற அக்கினியும், எருமைக்கடா வாகனனாகிய யமனும், பேய் வாகனனாகிய நிருதியும், மீன் வாகனனாகிய வருணனும், மான் வாகனனாகிய வாயுவும், அழகாபுரியை ஆண்டு விமானத்திலேறுகின்ற குபேரனும், இடப வாகனனாகிய ஈசானியனும் ஆகிய எட்டுப் பேர்களும் தேரில் ஏறி, எதிர்த்துக்கொண்டுவந்த வீரபத்திரருடைய பூதகணங்களை எதிர்த்தார்கள். 16

183 வாளி,சூலம் வேல்,உலக்கை, வச்சிரம்,க ணிச்சி,வாள்,
மீளிசேனை காவலாளர் வீழுமாறு வீசினர்;
கூளிநாலி ரண்டுசென்று கொடியஎண்மர் பரிவெலாம்
ஆளியோடு எடுத்துஎரிந்த அம்மனைக்கு நிகரவே.

(பொருள்) அட்டதிக்குப் பாலகரும் பாணம், சூலாயுதம், வேல், உலக்கை வச்சிராயுதம், மழு, கத்தி இவைகளை யுத்த வீரத்திற் சிறந்த வீரபத்திரருடைய சேனைத் தலைவர்கள் விழும்படி எறிந்தனர். அப்போது எட்டுப் பூதங்கள் புறப்பட்டு, திக்குப்பாலகர் எட்டுப்பேர்களையும், அவர்கள் ஏறிய வாகனங்கள் எட்டையும் அம்மானைக்குச் சமானமாக எடுத்து எறிந்தன. 17

184 அலகைநால் இரண்டும்வீழ அமர்செய்பூதம் ஓடவே
மலைவுகண்டு திக்குப்பாலர் வாகைமாலை சூடினர்;
நலிதல்கண்டு வீரன்,வாளி நாலிரண்டை ஏவினன்;
உலகபாலர் உடல்புகுந்துஉள் அமுதமுண்டு உலாயதே.

(பொருள்) முன்னே எட்டுப் பூதங்களால் எறிபட்டு விழுந்த திக்குப் பாலகர் எண்மரும் அந்த எட்டுப் பூதங்களும் கீழே விழவும். மற்றைப் பூதங்களெல்லாம் ஓடிப் போகவும் யுத்தம் செய்து, வெற்றிமாலையைச் சூடிக்கொண்டார்கள். அதுகண்ட வீரபத்திரர் எட்டு அம்புகளை விட்டார். அவைகள்போய் எட்டுப்பேர்கள் உடலைத் துளைத்து அவ் உடல்களுள் இருக்கிற அமுதத்தைப் புசித்துச் சுற்றிவந்தன. 18

185 மருங்குஇழிந்து குயிலதாகி, வச்சிரத்தன் ஏகினன்;
நெருங்கும்ஈசன், அளகைஆளி, நிருதி,வாயு, வருணனும்
சுருங்கினர்; கடாவில்ஏறி துஞ்சினன்; அழற்பிரான்
பெருங்கைஏழும் ஈசன்அன்பர் பிறவிபோல் அறுத்தனன்.

(பொருள்) தேவேந்திரன், தன் வாகனத்தை விட்டுக் குயில் வடிவம்கொண்டு ஒரு பக்கத்தில் ஓடினன். ஈசானன், குபேரன், நிருதி, வாயு, வருணன் இவர்கள் தோற்று வெட்கத்தை அடைந்தார்கள். எமன் இறந்தான். அக்கினி பகவானுடைய ஏழுகைகளையும், சிவனுடைய அன்பரது பாவங்களை அறுப்பதுபோல, அறுத்துத்தள்ளினர் வீரபத்திரர். 19

186 கச்சமற்ற அச்சமோடு கலையதான எச்சனர்
எச்சனாக உயிரைவாரி உடல்உரித்து எறிந்தனன்;
பச்சைவல்லி அன்னையான பன்னிகாது இரண்டையும்
வச்சிரத்தி னால்அரிந்து, மாமன்முன்பு சென்றனன்.

(பொருள்) அளவில்லாத பயம்கொண்ட யாககர்த்தாவாகிய கலைக்கோட்டு முனியின் உயிரும் உடலும் வேறாகக்கொன்று, உடலை உரித்து எறிந்தார். கரு நிறத்தையுடைய பார்வதியின் தாயாகிய தக்கனுடைய மனைவியின் இரு காதையும் அறுத்துத் தள்ளினார்; மாமனாகிய தக்கனிடம் போனார் வீரபத்திரர். 20

187 மிக்குஅருந்து சோமபானம் வீரபானம் ஆகவே,
ஒக்கநின்ற யாகதண்டம் ஒன்றுகொண்டு குன்றுபோல்
தக்கனார் எதிர்த்தபோது தலைஅரிந்து தள்ளினான்;
அக்கணத்தில் ஒன்றுசென்று அரைக்கணத்து அயின்றதே.

(பொருள்) தேவர்கள்கூடி அதிகமாகச் சோமபானம் செய்வதை நீக்கி, தனக்கு வீரமே பானமாகும்படி யாகசாலையிற் புகுந்து, யாகத்தம்பங்களில் ஒன்றைப் பிடுங்கிக் கொண்டு எதிர்த்த தக்கனுடைய தலையை மலைபோல் கீழேவிழ அறுத்துத் தள்ளினான். அப்போது, அந்தப் பூதகணங்களில் ஒன்று விரைந்து சென்று, அரை நொடியில் தக்கன் தலையைத் தின்றுவிட்டது. 21

188 பசுக்கள்ஏறு உருத்திரப் பசுக்கள்ஆவி தன்னையும்
வசுக்கள்ஆவி தன்னையும் மருத்துதேவர் ஆவியும்,
முசுக்கள்போல் ஒளித்திருந்த முனிவர்ஆவி தன்னையும்,
அசிக்கவீரன் விட்டசூலம் அள்ளிஅள்ளி உண்டதே.

(பொருள்) மாடுகளில் ஏறுகின்ற பசுப்போன்ற உருத்திரக் கூட்டங்களின் உயிரையும், எட்டு வசுக்களின் உயிரையும், மருத்துவர்கள் என்னும் அசுவினி தேவர்கள் உயிரையும், குரங்குகள்போல் ஒளித்துப் பதுங்கியிருந்த முனிவருடைய உயிரையும் எள்ளி நகையாட, வீரபத்திரர்விட்ட சூலாயுதமானது எடுத்து எடுத்துத் தின்றுவிட்டது. 22

189 விழியினோடு அருக்கர்பல்லை வேரறுத்து, வாணி,மா
எழில்படைத்த துண்டநா இரண்டுதுண்டம் ஆக்கினான்;
கழலமைந்த கால்மிதிக்க அமுதமுண்ட கலைநிலா
அழல்அவிக்கு மாறு,தாளில் அப்புவெண்ணெய் ஒத்ததே.

(பொருள்) சூரியன் பற்களும் கண்ணும் தெரித்துக் கீழேவிழ அடித்தார்; நாமகளின் அழகு பொருந்திய சிவந்த நாவினை இரு துண்டாகச் செய்தார்; இலக்குமியின் மூக்கை அறுத்தார்; வீரகண்டாமணியை அணிந்த காலினால் சந்திரனை மிதித்தார்; அவன் நசுங்கி, தக்கனுடைய வேள்விச்சாலை நெருப்பை மிதித்ததினால், அந்த வெப்பம் தீர அப்பிய வெண்ணெய் போலானான். 23

190 காயம்மண்ணில் விட்டதேவர் கரியமேனி அலகையாய்
மாயமாகி முன்னையாகம் வந்துதோன்றி அமர்செயத்
தூயசேனை யாயபேர் தொடர்ந்துசாக அமர்செய்தார்;
பேயதாய் இருக்கவும் பிணக்கம்நின்றது இல்லையே.

(பொருள்) பூதகணங்களாலே தேகத்தை இவ்வுலகில்விட்டு இறந்துபோன தேவர்கள் கரிய தேகத்தையுடைய பைசாசமாகி, மறுபடியும் முன் யாகத்திலே மாயமாய்த் தோன்றி எழுந்து சண்டைசெய்ய, அவர்களை வீரபத்திரர் சேனையிலுள்ளார், அடித்துக் கொன்றார்கள். ஆகையால் பேயாய்ப்போயும் துயர் தீரவில்லை. 24

191 விதிபுனைந்த ஓமகுண்டம் வேறுபட்ட தென்னினும்,
புதியசோறும் எள்ளினோடு பொரியும்வாய் புகட்டி,முன்
குதிகொள்நெய்க் கடாம்எடுத்து ஒழுக்குபோதொர் கூளிதன்
உதரகுண்டம் அனல்எழுந்த ஓமகுண்டம் ஆனதே.

(பொருள்) தட்சபிரமனாலே விதிக்கப்பட்ட யாகசாலையானது அழிவை அடைந்தது; என்றாலும் அதற்குள்ள வைக்கப்பட்டிருந்த சோறு, எள்ளு, பொரி, இவற்றை ஒரு பூதம் வாயில் கொட்டிக்கொண்டு, நெய்க்குடங்களை மடமட என்று உட்கொண்டபோது, அதனுடைய வயிறே ஓமகுண்டமாகவும், அதன் உள்ளே இருந்த அக்கினியே நெருப்பாகவும் இருந்தது. 25

192 அட்டதிக்குப் பாலரும் வசுக்களும் குருக்களும்,
முட்டரான முப்பதிற்று மூன்றுகோடி தேவரும்,
பட்டபோது, அவர்தம்மெய்கள் பழுதுறுது,தன்னுளே
இட்டபூத உதரம்,முன்னை யாகசாலை ஒத்ததே.

(பொருள்) அட்டதிக்குப் பாலகரும், அட்டவசுக்களும், தலைவராகவந்த குருக்களும், முட்டுப்பட்டவராகிய முப்பத்துமுக்கோடி தேவர்களும் இறந்தபோது, அவர்களுடைய தேகம் வீணாகப்போகாமல், வீரபத்திரருக்கு முன்னே அவருடைய சேனைகளாகிய பூதகணங்கள், சாப்பிட்டபடியால் அப் பூதகணங்களுடைய வயிறு வேள்விச்சாலையை ஒத்திருந்தது. 26

193 கற்பகால மும்கெடாக் கணம்மிதிக்க அமரர்தாம்
அற்பமாம் உடம்புஇரத்தம் ஆசவிசாரம் ஒத்ததால்;
பற்பலார் இயக்கர்,சித்தர் பண்டிசிந்து குடர்களால்
சர்ப்பயாகம் ஒத்ததுஅன்று தக்கர்செய்த யாகமே.

(பொருள்) கற்பகாலத்திலும் அழிவில்லாத பூதகணங்கள் காலினால் மிதித்த படியினால், நீடித்த ஆயுளைத் தேவர்கள் அற்பமாகிய உடம்பினின்றும் பீரிட்ட இரத்தம் வேள்விக்கு நெய்யெடுத்துச் சொரிதல்போன்று இருந்தது. ஆதலால் பலபல யட்சர் சித்தர்களுடைய வயிறு பிதுங்கப்பட்டு அவர்களுடைய குடல், கொடிகொடியாகச் சிந்திக் கிடந்தது. அஃது எவ்வாறு இருந்ததெனில், சர்ப்பயாகம் செய்தலை ஒத்தது, அன்று தக்கன் செய்த வேள்வி. 27

194 சிறந்ததிக்குப் பாலர்ஆதி தேவர்சித்தர் முதலினோர்
இறந்திறந்து போகவேதன் இறையிலே இயற்றினன்,
பிறந்துவந்து வந்துபோர் பெருக்கினர்; பிறந்தபேர்
மறந்துவிழ, வீரன்மோதி மலரினானை அண்டினன்.

(பொருள்) சிறப்புப் பொருந்திய திசைக்காவலர் முதலாகிய தேவர்கள், சித்தர்கள் முதலானோர் இறக்க இறக்க, பிரமன் அவர்களை நொடிப்பொழுதில் படைத்துக்கொண்டே வந்தார். அவர்கள் மறுபடியும் பிறந்து பிறந்துவந்து யுத்தம் செய்தார்கள். பிறக்கும் வரலாற்றை உணர்ந்து அவர்கள் பின்னும் பிறக்காமல் இருக்கும்படி அதற்குக் காரணமா யுள்ள பிரமனை அடுத்துப் போர் செய்யத்தொடங்கினர் வீரபத்திரர். 28

195 செத்ததேவர் மீளவும் செருச்செயப் படைத்திடும்
கைத்தலங்கள் வீழுமாறு கமலனை மோதினான்;
முத்தலைக்கொள் படைஎடுத்து முண்டகத்தர் சிந்தைசேர்
பத்துமைந்தர் சென்னியும் படிக்குளே பரப்பினான்.

(பொருள்) இறந்துபோன தேவர்கள் மறுபடியும் சண்டை செய்யும்படி உடனுக்குடன் படைக்கும் பிரமனுடைய கைகளை அறுத்துத் தள்ளினார். மூன்று தலையையுடைய சூலாயுதத்தினால் அவர் மனத்திலிருந்து உண்டாகிய பத்துப்பிரமருடைய தலைகளையும் குத்திப் பூமியில் விழத் தள்ளினார் வீரபத்திரர். 29

196 அண்டகூடம் உண்டுஉமிழ்ந்த ஆதிமாயன் அமர்செயத்
துண்டமேரு எனவிளங்கு கருடன்மீது தோன்றியே,
விண்டவாளி வருடமாக வீரன்மார்பில் வீசினான்;
கண்டதுண்ட மாகவீரன் கையின்வாளி ஏவினான்.

(பொருள்) அண்டகோடிகளை விழுங்கி உமிழ்ந்த முதல்வராகிய திருமால், சண்டை செய்யும்படி மேரு நிகராக விளங்கிய கருடன் மேல் ஏறிக்கொண்டு, அனேக அம்பு மழைகள் வீரபத்திரர் மார்பில் படும்படி பொழிந்தார். அப்படி விட்ட அம்புகளை எல்லாம் இரண்டு துண்டமாகத் தன் கைப்பாணத்தினால் அறுத்து எறிந்தார். 30

197 வையம்உண்ட மால்வெகுண்டு வாள்விதிர்த்து வீசினான்;
ஐயன்அங்குஓர் வாளியால் அறுத்துஎறிந்துஓர் அம்பினால்
பையரா அருந்திஆவி பருகினான்;மெய் கருகினான்;
கையில்ஆழி ஏவினான்; பணிந்ததுஅண்ணல் காலிலே.

(பொருள்) உலகத்தை உண்டுஅருளும் திருமால் வில்யுத்தம் பண்ணுகிறதற்குத் திறமையில்லாமல் கோபம்கொண்டு, ஒரு வாளாயுதத்தை எடுத்துச்சுற்றி வீசினார். வீரபத்திரர் அவ்வாளினை ஒரு அம்பை விட்டு அறுத்து, ஒரு அம்பினால் பாம்பைக் கொல்லுகின்ற கருடனைக் கொன்றுவிட்டார். அதுகண்டு துயரினால் உடம்பு கருகிப்போய், கையிலிருக்கிற சக்கரத்தை விட்டான் திருமால். அது வீரபத்திரனின் காலில் விழுந்து பணிந்தது. 31

198 எந்தைமுன் அளித்தஆழி எந்தைதாளில் வீழவே,
அந்தமெய் ஒழிந்து,பன்றி, அரியின்வேடம் ஆகியே,
வந்துவந்து போர்தொடங்கி வாளின்வேலின் வவ்வினான்;
உந்திவேறுஓர் சேலதாகி வாரிமீது ஒளித்தனன்.

(பொருள்) முற்காலத்தில், திருமால் ஆயிரம் தாமரை மலர்களைக்கொண்டு பரமசிவனைப் பூசித்து வருகிறபோது, இவரது அன்பைப் பரிசோதிக்க வேண்டி ஆயிரம் பூவிலே ஒரு பூவைச் சிவபெருமான் மறைத்து வைத்தார். திருமால் பூசை செய்து அருச்சனை பண்ணிக்கொண்டு வரும்போது. ஒரு தாமரை மலர் குறைய அதற்குப் பதிலாகத் தன்னுடைய தாமரைமலரை ஒத்த கண்ணைப் பிடுங்கி அருச்சிக்க, சுவாமிக்கு மனத்தில் மகிழ்ச்சி வந்து சக்கரத்தைக் கொடுத்தார். அந்தச் சக்கரத்தைத் தானே சுவாமி மேல்விட அது பயந்து காலில் விழவே, இனிமேல் இந்த உருவத்தோடே நின்றால் பிழைக்கமாட்டோம் என்று அந்த உருவத்தை ஒழித்துப் பன்றியாகவும், சிங்கமாகவும் உருவம் எடுத்துவந்து யுத்தம் செய்ய அந்தந்த உருவங்களை வாளாயுதத்தாலும், வேலாயுதத்தாலும், வீரபத்திரர் வென்றார். அதன்பின்பு மிகவும் பயந்து மீன் உருவம் எடுத்துக் கடலிலே விழுந்து ஒளித்தார். 32

199 புவியுண்ட நெடுமாலும் பழையபடி
புவிஉண்டு போனான்; வேதன்
தவிஉண்டு தலைநாலும் தடிஉண்டான்;
இமையவர்தம் தடிஊன் உண்டார்;
கவிஉண்ட கனல்குண்டம் பேய்இறைச்சி
அருந்துகன கலமே ஆன;
அவிஉண்டு மனம்மகிழ்தற்கு எய்துமுனி
வரர்எல்லாம் அவிஉண் டாரே.

(பொருள்) மண்ணை உண்ட திருமாலும் தோற்று முன்போலவே மண்ணை வாயில் போட்டுக்கொண்டு அலைகடலில் ஒளித்துக்கொண்டார். நான்முகன் தவித்து உண்டாயிருந்த நான்கு தலையும் அறுபட்டு இறந்தார். தேவர்களும் தண்டத்தால் அடியுண்டு இறந்தார்கள்; பூதகணங்கள் இறைச்சி சாப்பிடுவதற்கு, விருப்பத்தோடும் அமைக்கப்பட்ட ஓமகுண்டம், உண்கலம் ஆயிற்று, அவிர்ப்பாகம் சாப்பிட்டு மனம் மகிழ வந்த சிறந்தமுனிவர்கள் எல்லாரும் வீரபத்திர சுவாமியினால் இறந்தார்கள். 33

200 இங்குஇதுவாய் முடிந்ததன்பின் வீரன்இறை
பதம்பரவி இசைத்தான் எல்லாம்;
அங்கணனும் முனிவுஆறி அருள்சுரந்து,
மகத்துஇறந்தார்க்கு ஆவி ஈந்து,
மங்குஅரிய பதங்கள்எல்லாம் பழையபடி
உதவுதலும், வணங்கிப் போனர்;
சங்கரியை முன்பெற்றுன் என்பெற்றுன்?
தனக்குஆட்டுத் தலைபெற் றுனே.

(பொருள்) இவ்விடத்தில் இவ்வாருக யாகசாலையோடு யாவரும் நாசம் அடைந்த பிற்பாடு, வீரபத்திரர் கைலைக்குப் போய்க் கடவுளின் பாதத்தில் வணங்கி அங்கு நடந்த செய்திகள் எல்லாம் சொன்னர். அதுகேட்டருளி அழகிய நுதற்கண்ணினையுடைய பரமசிவனும் கோபம் ஆறி, கருணை பிறந்து, யாகத்தில் இறந்தவர்கள் அனைவரையும் பிழைப்பித்துக் கேடில்லாத அவர் அவர் இடங்களை அவர் அவர்க்குப் பழையபடியே அருளிச் செய்தலும், அவர்கள், சுவாமி! நாங்கள் அறிவு இல்லாமையினல் செய்த குற்றத்தைப் பொறுக்கவேண்டும், என்று வணங்கி விடைபெற்றுக் கொண்டார்கள். முற்காலத்தில் பார்வதியைப் பெற்ற தக்கன் யாது பயன் அடைந்தான் என்ருல், நிந்தை செய்ததற்கு அபராத அடையாளமாகத் தனக்கு ஆட்டுத் தலையைப் பெற்று எழுந்தான். 34

201 என்நாதன் தனைஇகழ்ந்தோன் புதல்வினை
உலகுஉரைக்கும் இடுக்கண் தீரத்
தன்ஆகம் தன்யோக சாதனத்தால்
விடுத்து,இமவான் தவத்தி னலும்
முன்னக மைநாகன் தனைப்பயந்த
மேனையது முயற்சி யாலும்
மின்னக அவதரித்தாள்; அமரர்எல்லாம்
கற்பகப்பூ வீசி னரே.

(பொருள்) எனக்கு நாதராக இருக்கின்ற பரமசிவனை நிந்தித்த தக்கனுடைய குமாரி என்று பழிப்பாக உலகம் சொல்லுமே நம்மை என்று பார்வதி அந்தத் துக்கம் தீரத் தன்னுடைய உடலை யோகாக்கினியினலே, விடுவித்து, மலைஅரசன் தவவலிமையினலும், முன்னே மைநாகன் என்ற பிள்ளையைப் பெற்ற மேனுதேவியினது தவ முயற்சியினலும், அவர்களுக்கு மகளாய்ப் பிறந்தாள்; எல்லாத் தேவர்களும் கற்பக மலர்களை மழையாகப் பொழிந்தார்கள், 35

202 சித்தாந்தத்து ஒன்று,சத்தி சிவத்துஇரண்டாய்,
ஞானம்,இச்சை, செயலின் மூன்று
கொத்துஆகிக் குடிலைதரு நாதவிந்து
இரண்டினுக்கும் கொழுகொம்பு ஆகி,
முத்துஆகிச் சிவன்இடத்தே உருத்திரன்மால்
அயன்முதலாம் முளைத்த மூல
வித்துஆகி நிறைவாளைப் பயந்தவர்க்கு
முடிந்ததவம் விளம்பல் ஆமோ?

(பொருள்) சித்தாந்தமாகச் சொல்லப்பட்ட சிவனிடத்தில் ஒன்றுபட்டு இரண்டற்ற சத்தியாய், பின்பு, அச்சிவத்தினின்றும் பின்னுசத்திஎன்று வேறுபட்டு, பின்பு ஞானசத்தி, இச்சாசத்தி, கிரியா சத்தி என மூன்றுவகையாகி, குடிலையினால் உண்டாகிய நாதவிந்துக்களுக்குக் கொழுகொம்பாகியும், சுவாமிக்கு முத்தாகியும், பரமசிவனிடத்தில் உருத்திரன், திருமால், நான்முகன் முதலானவர்களை உண்டாக்கியதற்கு மூலமாகிய வித்தாகியும் எங்கும் நிறைந்த பார்வதியைப் பெற்றவர்க்கு முடிந்த தவப்பெருமையைச் சொல்லக் கூடுமோ? 36

203 கலைவளரும் மதிபோன்று, சிவனைவெல்ல
மதன்வளர்க்கும் கரும்பே போன்று,
பலகலையும் தெளிந்துஉயர்ந்து பந்து,கழங்கு
ஊசல்பற்றிப் பயிலும் நாளில்,
மலைஅரசன் இடத்தின்மறை நாரதனார்
ஒருநாளில் மகிழ்வாய் எய்தி,
உலகம்எல்லாம் குடிஇருக்கும் திருவயிற்றாள்
இலக்கணம் பார்த்து உரைக்கல் உற்றார்.

(பொருள்) பார்வதி மலை அரசனுக்கும், மேனாதேவிக்கும் குழந்தையாகி, வளர் பிறைபோல் நாளுக்குநாள் வளர்ந்து, மன்மதன் சிவனை வெல்ல வில்வேண்டி, அதற்கு வளர்த்த கரும்பை ஒத்து, பலபல கலைகள் கற்றும் பந்து, கழங்கு ஊசல் முதலிய விளையாடல்களைச் செய்துகொண்டு, உமாதேவியார் இருக்கும் காலத்தில், நான்கு வேதங்களையும் ஒருங்கே உணர்ந்த நாரதமுனிவர் மலைஅரசனிடத்தில் ஒருநாள் வந்து, உலகங்களை எல்லாம் வயிற்றில் வைத்திருந்த அம்மையுடைய இலக்கணம் பார்த்துச் சொல்வார், 37

204 நெற்றியில்ஓர் புறத்தில்அரை நேத்திரம்உண்
டாம்;ஒருகை நெடிய சூலம்
பற்றும்;ஒரு தனமறையும்; ஒருபாகம்
மரகதம்போய்ப் பவளம் ஆகும்;
கற்றைநறும் குழல்பாதி சடைஆகும்;
ஒருகைவளை கழன்று போகும்;
உற்றுவரவு இவைகள்என, மலைஅரசன்
மனம்உருகி உவகை ஆனான்.

(பொருள்) மலைஅரசனே! உம்முடைய மகளுக்குச் சிலநாளில் நெற்றியில் ஒரு பக்கத்தில் அரைக்கண் தோன்றும்; ஒரு கையில் சூலம் உண்டாகும்; ஒரு பக்கத்துத்தனம் மறைந்து போகும்; பாதி உடல் பச்சைநிறம் போய்ப் பவளமாகும்; கூந்தலில் பாதி சடைகளாகும், ஒரு கையில் வளைகள் இல்லாமல் போகும்; இவைகள் நிகழும் என்று நாரதர் சொல்ல, மலை அரசன் உள்ளம் உருகி மகிழ்ச்சி அடைந்தான். 38

205 வையநீர்க் கங்கை பாயும்
பனிவரை மருங்கின், அந்நாள்
துய்யநீர்ச் சடையான் வந்துஅங்கு
ஓர்தவம் தொடங்கக் கேட்டு,
வையகம் அளித்தாள் தாதை,
வள்ளலைப் பணிந்து, "மானை,
ஐய!நின் தவத்துக்கு ஏவல்
கோடி"என்று அளித்துப் போனான்.

(பொருள்) இப்படி நாரதர் சொன்னதைக் கேட்டுப் பார்வதியே நமக்குப் பெண்ணாக வந்தபடியினால், பரமசிவன் மருமகன் ஆகி வரவேண்டும் என்று வேண்டிக்கொண்டிருக்கிற நாளில், பூமியில் கங்கையைச் செலுத்திக் கொண்டிருக்கிற அந்த இமயமலையில் ஒரு பக்கத்தில், பரமசிவன் யாதோ ஒரு நினைவினால் தவம் செய்து கொண்டிருக்கிறார் என்பதைக் கேள்விப்பட்டுத் தன் மகளாகிய பார்வதியை அழைத்துக்கொண்டுபோய், சிவபெருமானை வணங்கி, ''என்னுடைய பெண்ணை, ஐயனே! உம் தவத்துக்காக ஏவல் செய்ய ஒப்புக்கொள்ளும்'' என்று அவரிடத்தில், அம்மையை விட்டுப் போனான் மலை அரசன். 39

206 ஓங்குமால், அயன்,மற்று உள்ளோர்
ஒழிவுஇலாத் தவம்பு ரிந்தால்
தாங்குபேறு அளிப்பான், தான்ஓர்
கருத்தினல் தவம்செய் போதில்,
பூங்குழல், கனியும், போதும்,
முஞ்சியும், புனலும் கொண்டு,
பாங்கியர் பலரும் சூழப்
பணிவிடை பலவும் செய்தாள்.

(பொருள்) எல்லாத் தேவரினும் உயர்ந்த திருமால், நான்முகன் மற்றவர்கள் பெருமையாய் ஒழிவு இல்லாத தவம் செய்வதால் அவர்களுக்கு வேண்டிய வரத்தைக் கொடுக்கிற எம்பெருமான், யாதோ ஒரு கருத்தினல் தவம் செய்கிறபோது, பார்வதி பழம், மலர், தருப்பை, திருமஞ்சனம் முதலானவைகளைக் கொடுத்துத் தன்னுடைய பாங்கிமார்களுடனே பல பணிவிடையும் செய்துகொண்டிருந்தாள். 40

207 இங்குஇவை இருக்கத் தேவர்
யாவரும் இமையோர் கோவும்
பங்கயத் தவனை எய்திப்
பணிந்தனர்; பதுமத் தோனும்
அங்குஅவர்க்கு இருக்கை ஈந்தான்;
அவர்அவர் முகத்தில் சோர்வும்
குங்குமக் குழம்பு நீத்த
புயங்களில் குழைவும் கண்டான்.

(பொருள்) இவ்விடத்தில் இப்படி இருக்க, எல்லாத் தேவர்களும், அத் தேவர்களுக்கு அரசனுகிய தேவேந்திரனும் கூடி, நான்முகனைச் சேர்ந்து தொழுதார்கள். அந்த நான்முகனும் அவர்களுக்கு இருக்க இருக்கைதந்து, பிற்பாடு அவர்களின் முகம் வாடி இருப்பதையும், குங்குமம் பூசி இருந்த தோள்கள் அது கலைந்து இளைத்து இருப்பதையும் பார்த்தான். 41

208 வச்சிரம் ஒடிந்துஈ சானன்
கணிச்சிவாய் மடிந்தும், காலன்
முச்சிரம் வளைந்தும் மற்ருேர்
படைஎலாம் முறிந்தும், தேவர்
மெய்ச்சிர மகுடம் நீத்தும்
மெலிந்தமை விளம்பும் என்ருன்;
அச்சுரர் தமக்குக் கோமான்,
தாரகன் அழித்தான் என்ருன்.

(பொருள்) வச்சிராயுதம் ஒடிந்து போயும், ஈசானன் மழுவாயுதத்தின் வாய் மழுங்கியும் எமனுடைய முத்தலைவடிவாகிய சூலப்படை வளைந்தும் மற்றைத் தேவர்களுடைய படைக் கருவிகள் எல்லாம் முறிந்தும், தேவர்கள் சிரத்தில் இருக்கின்ற மகுடம் பிடுங்கப்பட்டும் வருத்தத்தை அடைந்தீர்கள். அவ்வருத்தத்தைச் சொல்லுங்கள் என்று கேட்க, தேவேந்திரன் தாரகாசுரன் இப்படி அவமானம் செய்தான் என்று சொன்னுன். 42

209 காலேஅம் புயத்தோன் சொல்வான்;
காலனல், கனலால், காற்ருல்,
மாலினல், என்னல், உன்னல்,
அவன்வலி தொலேக்க லாமோ?
ஆலமா மிடற்ருன் சேயாய்,
அசலமாது இடத்தே தோன்றும்
வேலனர் வெல்வார்; உங்கள்
சிறைஎலாம் விடுப்பார் என்ருன்.

(பொருள்) அப்படித் தேவேந்திரன் சொல்லிய காலத்தில், அது கேட்ட நான்முகன் சொல்லுவான்; எமன், அக்கினி, வாயு, திருமால் இவர்களாலும், என்னலும், உன்னலும் அந்தத் தாரகாசுரனது ஆற்றலே அடக்கிக்கொல்லக் கூடுமோ? விடம் தங்கிய சிறந்த கண்டத்தினையுடைய சிவனுடைய பிள்ளையாய், மலேஅரசன் மகளான பார்வதியினிடத்தில் பிறக்கப்போகின்ற சிவசுப்பிரமணியர் அவனேக்கொன்று உங்கள் சிறையை மீட்பார் என்று சொன்னுன். 43

210 யோகத்தில் இருக்கும் ஈசன்
உமைக்குநாண் தரிக்கு மாறு
வேகத்தில் இயற்றும் என்றே
அயன்விடை கொடுத்தான்; மீண்டு
மாகத்தில் அணுகித் தேவர்
மதனனை நினைத்தார்: மாரன்
சோகத்தை · ஒழிக்கும் தென்றல்
தேருடன் தோன்றிச் சொல்வான்.

(பொருள்) ''யோகத்தில் இருக்கும் சிவபிரான், பார்வதிக்குத் திருமங்கல நாண் பூட்டும்படி, விரைவில் முயற்சி செய்யுங்கள்'' என்று, நான்முகன் அனைவருக்கும் உத்தரவு கொடுக்க, தேவர்கள் எல்லாம் அமராபதிக்கு வந்து, மன்மதனை நினைத்தார்கள்; அதை உணர்ந்த மன்மதன், சோர்வை நீக்கும் தென்றலாகிய தேரில்வந்து சொல்லுவான். 44

211 எவன்தவம் அழிக்க? மாதர்
எவர்களை மயக்க? நீவிர்
கவன்றதுஎத் துயரால்? எம்மை
அழைத்ததுஎன் கருமம்? என்றான்;
அவன்தனை இறுகப் புல்லி,
அமரர்கோன் அருளின் நோக்கிச்
சிவன்தவம் அழிக்க வேண்டி
அழைத்தமை தெரியச் சொன்னான்.

(பொருள்) மன்மதன் தேவர்களைப் பார்த்து, எவனுடைய தவத்தை அழிக்க வேண்டும்? எந்தப் பெண்களை மயக்கவேண்டும்? நீங்கள் எந்தத் துயரின் பொருட்டு மனக்கவலை அடைந்தீர்கள்? என்னை அழைத்த காரணம் என்ன என்று கேட்க, தேவேந்திரன் அந்த மன்மதனை இரண்டு கைகளாலும் இறுகக் கட்டித்தழுவி, கருணையுடனே பார்த்து, சிவனுடைய தவத்தை அழிக்கும்படி உன்னை வேண்டி அழைத்தது என்று தெளிவாய்ச் சொன்னான். 45

212 விண்உளான் மகவான் சொல்ல,
வெகுண்டு,வேள் பயந்து கூறும்;
பெண்அலான், அலிஆண் அல்லன்;
பிறப்புஇலான், இறப்பும் இல்லான்;
கண்ணினல் அளவை நூலால்
கருத்தினல் அளவா, அந்தத்
தண்நிலா முடியான் செய்யும்
தவத்தையார் தவிர்க்க வல்லார்?

(பொருள்) தேவலோகத்திலிருக்கும் இந்திரன் சொல்ல, அதைக்கேட்ட மன்மதன் கோபித்துச் சுவாமிக்குப் பயப்பட்டுச் சொல்லுவான்; தேவேந்திரனே! சிவன், பெண்ணும், அல்லன்; ஆணும் அல்லன்; அலியும் அல்லன்; பிறப்பும், இறப்பும் இல்லாதவன்; காட்சி அளவையாலும், ஆகம அளவையாலும் கருத்தினாலும் இப்படிப்பட்டவன் என்று நிதானிக்கக் கூடாதவன்; குளிர்ச்சி பொருந்திய சந்திரனை அணியும் முடியை யுடைய அந்தப் பரமனது தவத்தை அழிக்கின்றதற்கு யார் வல்லவர்? 46

213 கன்னிகை கவுரி; ஈசன்
கதம்இலாப் பிரம சாரி;
சந்நிதி மகிமை யாலே
உயிர்எல்லாம் தழையா நிற்கும்;
உன்னிய உயிர்கள் போல
ஒடுங்கிடும் அவன்பால் செல்லும்;
மன்னிய பொருளும் தோன்றி
மனத்திலே ஒடுங்கு மாப்போல்.

(பொருள்) அம்பிகையோ கன்னிகை; சிவனோ குற்றம் இல்லாத பிரமசாரி; இவர்கள் இருவருடைய சந்நிதிப் பெருமையினாலே, சகல உயிர்களும் உண்டாகிப் பெருகும்;முன் எப்படி எம்பெருமானிடத்திலிருநது சீவர்கள் உண்டாயினரோ, அப்படியே அவரிடத்தில் ஒடுங்குவர்; மனத்திலே தோன்றிய அனேகம் பொருள்கள் அதிலே ஒடுங்குவது போல். 47

214 தாமத குணத்தர் என்பர்
சங்கரித்து இடலால்; ஈசன்
சேமம்ஆம் உயிர்கட்கு எல்லாம்
இளைப்புஒழித்து அருள்வது ஆகும்;
மாமலம் குணம்ஒன்று இல்லை;
வடிவமும் கனலாம்; என்கைப்
பூமலர் சொரிந்தக் காலும்
புகைஎழப் பொரிந்து போமே.

(பொருள்) உலகத்தில் அழிவுத்தொழில் செய்ததனால் சிவன் தமோகுணத்தை உடையவன் என்று சொல்வார்கள். அப்படியன்று. அஃது ஆன்மகோடிகளின் இளைப்பை ஒழிப்பதாகும்; மற்றத் தேவர்களுக்கு உண்டாய் இருக்கின்ற மும்மலகுண சம்பந்தங்களில் ஒன்றேனும் அவர்க்கு இல்லை; இவருடைய வடிவமும் நெருப்பாகும்; அவர்மேல் நான் மலர் அம்பைச் செலுத்திய போதிலும் அவைகள் புகையாய்க் கரிந்து போகும். 48

215 உருவுஎனத் தெரியா தானை,
உருவினோடு அருவா வானை,
அருவுஎனத் தெரியா தானை,
அமர்செயல் அரிதுஎன்று அஞ்சி
வெருவுஉறப் புகுந்தான்; அந்த
வேளையில், வேளை நோக்கித்
தருவனத்து இடையில் வாழும்
சதமகன் உரைப்பது ஆனான்.

(பொருள்) உரு என்று யாவராலும் தெரியக்கூடாதவரை, உருவமாகியும், அருவமாகியும் இருக்கின்ற சிவனை, அருவம் என்றும் தெரியாதவரை, போர்புரிந்து வெல்லப் படாது என்று மன்மதன் பயப்பட்டுத் தன்னுடைய இடத்திற்குப் போகப் புறப்பட்டான். அப்போது, மன்மதனைப் பார்த்து, கற்பகமரநிழலில் இருக்கும் தேவேந்திரன் சொல்லத் தொடங்கினான். 49

216 மாயவன் உரத்தின் மீதும்,
மலரவன் நாவின் மீதும்,
நாயகன் சிரத்தின் மீதும்,
பொறுத்ததுஉன் நலமே அன்ருே?
காயும்நல் கதிரின் மேனி
கடைந்ததும் எனக்கும் இந்த
ஆயிரம் நயனம் தந்த
செயலும்உன் ஆண்மை அன்ருே?

(பொருள்) திருமால் தம்முடைய மார்பினில் இலக்குமியை வைத்துக்கொண்டதும், நான்முகன் கலைமகளை நாவில் வைத்துக்கொண்டதும், மகாதேவர் தலையிலே கங்கை என்கிற பெண்ணை வைத்துக்கொண்டதும், உன்னுடைய சாமர்த்தியம் அல்லவோ? சூரியனைச் சாணையில் கடையச் செய்ததும், எனக்கு ஆயிரம் கண்கள் வந்ததும், உன்னுடைய ஆண்மையல்லவோ என்ருன் தேவேந்திரன். 50

217 செல்வதுஇன்று எமக்காய் அங்கே;
தருவது தேவர்க்கு ஆவி;
வெல்வது சிவனை; வென்று
கொடுப்பது காமர் வேட்கை;
சொல்வது மறுக்க வேண்டாம்;
எனச்சொல்லி, துணைக்கை பற்றி
நல்வரம் இதுதா என்ன,
மதனவேள் நயந்து கூறும்.

(பொருள்) பின்னும் தேவேந்திரன் சொல்வான், மன்மதனே! எனக்காக அங்கே சென்று சிவனை வென்று அவருக்குக் காமவிருப்பம் உண்டாகும்படி செய்தால், அவருக்குப் புத்திரன் பிறப்பான். அந்த மகன், அசுரர்களைக் கொன்று தேவர்களைப் பிழைக்கும்படி செய்வான். அதற்கு நீயே காரணமாய் இருக்கிருய்; நான் சொன்ன வார்த்தையை மறுக்கவேண்டாம் என்று, கையைப் பிடித்துக்கொண்டு, எனக்கு இந்த நல்ல வரத்தைக் கொடு என்று கேட்க, மன்மதன் மகிழ்ந்து சொல்வான். 51

218 அரன்சிலை மலைஎன் றாலும்,
அடுங்கணை அரிஎன் றாலும்,
வரம்பெற இசைந்த நாணும்
வாசுகி அரவுஎன் றாலும்,
கரும்புஎனும் சிலையால், ஐந்து
கணைஎனும் மலரால், நீலச்
சுரும்புஎனும் குணத்தால், வெல்வேன்
எனச்சொலித் தொழுது போனான்.

(பொருள்) தேவேந்திரனே! சிவனுக்கு வில் மலையாக இருந்தாலும், திருமாலே அம்பாக இருந்தாலும், வாசுகி என்னும் பாம்பே நன்றாக ஏற்றுகின்ற நாணியானாலும், என்னுடைய கரும்பாகிய வில்லினாலும், ஐந்து மலர்களாகிய அம்புகளாலும், நீலநிறம் பொருந்திய வண்டென்கிற நாணாலும் அந்தச் சிவனை வென்று போடுகிறேன் என்று வணக்கம் செய்து இறைவன்பால் போனான் மன்மதன். 52

219 சந்தன மணமும் தெய்வத்
தமிழ்ப்புது மணமும் கொண்டு
வந்தது மலயத் தென்றல்;
வசந்தமந் திரியும் சேர்ந்தது;
இந்துவும் நிலவுஆம் வெள்ளை
வலையினை எறிந்தது; எங்கும்
கொந்துஅலர் இளமா எல்லாம்
கோகிலம் முழங்கிற்று அன்றே.

(பொருள்) மன்மதன் சிவனை வெல்லப் புறப்படும்போது, பொதிய மலையில் இருந்து சந்தன வாசனையும், இனிமையான தமிழ் மணமும் கொண்டு தென்றல்காற்று வந்தது; வசந்தனாகிய அமைச்சனும் வந்துசேர்ந்தான்; சந்திரனும் தன் கதிர்களாகிய வெள்ளை வலையினை நான்கு பக்கமும் வீசினான்; மலர்க்கொத்துகளையுடைய இளமையுற்ற மாமரத்தில் எல்லாம் குயில்கள் முழங்கின. 53

220 மல்லிகை முகையாம் சங்கம்,
மதுகரம் முழக்கம் செய்ய,
முல்லை,சண் பகம்,அ சோகு,
முளரியே முதலா உள்ள
எல்லைஇல் மலரும் தேனும்
இறைத்தனர்; இரும்பைச் செம்பைக்
கல்லினை உருக்கும் சொல்லார்,
குறிஞ்சியாழ் கரத்தில் கொண்டார்.

(பொருள்) மல்லிகை அரும்பே சங்கமாகவும், அவ்வரும்பில் ஒலிக்கின்ற வண்டுகள் அச்சங்கத்தை வாயில் வைத்து ஊதுகின்ற வீரனாகவும் விளங்க, முல்லை, சண்பகம், அசோகு, தாமரை முதலாகிய கணக்கில்லாத மலர்களையும் தேனையும் நான்கு பக்கமும் இறைத்துக்கொண்டு, கடினமாகிய இரும்பு, செம்பு, கல் இவைகள் கூட உருகும்படி சொல்லுகிற வார்த்தையையுடைய பெண்கள், குறிஞ்சி யாழ் என்னும் இசைக்கருவியைக் கையிலே கொண்டார்கள். 54

221 பொங்கிய உடுக்க ளான
புகர்அணி முகத்துச் செக்கர்
தங்குசிந் தூரம் ஆகும்,
தனிஇருள் கரி,அம் கிள்ளைப்
பைங்,குர கதமும் செல்லப்
பணைமுலைப் பவளச் செவ்வாய்
மங்கையர் எனும்போர் வீரர்
வடிக்கண்வாள் விதிர்த்துச் சென்றார்.

(பொருள்) மிகுந்த நட்சத்திரங்கள் முகத்தில் இருக்கிற புள்ளிகளாகவும், செவ்வானம் திலகப் பொட்டாகவும், விளங்குகின்ற ஒப்பற்ற இருட்டாகிய யானையும், பசுமை பொருந்திய கிளியாகிய குதிரையும் நடக்கப், பருத்த முலையையும், பவளம் போன்ற வாயையும் உடைய பெண்களாகிய சுத்தவீரர்கள் தங்கள் தங்கள் கண்களாகிய கத்திகளை அசைத்துக்கொண்டு புறப்பட்டார்கள். 55

222 கோணிய கரும்பும் ஐந்து
குலமலர்க் கணையும் கொண்டு,
வாள்நுதல் இரதி செல்ல,
மகரகே தனத்தி னோடு
தாணுமா வனத்தைச் சேர்ந்தான்;
தவம்செய்வான் தனைக்கண்டு அஞ்சி
நாணினான்; அறுகால் வண்டு
நாணினான் நடுங்கி னானே.

(பொருள்) வளைவாகிய கரும்பு வில்லையும், மலர்களாகிய ஐந்து அம்புகளையும் எடுத்துக்கொண்டு, ஒளிபொருந்திய இரதிதேவி கூடவர, மீனக்கொடியுடனே பரமசிவன் யோகத்தில் இருக்கிற வனத்தைச் சேர்ந்து, அவ்விடத்தில் தவம் செய்கிற சுவாமியைப் பார்த்து, இவரை எவ்வாறு வெல்வோம் என்று பயந்து வெட்கத்தை அடைந்து நடுங்கினான், வண்டை நாணாக உடைய மன்மதன். 53

223 வெளித்தலத்து எதிர்ந்தால் என்ன
விளையுமோ தனக்கு,என்று எண்ணி
ஒளித்தனன்; முன்னே பின்னே
உமையவள் வரவு கண்டு
களித்தனன்; மயக்கம் ஆமா
கணைத்துகள் இறைத்து வில்லை
வளைத்தனன்; அளிநாண் பூட்டி,
வடிக்கணை தொடுத்தான் மாரன்.

(பொருள்) நேரே வெளியாகவந்து போர்செய்தால், என்ன கேடு நமக்கு உண்டாகுமோ? என்று நினைத்து, இறைவனின் பின் தெரியாமல் ஒளித்து இருந்து, சமயம் பார்த்துக் கொண்டிருந்த போது, பார்வதி அக்கடவுள் முன்னே பணிவிடை செய்ய வருதலைக் கண்டு, பெண் துணை நமக்கு இருக்கின்ற படியினால் வெல்லக்கூடும் என்று மகிழ்ந்து, மோகத்தை உண்டாக்கும் மலர் அம்புகளை இறைத்து வில்லை வளைத்து நாண் ஏற்றி அம்புகளைத் தொடுத்தான் மாரன். 57

224 ஒருகரும்பு உருவச் சாபம்
ஒடியினும், உலகம் ஈன்றாள்
இருகரும் புருவச் சாபம்
உளஎனும் எழுச்சி யாலே,
பொருகணை தொடுத்தான் சென்று;
புரம்சுடும் கணையி னானும்
ஒருகணை விடுத்தான்; மாரன்
உடல்எலாம் கொளுத்திற்று அன்றே.

(பொருள்) மன்மதன் தான் அதிகச் சண்டைசெய்தால், ஒரு கரும்பு உருவம் ஆகிய வில்லானது ஒடிந்தாலும், உலகத்தைப் பெற்ற பார்வதியின் இரண்டு கரும் புருவமாகிய வில் உண்டாய் இருக்கின்றன; நமக்கு யாதொரு குறைவும் இல்லை என்கிற செருக்கினால் சென்று அனேக அம்புகளைவிட்ட போது; முப்புரத்தையும் எரித்த நகையாகிய அம்பையுடைய சிவன், அம் மன்மதன் மேல் தன் நெற்றிக் கண்ணைச் செலுத்தினான்! அக்கண்ணாகிய கணை மன்மதனுடைய உடம்பை எல்லாம் சுட்டு எரித்துவிட்டது. 58

225 அருக்கவெண் பஞ்சு போல
அழல்கண்ணால் அனங்கன் ஆன
திருக்குஉளம் கனலக் கண்டு,
தேவரும் திசையி னோரும்
வெருக்கொள ஒளித்தார்; பூத
கணத்துடன் விடையி னானும்
பொருக்கென மறைந்து, வெள்ளிப்
பொருப்புஇடைப் புகுந்தான் அன்றே.

(பொருள்) நெருப்புப்பட்ட எருக்கம் பஞ்சு போல், மன்மதன் ஆகிய மாறுபாடு பொருந்திய மனத்தையுடையவன் எரிந்துபோகக் கண்டு, தேவர்களும், எட்டுத்திக்குப் பாலகரும் பயப்பட்டு ஒளித்துக்கொண்டார்கள்; அதன்பின் சிவபெருமான் பூதகணங்களுடன் விரைவாக அந்த இடம் விட்டுக் கைலாயத்துக்குப் போனார் 59

226 சங்கரன் மணத்தை வேண்டி
உமையும்நல் தவமே செய்தாள்;
அங்குஅது புணரு மாறு,ஏழ்
முனிவருக்கு அமலன் சொன்னான்;
மங்கலம் வேள்வி செய்த
முனிவரும் மகிழ்வாய் எய்தித்
துங்கம்வெற்பு இறையார்க்கு இந்தச்
சோபனம் சொல்லி னார்கள்.

(பொருள்) பரமசிவன், தன்னை மணந்து கொள்ளப் பார்வதி சிறந்த தவம் செய்கிறாள்; அவள் வந்து சேர ஏழு இருடிகளை அழைத்து மலைஅரசனிடம் சென்று, சுவாமிக்கு உன்பெண்ணைக் கலியாணம் செய்து கொடு என்று கேளுங்கள் என்று அனுப்பினார்; அந்தப்படியே அவ் எழுவரும் மலைஅரசனிடம் சென்று இந்தத் திருமணச் செய்தியைச் சொன்னார்கள். 60

227 மலைஇறை மகிழ்ந்தான்; அந்த
மலைஇறை புதல்வன்; "வள்ளல்
குலம்எது? பயந்தோர் நாமம்,
குடிப்பெயர் ஏது? வாழும்
தலம்எது? புகலும்" என்றான்;
தவத்தவர் நகைத்துச் சொல்வார்;
"அலகுஇலான் பிறப்பு நல்ல
கிளை"என அறிவித் தார்கள்.

(பொருள்) இருடிகள் போய்ச் சொன்ன உடனே மலைஅரசன் மகிழ்ந்தான்; அவன் பிள்ளையாகிய மைநாகன், இருடிகளைப் பார்த்து, "சிவன் என்ன சாதி, அவருக்குத் தாய் தகப்பன் பெயர்என்ன? குடிப்பெயர் என்ன? அவர் இருக்கும் ஊர் எது சொல்லுங்கள்" என்று கேட்டான்; அதை முனிவர்கள் கேட்டு, நகைத்து, "சிவனே அளவிடக் கூடாதவர், அவர்பிறந்த இடம் மூங்கில், அவர் நல்ல சாதி" என்று தெரிவித்தார்கள். 61

228 பெருத்ததுஓர் உவகை ஆகிப்
பிறைமுடி யன்பேர், நாளில்
பொருத்தமும், நாளும் தேர்ந்து,
புனிதரைப் புகழ்ந்து போற்றி,
விருத்தியார் வரவு நாளும்
குறித்துஇறை விடுத்தான்; அன்னோர்
பரித்தகங் கையினுற்கு இந்தப்
படிஎலாம் பணிந்து சொன்னார்.

(பொருள்) அப்படி ஏழு முனிவர்கள் சொன்னபிறகு, மலைஅரசன் முதலானவர்கள் எல்லாம், மிக்க மகிழ்ச்சியை அடைந்து, சந்திரனை அணிந்த முடியை உடைய சிவபெருமானது பெயர், நட்சத்திரத்திற்கும், அம்மையாரது பெயர் நட்சத்திரத்திற்கும் பத்துவிதப் பொருத்தமும் கலியாணம் செய்கிற காலமும் அறிந்து நிச்சயம் செய்து, முனிவர்களுடைய திருவடிகளைப் புகழ்ந்து வணங்கி, விருத்தி பொருந்திய திருக்கலியாண முகூர்த்த ஓலையும் எழுதிக் கொடுத்து அனுப்புவித்தான்; அந்த ஏழு முனிவர்களும் கங்கையை அணிந்த சிவபெருமானுக்கு நடந்த செய்திகளை எல்லாம் வணங்கிச் சொன்னார்கள். 62

229 இமையவெற்பு இறைவன் ஓலை
முகத்தில்,ஏழ் கிரிக்கும் மேருச்
சிமையமால் வரைக்கும் செம்பொன்
திகிரிமால் வரைக்கும் ஏழு
தமரவான் கடற்கும் சித்த
சாரணர் முனிவோ ருக்கும்
அமரர்ஆ னவர்க்கும் வஞ்சி
மணத்தினை அறிவித் தார்கள்.

(பொருள்) மலைஅரசன் பார்வதிஅம்மையின் திருமண ஓலையை அனேக தூதர்கள் கையில் கொடுத்தனுப்ப, அவர்கள் ஏழு குலமலைகளுக்கும், கொடுமுடி பொருந்திய மேருமலைக்கும், சக்கிரவாளகிரிக்கும், ஒலிபொருந்திய ஏழுகடல்களுக்கும், சித்தர், சாரணர், முனிவர், தேவர் முதலானவர்களுக்கும் வஞ்சிக் கொடி போன்ற இடையினையுடைய அம்மையின் திருமணத்தைத் தெரிவித்தார்கள். 63

230 ஓலைகண்ட அளவே, சேர்ந்த,
உததிகள் ஏழும், பூமி
மாலையாய்ச் செல்லு கின்ற
மகிமைசேர் நதிகள் ஏழும்,
நீலமே முதலாய் உள்ள
கிரிஎல்லாம் நெருங்கிச் சென்ற;
கோலமா முனிவோர் சித்தர்
இமையவர் குழாம்கண் டார்கள்.

(பொருள்) ஓலையைக் கண்ட உடனே ஏழு கடல்களுக்கும், பூமிதேவிக்கும் மாலை போன்று, ஒளிவீசுகின்ற பெருமை பொருந்திய ஏழு நதிகளுக்கும், நீலகிரி முதலாகிய ஏழுகுல மலைகளுக்கும், அதிஷ்டானமாகிய தேவதைகள் நெருங்கிச் சேர்ந்தார்கள்; தவக் கோலத்தில் சிறந்த முனிவர்களும், சித்தர்களும், தேவர்களும் கூட்டம் கூட்டமாகச் சேர்ந்து வந்தார்கள். 64

231 அட்டதிக்கு அனைத்தும் தேரால்,
கொடிகளால் அடைத்தார்; விண்ணை
மட்டறு விமானம் தன்னால்
மாலையால் மறைத்தார்; வீதி
நெட்டிலை அரம்பை பூகம்
நிரைகளால் நிறைத்தார்; வெற்பில்
தட்டிய புழுகி னாலே
மெழுகினர் தரைகள் எல்லாம்.

(பொருள்) எட்டுத் திக்கையும் தேர்களாலும், கொடிகளாலும் இடம் இல்லாமல் நிறைத்துவிட்டார்கள். வானத்தை இடம் இல்லாமல் அளவு அற்ற விமானங்களினாலும், மாலைகளினாலும் மறைத்துவிட்டார்கள். வீதிகளில் நீண்ட இலைகளையுடைய வாழைகளையும், கமுகுகளையும் நிரை நிரையாக நட்டு அலங்காரம் செய்தார்கள்; மலையில் இருக்கின்ற புழுகைத் தட்டிக் கரைத்துத் தரைகள் எல்லாம் மெழுகினார்கள். 65

232 தோரணம் சமைத்தார்; முத்தின்
தொடைஎலாம் தொடுத்தார்; விண்ணில்
பூரண கும்பம் வைத்தார்;
புதுமணி விளக்கும் இட்டார்;
ஆரணன் உலகும் மற்றை
அளகையும் அமரர் நாடும்
நாரணன் உலகும் வந்து
காணவே நாணும் ஆறே.

(பொருள்) நகரம் எங்கும் தோரணம் கட்டினர்கள்; அதில் முத்து மாலைகளைத் தொங்கவிட்டார்கள்; ஆகாய கங்கையைக் கொண்டுவந்து பூரணகும்பம் வைத்தார்கள் புதுமையான இரத்தின தீபம் ஏற்றினர்கள்; நான்முகன் உலகமும், அளகாபுரியும் தேவர் உலகமும், வைகுந்தமும் இதைப்பார்த்து நாணும்படி சிங்காரித்தார்கள், 66

233 மணிவிளக்கு அனைய மின்னை,
மலைஅர மகளிர் கூடிக்
கணிமலர்க் கங்கை ஆட்டிக்
கலையினல் மருங்கை வாட்டிப்
பணிமணி ஆரம் பூட்டிப்
பரிமளத் தாமம் சூட்டி,
அணிநுதல் திலகம் தீட்டி,
அருமறைச் சடங்கு செய்தார்.

(பொருள்) இரத்தின தீபம் போன்ற பார்வதியை மலையில் இருக்கிற பெண்கள் கூடிக் கற்பகமலரின் மணம் கலந்த கங்கை நீரில் முழுக்காட்டி, இடை துவளும்படி சித்திரப் பட்டாடை கட்டி, அணிகலன்களும், முத்துமாலையும் பூட்டி, மணம் பொருந்திய மாலைகளை அணிவித்து, அழகிய நெற்றியிலே பொட்டுவைத்து, வேத விதிப்படி சடங்கு செய்தார்கள், 67

234 பூமணக் கோலம் செய்த
பொடிஅணி புனிதர் தன்னைத்
தாம்மணக் கோலம் செய்யும்
சதுர்முகன் முதலோர் ஈண்டித்
தூமணித் துகில்கள் சாத்திச்
சுரதரு மாலை சாத்தி,
பாமணிப் பணியை நீக்கி,
மாமணிப் பணிகள் பூட்டி,

(பொருள்) மணம் மிக்க மலர் அம்புகளை எய்த மாரனை நுதல் கண்ணால் எரித்து, அந்த மலர்களை அணிந்தருளிய பரமசிவனை மணக்கோலம் செய்யும்படியாக நான்முகன் முதலானவர்கள் கூடித் தூய்மை பொருந்திய இரத்தினமயமான ஆடையை அணிவித்து, கற்பகப் பூமாலை தரித்து, முன்பு அணிந்து இருந்த பாம்பாபரணத்தைக் கழற்றிப்போட்டு, மாணிக்க மணிகளாலாகிய அணிகலன்களை அணிவித்து, 68

235 சடைஇளம் பிறையைத் தங்கள்
இறைஎனத் தகைந்து சூழ்ந்த
உடுக்குலம் என்ன, முத்தால்
ஒளிவிடும் மகுடம் சூட்டி,
அடைவுஉடன் விழியாம் திங்கள்
ஆதவர் காதின்மீது
குடிஇருந் தனபோல், செய்ய
குண்டலம் இரண்டும் சாத்தி,

(பொருள்) பரமசிவனது சடையில் தரித்த இளம்பிறையைப் பார்த்துத் தம்முடைய தலைவன் என்று சுற்றிக்கொண்ட நட்சத்திரக் கூட்டங்கள் போல, முத்துக்களால் ஒளிவீசுகின்ற முடியைச் சூட்டி, பொருந்திய கண்களாக இருக்கின்ற சந்திர சூரியர் இருவரும் காதின் இடத்தில் குடிஇருந்தால் போல, அழகாகிய இரண்டு குண்டலங்களைச் சாத்தி, 69

236 வரம்பெற்ற திருமால் சாத்தும்
மலர்விழிக் கரிய சோதி
பரம்பியது அனைய, நீலப்
பருமணிச் சிலம்பு சாத்தி
விரும்பிய கோலம் செய்தார்;
இறையும்மால் விடைமேல் கொண்டான்;
அரம்பையர் நெருங்கித் தென்நீரா
ஆஞ்சனம் காட்டி னார்கள்.

(பொருள்) திருமால் வரம் பெற்றுக்கொள்வதற்காகத் தன் கண்களில் ஒன்றைத் திருஅடியில் சாத்தினரே? அந்தக் கண்ணினது கருப்புச்சோதி காலைச்சுற்றிப் பரவினது போல, நீலமணிகளால் இழைத்த சிலம்பை அணிவித்து, எல்லோராலும் விரும்பத் தகுந்த அலங்காரம் செய்தார்கள். இவ்வாறு அலங்கரிக்கப்பட்ட சிவனும் திருமாலே உருவாகிய இடபத்தில் ஏறினர்; அப்போது அரம்பையர் ஒன்றுசேர்ந்து மஞ்சள் ஆரத்தி எடுத்தார்கள், 70

237 குலவுமால் அணுகிப் போற்றக்
குமுதவாய் மலர்ந்தான்; கஞ்ச
மலரினன் வணங்கச் சற்றே
மணிமுடி அசைத்தான்; விண்ணோர்
தலைவனார் எதிர்நின்று ஏத்த,
தனிநகை புரிந்தான்; தேவர்
பலரும்வந்து இறைஞ்சி ஏத்த
அவர்க்குஎல்லாம் பார்வை ஈந்தான்.

(பொருள்) மூவரில் ஒருவரான திருமால் பரமசிவன் முன்வந்து வணங்கச் செவ்வாம்பல் பூப்போன்ற திருவாயால் வாரும் என்றார்; தாமரைப்பூவில் இருக்கும் நான்முகன் வந்து வணங்க இரத்தினக் கிரீடம் இழைத்த முடியைச் சற்று அசைத்தார்; தேவர்கட்கு அரசனாகிய இந்திரன் வந்து வணங்கி நிற்கப் புன்முறுவல்கொண்டார்; ஏனைய தேவர்கள் எல்லோரும் வந்து வணங்க அருட்கண்ணாலே பார்த்து அருளினார். 71

238 முடித்த கங்கையால் பிறைக்கொழுந்து எழுந்துமேல்முகைத்து
வெடித்தது ஆம்எனத் தவளவான் கவிகைமேல் விளங்க,
அடித்த கங்கையின் அருவியும் அம்புலிக் கொழுந்தும்
தொடுத்து வீழுமாறு எனஇரு கவரிகள் துளங்க,

(பொருள்) திருமுடியில் தரித்துள்ள கங்கையினால் பிறையானது கொழுந்து விட்டு அதற்கு மேல், அரும்பு ஆகி மலர்ந்தது என்று சொல்லும்படியாக உயர்ந்த வெள்ளை வட்டக் குடை பிடிக்கவும், அலை மோதும் கங்கையின் அருவியும் சந்திரனும் சேர்ந்து விழுந்தன போலும் இரண்டு சாமரங்கள் இருபுறத்திலும் வீசவும், 72

239 திருவின் நாயகன் அடைப்பைகொண்டு ஒருபுறம் சேர,
தருவின் நாயகன் களாஞ்சிகொண்டு ஒருபுறம் சார,
விரவி நான்முகன் ஆலவட் டம்கொடு வீச,
பரவி நாரதர் தும்புரு இருபுறம் பாட,

(பொருள்) இலக்குமியின் கணவரான திருமால் பாக்கு வெற்றிலை முதலானவை வைத்திருக்கின்ற அடைப்பை எடுத்துக் கொண்டு ஒருபக்கம்வரவும், கற்பகமரத்திற்குத் தலைவனான இந்திரன் தம்பலப் படிகம் எடுத்துக் கொண்டு வரவும், நான்முகன் அருகில் நின்று ஆலவட்டம் வீசவும்' தும்புரு, நாரதர் இருவரும் வணக்கம் செய்து இருபுறத்திலும் நின்று இசை பாடவும், 73

240 கூற்றன் ஆனவன் கனகபா துகைகொடு குறுக,
காற்று வேந்தனும் திசைஎலாம் நறும்புகை காட்ட,
ஏற்று வாகனக் கடவுளும் சிறியவாள் எடுப்ப,
தோற்றும் ஆதவர் கலைமதி விளக்கொடு சூழ,

(பொருள்) இயமன் தங்கத்தினால் செய்திருக்கிற பாதக்குறடுகளைக் கையால் எடுத்துக் கொண்டுவரவும், காற்றுக்கடவுள் எட்டுத் திக்குகளிலும் அகில் சாம்பிராணிப் புகைகளைக் காண்பிக்கவும், இடபத்தில் ஏறுகின்ற ஈசானமூர்த்தி உடைவாள் தாங்கி வரவும், ஒளிவீசுகின்ற சூரியர்களும், குளிர்ந்தகதிர் பரப்பும் சந்திரர்களும் விளக்கு எடுத்துக் கொண்டு வரவும், 74

241 சுரம டந்தையர் துகிலின்மஞ் சிகைபல சுமப்ப,
அரவ மங்கையர் நவமணிப் பணிசுமந்து அணுக,
பரவு கின்னரர் முதலினோர் வீணை ஆர்ப் பரிக்க,
பொருஇல் நான்மறை நடந்துஇறை தலைமையைப் புகழ,

(பொருள்) தேவகன்னியர் பலர் ஆடைகள் வைத்துள்ள பெட்டிகளைத் தூக்கிவரவும், நாகலோகப் பெண்கள் மணிகள் இழைத்த அணிகலன்களைச் சுமந்து கொண்டு வரவும், கூட்டமாகிய கின்னரர் கிம்புருடர் வீணை வாசிக்கவும், நிகரில்லாத நான்கு மறைகளும் சிவபெருமானே எல்லோருக்கும் பெரியவர் என்று புகழ்ந்து துதிபாடவும், 75

242 கிரகம் ஏழும்எண் வசுக்களும் முனிவரும் கிளர,
உரகர் விஞ்சையர் இமையவர் மகிழ்ந்துகண்டு உருக,
இருக ரங்களால் உருத்திரர் மலர்மழை இறைப்ப,
திருவும் வெண்கலை மடந்தையும் இமசலம் தெளிப்ப,

(பொருள்) சந்திரசூரியர் தவிர, மற்றை ஏழு கிரகங்களும், அஷ்டவசுக்களும், முனிவர்களும் களிகூர்ந்து வர, நாகலோகத்தார், வித்தியாதரர்கள், தேவர்கள் பார்த்து மகிழ்ந்து உருக, ஏகாதச ருத்திரர்களும், இருகைகளால் மலர்மழை பொழியவும், இலக்குமியும் கலைமகளும் பனிநீர் தெளிக்கவும், 76

243 திக்குப் பாலகர் தெரிவையர் திசைதொறும் திகழ,
மிக்க மாதர்கள் எழுவரும் சோபனம் விளம்ப,
இக்கு நேர்மொழி நீர்அர மகளிர்வாழ்த்து எடுப்பத்,
தக்க விஞ்சையர் மகளிர்பல் லாண்டுஇசை தழங்க,

(பொருள்) எட்டுத் திக்குப் பாலகருடைய மனைவிகள் அவர் அவர் திசைகளில் நின்று வணங்கவும், கற்பில் சிறந்த சத்தமாதர்கள் மங்களம் பாடவும், கருப்பம் சாறு போல் இனிமை பொருந்திய பேச்சினையுடைய நீர் அரமகளிர் வாழ்த்துச் சொல்லவும், தகுதியையுடைய வித்தியாதர மாதர்கள் பல்லாண்டு கூறும் ஓசையானது முழங்கவும், 77

244 கண்டை பேரிகை, குடமு,முழா முழவு,கா களம்,த
வண்டை, மல்லரி, சல்லரி, வலம்புரி ஒலிப்ப,
அண்ட கோளகை மடந்தையர் சிலம்புஒலி அதிர்ப்ப,
எண்தி சாமுகம் தனிலும்மென் பிரம்பொலி இசைப்ப,

(பொருள்) பெரிய மணியின் ஒலியும், பேரிகையும், கிடவாத்தியமும், மத்தள வாத்தியமும், காகளமும், தவண்டையும், மல்லரியும், சல்லரியும், சங்கங்களும், ஆகிய இவைகள் ஒலிக்கவும், கோளாகாரமாய் உள்ள விண்ணுட்டில் வசிக்கும் தேவப் பெண்கள் காலின் சிலம்பு கலீர் என்று ஒலிக்கவும், எட்டுத்திசகிலும் வருகிற கூட்டங்களை விலக்க அடிக்கிற பிரம்பினது ஒலியானது விளங்கவும், 78

245 எண்ணும் வெள்ளிமால் வரைஅடி இறங்கியது இடபம்;
அண்ணல் சேனையின் கொழுந்துஇம கிரித்தலம் அடைந்த;
விண்ணும் மண்ணும்எள் இடம்அற நெருங்கிய விமானம்;
பண்ணும் மால்விடை நெறிகடந்து அடைந்தது பதியே.

(பொருள்) எல்லோராலும் போற்றப்படும் கைலாயகிரியின் அடிவாரத்தில் இடப வாகனம் இறங்கியது; பரமசிவனுடைய சேனையின் முன்னணி இமயமலையை அடைந்தது; வானம், பூமி ஆகிய எவ்விடங்களிலும் எள் இருக்க இடம் இல்லாமல் விமானங்கள் நெருங்கின; அலங்கரித்திருக்கின்ற திருமால் ஆகிய இடபம் பரமசிவனைத் தூக்கிக் கொண்டு வழி முழுவதும் கடந்து' மலை அரசன் நகரத்தில் வந்து சேர்ந்தது. 79

246 இமகி ரிப்பதி அடைந்ததும், இமகிரி மடவார்
நிமலன் ஆர்திரு அழகுஎலாம் விழிகளால் நிறைத்தார்;
உமைத வத்தினுக்கு அழிவுஇலை எனப்புகழ்ந்து உரைத்தார்;
அமர்செய் காமனை அழித்தகண் எதுஎன அறைந்தார்.

(பொருள்) பரமசிவன் இமயமலைக்கு வந்த உடன், அம்மலையில் உள்ள பெண்கள் தூய்மையுடையவரான பரமசிவனது அழகை, கண் நிறையப் பார்த்துப் பார்வதியின் தவத்துக்குப் பயன் கைகூடிற்று என்றார்கள்; அவர்களில் சிலர், போர் புரியவந்த மன்மதனை எரித்தகண் எதுவோ? என்றார்கள். 80

247 ஆக மாரன்இங்கு இருக்கவும், உலகுஎலாம் அயர்ந்த,
யோகம் மீதுஇவர் இருக்கையால்; மதன்உடல் ஒழித்துப்
போகம் மீதுஇவர் விருப்புஉற, உயிர்க்குஅவை புணர்ந்த;
மோகம் ஆக்கிடும் முதல்இவர் எனச்சிலர் மொழிந்தார்.

(பொருள்) மன்மதன் உடலை உடையவனாய் இருந்தபோதிலும், இவர் தவத்தில் இருந்ததனால், உலகத்தில் உள்ள அசையும்பொருள், அசையாப்பொருள் ஆகிய யாவும் மாறுதல் இல்லாமல் அயர்ந்துகிடந்தன; மன்மதன் உடல் போயும் இவருக்குப் போகத்தில் விருப்பம் உண்டானபடியினால், எல்லோர்க்கும் போகத்தில் விருப்பம் உண்டாயிற்று; ஆகையினால், மோகத்தை உண்டாக்குகிறவர் இந்தச் சிவனேஅன்றி வேறொருவரும் இல்லை என்று பெண்களில் சிலர் சொன்னார்கள். 81

248 மாய வில்கைவேள் அழகு,இவர் எழில்மிகு வடிவில்,
ஆயி ரத்தில்ஒன்று இலை,எனத் தனைமதித்து, அவனைத்
தீஇ டத்துஉடல் கொளுத்திய தவத்தின்நல் திறனே;
ஆயும் உத்தமர், அழிப்பரோ எனச்சிலர் அறைந்தார்.

(பொருள்) எல்லோரையும் மயக்குகின்ற கரும்பு வில்லைக் கையில் ஏந்திய மன்மதனுடைய அழகு, இந்தப் பரமசிவனது வடிவமாகிய அழகில் ஆயிரத்தில் ஒரு பங்கும் காணாது; அதனால், அவனை இகழ்ந்து, தன்னைமதித்து தீயினால் அவனை கொளுத்திப் போட்டது, தவ வலிமையே. ஆராய்ந்து எடுக்கத் தகுந்த உத்தமர்கள், அப்படிச் செய்வார்களோ என்று சில மாதர்கள் சொன்னார்கள், 82

249 மாது லன்பெரும் கிளைஞரும், மருமகனார் திரளும்,
காதல் அன்பினால் எதிர்எதிர் தழுவினர் கலந்தார்,
ஆதி அந்தமும் அதன்நிலை அளவுஇடல் அரியோன்,
வேதி யன்கரம் பிடித்துஇனிது இழிந்தனன் விடையின்.

(பொருள்) மாமனாகிய மலைஅரசனின் சுற்றத்தவரும், மருகன் ஆகிய பரமசிவனது சேனைத்திரளும், மிகுந்த விருப்பம் உடையவர்களாய் எதிராக வந்து ஒருவருக்கு ஒருவராகத் தழுவிக்கொண்டார்கள்: முதலும் ஈறும் இல்லாத அளவிடப் படாத சிவபெருமான், நான்முகன் கையைப் பிடித்துக்கொண்டு இடபவாகனத்தில் இருந்து இறங்கினார். 83

250 இலகு மங்கையர் அனேகர்நீர் அஞ்சனம் எடுப்ப,
உலக பாலகர் இருமருங் கினும்நடந்து ஒதுங்க,
திலக மாதவன் இருகைமேல் ஒருகரம் சேர்த்திட்டு,
அலகுஇ லாமணி இழைத்ததுஓர் மண்டபத்து அணைந்தார்.

(பொருள்) அழகுள்ள அநேகம் மங்கைப் பருவப்பெண்கள் ஆரத்தி எடுக்கவும், திக்குப் பாலகர் எண்மரும் பரமசிவனது இருபுறத்திலும் நடந்து ஒதுங்கிவரவும், தேவர் அனைவர்க்கும் திலதமாகிய திருமாலினுடைய இரண்டு கை மேலும் தம்முடைய 'ஒரு கையைச் சேர்த்து, கணக்கு இல்லாத இரத்தினங்களால் இழைக்கப்பட்டிருக்கின்ற மண்டபத்தில் வந்து சேர்ந்தார் சிவபெருமான். 84

251 அரிய மண்டபத்து அமைந்தபீ டிகையின்மீது அடைந்தார்;
வரைஇ டைப்பிறந் தமைவளர் முலைசொல வருவார்,
குரும லர்க்கையில் ஏந்திவந்து, அருள்குடி இருக்கும்
திருமு கத்தியை இறையவன் வலப்புறம் சேர்த்தார்.

(பொருள்) சிவபெருமான் அருமையான அம்மண்டபத்தில் இட்டு இருந்த சிறந்த ஆசனத்தில் அமர்ந்தார்; மார்பகம் மலைபோல் இருப்பதனால் அத்தனங்களே இவர்கள் மலையில் பிறந்தவர்கள் என்று காண்பிக்கும்படியாக வருகிற மாதர்கள், தங்களுடைய நிறம் பொருந்திய மலர்போலும் கைகளில் ஏந்திக்கொண்டு வந்து அருளே குடிஇருக்கின்ற அழகிய முகத்தையுடைய பார்வதியைச் சிவனுடைய வலப்புறத்தில் இருத்தினார்கள். 85

252 முன்னை ஆரணன் வதுவையின் சடங்குஎலாம் முடித்து,
வன்னி மேல்பொரி இறைத்துநெய் சொரிய,மந் திரத்தால்,
என்னை ஆளுடை இறைவனும் ஏழ்உலகு ஈன்ற
கன்னி செங்கரம் பிடித்துமூ வலம்செய்தான் கனலை.

(பொருள்) பரமசிவனும் பார்வதியும் திருமண மண்டபத்தில் அமர்ந்து இருக்க, அவ்வேளையில், பழமையான மறைகளை வெளி இட்ட நான் முகன் திருமணச் சடங்கை விதிப்படி முடிக்க, என்னை அடிமையாகக் கொண்ட பரமசிவன் தீயில் பொரி சொரிந்து மந்திர விதிப்படி நெய்யாகுதி செய்து, முன்னமே ஏழு உலகத்தையும் பெற்ற கன்னியாகிய பார்வதியின் செவ்விய திருக்கரங்களைப் பிடித்து, தீயை மூன்றுதரம் வலமாகச் சுற்றி வந்தார். 86

253 ஒற்றை வால்வளை ஒலித்தது; சுருதியும் ஒலித்த;
சுற்றும் வானவர் இருடியர் மலர்மழை சொரிந்தார்;
பற்றி ஆசனத்து இருந்தனன்; அனைவரும் பணிந்தார்;
பெற்ற தாதையோடு அன்னையைப் பணிந்தனள் பெதும்பை.

(பொருள்) வெண்மை பொருந்திய ஒப்பற்ற சங்கம் முழங்கிய; நான்கு மறைகளும் ஒலித்தன; எங்கும் சுற்றிக் கொண்ட தேவர்களும், இருடிகளும் மலர் மாரியைப் பொழிந்தனர்; பரமசிவன் ஓர் ஆதனத்தில் வீற்றிருந்தார்; அப்போது எல்லாத் தேவர்களும் வணக்கம் செய்தார்கள்; பெதும்பைப் பருவம் உடைய பார்வதியும் தமது தாயையும், தகப்பனையும் வணங்கினாள். 87

254 "எரித்த காமனைத் தருதி"என்று இமையவர், அயன்,மால்
ஒருத்தர் அன்றியே, இறையவன் மகிழ்ச்சிகண்டு உரைத்தார்;
மரித்த காமனை அழைத்துஅருள் புரிந்தனன் வள்ளல்;
பெருத்த அன்பினால் அனைவரும் விடைகொடு பெயர்ந்தார்.

(பொருள்) தேவர்களும், நான்முகனும், திருமாலும் மற்ற யாவரும், பரமசிவன் தங்கள் எல்லோரும் அன்பாய் இருப்பதைப் பார்த்து, அவரை நோக்கி தேவரீர் முன்னே, எரித்த மன்மதனை எழுப்பித் தரவேண்டும் என்று வேண்டினார்கள்; வள்ளல், அப்படியே இறந்து போன மன்மதனை வரவழைத்துக் கொடுத்து அருள்புரிந்தார்; பின்பு அனைவரும் விடைபெற்றுக் கொண்டு போனார்கள். 88

255 அதன்பின் அண்ணலும் கவுரியும் உருகிஒன் றாகி,
மதத்த ஆனையைக் குமரனைப் பயந்தனர் மகிழ்வாய்;
விதிர்த்த வேலினைக் குமரனுக்கு அளித்து,இறை விடுத்தான்;
கொதித்த தாரகன் உயிர்குடித்து உவந்தனன் குமரன்.

(பொருள்) திருமணம் முடிந்த பின்பு, சிவபெருமானும் பார்வதியும் மிகுந்த அன்புகொண்டு ஓர் உருவமாகச் சேர்ந்து மகிழ்ச்சியுடன் வலிமை, பொருந்திய யானை முகத்தை உடைய கணபதியையும், முருகனையும் பெற்றார்கள்; பின்பு பரமசிவன் அஞ்சத்தக்க வேலினை அருள்செய்து அனுப்புவித்தான். அவன் போய் அந்தத் தாரகாசுரனை வேலைவிட்டுக் கொன்று மகிழ்ச்சியை அடைந்தான். 89

256 மயில்எ னத்திகழ் மலைமகள், பொருகரி வதனன்,
அயில்எ டுத்தசெம் கரன்உடன், இமையவெற்பு அகன்று,
கயிலை வெற்பில்வந்து, இமையவர் முனிவர்கள் களிக்க,
•எயில்உ டைப்புரம் எரித்தவன் இருந்தனன்; அப்பால்.

(பொருள்) மயில் போல் விளங்குகின்ற மலைஅரசன் மகளாகிய பார்வதி, போர்த் தொழிலில் வல்ல யானை முகத்தையுடைய பிள்ளையார். வேல்ஏந்திய முருகன் ஆகிய இவர்களுடன் இமயமலையை விட்டு நீங்கித் தேவர்கள் முனிவர்களுடைய கண் களிகூரக் கைலாயத்தில் வந்து இருந்தார், முப்புரத்தை எரித்தவராகிய பரமசிவன். அதன்பின்பு, 90

மூன்றுவது

மலைமகள் திருஅவதாரச் சருக்கம் முற்றிற்று



## 4. அம்பிகை திருக்கண் புதைத்த சருக்கம்

257 மின்அனைய முகில்தவழும் இமகிரியின்
தவபலத்தால் மேனை ஆன
அன்னைஇடத்து என்அன்னை அவதரித்த
கதைசிறிதே அறைந்தேன்; இப்பால்
பொன்அனைய சடைஇறைவன் திருநயனம்
இருகரத்தால் புதைத்த வாறும்
தென்அருணை மாநகரில் அன்னைவினை
தீர்த்ததுவும் செப்பல் உற்றேன்.

(பொருள்) மின்னல்கள் பொருந்திய மேகங்கள் தவழ்ந்துசெல்லும் இமயமலையின் தவவலிமையால் மேனாதேவியிடம், என் தாயாகிய பார்வதி பிறந்த கதையிலே சிறிது பாகம் சொன்னேன். பிறகு அப்பார்வதி பொன்போலும் சடையையுடைய சிவனது அழகிய கண்களை இரண்டு கைகளினால் பொத்தியதும், அதனால் வரும் வினையைத் தெற்கின்கண் இருக்கின்ற அருணாசலத்தில் அம்மை பூசைசெய்து தீர்த்துக்கொண்டதும் சொல்லத் தொடங்கினேன். 1

258 ஊடுவர்; புலவி தீர்ப்பர்;
ஒருவருக்கு ஒருவர் மாலை
சூடுவர்; மறைநூல் கேட்பர்;
சொல்லுவர்; வீணை நாதம்
பாடுவர்; பலவி னோதம்
பயிற்றுவர்; பலகால் சூதும்
ஆடுவர்; வெல்வர்; தோற்பர்;
அணிகலம் புனைய அன்பால்.

(பொருள்) சிவனும் பார்வதியும் பிணங்கிக் கொள்வார்கள்; அதை மறுபடியும் தீர்த்துக்கொள்வார்கள்; ஒருவருக்கு ஒருவர் மாலைகளைச் சூடிக்கொள்வார்கள்; வேத நூல்களைத் தேவர்கள் முனிவர்கள் சொல்லக் கேட்டும், அதன் பொருளைச் சிலருக்குச் சொல்லியும், வீணை முதலியவற்றை வாசித்தும், மற்றும் பல விளையாட்டுக்கள் செய்தும், பலதரம் சூதுஆடியும், அதனால் வெற்றி தோல்வி அடைந்தும், மிகவும் அன்புடன், அழகிய அணிகலன்களை அணிந்துகொண்டும் இருந்தார்கள். 2

259 அந்தவே ளையில்என் அன்னை
ஐயனை இறைஞ்சி, "ஐயா!
இந்துவும் இரவி தானும்
யாவர்?"என்று இசைத்தாள்; எந்தை,
"சுந்தரக் கனிவாய் மின்னே!
சுடர்கள்எம் இருகண்" என்றார்;
கந்தனைப் பயந்தாள் ஈசன்
விழிகளைப் புதைத்தாள் கையால்.

(பொருள்) அச்சமயத்தில், என் தாயாகிய பார்வதி பரமனை வணங்கி, ஐயா! சந்திரரும் சூரியரும் யாவர் என்று கேட்க, பரமசிவன் அழகிய கனிபோலும் வாயையுடைய பெண்ணே! அந்த இரு சுடர்களும் நம்முடைய கண்கள் என்று சொன்னார். வேலனைப் பெற்ற தாயானவள் கேட்டு, .வேடிக்கையாய் சிவபிரானின் கண்களைத் தன் இருகரத்தால் மூடினாள். 3

260 ஈசனார்விழி புதைத்தலும், இருள்பிழம்பு உருக்கிப்
பூசினால்என இருண்டன திசைகளும் புவியும்;
மாசுஇல் நீலமால் வரைஎனக் கருகிய மலைகள்;
காசுஉ லாவிய நதிஎலாம் யமுனைபோல் கறுத்த.

(பொருள்) பரமசிவத்தின் திருக்கண்களைப் பார்வதி மூடிய மாத்திரத்தில் இருள் கூட்டத்தை உருகச்செய்து பூசினதுபோல் திக்குகளும் பூமியும் இருண்டன; மலைகள் எல்லாம் குற்றமற்ற நீலமலையைப் போல் கறுத்தன; முத்துககள் பொருந்திய நதிகள் எல்லாம் யமுனா நதிபோல் கருமை அடைந்தன. 4

261 மறையவனும் நாரணனும் முனிவர்களும்
வசுக்களும்நான் மறையும் வானோர்
இறையவனும் விழிஒளிபோய்ப் பிறவிநெடும்
குருடர்என இருந்தார்; மற்றைக்
கறவைநிரை முதல்விலங்கும் பறவைகளும்
ஒளிஇழந்த கண்ணது ஆன;
துறவறமும் பிறஅறமும் தொலைந்தன; மற்று
உளதொழிலும் தொலைந்தது அன்றே.

(பொருள்) மறைகளில் வல்ல நான்முகனும், திருமாலும், முனிவர்களும், அட்ட வசுக்களும், நான்கு வேதங்களும் தேவர் கோனாகிய தேவேந்திரனும் கண்களின் ஒளிஅற்று, பிறவிப் பெரும் குருடர்கள்போல் இருந்தனர்; பசு காளை முதலிய விலங்கினங்களும் பறவைகளும் கண்ஒளி அற்றன; துறவறம், இல்லறம் இரண்டும் ஒழிந்தன; ஏனைய எல்லாத் தொழில்களும் கெட்டன. 5

262 தேவர், மானிடர், இராக்கதர் நிறம்எனத் திரிந்தார்;
கோவில் இந்திரன் வெண்கரி கருநிறம் கொண்ட;
தாவுஇல் அம்புயன் கொடிகொடி ஆனது;அவ் அளவில்
மூவர் தேவனுக்கு அனைவரும் முறைசொலிப் புகன்றார்.

(பொருள்) தேவர்களும், மனிதர்களும், அரக்கர் நிறம்போலக் கறுத்தார்கள்; வானத்தில் இந்திரன் ஊர்தியாகிய வெள்ளையானை கரிபோலக் கறுத்தது; கெடுதல் இல்லாத தாமரைமலரை இருப்பிடமாகக்கொண்ட நான்முகன் கொடியாகிய அன்னம் காகம்போல் கருகியது; இப்படி யாவும் கறுத்து மயங்குகிற காலத்தில், மும்மூர்த்திகட்கும் தலைவனான சிவனிடத்தில் எல்லோரும் போய் முறைஇட்டுத் தங்கள் குறையைச் சொல்லிக் கொண்டார்கள். 6

263 அஞ்சல்என அமைத்தகரத்து இறைவன்,நுதல்
விழிதிறந்தான்; அவனி ஏழும்
துஞ்சும்இருள் அகன்றது,பன் னிருகோடி
சூரியர்தம் தோற்றம் போல;
வஞ்சிஉமை இறைவன்விழி புதைத்ததிருக்
கரமலரை வாங்கி நின்றாள்;
விஞ்சும்மறை யவர்வளர்க்கும் கனல்போல
விழிமூன்றும் விளங்கிற்று அன்றே.

(பொருள்) சிவபிரான் பயம்வேண்டாம் என்று கை அமைத்துப் பன்னிரண்டு கோடி சூரியர் ஒரே காலத்தில் தோன்றினுல் போலத் தம்முடைய நெற்றிக் கண்ணைத் திறக்க, ஏழுலகமும் அஞ்சத்தக்க இருளை நீக்கியது; வஞ்சிக்கொடி போன்ற இடையினை யுடைய பார்வதியானவள் பரமசிவனது விழிகளைப் பொத்திய அழகிய தாமரைமலர் போன்ற கையை வாங்கி நின்றாள்; அந்தணர்கள் வளர்க்கும் வேள்வித் தீப்போல் மூன்று கண்களும் விளங்கின. 7

264 பார்புதைத்த திருவயிற்றாள் பணிந்துஉரைப்பாள்;
நெடும்சூலப் படையாய்! காலன்
மார்புஉதைத்த மலர்பதத்தாய்! ஆர்புதைத்த
சடாஅடவியாய்! வையம் ஏழும்
கார்புதைத்த இருள்ஆக, விழிபுதைத்த
கொடும்பாவம் கழலும் ஆறு
நீர்புதைத்த பார்இடத்தில் தவம்புரிதற்கு
ஆன இடம் நிகழ்த்தும் என்றாள்.

(பொருள்) உலகில் உள்ள சீவராசிகள் அனைத்தையும் கருவாகக் கொண்ட வயிற்றை உடைய பார்வதி, பரமசிவனை வணங்கிச் சொல்லுவாள்; நெடிய சூலப் படைய உடையவரே! எமனை மார்பில் உதைத்த மலர்ந்த திருவடிகளை உடையவரே! ஆத்தி மாலையை அணிந்த சடைக்காட்டினை உடையவரே! ஏழு உலகமும் கரியமேகத்தினும் அதிகமான இருள் உண்டாக, உமது திருக்கண்களை மூடிய கொடிய பாவம் நீங்கும்படி, கடல் சூழ்ந்த பூமியில் தவம் செய்வதற்கு நல்ல இடம் சொல்லும் என்று கேட்டாள். 8

265 ஈசனும்அங்கு உரைத்துஅருள்வான்; "உனைவினைவந்து
அணுகாதே எனினும், யார்க்கும்
மாசுஅகலும் படிக்கு,அரிய தவம்புரிய
விரும்பினையேல், மதுரை, மாயை,
காசி,அவந் தி,துவரை, அயோத்தியினும்
சிறப்புடைய காஞ்சி மேவிப்
பூசைபுரிந்து அரியதவம் புரி"என்றான்;
விடைகொண்டாள் புகழ்ந்து போற்றி.

(பொருள்) அப்படிப் பார்வதி கேட்க, பரமசிவன், "பெண்ணே! உன்னைப் பாவம் வந்து சேராது ஆயினும், மற்றவர்களுக்குப் பாவம் நீங்கும் பொருட்டுத் தவம்செய்ய விரும்பினாயானால், மதுராபுரி, மாயாபுரி, காசி, அவந்தி, துவாரகாபுரி, அயோத்தி ஆகிய இவைகளிலும் சிறந்த காஞ்சீபுரத்திற்குப் போய்ப் பூசையுடன் அரியதவம் செய்" என்று சொல்லக் கேட்டு, பார்வதியானவள் பரமசிவனை வணங்கி விடைபெற்றுக்கொண்டாள், 9

266 விசையமகள் குடைஎடுப்ப, சயமகள்பொன்
அடைப்பைகொடு விரைந்து மேவ,
வசைஇல்மணிக் கவரிஇரண்டு அருந்ததியும்
கமலினியும் மருங்கில் வீச,
திசையில்இள நிலவுஎறிக்கும் தரளமணிச்
சிவிகையின்மேல் சென்ற போது,
நசைபெருகும் அறம்பெருகப் புனல்பெருகும்
புகழ்க்கங்கா நதியைச் சேர்ந்தாள்.

(பொருள்) பார்வதி அம்மைக்கு வீரலட்சுமி குடைபிடிக்க, செயஇலக்குமியானவள் பொன் அடைப்பை தாங்கி விரைவில் வர, இரத்தினங்கள் இழைத்த சாமரைகளால் அருந்ததியும், இலக்குமியும் இரண்டு பக்கங்களில் நின்று வீச, நான்கு திக்கிலும் சந்திரனைப் போல, ஒளிவீசும் முத்துப்பல்லக்கில் ஏறிக்கொண்டு போய், யாவரும் விரும்புகின்ற தருமம் பெருக, நீர் பெருகுகின்ற புகழினையுடைய கங்கை நதிப்பக்கம் வந்துசேர்ந்தாள். 10

267 இறந்தஉயிர் இனிமீளப் பிறவாமல்,
இறவாமல், இறைவ னார்தம்
சிறந்ததிரு உருவாகும் திருக்காசித்
தலம்அடைந்து, சிவன்தாள் போற்றி,
வறந்தமழைக்கு உருகும்அந்தத் தலத்தவர்கள்
பிழைக்கஅறம் வளர்த்துப் பன்னாள்,
நறுந்தொடையின் அரசன்விடை கொண்டுநிற்பத்
தொண்டைவள நாட்டைச் சேர்ந்தாள்.

(பொருள்) இறந்துபோன உயிர் இனித் திரும்பிப் பிறக்காமலும், இறக்காமலும் பரமசிவனுடைய இனிய வடிவமாய் விளங்கும் மேன்மை படைத்த காசிப் பதியைச் சேர்ந்து, விசுவேசருடைய திருவடிகளைப் போற்றி, மழை இல்லாமல் வருந்துகின்ற அத் தலத்தில் உள்ள சீவராசிகள் பிழைக்கும் பொருட்டு, அவ்விடத்தில் அறத்தைப் பலநாள் வளர்த்து, தேன் தங்கிய மலர்மாலையை அணிந்த அந்நாட்டு அரசன் விடைபெற்று நிற்கத் தொண்டை மண்டலத்தைச் சேர்ந்தனர் பார்வதி தேவியார், 11

268 மழைதவழும் தலைப்பலவின் பழம்மதுவாய்
விரிந்தாலும், மகர வாழைப்
பழம்மதுவாய் விரிந்தாலும், புதுமதுவாய்
விரிந்துஒழுகும் பழனம் நீங்கிக்
குழைஅளவு நடமாடும் விழிமாதர்
நடம்ஆடும் குறிப்பு நோக்கிப்
பொழில்அதனில் மடமயில்கள் நடம்ஆடும்
திருக்காஞ்சிப் புரத்தைச் சேர்ந்தாள்.

(பொருள்) மேகங்கள் தவழ்கின்ற உச்சியையுடை பலாமரத்தினது பழங்கள் வாய் விண்டாலும், மகர வாழைப்பழங்கள் வாய்விரிந்து அழிந்தாலும், புதுத்தேன் பெருக்கு எடுத்து வாய்க்கால் வழியாக ஓடி விழுகின்ற கழனிகளைக் கடந்து, குண்டலம் வரைக்கும் தாவுகின்ற கண்களையுடைய பெண்கள் நடனம் செய்கின்ற குறிப்பைப் பார்த்து, சோலைகளில் இளமயில்கள் நடனம் செய்கின்ற காஞ்சீபுரத்தைப் பார்வதியார் சேர்ந்தார், 12

269 தாவரத்தை அறிவுஆக்கி, மனிதரைஉள்
அறிவுஅளிக்கும் தடம்கண் மாதர்
நூபுரத்துஅம் புயசரணம் சிவப்புஏற,
இழைமருங்குல் நுடங்க, ஏறும்
மாபுரத்தின் மணிமேடை அரம்பையர்க்கு
விளையாட மலைகள் ஆகும்;
கோபுரத்தின் நெடும்கொடிகள் காமவல்லி
எனும்கொடிக்குக் கொழுகொம்பு ஆகும்.

(பொருள்) அறிவு அற்ற கற்களையும். மரங்களையும் உருகச்செய்து, மனிதர்களுடைய உள் அறிவைக் கெடுக்கிற பரந்த கண்களையுடைய பெண்கள் சிலம்பு அணிந்த தாமரை மலர்போலும் பாதம் சிவக்க, நூல்போலும் இடைவளைய, ஏறுகின்ற அப் பட்டணத்தில் இருக்கும் இரத்தினம் இழைத்த உப்பரிகைகள் அரம்பை முதலாகிய தெய்வப் பெண்கள் விளையாடுதற்கு மலைகளாக இருக்கும்; சிவன்கோவிலில கட்டிஇருக்கும் கொடிகள் கற்பக மரத்தில் படர்ந்த காமவல்லி என்னும் கொடிக்குப் படர்வதற்கு கொழுகொம்பாய் இருக்கும். 13

270 பரதநா டகம்ஆடும் மயில்போலும்,
கயிற்றுவழிப் பாவை போலும்,
சுரதநா டகம்ஆடும் துடிஇடையார்
கணவருடன் துவளும் போது,
மரகதா திகள்உறுத்த இழித்துமணி
மேடையினும் வாரி வீச,
அரதநா கரம்ஆனது, அன்றுமுதல்
இன்றுஅளவும் ஆழி தானே.

(பொருள்) பரதநாட்டியம் ஆடுகின்ற மயிலுக்கு ஒப்பாகவும், கயிற்று வழியாக ஆடுகின்ற அழகு பொருந்திய பாவை போலவும், சுரத விளையாட்டைச் செய்கிற உடுக்கை போன்ற இடையினையுடைய பெண்கள், கணவர்களோடு ஆடும்போது, மரகதம் முதலிய இரத்தின அணிகலன்கள் உறுத்த, கோபித்து அவ் உப்பரிகையின் நின்றும் வீசிஎறிய, அவ் அணிகலன்கள் கடலிலே விழுந்ததினால்தான் அன்று முதல் இன்றளவும் அது இரத்தினாகரம் என்று பெயர் பெற்றது. 14

271 அனையமருங்கு அகன்று,வஞ்சி ஒருமாவின்
கீழ்இருக்கும் அரனைப் போற்றிக்
கனல்அனைய வினைகளையும் நடுங்குவிக்க,
நடந்ததிருக் கம்பை மேவிப்
புனையமணல் குவித்து,இலிங்க வடிவுஆக்கி,
உமைபூசை புரிந்தாள்; அப்போது
எனைஉடையான் அவள்தவத்தின் உறுதிநினைந்து
அரியகங்கை ஏவி னானே.

(பொருள்) வஞ்சிக்கொடி போன்ற இடையையுடைய பார்வதியானவள் அத்தன்மையுடைய வீதியைக் கடந்து, ஒப்பற்ற மாமரத்தின்கீழ் அமர்ந்திருக்கும் ஏகாம்பரநாதரை வணங்கி, நெருப்பை ஒத்த தீவினைப் பயன்கள் எல்லாம் நடுங்கி ஒடுங்கிப்போக, வருகின்ற கம்பைநதி அருகே போய், அழகாக மணலைக் குவித்து, சிவலிங்க வடிவம் ஆக்கி, வழிபாடு புரிந்தாள்; அப்போது என்னை அடிமையாகக்கொண்ட பரமசிவன் அவள் தவத்தின் உறுதியை அறிய எண்ணி அரியதாகிய கங்கையை வெள்ளமாக வரச் செய்தார், 15

272 பூதலமேல் குறுமுனிவன் குண்டிகையில்
கவிழ்ந்துவரும் பொன்னி தானோ?
ஆதியிலே அந்தமுனி ஆசமித்தே
உமிழ்ந்தஅலை ஆழி தானோ?
ஏதம்அறத் தவம்புரியும் பகீரதற்காச்
சன்னுமுனி இரக்கத் தாலே,
காதின்வழி ஒழுகவிடப் பரவியகங்-
காநதியோ, கம்பை ஆறு?

(பொருள்) பூமியின் மேல் அகத்தியமுனிவர் கமண்டலம் கவிழ்ந்ததினால் பெருகி வருகிற காவிரியோ? அந்த முனியானவர் ஆதி நாளையில் ஆசமனம் செய்து, உமிழ்ந்த கடலின் பெருக்கோ? குற்றமற்ற தவம்செய்யும் பகீரதனுக்காகச் சன்னு முனியானவர் இரக்கத்தினால் காதுவழியாக விடப் பெருக்கு எடுத்துவந்த கங்கா நதியோ? என்று ஐயப்பட இருந்தது கம்பைநதி. 16

273 மங்கா நதியின் மணல்இலிங்கம்
அழியாது இருக்கும் வகை,உமையாள்
வெங்கா தலினுல் அணைபவள்போல்,
வெற்பார் இமைய வெற்பாள்,தன்
சங்கார் கரத்தால், இருதனத்தால்,
இறுக இறுகத் தழுவுதலும்,
கொங்கார் களபத் திருமார்பும்
உருகி உருகிக் குழைந்தாரே.

(பொருள்) கெடாத கம்பை ஆறு:பெருக்கு எடுக்கும்போது, மணலால் செய்த இலிங்கத்திற்கு ஊறு உண்டாகும் என்று. பயந்து காமம் கொண்டு ஆசையினுல் அணைபவள் போல், மலைகளுக்கு அரசனுகிய மலை அரசன் மகளான பார்வதி, தன்னுடைய வளை அணிந்த கைகளாலும் இரு கொங்கைகளாலும் இறுக இறுகத் தழுவுதலும், மணம் பொருந்திய சந்தனத்தை அணிந்த திருமார்பு உருகி உருகிக் குழைந்தார், சிவ்பெருமான். 17

274 மனத்தால் நினைந்த பெரும்துயரும்
மணக்காப் பிரிவும் உடன்தீரத்
தனத்தால் நெருக்கி முகம்அழுத்தித்
தலைநாள் போலத் தழுவுதலும்,
அனத்தால் விளங்கும் கம்பைநதி,]
அருண சலத்தை ஒருபொழுது
நினைத்தார் வினைகள் இரண்டுபோல்
இரண்டாய்ப் பகுத்து நீக்கியதே.

(பொருள்) தன்னுடைய தவத்துக்கு ஊறுவராமல் நினைத்து இருந்த துன்பமும், பரமசிவனைக் கூடாமல் பிரிந்த துன்பமும் தீரும்படி தனங்களாலே நெருக்கி, முகம் அழுத்தி, முன்னுள் போல் அணைந்த அளவிலே, அன்னங்கள் சூழ்ந்த கம்பைஆறு, திருவண்ணுமலையை ஒரு வேளை நினைத்தவர்களுடைய நல்வினை தீவினைகள் அவரை விட்டுப் பிரிந்து போவது போல், இரண்டாகப் பிரிந்து இலிங்கத்தைச் சுற்றிப் போனது. 18

275 விடுத்தனள் கரத்தை; பாங்கர்
விளங்குஇழை அவர்கள் சூழ,
தொடுத்தபூம் தொடையும் சாந்தும்
அணிந்துஅவள் தொழுதாள்; அந்த
வடுக்கண்ணாள் தனது கேள்வன்
மார்பினைத் தொடாது நாணித்
தடுத்திடும் குறிகள் போல,
விளங்கிய, தழும்பாய் அம்மா!

(பொருள்) பார்வதி பரமசிவனைத் தழுவிய கைகளை விட்டாள்; அருகில் ஒளி விடுகின்ற அணிகலன்களையுடைய பல பெண்கள் சூழ, கட்டிய மலர்மாலையும் சந்தனமும் அணிந்து வணக்கம் செய்தாள்; மாவடுபோன்ற கண்களையுடைய அந்த அம்மை, 'தன்னுடைய கணவனாகிய சிவபெருமானுடைய மார்பை, மற்றைப் பெண்கள் வெட்கத்தை அடைந்து தொடாமல் இருக்கும்படி தடுக்கவைத்த குறிகள் போல் தழும்புகள் விளங்கின, 19

276 அப்பொழுது அரனும், மாறன்
அடித்தழும்பு இருக்கும் தோளும்,
முப்பொழுது இறைஞ்சும் தேவர்
முடித்தழும்பு இருக்கும் தாளும்,
மைப்பொலி குழலாள் கொங்கை
வளைத்தழும்பு இருக்கும் மார்பும்,
மெய்ப்பொலி நீறும் ஆகத்
தோன்றினான் விடையின் மீது.

(பொருள்) அக்காலத்தில், அரிமர்த்தன பாண்டியன் பிரம்பால் அடித்த அடித் தழும்பு இருந்த தோள்களும், மூன்று காலத்திலும் வந்து வணங்குகின்ற தேவர்களுடைய முடிகளின் தழும்புகள் இருந்த திருவடிகளும், மேகம் போல் விளங்கும் கூந்தலையுடைய பார்வதியின் முலைத் தழும்பும் வளைத்தழும்பும் இருக்கின்ற மார்பும், உடலில் பொலிந்த திருநீறுமாய் இடபவாகனத்தில் எழுந்தருளினார் சிவபெருமான், 20

277 அந்தரத்து அமரர் எல்லாம்
அலர்மழை சொரிய, வானத்
துந்துபி முழக்கத் தோடே
சுருதிகள் முழங்கா நின்ற;
இந்திரன், திருமால், தேவர்,
இறைவியைத் தொழுது நின்ருர்;
சுந்தரக் கனிவாய் மின்னும்,
ஈசனைத் தொழுது நின்ருள்.

(பொருள்) வானத்தில் வசிக்கும் தேவர்கள் யாவரும் மலர் மாரி பொழியத் தேவதுந்துபி முழக்கத்தோடே வேதங்கள் முழங்கா நின்றன; தேவேந்திரனும், திருமாலும், தேவர்களும், பார்வதியை வணங்கினுர்கள். அழகிய கனிபோலும் வாயையுடைய அம்மையும் அப்பனை வுணங்கி நின்ருள், 21

278 ஒண்ணுதல் விடைமுன் சென்று,
பணிந்து,உளம் உருகிப் பூசை
பண்ணுதல், புகழ்தல் ஆகிப்
பணிந்தனள்; அவனை நோக்கிக்
கண்ணுதல், "உனக்கு வேண்டும்
வரம்எது? கழறுக!" என்ருன்;
"எண்ணுதல் பிரிதுஒன்று இல்லை;
இடப்புறம் தருதி" என்ருள்.

(பொருள்) விளங்குகின்ற நெற்றியையுடைய அம்மை, இடபவாகனத்தில் இருந்து காட்சி தந்த எம்பெருமான் திருமுன்னர் சென்று வணங்கி, மனம் உருகிப் பூசை செய்து, புகழ்ந்து வணங்கினுள். பரமன் பார்வதியைப் பார்த்து, "உனக்கு வேண்டிய வரம் யாது? சொல்" என்ருர்; அதற்கு, அம்மையும் "யாதும் வேண்டிலேன்; உமது இடப் பாகத்தை அருளும்" என்று கேட்டாள். 22

279 அத்தனும் மொழிவான்; "என்கண்
புதைத்ததால் அடைந்த தீமை
இத்தலத்து இனிய பூசை
இயற்றலால் அகன்றது; இந்த
மெய்த்தலம் தனக்குத் தென்பால்
ஒருநகர் விளங்கித் தோன்றும்;
முத்திமா நகரம் தன்னை
நினைத்தபேர்க்கு அளிக்கும் மூதூர்."

(பொருள்) அதற்குப் பரமசிவன் அருளிச்செய்வார்; என் கண்களை மூடியதனுலே அடைந்த பாவம், இந்தத் தலத்தில் இனிமையான பூசை செய்ததினுலே நீங்கியது; இந்த மெய்மையான ஊருக்குத் தென்பால் ஒரு நகரம் விளங்கும்; அதை நினைத்தால் முத்தி உண்டாகும். 23

280 "ஆரணன், திருமால் தேட
அடிமுடி ஒளித்து, ஞானப்
பூரண ஒளியாய் மேல்கீழ்
உலகுஎலாம் பொருந்தி நிற்போம்;
தாரணி யவர்க்கு மற்றைச்
சயிலமாய் இருப்போம்; அங்கே,
வார்அணி முலையாய்! பாகம்
தருகுவோம் வருதி" என்றார்.

(பொருள்) "மறைகளை அருளிய நான்முகனும், திருமாலும் தேடத் திருவடியும், திருமுடியும் அவர்களுக்குத் தெரியாமல் ஒளித்து, முழுமையான அறிவு ஒளியாய் மேல் கீழ் உலகங்கள் எல்லாம் ஒன்றாய்ப் பரந்து நிற்போம்; பூமிகளில் இருப்போர்க்கு மலை உருவமாய் இருப்போம்; அவ்விடத்தில் வந்தால், கச்சணிந்த தனத்தையுடைய பெண்ணே! இடப் பாகத்தைத் தருவோம்; வா" என்றார் பரமசிவன். 24

281 என்னலும், இறைவி சொல்வாள்;
"இனிமைசேர் கயிலை, காசி
தன்னிலும் இனிது காஞ்சித்
தலம்என உரைத்தீர்! இந்த
நன்னிலம் தனக்குச் சோணை
நகரமே அதிகம் என்றீர்!
பின்னையும் உளதோ அந்தத்
தலத்தினுக்கு இணையாம் பேரூர்?"

(பொருள்) இப்படிப் பரமசிவன் கூறிய அளவில், பார்வதி சொல்லுவாள்; இனிமை சேர்ந்த கைலை, காசி இவ்விரண்டு நகர்களிலும் இக் காஞ்சீபுரம் மேலானதென்று அருள் செய்தீர்; இந்த நகரத்தைப் பார்க்கிலும் அருணாசல நகரம் அதிகம் என்றீர்; அந்த நகருக்குச் சமானமான பெருமை பொருந்திய நகர் வேறு ஒன்று உண்டோ என்றாள் பார்வதி. 25

282 அவ்உரை மறுத்து,எம் கோமான்
அருளுவான்; "நமக்குஒப்பு ஆன
தெய்வம்,ஐந்து எழுத்து மானத்
திருந்துமந் திரமும் இல்லை;
சைவமே அனையது ஆன
சமயமும், அருணை போல
வெவ்வினை தவிர்க்கும் ஊரும்
இலை"என விளம்பிப் போனான்.

(பொருள்) அப்படிப் பார்வதி சொன்ன வார்த்தையை, எமது தலைவனாகிய பரமசிவன் மறுத்து, "நமக்குச் சமானமாகிய தெய்வமும், ஐந்து எழுத்துக்கு ஒப்பான மந்திரமும், சைவத்திற்குச் சரியான சமயமும், பொல்லாத பாவங்களைத் தீர்க்கும் அருணாசலத்திற்குச் சரியான நகரமும் உலகத்தில் இல்லை" என்று சொல்லிவிட்டுக் கைலை மலைக்குப் போனான். 26

283 கொம்பனாள், "பொறுப்பாய் ஈது" என்று
இறைவனைக் குவித்துப் போற்றிக்
கம்பைஆறு அகன்று, காஞ்சித்
தலத்தையும் கடந்து, வேலன்,
தும்பிமா முகத்தோன், கன்னி,
வயிரவர் கணங்கள் சூழச்
செம்பொனாள் கவரி வீசச்
சிவிகைமேல் சிறந்து சென்றாள்.

(பொருள்) மலர்க் கொம்பை ஒத்த பார்வதியானவள், "பரமனே, நான் தெரியாமல் சொன்ன வார்த்தையைப் பொறுத்துக் கொள்ளும்" என்று இரண்டு கைகளையும் குவித்துச் சிவபெருமானை வணங்கி, கம்பை ஆற்றைவிட்டுக் காஞ்சீபுரத்தையும் கடந்து, சுப்பிரமணியர், யானை முகத்தையுடைய கணபதி, சப்த கன்னிகள், வயிரவர், சிவகணங்கள் தன்னைச் சூழ்ந்து வரவும் இலக்குமி கவரி வீசவும், பல்லக்கில் சிறப்புடன் எழுந்தருளினாள். 27

284 மண்மகள் மகிழ, பட்ட
மரங்களும் தழைத்து வீறிக்
கண்மலர் சொரிய, கல்லும்
மலைகளும் கரைந்து சோர,
வெண்மலர் மடவாள் போற்றக்
காவதம் இரண்டு நீங்கி,
விண்மதி முகத்தாள் மற்றோர்
வெள்ளிடை மருங்கில் சேர்ந்தாள்.

(பொருள்) மண்மகளுக்கு மகிழ்ச்சி உண்டாகும்படி பட்டுப்போன மரங்களும் தளிருண்டாகித் தழைத்துச் செழித்துத் தேனோடு மலர்களைச் சொரியப், பெருங்கற்களும், மலைகளும் கரைந்து உருக, வெண் தாமரை மலரில் வசிக்கும் கலைமகள் புகழ்ந்து போற்ற, இரண்டு காததூரம் போய், வானத்திலுள்ள சந்திரனை ஒத்த முகத்தையுடைய பார்வதி ஒரு வெளி இடத்தில் இறங்கினாள். 28

285 வெய்யவன் தமையார் என்று
வினவுகா ரணத்தால், நீலக்
கையவள், மரக தத்தில்
கரியவள், கரமும் காலும்
செய்யவள் வருந்தி னாள்என்று
அறிந்து,உயிர் சிதைப்பான் போலப்
பையமேல் கடலில் பாய்ந்தான்;
குமரவேள் பந்தர் செய்தான்.

(பொருள்) சூரியனானவன், தன்னை யார் என்று பரமசிவனைக் கேட்ட காரணத்தினால், நீலம் போன்ற கையும, மரகதம் போன்ற வடிவமும், செந்தாமரைப் பூப்போன்ற உள்ளங்கையும், உள்ளங்காலும் பொருந்திய அம்மை சாபத்தினால் வருந்தினாள் என்று அறிந்து, தன் உயிரை விட்டு விடுகின்றவன் போல மெள்ள மெள்ள மேற்குக்கடலில் விழுந்து மறைந்தான்; சுப்பிரமணியர் அம்மை தங்குவதற்காக ஒரு காவணம் போட்டு வைத்தார். 29

286 அன்னையும் குகனை நோக்கி,
"அரம்பையால் பந்தல் செய்து
பன்னிரு கரமும் சால
வருந்தினை" எனப்பா ராட்டி,
"இன்னும்ஓர் கருமம்; சந்தி
முடிப்பதற்கு, இனிய நல்நீர்
கைந்நிறை வேலை, ஏவி
அழைத்திடு கணத்தில்" என்றாள்.

(பொருள்) அதன் பிறகு, பார்வதி முருகனைப் பார்த்து, "வாழை மரத்தினால் பந்தல் போட்டுப் பன்னிரண்டு கைகளும் சிவக்க வருத்தத்தை அடைந்தாய்" என்று பாராட்டிப் பேசி, இன்னும் ஒரு வேலை இருக்கின்றது; அஃதென்னவென்றால்; "சந்தியா வந்தனம் செய்கிறதற்கு நல்ல தூய்மையான தண்ணீர் வேண்டும்; உன் கையில் ஏந்தியுள்ள வேல்படையை ஏவி அழைப்பி" என்று சொன்னாள். 30

287 காதலால் இறைஞ்சிக் கந்தன்
ஏவினன் கைவேல்; அவ்வேல்,
போதவான், புத்தி ராண்டன்,
புகழ்புரு கூதன், போதன்,
வாதில்பாண் டரங்கன், சோமன்,
வாமன்,என் பவரை வாட்டி,
மீதில்ஏழ் கிரியை வீட்டிக்
கொணர்ந்தது வேலை நீத்தம்.

(பொருள்) அப்படிச் சொன்ன உடன், அதிக அன்போடு முருகன் தன் தாயாரை வணங்கி, தன் கையில் உள்ள வேல்படையை ஏவினன்; அது போதவான், புத்திராண்டன், புருகூதன், போதன், பாண்டரங்கன், சோமன், வாமன் என்று சொல்லபபட்ட ஏழு பேரையும், அதற்குமேல் அவர்கள் இருந்த ஏழு மலைகளையும் உருவி நல்ல தண்ணீக் கடலுக்குப் போய்த் தண்ணீர்கொண்டு வந்தது; (அந்த நதிக்குச் சேயாறு என்று பெயர்.) 31

288 கந்தவேள் அழைத்த ஆற்றில்
கடன்எலாம் கழித்து, வாழைப்
பந்தரில் இருந்தாள்; அப்போது
உமைபதம் பணிந்து அவ் ஆற்றில்
சிந்துநீர் சிவப்பது ஏதுஎன்று
உரைத்தலும், சிவப்பது ஆக
வந்தஆறு அதனை, ஆறு
திருமுகற்கு உரைப்பாள் வஞ்சி.

(பொருள்) முருகக் கடவுள் வரவழைத்த ஆற்றிலே நீர்க்கடன் எல்லாம் முடித்துக்கொண்டு, அவரால் அமைக்கப்பட்ட வாழைப்பந்தரில இருந்தாள்; அப்போது அம்மையை வணங்கி இந்த ஆற்றில் பெருகிவருகிற நீர் சிவப்பாய் இருக்க வேண்டியது என்ன என்று கேட்க, அந்த விவரத்தை ஆறுமுகப் பெருமானுக்குச் சொல்லுகின்றாள் பார்வதி. 32

289 அனந்தமா புரத்தில், ஏழு
மறையவர் அறியாக் காலத்து,
அனந்தம்மா வினைகள் செய்தார்;
அதன்பின்நல் அறிவு தோன்றி,
அனம்,தம்மா எனவே ஏறும்
அயன்பதம் கருதிப் பன்னாள்
அனம்,தமால் அமுதா உட்கொண்டு
அருந்தவம் புரிந்தார்; அந்நாள்,

(பொருள்) அனந்தமாபுரம் என்கிற நகரத்தில் ஏழு அந்தணர்கள் அறியாத சிறு பிராயத்தில் அனந்தம் தீவினைகளைச் செய்து, அதன் பின்பு நல்அறிவு தோன்றி, அன்னத்தைத் தனக்குரிய வாகனமாகக் கொண்ட நான்முகனது திருவடிகளை நினைத்து, இலைகளையே உணவாக உண்டு, பல நாள் அருமையாகிய தவம் செய்தார்கள்; அக்காலத்தில். 33

290 பதுமனும் அவர்முன் சென்று,
"பாவிகாள்! வரைகள் ஏழில்
விதிமுறை தவம்செய் வீரேல்,
குமரவேள் விடுக்கும் வேலால்
பொதிசடை முடியும் உங்கள்
வினைகளும் பொடியாம்" என்று
சதுர்முகன் உரைத்துப் போனான்;
அவரும்அத் தவமே செய்தார்.

(பொருள்) நான்முகனும் அவ் ஏழுபேர் முன்னே போய், 'பாவிகளே! நீங்கள் ஏழுபேரும் ஏழுமலைகளில் விதிமுறையாகத் தவம் செய்வீர்களானால், அப்போது அம்மைக்கு நீர் வேண்டிய காரணத்தால், முருகன் விடுக்கும் வேற்படையினால் உங்கள் சடையோடும் கூடிய தலைகளும், பாவங்களும் பொடியாகப்போம்' என்று சொல்லிவிட்டுப் போனார்; அவர்களும் அதன்படி தவம் செய்தார்கள். 43

291 "எழுவரையும் அதில்இருக்கும் எழுவரையும்
பிளந்து,நீ எறிந்த கூர்வேல்
அழியும்அவர் உதிரமுடன் புனல்கலந்து,
சிவந்ததுகாண்; ஆகை யாலே
வழுஇலைஇங்கு உனக்கு"என்ன, அடிபணிந்து
மகிழ்ந்துஇருந்தான்; மலைமேல் பட்ட
செழுமுனிவர் குருதியினல் சிவந்ததுபோல்
சிவந்ததுவே, செக்கர் வானம்.

(பொருள்) "மலை ஏழையும், அம்மலைகளில் இருக்கும் ஏழுபேரையும் பிளந்தது நீ விட்ட கூர்மை பொருந்திய வேற்படை; அதனல் வழிந்து ஒழுகுகின்ற அவர்களுடைய இரத்தத்தோடு தண்ணீர் கலந்து சிவந்துபோய்விட்டது; உனக்கு ஒரு குற்றமும் இல்லை" என்று சொல்ல, தாயின் திருவடிகளில் குமரன் வணங்கி, மகிழ்ந்திருந்த அளவில், மலையில் தவம் செய்து கொண்டிருந்த முனிவர்களுடைய இரத்தத்தினல் ஆற்றுநீர் சிவப்பு நிறத்தை அடைந்தது போல, சிவந்தது செவ்வானம். 35

292 வித்தகர்கண் புதைக்கமுனம் பரந்தஇருள்,
மறுமையில்சூழ் வினையைப் போல,
அத்தலத்தில் உமையவளைப் பின்பிடித்தால்
எனப்பரந்தது அந்த காரம்;
உத்தமியோ சிறுகதலிப் பந்தரின்கீழ்
இருப்பவள்என்று, உம்பர் இட்ட
நித்திலப்பந் தரைநிகராய் விளங்கியது
தாரகையால் நெருங்கும் வானம்.

(பொருள்) பரமனுடைய திருக்கண்களை முன்னே மூடியதால் உலகம் எல்லாம் பரவிய இருள், ஒருவனுக்கு மறுமையில் வந்து பிடித்துக்கொள்கின்ற பாவம்போல், அந்தத் தலத்தில் பிறகு வந்து அம்மையைப் பிடித்ததை ஒப்ப இருளானது எங்கும் பரவியது; உத்தம இலக்கணமுடைய பார்வதியோ ஒரு வாழைப் பந்தலின் கீழ் இருப்பாள் என்று தேவர்கள்போட்டுவைத்த முத்துப் பந்தலை ஒத்து இருந்தது; உடுக்களால் நெருக்கப்பட்ட வானம். 36

293 மாலைஎனும் குமரி,இருள் மகிடன்முகம்
அகற்றி,அந்தி வானில் சோரிக்
கோலமுடன் படிகஇலிங்கம் கொண்டதுபோல்,
மதிஎழுந்து குடபால் சென்றது;
ஆலம்மணி மிடற்றுஇறைவன் விழிபுதைக்க
வளர்ந்தஇருள் அனைத்தும் நீங்கப்
பாலமிசை வெடித்துஎழுந்த விழிஎனவே
எழுந்தது,செம் பரிதி தானே.

(பொருள்) மாலைக் காலம் என்னும் துர்க்கையானவள் இருட்டாகிய மகிடாசூரன் தலையை அறுத்து, அதனால் செவ்வானம் என்று சொல்லப்பட்ட இரத்தக்கோலத்தோடு, படிகஇலிங்கத்தைக் கைக்கொண்டது போலச் சந்திரன் உதயமாகிய மேற்குத் திக்கில் மறைந்தது; நீலகண்டராகிய பரமசிவனின் இரண்டு கண்களை அம்மை பொத்திய அளவில், நான்கு திக்கும் பரவிய எல்லா இருளும் போகும்படியாய் விழித்த, பரமனது நெற்றிக் கண்போலச் செம்மைநிறம் பொருந்திய சூரியன் கீழ்த்திசையில் உதயம் ஆனான். 37

294 கங்கை நிகராம் சேயாற்றில்
காலைச்சந்திக் கடன் கழித்து,
மங்கை கனகச் சிவிகையின்மேல்
மறைஓலம்இட வழிக்கொண்டாள்,
பங்கம் மலம்தீர் வழிஅடியார்
கொடிய வினையாம் பஞ்சுமலைக்கு
அங்கி மலையாய் விளங்கியசீர்
அண்ணா மலைகண்டு அடிதொழுதாள்.

(பொருள்) பார்வதி, கங்கைக்கு ஒப்பாகிய சேயாறு என்னும் நதியில் காலைக்கடனை முடித்துக்கொண்டு, பொன்மயமாகிய பல்லக்கில் ஏறி, வேதங்கள் ஒலிக்கச் செலுத்தி, பங்கப்படுத்தும் மும்மலங்களையும் ஒழிக்க வல்ல அடியார்களுடைய பாவமாகிய பஞ்சுமலைக்கு, நெருப்பு மலையாய் விளங்கிய திருஅண்ணாமலையைப் பார்த்து, உடல்படி தோய வணங்கினாள். 38

295 வென்றியினால், கவர்ந்தபொருள் பகிர்ந்துஇறைவி
பலிஆடும் வேனில் பாலை;
குன்றம்எலாம் வெறியாடல்; முல்லைஎலாம்
பொதுவர்மின்னார் குரவை ஆடல்;
மன்றல்கமழ் இந்திரற்கு விழாஎடுத்துக்
கொண்டாடல் மருத வேலி;
முன்றில்எலாம் சினச்சுறவு முன்உணக்கி
அணங்காடும் முந்நீர்க் கானல்.

(பொருள்) வல்லமையினாலே, சூடு மிகுந்த பாலை நிலத்தில் உள்ளவர்கள், வழிச் செல்வோரை அடித்துப் பறித்த பொருளைப் பங்கிட்டு, அந்த நிலத்தில் உள்ள துர்க்கைக்குப் பலிபோடுவார்கள்; மலைகளையுடைய குறிஞ்சி நிலத்தவர்கள் ஆடுபலி கொடுக்கும் பூசை போடுவார்கள்; முல்லை நிலங்களில் எல்லாம் இடைச்சிமார்கள் குரவைக் கூத்து ஆடுவார்கள்; கற்பக மாலையைத் தரித்த தேவேந்திரனுக்கு மருத நிலத்தார் திருநாள் கொண்டாடுவார்கள்; முற்றங்களில் சுருமீன்களைக் காயப் போடுகின்ற கடலருகாகிய நெய்தல் நிலத்தில் இருக்கின்றவர்கள் வருணனுக்குத் திருவிழாச் செய்வார்கள். 39

296 சோதிபெறு கரனுகம் மறையஅம்பு
சொரிகையினால், தூய்மை ஆய
மாதரைஎ லாம்கலந்த மகிழ்ச்சியினால்,
பொன்கலந்து மருவு நீரால்,
போத,அரி சனம்கரையப் பெருகுதலால்,
மதுஉடையப் பொருத லாலே,
சீதரனை நிகராகத் திருநதிநால்
திசைகள்எலாம் சிறந்தது அன்றே.

(பொருள்) திருநதியானது, ஒளி பொருந்திய துதிக்கையையுடைய யானைகள் மறைய நீரைப் பெருக்கி வருதலாலும், தூய்மையாகிய பெரியபூமி எல்லாம் பரவிய மகிழ்ச்சியினாலும், பொற்பொடிகளைத் திரட்டிக் கொண்டு வருதலாலும், மிகுந்த மஞ்சள் பொடிகரையப் பெருகினபடியாலும், தேன் கூடு உடைந்து மோதலினாலும், என்று நதிக்குப் பொருள் கொண்டு, சிலேடைவகையால்; கரனுடைய உடல் மறைய அம்புகள் சொரிதலாலும், தூய்மையான கோபிகைப் பெண்களைச் சேர்ந்திருந்த விருப்பத்தினாலும், இலக்குமியைச் சேர்ந்திருக்கிறதினாலும், வைணவர் மிகவும் மனம் உருக, அருள் செய்தலாலும், மது என்கிற அசுரன் சாகப் போர் செய்தலாலும், திருமாலுக்குச் சமானமாக நான்கு திக்கிலும் சிறந்தது. 40

(நதிக்கும் திருமாலுக்கும் செம்மொழிச் சிலேடை அணி)

297 மேவுபுனல் பரந்துஒழுகக் குளிர்ந்துமயிர்
பொடித்தனபோல் விதத்தில் தோன்றி,
காவில்உறை பசுங்கிளியின் சிறகுஎனவே
பசந்து,தொண்டைக் கதிராய் முற்றி,
கூவுகின்ற வாரணத்தின் களம்போல
நிமிர்ந்துஎழுந்து, குறைவில் சாலி
பாவைஉமை தவம்புரியும் தலம்இதுஎனப்
பணிந்தனபோல் படிந்த மாதோ.

(பொருள்) அந்நதியில் வந்தநீர் பரந்து ஒழுகுகிறபடியினாலே, குளிர்ச்சியுற்ற பூமி தேவியினுடைய உடலின் மயிர்க்கூச் செறிந்ததுபோல், குறைவு இல்லாத நெற் பயிர்கள் உண்டாகத் தோப்புக்களில் வாசம் செய்கிற பச்சைக் கிளிகளின் சிறகுபோல் பச்சை நிறத்தை அடைந்து, தொண்டைக் கதிராய் முற்றிக் கூவுகின்ற கோழிக் கழுத்துப் போல நிமிர்ந்து, பார்வதி தவம் செய்கிற இடம் இது என்று வணங்கினது போல் வளைந்து கிடக்கின்றன. 41

298 சந்ததமும் ஏருழவர் பதம்பார்த்துஅங்கு
அரிந்தஅரி தடுத்து, வாரி
இந்திரனுர் உலகினொடு போர்செய்வான்
எழுமலையாம் என்னப் போர்செய்து,
அந்தரமே சுற்றுஇரவி புரவிகள்போல்
கடாவிடுத்தே ஆற்றித் தூற்றி,
மந்தரமாம் எனக்குவித்து, வழங்குகினும்
தொலையாநெல் மருத வேலி.

(பொருள்) எப்பொழுதும், ஏர்த் தொழில் புரியும் உழவர்கள் நெல்லைப் பதம் பார்த்து அறுத்து அரிகளைச் சுமையாக வாரித் தேவேந்திரன் உலகத்தோடு சண்டை செய்ய எழுந்த மலை என்று சொல்லும்படியாகப் போர் போட்டு, வானவழியாக வருகிற சூரியனுடைய குதிரைகள் போலும் கடாக்களைவிட்டு அடித்து, வைக்கோலைத் தூற்றி, மந்தரகிரிபோலக் குவியல் செய்து உள்ளனர்; காணித் தெய்வம், பரதேசிகள் முதலிய எல்லா மனிதர்களுக்கும் கொடுத்தாலும் நெல் குறையாது பெருகுகின்ற மருத நிலத்தில். 42

299 கயல்இனம்என்று உழத்தியர்தம் கண்நிழலைக்
கண்டு,கரும் கயல்வந்து ஏறும்;
அயலில்இவர் கொடும்புருவ நிழலினைக்கண்
டேசிலைஎன்று அஞ்சி மீளும்;
மயல்உதவும் மாவதனம் தாமரைப்போது
எனமருவி வண்டு சேரும்;
இயலும்அவர் நாசிநிழல் சண்பகப்போது
எனவெருவி இரியல் போகும்.

(பொருள்) வயலில் களை எடுக்கும் உழத்தியர்களுடைய கண் நிழலைக் கண்டு கெண்டைகள் தம் இனம் என்று வந்து சேரும்; பின்பு அருகில் அவர்களுடைய புருவ நிழலைப் பார்த்து வில் என்று பயப்பட்டு ஓடும்; கண்டார் மனம் கவர ஆசையைக் கொடுக்கிற அவர்களுடைய முகத்தைத் தாமரைப் பூ என்று நினைத்து வண்டுகள் வந்து பொருந்தும்; அதன் பின்பு அவர்களுடைய மூக்கின் நிழலைப் பார்த்துச் சண்பகப்பூ என்று ஓடிப்போகும். 4

300 பெரும்பழனத்து உழத்தியர்தம் கணைக்காலை
வரால்எனப்போய்ப் பிடித்து, மள்ளர்
திரும்பவும்,அங்கு அவர்புறங்கால் கமடம்எனப்
பிடிமருதத் திணைகள் தோறும்,
குரும்பைஎனும் முலைச்சியர்கள் முகத்தினுக்கும்
விழியினுக்கும் குலைந்தோம் என்று,
சுரும்பினுடன் கலுழ்வனபோல், தாமரையும்
குவளையும்தேன் சொரியும் தானே.

(பொருள்) பெரிய வயல்களில் களைபிடுங்கும் உழத்திகளுடைய கணைக்காலை வரால் மீன் என்று, விரைவில் சென்று மள்ளர் பிடித்து வெட்கம் அடைந்து, மறுபடியும் அப் பெண்களுடைய புறங்காலை ஆமை என்று பிடிக்கும் மருத நிலம் தோறும், தென்னம் குரும்பைபோன்ற முலைகளையுடைய பெண்கள் முகத்திற்கும் கண்ணுக்கும் தோற்றுப் போனோம் என்று வண்டுடனே சொல்லி அழுகிறதுபோல் தாமரைப் பூவும் நீலோற்பலமும் தேனைச் சொரியும். 44

301 நிழலையும் சுழிக்கும் மேதி,
நெடும்புனல் குடைய, அன்னம்
மழலைவண் டானத் தோடு
மருதவண் தானத்து ஓடும்;
அழல்அவிர் மணிப்பூண் மள்ளர்
அரிகிணைக்கு இசைய ஊதும்
குழல்இசை அறுகால், மாதர்
குழல்இசை அறுகால் கூட்டம்.

(பொருள்) தன் நிழலைப் பார்த்துத் தானே கோபிக்கும் எருமைகள், நீரிலே போய் விழுந்து கலக்க, அன்னம் இளமையாகிய நாரையுடனே மருதநிலத்தில் வளம் பொருந்திய இடத்தையுடைய சோலையில் ஓடும்; ஒளி பொருந்திய இரத்தின அணிகலன் களையுடைய மள்ளர்கள் அடிக்கிற அரிகிணை என்னும் தோற்கருவிக்கு இசையும்படியாக ஊதுகின்ற புல்லாங் குழலிசை இல்லாதபோது, பெண்களுடைய கூந்தலில் பொருந்திய வண்டுகள் இசையும்படியாக ஊதும். 45

302 மூசுவண்டு இனங்கள் எல்லாம்
முடித்தசங் கிலிகள் ஆக,
காசுநெல் கதிர்கள் எல்லாம்
கன்னசா மரைகள் காட்ட,
தேசுவாய்க் கவளம் பெற்றுத்
தேறுகள் பாகைச் சிந்தி
வாசவன் களிறு போல
மருதம்வீற்று இருந்த மாதோ.

(பொருள்) ஒழுங்காய் மொய்த்துக் கொண்டிருக்கின்ற வண்டுக் கூட்டங்கள் எல்லாம் சங்கிலியாகவும், இரத்தினம் போல் விளங்கும் நெற்கதிர்கள் சாமரை போன்ற காதாகவும், ஒளி பொருந்தி வளப்பம் பெற்றுப் பருவம் கொண்ட தேனாகிய அமுதத்தைச் சிந்தி, தேவேந்திரன ஏறுகிற ஐராவதம் என்னும் யானை போல மருத நிலம் வீற்றிருந்தது; யானையானது தன் அழகிய வாயினாலே கவளம் பெற்றுத் தேறித் தன் கன் இருக்கின்ற பாகனைத் தள்ளிக் கொலலுதலால்; 'தேசுவாய்க் கவளம் பெற்றுத் தேறுகட் பாகைச் சிந்தி வாசவன் களிறு போல மருதம்' என்று சிலேடையாகக் கூறினார். 46

303 பண்ணார் கமலப் பழனப் பதிநீங்கி,
மண்ணோடர் போற்றும் வடவீ தியில்குறுகி,
அண்ணா மலையான் அடிக்கமலம் சென்றுதொழ,
விண்ணோர் கொடிநெடும்தேர் வீதிகளின் மேவினாள்.

(பொருள்) வண்டுகள் இசைபாடுகின்ற தாமரை மலர்களையுடைய மருதநிலத்து ஊரை விட்டுநீங்கி, நிலஉலகத்தோர் வணங்கும் வடக்குவீதியில் எழுந்து அருளி அருணாசலேசருடைய திருவடிகளைப்போய் வணங்க, வானத்தைத் தொடுகின்ற கொடிகளை யுடைய மிக மேலான தேவர்கள் இருக்கும் கிழக்கு வீதியில் வந்தாள் பார்வதி. 47

304 நச்சு கோபுரத்து உச்சி மேவிஓர்
வச்சி ரத்தினால் மதியின் மாசுபோம்;
செச்சை மாமணிச் செம்மை யால்,இனன்
பச்சை மாஎலாம் பவளம் ஆகுமே.

(பொருள்) யாவரும் விரும்பப்பட்ட கோபுரத்தின் உச்சியின் அருகில் சந்திரன் வரும்போது, அக் கோபுரத்தில இழைக்கப்பட்டு இருக்கிற ஒப்பற்ற வச்சிர இரத்தினங்களின் ஒளியினாலே ; தனது களங்கத்தை நீக்குவான்; இன்னும் அக் கோபுரத்தில் இழைக்கப் பட்டுள்ள மாணிக்கங்களுடைய சிவந்த ஒளியினாலே அதன் அருகில் வரும்போது சூரியனது தேரில் கட்டிய பச்சைக் குதிரைகள் ஏழும் பவளக் குதிரைகளாகத் தோன்றும் 48

305 வேற்று மேருநேர் மேடை மீதினும்,
போற்று கார்மதில் புரிசை மீதினும்,
தோற்றும் நீலமா மணியின் சோதியால்,
ஏற்ற வான்நதி யமுனை ஆனதே.

(பொருள்) வேறு வேறாய் அமைந்துள்ள மேருவை ஒத்த மேடைகள் மேலும், காலம் அறிந்து நீரைச்சொரிந்து அசையும் பொருள்கள் அசையாப் பொருள்கள் ஆகிய வற்றைக் காக்கும் மேகங்கள் உலவுகின்ற மதில்கள் மேலும் இழைத்திருக்கும் நீல ரத்தினத்தின் ஒளியினால், வானத்தில் இருக்கும் கங்கை நதியானது யமுனாநதி போல் கருமை நிறம் அடைந்தது. 49

306 பரவை ஆம்எனப் பணைமு ழங்கவே
அரிவை மாதரார் ஆடுஅ ரங்கின்மேல்,
விரவு பச்சையின் கதிரை வெய்யவன்
புரவி கௌவிடும் புல்என்று உன்னியே.

(பொருள்) கடல் போல இசைக் கருவிகள் முழங்க, அரிவைப் பருவம் உடைய பெண்கள் நடனம் செய்கின்ற மேல் உப்பரிகையில் இழைத்திருக்கும் பச்சை இரத்தினங்களுடைய கதிர்களைப் புல் என்று நினைத்துச் சூரியன் தேரில் கட்டிய பச்சைக் குதிரைகள் ஏழும் கௌவும். 50

307 அத்தகைய வீதி கடந்து,மணி ஆலயம்சேர்ந்து,
உத்தமனை, என்னைஆள் உடையானை, சோணகிரி
வித்தகனைக் கண்டு, பணிந்து,உருகி, மீண்டுபல
சத்திகள் தம்மோடு தலேச்சுரத்தை மேவினாள்.

(பொருள்) அப்படிப் பட்ட தன்மையுடைய வீதிகளைத் தாண்டி, அழகுள்ள கோயிலுக்குள் போய், தேவர்கட்கு மேலானவரை, என்னை ஆட்கொண்டவரை, அருணாசலத்தில் இருக்கிற ஞானத்தின் திருவுருவை வணங்கி, உருக்கத்தை அடைந்து, திரும்பிப் பல சத்திகளுடனே தலேச்சுரம் என்கிற மலைச்சாரலை அடைந்தாள் அம்மை. 51

308 ஊசியில்ஓர் கால்விரலை ஊன்றி,ஒரு கால்மடித்து,
நாசி மிசைவிழியை நாட்டி, அழல்மூட்டித்
தேசின் அமுதுஉருக்கித் தெள்அமுதை உண்டு,தவக்
கோசிகனைப் போல்முயல்வார் கோடானு கோடியே.

(பொருள்) ஊசியின் நுனியிலே ஒரு காலின் விரலை ஊன்றிக் கொண்டு, ஒரு காலை மடித்து, மூக்கு நுனியிலே கண்களைச் சேர்த்து, பஞ்சாக்கினியை வளர்த்தி, ஒளிமயம் ஆன அமிர்ததாரணை செய்து, பிரமரந்திரத்தின் வழியாய் வருகின்ற அமிர்தத்தைச் சாப்பிட்டு, தவத்தில் சிறந்தவரான விசுவாமித்திரர் போலத் தவம்செய்வார் அநேகம் கோடி பேர். 52

309 நாடும்மலம் மூன்றுஅகற்றி, நல்வினையும் தீவினையும்
சாடி, மனம்இறந்து, தான்இழந்து, தன்மயமாய்
வீடு பெறவிரும்பி, வேட்கைபிறிது இல்லாமல்,
கூடுசிவ ஞானியர்கள் கோடானு கோடியே.

(பொருள்) ஆணவம், காமியம், மாயை என்கின்ற மும்மலங்களையும் நீக்கி, நல்வினை தீவினை ஆகிய இருவினைகளைப் போக்கி மனம் என்பது இறந்து, தன் அறிவு கெட்டு, உலகம் சிவவடிவமாய், முந்தி பெறும்படியாக ஆசை கொண்டு, மற்று ஓர் ஆசையும் இன்றி ஐம்புலன்களும் ஒருமித்துச் சிவஞானம் பெற்ற ஞானிகள் வெகு கோடி பேர்கள் அம்மலைச் சாரலில் இருப்பார்கள். 53

310 தொண்டருடன் ஆகமங்கள் சொன்ன விதிமுறையைத்
தண்டி முடிஇரவி சவுராதி யாய்ப்பூசித்து,
அண்டர்பிரான் அஞ்சுஎழுத்தை ஓதி அகம்மகிழ்ந்து
கொண்ட கிரியையினர் கோடானு கோடியே.

(பொருள்) அடியார்களோடு காமிகாதி சிவாகமங்களில் எடுத்துச் சொன்ன விதி முறைப்படி சூரியன் முதல் சண்டேசுரர் ஈருகப் பூசைசெய்து, தேவர்களுக்கு எல்லாம் முதல்வனை சிவபிரானுடைய பஞ்சாக்கர மந்திரத்தை ஓதி,மனம் மகிழ்ந்து, கிரியைகளை நடத்துகிறவர்கள் கோடானு கோடிபேர். 54

311 நேரும் இயமம் நியமம்ஆ தனவகையும்,
பேர்பிரா ணயாமம், பிரத்தியா காரமொடு
தாரணை, தியானம், சமாதிவகை தன்னிலும்,மெய்
கூரும்முயல் யோகியர்கள் கோடானு கோடியே.

(பொருள்) இயமம், நியமம், ஆதனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்று சொல்லப்பட்ட அட்டாங்க யோகங்களின் வகைகளை அறிந்து, அவைகளை உடல்சிரமப்பட்டு முயல்கின்ற சிவயோகியர்கள் அனேக கோடி பேர்கள், 55

312 மாதவர்கள் இன்னசெயல் செய்யும் வகைபார்த்துச்
சூதவனம் சூழ்ந்த சுனையும், சுனைசூழ்ந்த
சீத அருவிகளும் பார்த்துச் சிறப்புற்றுக்
கோதமனார் ஆசிரமம் தன்னில் குறுகினாள்.

(பொருள்) பெரிய தவத்தினையுடையவர்கள், செய்யும் இப்படிப்பட்ட செய்கைகளின் வகைகளைப் பார்த்து மாந்தோப்புச் சூழ்ந்த சுனையும், சுனைசூழ்ந்த குளிர்ச்சியான அருவிகளையும் கண்டு சிறப்பை அடைந்து, அவ்விடத்தில், இருக்கிற கௌதமருடைய குடிலுக்கு அம்பிகை வந்து சேர்ந்தாள். 55

313 அந்தஇடத்து உமையாள் செல்ல, அகலிகையும்
மைந்தனும்வந்து ஏத்தினார் வாழ்த்தி,"மறைக் கோதமனார்
முந்துமுனி எவ்விடத்தே?'' என்றாள்; முனிபுதல்வன்
தந்தை,மலர், தருப்பைக்கு எய்தியதும் சாற்றினான்.

(பொருள்) அக் கௌதமருடைய இடத்துக்கு உமாதேவியார் போனவுடனே அவரது மனைவியாகிய அகலிகையும், புத்திரராகிய சதானந்தரும் வந்து பணிந்தார்கள்: அவர்களைப் பார்வதிதேவி ஆசீர்வதித்து, மறைகளை உணர்ந்த முதன்மையான கௌதமரிஷி எங்கே இருக்கின்றார் என்று கேட்க, சதானந்தர் தம் தந்தையார் மலர், தருப்பை கொண்டு வருகிறதற்குப் போனார் என்று சொன்னார். 57

314 பின்னும் அவன்உரைப்பான்; "பேதைமையேன்புன்குடிலில்,
கன்னல் அமுதே! கணப்போது இருந்துஅருளின்,
அன்ன வனைக்கொணர்வேன்'' என்றே அடிதொழுது,
தன்னை அளித்தவன்பால் சென்றான் சதானந்தன்.

(பொருள்) மறுபடியும் பார்வதியைப் பார்த்து அச்சதானந்தர் சொல்லுவார்; ''கருப்பஞ்சாறு போன்ற பார்வதியம்மையே! அறியாமையுடைய என் சிறு குடிசை வீட்டில் கணநேரம் இருந்தால், என் தகப்பனாரைக் கொண்டுவந்து சேர்க்கிறேன்" என்று திருவடிகளைத் தொழுது தன்னைப்பெற்ற கௌதமரிடத்திற்குப் போனார் சதானந்தர். 58

315 இங்குஇவன் செல்போதில், இளந்தருப்பை கொய்து,முனி
புங்கவர்கள் சூழ்ந்து வருமுனிவன், பூத்துஅலர்ந்து
துங்கவனம் கற்பகம்போல் தோன்றுதலால் இந்தவனம்,
தங்கள்வனம் அல்லஎன்று சங்கைஉற்று நோக்கினுன்.

(பொருள்) சதானந்தர் போகிறபோது, இளமையாகிய தருப்பை கொய்து கொண்டு அநேக முனிவர்கள் சூழக் கௌதமா வருங்கால், இவ்விடத்தில் அம்மை எழுந்தருளி இருந்த கௌதமரது பூங்காவனமானது எல்லா மரங்களும் மலர்ந்து கற்பக மரம் போலக் காணுகிறபடியால், நம்முடைய வனமல்லவே! இது யாருடையதென்று ஐயப்பட்டுப் பார்த்தார். 59

316 இத்தலத்தில் வந்தவர் ஆர் என்றுஉரைத்து, மாதவர்க்குப்
பத்துஉருவம் தந்த முனியும் பராசரனும்
அத்திரியும் அப்புதுமை ஆராயும் எல்லையில்,தன்
புத்திரனைக் கண்டு "வரவுஎன்ன? புகல்!"என்ருன்.

(பொருள்) இவ்விடத்தில் வந்த பெரியோர்கள் யார் என்று, திருமாலுக்குப் பத்துத் தரம் பிறக்கச் சாபம் கொடுத்த பிருகுரிஷியும், பராசரும், அந்திரியும், அப்புதுமை விசாரிக்கும் இடத்தில், தம்முடையபிளளை சதானந்தரைக் கண்டு, இவ்விடத்தில் உண்டாகிய விசேடம் என்ன?" என்று கேட்டார், கௌதமர். 60

317 "தாதை!இவை கேள்!இறைவர் தங்களை அளிக்கும்
சோதி,இவள் எய்தினள்" எனத்தொழுது சொன்ஞன்;
"நாதம்மறை தேடும்அவள், நம்குடிலின் மேவற்கு
ஏதுதவம்? ஏதுதவம்? ஏதுதவம்? என்ருன்.

(பொருள்) சதானந்தர் தன் தகப்பஞராகிய கௌதமரைப் பார்த்து, "ஐயா! நான் சொல்வதைக் கேட்பீராக! நான்முகன் முதலாகிய கடவுளர்களைத் தன் இடத்தில் உண்டாக்கிய ஒளிமயமாகிய பராசக்தி, இவ்விடத்தில் வந்து இருக்கிருள்;" என்று வணங்கிச் சொல்ல, "ஒலி வடிவாகிய வேதங்கள் தேடுதற்கு அரிய அம்மை, நம்முடைய குடிசையில் வருவதற்கு என்ன தவம்? என்ன தவம்? என்ன தவம் செய்தோம்?" என்ருர் கௌதமா. 61

318 ஓடினன்; அணைத்து,மகன் உச்சியை முகந்தான்;
ஆடினன்; மகிழ்ச்சிஎனும் ஆர்கடல் புகுந்தான்;
பாடினன்; எடுத்த,குசை பார்மிசை எறிந்தான்;
"வீடினது நம்தம்வினை வேரின்உடன்" என்றான்.

(பொருள்) கௌதமர் விரைந்து சென்றார்; இவ்வார்த்தையைச் சொன்ன சதானந்தரைக் கட்டி அணைத்து உச்சி முகந்தார்; திருக் கூத்தாடினார்; மகிழ்ச்சி என்னும் பெரும் கடலில் ஆழ்ந்தார்; பாடினார்; கையிலே கொண்டுவந்த தருப்பையைப் பூமியிலே எறிந்து விட்டார்; ''நம்முடைய பாவம் வேருடனே கெட்டுப் போயிற்று" என்று சொன்னார். 62

319 அத்திரி முதல்தலைமை அந்தணர்கள் எல்லாம்
கைத்தலம் எடுத்தனர்; நடித்தனர்; களிப்பால்
வித்தகி இருக்கும்இடம் மேவி,எதிர்" கண்டார்;
பத்திவலை யில்படு பதங்களில் விழுந்தார்.

(பொருள்) அத்திரி ரிஷி முதலாகத் தலைமை பெற்ற முனிவர்கள் எல்லாம் இரண்டு கைகளையும் தலைமேல் வைத்துக் கூத்தாடினார்கள்; மகிழ்ச்சியுடனே அறிவு வடிவாகிய பார்வதி இருக்கிற இடத்தை அடைந்து, எதிரே கண்டு பக்தியாகிய வலையில் அகப்பட்டுக்கொள்கிற பார்வதியினுடைய திருவடிகளில் விழுந்து வணங்கினார்கள். 63

320 "நின்நிலைமை கன்னி;இறை நீள்பிரம சாரி
என்னும்,மறை அன்றுமுதல் இன்றுவரை; எல்லாம்
உன்னிடை உதித்து,உலகு உயிர்த்தொகைகள் எல்லாம்
அன்னைஎனும்; உன்பெருமை யார்அறிய வல்லார்?"

(பொருள்) தாயே! நீயோ கன்னிகை, பரமசிவனோ நித்திய பிரமசாரி என்று உற்பத்தி காலம் முதல் இதுவரைக்கும் வேதங்கள் எல்லாம் சொல்லிக் கொண்டு இருக்கின்றன, அப்படி இருக்க, உன்னிடத்தில் உலகங்களில் இருக்கின்ற எல்லா உயிர்களும் தோன்றித் தாய் என்று சொல்லும்; அப்படிப்பட்ட உன் பெருமையை யார் அறியப் போகிறார்கள், 64

321 "நித்தனை முதல்தருவை; நித்தனது இடத்தே
சத்திஎன நீவருவை; சத்திசிவம் என்றே
இத்தகைமை கொண்டு,உயிர்கள் யாவையும் அளிப்பாய்;
அத்துவிதம் ஆகும்உனை யார்அறிய வல்லார்?"

(பொருள்) நித்தியமாக இருக்கிற சிவபிரானை முதலில் உண்டாக்குவாய்; அச் சிவன் இடத்திலே சத்தியாக நீ வருவாய்; சத்தி சிவம் என்கிற இந்தத் தன்மையைக் கொண்டு உயிர்களை எல்லாம் பெறுவாய்; அத்துவித சொருபமாகிய உன்னை யார் அறியப் போகிறார்கள்? 65

322 "மெய்ப்பொருள் மகேசன்,அரன், வேதன்,அரி ஆனால்,
மைப்பெரும கேசி,உமை, வாணி,திரு வாலே,
இப்படியும் அன்றி,இவன் எப்படிவு எடுத்தான்
அப்படியும் ஆவை;உனை யார்அறிய வல்லார்?"

(பொருள்) "பரமசிவன், மகேசுரர், உருத்திரர், பிரமர், திருமாலானால், நீ மகேசுவரி உருத்திரி, கலைமகள், இலக்குமியாகிய சத்திகள் ஆவாய்; இப்படியும் அல்லாமல், அச்சிவபிரான் எப்படிபபட்ட உருவம் கொண்டனரோ, அதற்குத் தகுந்த வடிவம் கொள்வாய்; உன் பெருமையை யார் அறிய வல்லவர்கள்? 66

323 நெஞ்சுஉருகி, மாதவர்கள் நின்றுஇவை புகழ்ந்தார்;
வஞ்சிஇடை, கோதமனும் வந்தனன்; வரும்போது
அஞ்சலிபு ரிந்தனன்; அதற்குமுன மே,மின்
கஞ்சமலர் என்னும்இரு கால்களில் விழுந்தான்.

(பொருள்) மிக்க தவத்தையுடைய இருடிகள் எல்லாம் நெஞ்சம்உருகி நின்று இப்படித்துதி செய்தார்கள்; அச்சமயத்தில வஞ்சிக் கொடியை ஒத்த இடையையுடைய பார்வதியின் அருகில் கௌதமர் வரும்போது, இரண்டுகைகளையும் தலைமேல் வைத்துக் கூப்பித் தாமரை மலரை ஒத்த அம்மையின் இரண்டு திருவடிகளிலும் வணங்கினர். 67

324 அன்பின் உயர் கோதமனும், அன்னையை வணங்்கி,
இன்புஉற உரைப்பன்; "அயன், எண்திசை புரப்போர்
தன்சிரம் மிதிக்கரிய தாள்இணைகள், இன்றுஎன்
புன்குடில் மிதிக்கஎன புண்ணியம் முடித்தேன்."

(பொருள்) அன்பினாலே உயர்ந்த கௌதமமுனிவரும் பார்வதி அம்மையை வணங்கி, அவ் அம்மை மகிழும்படி சொல்வான்; "நான்முகன், எட்டுதிக்குப் பாலகர் தலையிலே கூட வைத்தற்கு அருமையான திருவடிகள் இரண்டும், அடியேனுடைய புன்மை பொருந்திய சிறு வீட்டில் மிதிக்க என்ன புண்ணியம் செய்தேன் !" 68

325 இந்தமொழி சொற்றலும், இளங்கொடியும், "வேலன்
தந்திஇடை சென்றிடுவன்; அங்குஅது தவிர்ந்தால்
சிந்தைமகிழ் உன்இடையில் வந்துகுறை தீர்வேன்;
மைந்த!"என ஓதினள்; மறுத்தும்இவை சொல்வாள்.

(பொருள்) இவ் வார்த்தையைச் சொன்ன அளவில், இளமையாகிய கொடி போன்ற உமையும், "பிள்ளையாகிய கௌதமனே ! எனக்கு ஓர் குறை வந்தால் வேலைக் கையில் தாங்கிய முருகனிடத்திலும், யானை முகமுடைய கணபதி இடத்திலும் சென்று தீர்த்துக்கொள்வேன்; அவ்விடம் விட்டால் என் மேல் அன்பு வைத்த உன்னிடத்தில் தீர்த்துக் கொள்வேன்" என்று உரைத்து மறுபடியும் சொல்வாள். 69

326 நாயகன் மொழிந்திட நடந்தபடி எல்லாம்
பாயிரம் எனும்படி பகர்ந்தனள்; எவர்க்கும்
தாய்இவை மொழிந்தஅள வினில்,சத மகன்கண்
ஆயிரம் விழித்திரள் அளித்தமுனி சொல்வான்.

(பொருள்) பரமசிவன் சொன்னபடி பூமியில் வந்து தான் நடந்த சமாச்சாரம் எல்லாம் பாயிரத்தோடும் கூடிய நூல்போல் முறையாக விரித்து எவருக்கும் தாயாகிய பார்வதி சொன்ன போது, முன் காலத்தில், நூறு அசுவமேத வேள்விகளைச் செய்த தேவேந்திரனுக்கு, ஆயிரம் கண் உண்டாகச் செய்த, கௌதமர் சொல்வார். 70

327 "இத்தலம் முதல்தலம்; இதன்பெயர்த லேச்சரம்;
உத்தமம்; இதில்தருமம் ஒன்று,பல ஆகும்;
மெய்த்தவம் இயற்றியிடில், வெள்விடையின் மேல்வந்து
அத்தனும் இடப்புறம் அளித்துஅருளும்" என்றான்.

(பொருள்) இத்தலம் இவ் உலகத்திலுள்ள சிவத்தலங்களுள் முதன்மையான தலம்; இதன் பெயர் தலேச்சுரம், இது மிகவும் உத்தமம் ஆனது; இதில் ஒரு புண்ணியத்தைச் செய்தால் ஒன்று பலவாய் வளரும்; இதில் இருந்து கொண்டு நீர், மெய்ம்மையாகிய தவம் செய்தால்; வெண்மையுள்ள இடப வாகனத்தில் தோன்றி பரமசிவன் உமக்கு இடப்பாகம் கொடுப்பார் என்றார் கௌதமர். 71

328 "மால்,அயன், வசுக்கள்,மக வான்,முனிக ணத்தோர்;
சாலைகள் சமைத்ததில் தனித்தவம் முடித்தார்;
காலம்இடம் நன்று,செயல் கைப்பலம்இது" என்றான்;
மூலம்முதல் வல்லியும், "முடிப்பன்இது" என்றாள்.

(பொருள்) அம்மையயே ! திருமால், நான்முகன், அட்டவசுக்கள், தேவேந்திரன், அனேக முனிவர்கள் அவர் அவர்கள் வசிப்பதற்குரிய இடம் செய்து கொண்டு அதில் இருந்து கொண்டு ஒப்பற்ற தவம்செய்து, நினைத்த காரியம் முடித்துக்கொண்டார்கள்; நீர் வந்த காலமும், இடமும் நன்மையாகும். இவ்விடத்தில் நீர் தவம் செய்தால் கைப்பலமாகி இனிது முடியும் என்று கௌதமர்சொல்ல, எல்லாப் பொருள்களுக்கும் மூலமாகிய அம்மையும் தவம் செய்து என் கருத்தை முடித்துக் கொள்ளுகின்றேன் என்றாள். 72

329 கோதமனே முதலாய முனிவர்க்கு எல்லாம்
குளிர்ந்தமொழி பகர்ந்துவிடை கொடுத்து, சோண
பூதரமாம் அதன்குணபால், பன்ன சாலை
புதிதுஅமைப்பித்து, அகம்மகிழ்ந்து, புறம்பு காக்க
மாதர்எழு வரைஅமைத்து, நாலு பாலின்
வாயிலைஎண் வயிரவர்கள் மகிழ்ந்து காக்க
ஆதரவின் நிறுத்தி,மைந்தர் மருங்கு காக்க,
அந்தரிஉள் புறம்காக்க, அமைத்தாள் மன்னோ.

(பொருள்) கௌதமர் முதலான முனிவர்களுக்கு எல்லாம் அன்பான வார்த்தைகளைச் சொல்லி உத்தரவு கொடுத்து, செம்மை நிறமுள்ள அருணாசலத்துக்குக் கிழக்குப் பக்கத்தில், பர்ணசாலை புதிதாகச் செய்வித்து, சத்த மாதர்களைப் புறக்காவலாக வைத்து, நான்கு வாயில்களையும் எட்டு வயிரவர்கள் காக்கவும், விநாயகர், சுப்பிரமணியர் தன் இரண்டு பக்கமும் காக்கவும், துர்க்கை உட்பக்கம் காக்கவும் செய்தாள் பார்வதி. 73

330 கொந்தளகம் சடைபிடித்து, விரித்து, பொன்தோள்
குழை,கழுத்தில் கண்டிகையின் குப்பை பூட்டி,
உந்தும்அரவு உரிநிகர்பட்டு ஆடை நீக்கி,
உரித்தமர உரிசாத்தி, உத்தூ ளத்தால்
விந்தைதிரு நீறுஅணிந்து, கனற்குள் காய்ந்து,
விளங்கும்ஊ சியின்ஒருகால் விரலை ஊன்றி,
அந்திபகல் இறைபதத்தின் மனத்தை ஊன்றி,
அரியபெரும் தவப்புரிந்தாள் அகிலம் ஈன்றாள்.

(பொருள்) மலர் சூடிய கூந்தலைச் சடை செய்து, விரித்து, அழகிய தோள், குழை, கழுத்து காதுகளில் உருத்திராக்க மாலைகளைத் தரித்து, ஆடும் பாம்புரிபோல் இருக்கிற பட்டாடை உடுப்பது விட்டு, மரவுரி தரித்து, வெற்றியைத் தருகிற விபூதியை உடல் முழுவதும் தரித்து, நெருப்பின் காய்ந்து பளபள என்று ஒளி வீசும் ஊசியில் ஒருகால் பெருவிரலை ஊன்றி, இரவு பகலாக மனதிலே பரமசிவனை நினைத்து, அரியதாகிய பெரிய தவத்தைச் செய்தாள் உலகத்தைப் பெற்ற உமையவள் 74

331 இளைத்தகொடி மருங்குவளைத்து, எரியின் நாப்பண்
இனியதவம் இயற்றுதல்கண்டு, இளைத்து வாடிக்
களைத்துமனம் துடித்துவிழி புதைத்து வாணி
கண்ணீரின் மூழ்கிநின்றாள்; கமலத் தாளும்
உளைத்துமனம் தளர்ந்துஅழுது விழுந்தாள்; மற்றை
உயிர்கள்எலாம் கரைந்து,கரைந்து உருகா நின்ற;
வளைத்துவளைத்து உரைப்பதுஎன்? தாய் வருந்து மானால்
வயிற்றில்உள்ள கருப்பம்எல்லாம் வருந்தி டாதோ?

(பொருள்) மிகவும் சிறியதாகிய கொடிபோன்ற இடைவளைந்து, பஞ்சாக்கினி நடுவில் இனிமையான தவத்தைச் செய்வதைப் பார்த்து, இளைத்து வாட்டமடைந்து களைத்து, மனம் துடித்து, இரண்டு கணகளையும் மூடிக் கொண்டு, கலைமகள் கண்ணீரின் மூழ்கினாள்; தாமரையில் தங்கும் இலக்குமியும் மனம் வருந்திச் சஞ்சலப்பட்டு அழுது விழுந்தாள்; ஏனைய உயிர்க்கூட்டம் எல்லாம் மனம் கரைந்து உருகின; நான் இதைப் பிரித்துப் பிரித்துச் சொல்வதனால் என்ன பயன்? தாயானவள் வருந்துவளாயின் வயிற்றில் உள்ள கருவாகிய உயிர் எல்லாம் வருத்தத்தை அடையாதோ? 75

332 முன்பனியில் கருகுபடாக் கமலம் போல
முகம்தோன்ற, பனிக்கயத்துள் மூழ்கி நிற்கும்;
பின்பனியில் அதிசீதம் இடத்தில் சேரும்,
பெருமழைக்குள் மீன்என்னப் பேணி நிற்கும்,
அன்பன்இடம் பெருமளவும் அதுபோல் வேண்டும்
அரியதவம் புரிந்தாள்;அவ் இடத்து, வேதன்,
வன்பணியில் துயில்நெடுமால் முதலாம் தேவர்,
மறைபுகுந்த தவச்சாலை மருங்கில் சார்ந்தார்.

(பொருள்) முன்பனிக் காலத்தில் கருகிப் போகாத தாமரை மலரைப் போல முகம் மாத்திரம் தெரியக் குளிர்ச்சி பொருந்திய குளங்களில் முழுகிநிற்கும்; பின்பனிக் காலத்தில் அதிக குளிர்ச்சி பொருந்திய இடத்தில் இருந்தும், மழை பெய்கிறபோது அதில் ஒரு மீன் போலச் சஞ்சலப்படாது நின்றும், கணவனாகிய பரமசிவனது இடப் பாகத்தைப் பெறுகின்றவரைக்கும் அது போல வேண்டிய தவத்தைச் செய்தாள்; அவ்விடத்தில் நான்முகனும், வலிய பாம்பின் மேல் நித்திரை செய்கின்ற திருமால் முதலாகிய தேவர்களும், வேதஒலி பொருந்திய தவச்சாலையை வந்து அடைந்தார்கள். 76

333 அந்தரியும் மாயவனார் முதலாம் தேவர்
அனைவருக்கும் உபசாரம் அளித்து "நீங்கள்
வந்தவகை இயம்பும்"என, மகிட னாலே
வருந்தியதும் தளர்ந்ததுவும் வகுத்துச் சொன்னார்;
சுந்தரியும், குமரி!உடன் "சுடரும் வாளால்
தொடுகளத்தின் மகிடன்உரம் தொலைப்பாய்"என்றாள்;
"விந்தையது புரிவம்"எனப் பணிந்தாள்; அன்னை
விளம்புதல்கண்டு அகம்மகிழ்ந்து விடைகொண் டாரே.

(பொருள்) பார்வதி திருமால் முதலான தேவர்கள் எல்லாருக்கும் உபசாரம் சொல்லி நீங்கள் இவ்விடத்திற்கு வந்தவகை சொல்லுங்கள் என்று கேட்க, அவர்கள் மகிடாசுரனால் தாங்கள் துன்பப்பட்டுத் தளர்ச்சி அடைந்த வகையை விவரமாகச் சொன்னார்கள். அதற்குப் பார்வதி துர்க்கையைக் கூப்பிட்டு, "நீ கத்தியினால் போர்க் களத்தில் மகிடாசுரன் வல்லமைகெடக் கொன்றுவிடு" என்று சொன்னாள். அதற்குத் துர்க்கை, "அப்படியே செய்வேன்" என்று பணிந்தாள். தாயாகிய பார்வதி இந்த வார்த்தையைச் சொன்ன அளவில், திருமால் முதலானவர்கள் மகிழ்ச்சி அடைந்து வணங்கி விடைபெற்றுக்கொண்டார்கள். 77

334 கோத மாச்சிர மந்தன்னில் கோல்வளை
தீதுஇல் லாத்தவம் செய்தது செப்பினேன்;
மேதி மாமுகற் காய்ந்ததும், வெள்விடைச்
சோதி பாகம் அடைந்ததும் சொல்லுவேன்.

(பொருள்) கௌதமருடைய சூழலில், ஒழுங்காகிய வளையல் அணிந்த தேவி, குறைவு இல்லாத தவம் செய்தது சொன்னேன்; பிறகு மகிடாசுரனைக் கொன்றதும். இடப வாகனத்தையுடைய ஒளிவடிவாகிய சிவபிரானது இடப்பாகத்தை இறைவி அடைந்ததும் சொல்வேன். 78

நான்காவது
அம்பிகை திருக்கண் புதைத்த சருக்கம் முற்றிற்று



## 5. இறைவி இடப் பாகம் பெற்ற சருக்கம்

335 அஞ்சனக் கிரியில் வாழும்
அசுரர்கள் ஆர்க்கும் தீரன்;
நஞ்சினை அனையான்; அந்த
நமனுக்கு நமனாய் வந்தோன்;
அஞ்சிகை எரியைத் தீய்க்கும்
தீமையான்; அளகை நாட்டின்
விஞ்சையான் வருந்த, உள்ள
வளம்எலாம் கவர்ந்த வீரன்.

(பொருள்) நீலகிரியில் வசித்துக்கொண்டுஇருக்கின்ற அசுரர் எல்லாரிலும் அதிக ஆண்மையை உடையவன்; விடத்தினுக்குச் சமமானவன்; அந்த எமனுக்கும் எமனாக வந்து தோன்றியவன்; சிவப்பாக மேலே எழுகின்ற கொழுந்தையுடைய நெருப்பைச் சுடத் தகுந்த தீமையை உடையவன்; அளகாபுரியில குபேரன் வறுமையை அடைய, அங்கே இருக்கிற வளங்களை எல்லாம் கொள்ளை இட்டவன். 1

336 தாமரைக் கண்ணன் தூங்கும்
அரவினைத் தலை,வால் கூட்டி,
மாமணிக் கவண்போல் கொள்வன்;
வன்னிவா கனத்தை வாங்கி
வேம்அழற் குஞ்சி மைந்தர்க்கு
உதவுவன்; விமானத் தோடே
சோமனைப் பிடித்துக் கையால்
பிழிந்துஅமுது அருந்தும் சூரன்.

(பொருள்) திருமால் யோகநித்திரை செய்கின்ற ஆதிசேடனைத் தலையையும், வாலையும் ஒரு கையினால் சேர்த்துப் பிடித்துக கவண் ஆக அந்தத திருமாலை கல்லாக்கித் தூரத்தில் எறிந்து விளையாடுவான்; அக்கினியைத் தள்ளிவிட்டு அவன் ஏறுகிற வாகனமாகிய ஆட்டை நெருப்பைப் போலச் சிவப்பு மயிரையுடைய தன் பிள்ளைகளுக்கு ஏறக் கொடுப்பான்; தனது கையினால் சந்திரனை அவன் விமானத்துடன் பிடித்துப் பிழிந்து, அவன் உடலில் இருந்து வருகிற தேவாமிர்தத்தை உண்ணுகிற சூரன். 2

337 கருதிய மகவான் வெள்ளைக்
களிற்றின்மேல் திரிவன்; பின்னைப்
பரிதிதேர் அதனில் பச்சைப்
பரிசெலப் பவனி போவான்;
நிருதியைச் சுமக்கும் ஆளி
ஏறுவன்; நிணத்தின் மூழ்கிக்
குருதிகொப் பளிக்கும் வாள்ஒன்று
எடுத்துஉயிர் அனைத்தும் கொல்வான்.

(பொருள்) உயர்வாக எண்ணப்படும் தேவேந்திரனுடைய ஐராவதம் என்னும் வெள்ளை யானையின் மேல் சுற்றிவருவான்; பிறகு, சூரியனுடைய தேரில் ஏறிக்கொண்டு பச்சைக் குதிரைகள் ஏழும் நடக்க வீதி சுற்றிவருவான்; நிருதியைச் சுமக்கின்ற ஆளியின்மீது ஏறிக்கொள்வான்; நிணங்களால் முழுகப்பட்டு இரத்தங்களைக் கொப்பளிக்கும் ஒரு வாளை எடுத்து எல்லா உயிர்களையும் கொல்வான். 3

338 அன்னவன் மகிடம் ஆன
ஆற்றினால், அஞ்சிக் காலத்
தென்னவன் மகிடம் ஏறான்,
காலினால் திரிந்தான் என்றால்,
என்அவன் கொடுமை நம்மால்
இயம்பலாம்? இலங்கும் சோதி
மன்னவன் கிரியைச் சாய்த்தான்;
மீனுக்கா வாரி தூர்த்தான்.

(பொருள்) அப்படிப்பட்ட அசுரன் எருமை மாட்டு முகத்தை உடையவனாக இருந்தபடியால், ஒவ்வொருவரின் முடிவு காலத்தை எதிர்பார்த்து இருக்கும் தென் திசைத் தலைவனான இயமன் அஞ்சி தன் எருமைக் கடாவில் ஏறாமல் காலினால் நடந்து திரிந்தான் என்றால், அந்த மகிடாசுரனுடைய கொடுமை நம்மால் எப்படிச் சொல்லக்கூடும்? வீசும் ஒளிவடிவாகிய சிவபிரான் இருக்கிற கைலாயத்தையும் சாயச்செய்தான்; மீன் வேண்டிய தற்காகக் கடலையும் தூர்த்தான். 4

339 மயன்எனும் தச்சன் செய்த
மகிடமா புரத்தில், அன்னான்,
அயன்அறுகு, அரிசி நல்க
இருக்கும்நாள், அவனுக்கு ஆய
பயன்உறு நுகர்ச்சி வேண்டி,
ஆயிரம் படைக்கை யாளர்
கயம்முதல் விலங்கை நாடி
வேட்டையாக் கானில் சென்றார்,

(பொருள்) மயன் என்ற தேவதச்சனால் செய்யப்பட்ட மகிடபுரத்தில் அந்த அசுரன், நான்முகன் ஒவ்வொருநாளும் அறுகும் அரிசியும் கொடுக்க வாழ்ந்து கொண்டிருக்கின்ற நாளில், அந்த அசுரன் உண்ணுகிற இறைச்சிக்காகப் படைக்கலங்கள் ஏந்திய ஆயிரம் பேர்கள், யானை முதலான விலங்குகளைத் தேடி வேட்டைக்காகக் காட்டுக்குப் போனார்கள். 5

340 தானவர் சென்று, வஞ்சி
தவம்செயும் வனத்தைச் சூழ,
வானவர் பணியும் அட்ட
வயிரவர் தொலைந்தார் ஆவி;
போனவர் அழிந்த வாறும்
புரிகுழல் தவமும், தூதர்
ஆனவர் அவுணர் கோவுக்கு
அடிபணிந்து அறிவித் தார்கள்.

(பொருள்) அப்படி வேட்டைக்கு வெளிப்பட்ட ஆயிரம் அசுரர்களும் வநது, பார்வதி தவம் செய்துகொண்டிருக்கிற வனத்தைச் சுற்றிக்கொள்ள, அதைக் கண்டு தேவர்கள் பணியக், காவலாக இருந்த அஷ்ட வயிரவர்கள் அந்த ஆயிரம் பேரையும் கொன்றார்கள்; அவர்கள் இறந்துபோனதும், சடையாகத் திரித்துக் கட்டிய கூந்தலையுடைய அம்மை தவம் பண்ணுகிறதும், தூதர்கள் மகிடாசுரன் திருவடிகளை வணங்கித் தெரிவித்தார்கள். 6

341 போற்றிஅங்கு அவர்கள் சொல்லப்
புகைநகை பிறந்தது; அங்கி
தூற்றிய இருகண்; அண்ட
கோளமும் சுழன்றது; அங்கே
நாற்றிய திசையின் வேழம்;
நடுங்கியது இமையோர் கூட்டம்;
கூற்றமும் கரந்தது; ஆல
காலமும் குளிர்ந்தது அன்றே.

(பொருள்) தூதர்கள் வணங்கி நடந்ததைத் தெரிவித்த அளவில் புகை உண்டாகும்படி கோபச்சிரிப்பு உண்டாயின; இரண்டு கண்களும் நெருப்புப் பொறிகள் வீசின; அண்டகோளங்கள் எல்லாம் கிறு கிறு என்று சுழன்றன; எட்டுத்திக்கில் இருக்கிற யானைகளும் தலையைத் தொங்கப்போட்டன. தேவர் கூட்டம் நடுக்கத்தை அடைந்தது; எமனும் ஒளித்துக்கொண்டான்; ஆலகால விடமும் குளிர்ந்தது. 7

342 அப்படி மகிடன் சீறும்
அளவினில், நிகும்பன் என்போன்,
"செப்பிடும் உனது கோபம்
பொறுப்பரோ சிறியர்" என்றே,
"முப்புடை இளநீர் என்னும்
முலைச்சிவாழ் வனத்துள் ளாரைக்
கைப்படை அதனால் கொல்வேன்"
எனச்சொல்லிக் கடிது போனான்.

(பொருள்) அவ்வாறு மகிடாசுரன் கோபிக்கும் அளவில் நிரும்பாசுரன் என்கிற படைத் தலைவன், "அரசனே! உம்முடைய கோபத்தை அற்பமானவர்களா பொறுப்பார்கள்?" என்று சொல்லி, "தெங்கினது மூன்று பக்கங்களையுடைய இளநீர் ஒத்த தனம் உடைய பார்வதி தவம்செய்கின்ற வனத்தில் இருப்போரைக் கையில் இருக்கின்ற வாளால் கொன்று வருகிறேன்" என்று விரைவில் புறப்பட்டுப் போனான். 8

343 குடதிசைக் கடலைச் சீறிக்
குணதிசைக் கடல்சென்று என்ன,
நெடியதேர், கரிமா, சேனை
எழுந்தன; நிகும்பன் என்போன்
வடகிரி தனக்கும் கும்ப
மாமுனி மலைக்கும் நேரே,
இடைஒரு கரிய மேரு
எழுந்ததாம் என்னச் சென்றான்.

(பொருள்) மேற்குத் திசையில் உள்ள கடலின்மேல் கோபித்து, கிழக்குத் திக்கிலுள்ள கடல் போர்புரியப் புறப்பட்டதுபோல். பெரிய தேர்களும் ,யானைகளும், குதிரைகளும், காலாட்களும் புறப்பட்டன; நிரும்பாசுரன் மகமேருவுக்கும், கலசத்தில் பிறந்த அகத்தியர் இருக்கின்ற பொதியமா மலைக்கும் நடுவில் நிறைந்த ஒரு கரிய மேரு எழுந்தது என்று சொல்லும்படியாகப் போனான். 9

344 எழுந்துஅவனும் மரகதத்தேர் துரகதம்ஆ
யிரம்பூண்ட இரதம் ஏறி,
வழிந்தகரி மதக்கடலை எழுந்த,துகள்
அடக்க,உமை வனத்தில் சென்றான்;
கொழுந்துவிடும் கனல்அனையார் வரவுகண்டு,
பலகோடி குன்றம் வீசத்
தழைந்தபடைத் தாக்கணங்கும் நோக்கணங்கும்
பொருதுஎதிரே தடுத்தார் அன்றே.

(பொருள்) இவ்வாறு புறப்பட்ட நிரும்பாசுரன் பச்சைக் குதிரைகள் ஆயிரம் கட்டிய தேரில் ஏறிக்கொண்டு அப்பொழுது எழும்பிய சிறு அணுக்கள், முன் போகின்ற யானைகளின் கன்னம், கபோலம், பீஜங்களாகிற இவைகளில் இருந்து போகிற மதஜலம் கடலாகத் தேங்கி இருப்பதை வற்றச் செய்ய, பார்வதி தவம் செய்யும் வனத்திற்குப் போனான். கொழுந்துவிட்டு எரியும் நெருப்பை ஒத்த அசுரப்படைகள் அநேக கோடி மலைகளை விட்டு எரிய, இவர்கள் வருவதுகண்டு அம்மையார் இடத்தில் இருக்கிற தாக்கணங்கு நோக்கணங்கு என்னும் இருவரும் கைகளில் படைக்கருவிகளை ஏந்தியவர்களாய்ப் போய் எதிரே தடுத்தார்கள். 10

345 சண்டன்,உருத் திரன்,சோமன், கபாலி,நிகர்
சங்கரன்,கோ தண்டன், வீரன்,
எண்தகைய சித்திராங் கதன்,என்னும்
வயிரவர்கள் இருநால் வோரும்,
அண்டம்முகடு உடையநகைத்து, ஆனைகளைத்
தொலைத்திட்ட அரிகள் போலக்
கண்டகனும் சாரதியும் தேரும்அன்றிச்
சேனைஎல்லாம் கணத்தில் சாய்த்தார்.

(பொருள்) சண்டன், உருத்திரன், சோமன், கபாலி, தனக்குத் தானே ஒத்த சங்கரன், கோதண்டன், வீரன், பெரிய வீரன் என்று மதிக்கத்தக்க சித்திராங்கதன் இவ் எட்டு வயிரவர்களும், அண்ட கோளங்களும் உடைபட யானைகளைக் கொல்லுகிற சிங்கங்கள் போலக் கர்ச்சித்து, நிகும்பாசுரனும் அவன் சாரதியும் தேரும் தவிர, மற்றச் சேனைகளை எல்லாம் நொடிப் பொழுதில் கொன்றார்கள். 11

346 அட்டவயி ரவர்படையால், அணங்குகளால்,
தனதுபடை அழிதல் நோக்கி,
வட்டநெடும் தேர்முடுக்கித் தாக்கணங்கின்
முகத்தில்,எண்ணில் வாளி கோத்தான்;
விட்டகணை களைவிலக்கித் தேர்உருட்டும்
சாரதியை வீழ்த்தி, வாளி
தொட்டகரங் களைப்பிடுங்கி, அவன்உயிரைக்
குடித்தனள்அச் சூர மாது.

(பொருள்) எட்டு வயிரவர்களுடைய படைக்கருவிகளாலும், இரண்டு தெய்வப் பெண்களாலும், தன்னுடைய படை முழுவதும் இறந்துபோவதைப் பார்த்து, நிகும்பாசுரன் நெடிய தேரைச் சக்கரமாகக் கொண்டு, தாக்கணங்கு என்பவளுடைய முகத்தில் கணக்கில்லாத பாணங்களைவிட்டான்; அப்படி அவன் விட்ட பாணங்களை விலக்கித் தேர் நடத்துகிற சாரதியைக் கொன்று, அம்பு தொடுத்த கைகளை அறுத்து, அவனுடைய தலையையும் அறுத்துக் கொன்றாள் அந்தத் தாக்கணங்கு. 12

347 ஓடினசெங் குருதிநதி, உடல்இழந்து
விழும்அவுணர் உயிர்கள் போல;
ஆடினவெம் குறைத்தலைகள், அனுதினமும்
அருந்துகின்ற அலகை போல;
சூடினர்கள் வைரவரும் தாக்கணங்கும்
நோக்கணங்கும் தும்பை வாகை;
வீடினர்கள் அவுணர்என மகிடமுகற்கு
உரைத்தனர்போய் விரைந்து தூதர்.

(பொருள்) வயிரவர்களாலும், தெய்வப் பெண்கள் இருவராலும் உடல் அறுபட்டுச் சீக்கிரத்தில் போகும் அசுரர் உயிர்போல் இரத்த நதி ஓடியது; தினமும் இறைச்சியைத் தின்று கூத்து ஆடுகிற பேய்கள் போல் கொடிய கவந்தங்கள் கூத்து ஆடின; வயிரவர்களும், தாக்கணங்கும் நோக்கணங்கும், வெற்றிக் குறிகளாகிய தும்பை வாகை என்கிற மாலைகளைச் சூடிக் கொண்டார்கள். அசுரர்கள் இறந்து போனார்கள் என்று மகிடாசுரனுக்குத் தூதர்கள் விரைவில் போய்ச் சொன்னார்கள். 13

348 கேட்டஅளவில், மகிடமுகன் கயிடவன்தன்
முகம்நோக்கிக் கிளத்து வான்,"ஓர்
காட்டில்உறை சிறுபேயும் கணங்களும்நம்
பெரும்படையைக் கடிந்து வென்றால்,
நாட்டன்நுதல், அயன்,அரியும், எனக்குஇனிமேல்,
திறைகொடுக்க நாணு வார்"என்று
ஈட்டுநகை புரிந்துஎழுந்தான்; ஏறினன்ஆ
யிரம்கரிசூழ் இரதம் மீதில்.

(பொருள்) மகிடாசுரன் இவ்வார்த்தையைக் கேட்ட அளவில் தன் அருகில் இருக்கும் கயிடவன் முகத்தைப் பார்த்துச் சொல்லுவான்; "ஒரு காட்டில் உலவும் சிறிய பேய்களும் கணங்களும் நம்முடைய பெரிய சேனைகளைக் கோபித்துக் கொன்றன என்றால், நெற்றிக் கண்ணராகிய சிவன், நான்முகன், திருமால் முதலானவர்கள் எனக்குக் கொடுக்கும் திறைப் பொருளைக் கொடுத்து, நான் சொன்னபடி கேட்பார்களோ?" என்று அதிகமாகிய நகை கொண்டு எழுந்திருந்து ஆயிரம் யானைகள் கட்டிய தேரில் ஏறிக் கொண்டான். 14

349 பதின்ஒரு கோடி யானைப்
பலத்தர்,ஆம் காந்தன், நீலன்,
முதுகரன், குருதி, அண்டன்
நீசகன், சண்டன், முண்டன்,
மதுகயி டவன்,தீக் கண்ணன்,
புகைக்கணன், மாலி என்னும்
துதிகொள்ஆறு இரண்டு பேரும்
தேர்களைத் தூண்டிச் சென்றார்.

(பொருள்) மகிடாசுரன் தேரில் ஏறின உடன், பதினொரு கோடி யானைப் பலத்தையுடையவராகிய காந்தன், நீலன், முதுகரன், குருதி, அண்டன். நீசகன், சண்டன், முண்டன், மதுகயிடவன், தீக்கண்ணன். புகைக் கண்ணன், மாலி என்று பலராலும் துதிக்கப் புட்ட பன்னிருவரும் தங்கள் தங்கள் தேர்களை நடத்திக்கொண்டு போனார்கள். 15

350 கரிமுகத் தவர்,நி வாத
கவசர்கள், கால கேயர்,
பரிமுகத்து அவுணர், மேதிப்
பணைமுகத் தவர்கள், பற்றி
எரிமுகத்து அவுணர், சீறி
எழும்புலி முகத்துக் கள்வர்,
அரிமுகத்து அவுணர் வெள்ளம்
ஆயிரம் சென்ற அன்றே.

(பொருள்) யானை முகத்தை உடையவர்கள், நிவாதகவசர்கள், காலகேயர்கள், குதிரை முகத்தையுடைய அரக்கர்கள், எருமை முகத்தை உடையவர்கள், நெருப்பு எரிந்து கொண்டிருக்கிற முகத்தையுடைய அவுணர்கள்; சீறிப்பாய்கின்ற புலிமுகத்தை உடையகள்வர்கள், சிங்கமுகத்தையுடைய அரக்கர்களாகிய அசுரர் கூட்டம் ஆயிரம் வெள்ளம் நடந்தன. 16

**351** பாய்பரி அதனில் பாதி,
பரிகளில் கரிகள் பாதி,
காய்கரி அதனில் பாதி,
கடும்பரிக் கொடித்தேர் செல்லப்
பேய்கரும் கொடிகள் ஆடப்
பிணங்கிவெண் கொடிகள் ஆட,
வேய்களப் பறைகள் ஆர்ப்பக்
குறுகினன் விந்தை கானில்.

(பொருள்) இப்படி ஆயிரம் வெள்ளம் காலாட்கள் புறப்பட்ட உடனே ஐந்நூறு வெள்ளம் குதிரையும், இருநூற்று ஐம்பது வெள்ளம் யானையும், வேகமாகச் செல்கின்ற நூற்று இருபத்து ஐந்து வெள்ளம் தேரும் நடக்கப், பேய்களும், காக்கைக் கூட்டமும் விருந்து அகப்படும் என்று களித்துக் கூத்தாட, வெளளைக் கொடிகள் ஆடப், புல்லாங் குழல் பேரிகை இவை முதலான இசைக் கருவிகள் முழங்க, மகுடாகரன், அம்மை இருக்கிற காட்டிற்கு வந்து சேர்ந்தான், 17

**352** அடலவன் வரக்கண்டு, அஞ்சி,
அடைந்து,உமைக்கு "அபயம்" என்று
படர்உறு முனிவர் கூற,
உமையவள் பயங்கள் தீர்த்து,
விடல்உடன் அருகு நின்ற
விந்தையை விரும்பி நோக்கி,
"கடகம்கொண்டு அடுவாய்" என்றுள்;
விடைகொடு பெயர்ந்தாள் கன்னி.

(பொருள்) வல்லமை பொருந்திய மகிடாசுரன் வருவதைப் பார்த்துப் பயப்பட்டு ஓடிவந்து, பார்வதிக்கு அபயம் என்று மிக்க துன்பத்தை அனுபவிக்கும் முனிவர்கள் முறை இட்டுச் சொல்ல, அம்மை அவர்களுடைய பயங்களைத் தீர்த்து, உடனே தன் அருகில் நின்ற துர்க்கையைப் பார்த்து உன்னுடைய கத்தியினால் அவ் அரக்கனை கொன்றுவிடு என்று சொல்ல உத்தரவு பெற்றுப் புறப்பட்டாள் துர்க்கை. 18

353 ஆளிமேல் கன்னி செல்ல,
அருணநா யகிமுன் செல்ல,
காளிதுந் துமிபின் செல்ல,
சுந்தரி கணங்கள் செல்ல,
ஞாளிமேல் வடுகர் செல்ல,
நான்முகி முதலாம் மாதர்
தூளிமேல் செல்ல, தாங்கள்
விடையின்மேல் தூசி சென்றார்.

(பொருள்) துர்க்கை சிங்க வாகனத்தில் ஏறிக்கொண்டு போக, அருணநாயகி என்பவள் முன்னே போகவும், காளி, துந்துமி என்னும் இருவரும் பின்னே போகவும், பார்வதியின் கணங்கள் விரைந்து போகவும், நாய் வாகனத்தில் வயிரவர் போகவும், அபிராமி முதலாகிய மாதர் எழுவரும் தங்கள் தங்கள் வாகனங்களில் ஏறிக்கொண்டு தூசிப்படையாகத் துகள் எழும்பப் போனார்கள். 19

354 சென்றுதோ மரத்தில், குன்றில்,
சிலைகளில், படையில், கையில்,
கன்றிய மகிடன் சேனை
பாதியைக் கணத்தில் சாய்த்தார்;
வன்திறல் மகிடன் சேனைத்
தலைவரும் மகிடன் தானும்,
குன்றுஎன எதிர்ந்து, கன்னி
படைஎலாம் துரத்திச் சென்றார்.

(பொருள்) இப்படித் துர்க்கை சேனைகள் போன உடனே உலக்கையினாலும், மலைகளாலும், வில் முதலாகிய பிற படைக் கருவிகளாலும், கையினாலும் கோபத்துடனே போர் செய்கிற மகிடாசுரனுடைய பாதிச் சேனையை ஒரு நொடிப் பொழுதிலே கொன்று விட்டார்கள்; மகிடாசுரனும் அவனுடைய சேனைத் தலைவர்களும் மலைபோல் எதிர்த்துத் துர்க்கையின் சேனைகளை எல்லாம் துரத்திச் சென்றார்கள். 20

355 துந்துமி முதலா நால்வர்
இடைந்தனர்; சூலி, ஆல
கந்தரி, வராகி, ஆறு
முகத்தவள் திகிரிக் கையாள்,
இந்திரை, மறையாள், என்னும்
எழுவரும் மறைந்தார்; ஞாளி
உந்தினர் இடைந்தார்; கன்னி
மனம்தளர்ந்து உமையே என்றாள்.

(பொருள்) அசுரனது படைகள் எதிர்த்துப் போர் செய்த அளவில் துந்துமி, காளி, மதங்கி, கண்டி என்னும் நான்கு சத்திகளும் தோற்றார்கள்; சூலி, நீலகண்டி, வராகி கௌமாரி, சக்கரப் படை தாங்கிய நாராயணி, இந்திரை, பிராமி என்கிற ஏழு மாதரும் போர் புரிய முடியாமல் காட்டில் ஒளித்தார்கள்; நாய் வாகனத்தை உடைய வயிரவர்களும் தோற்றார்கள்; துர்க்கை மனம் தளர்ந்து உமையவளை நினைத்து நின்றாள். 21

356 "உறுதுணை உமையே"! என்னும்
பொழுதில்,யோகினிகள் வானில்
அறுபது நாலு கோடி
அதிர்த்துஎழுந்து, அழலின் மாரி
இறுதியாய் உருளச் சேனை
இடிமழை சொரிகை யாலே,
குறுகிய மகிடன் சேனை;
தலைவரும் கொதித்துச் சென்றார்.

(பொருள்) துர்க்கையானவள், இக்காலத்தில் அம்மையே நமக்குத் துணை என்ற போது, அறுபத்து நான்கு கோடி யோகினிகள் வானத்தில் ஆர்ப்பரித்து எழுந்து நெருப்பு மழையையும், இடி மழையையும், உலக முடிவுக்கால மழையைப்போல் சொரிந்த படியினால், மகிடாசுரனுடைய சேனைகள் எரிந்துபோயின; அப்பொழுது சேனைத் தலைவர்கள் கோபித்துப் போர் புரிந்தார்கள். 22

357 அருசி கன்றனைச் செற்றனள் ஆரணி;
மருவு காந்தனை மாய்த்தனள் வாரணி;
கரனை வென்றனள் வேல்உடைக் காரணி;
நரகன் ஆர்உயிர் உண்டனள் நாரணி.

(பொருள்) அப்படி மகிடாசுரனுடைய சேனைத் தலைவர்கள் எதிர்த்த உடனே, அபிராமி என்பவள் அருச்சிகன் என்பவனைக் கொன்றாள்; வாரணி என்பவள் வலி பொருந்திய காந்தன் என்பவனைக் கொன்றாள்; வேல் ஏந்திய சண்முகி என்பவள் கரன் என்னும் அசுரனைக் கொன்றாள்; நரகன் என்னும் அசுரனை நாரணி என்பவள் கொன்றாள். 23

358 சூல பாணி தொலைத்தனள் மிண்டனை;
கோல மாமுகி சண்டனைக் கொன்றனள்;
ஆல ஊரணி மதுவை அழித்தனள்;
நீலன் ஆர்உயிர் இந்திரை நீக்கினாள்.

(பொருள்) சூலப் படையுடைய காளி என்பவள் மிண்டன் என்பவனையும், பெரிய பன்றி முகத்தையுடையவராகி சண்டன் என்பவனையும், விடத்தையுடைய நீல கண்டி மது என்னும் அசுரனையும், இந்திராணி நீலன் என்பவனையும் கொன்றார்கள். 24

359 துந்து மிக்கொடி சோணித ஊணனைக்
கந்து மிக்கும் படிக்கதை காட்டினாள்;
நந்து மிக்க நிகர்த்தஅரு ணாசலை
வந்து மிக்குளரிக் கண்ணனை வாட்டினாள்.

(பொருள்) துந்துமிக் கொடியையுடையவள் சோணித ஊணன் என்பவனைத் தலை அறும்படி தண்டாயுதத்தால் அடித்தாள்; சங்கத்தைக் கையிலே ஏந்திய அருணாசலை என்பவள் நெருப்புக் கண்ணனைக் கொன்றாள். 25

360 கயிட வன்புகைக் கண்ணன் இருவரும்
செயிரியின் மாளுறத் சிந்தினள் சுந்தரி;
நெயிடு மிக்க நிணம்இடும் வேலினள்
மயிட வன்முகம் கண்டுஎதிர் வந்தனள்.

(பொருள்) சுந்தரி என்கிற சத்தியானவள் கயிடவனையும், புகைக் கண்ணனையும் போரில் கொன்றாள்; நெய்யைப் பொழிகின்ற மிகுந்த நிணம் பொருந்திய வேல் படையை ஏந்திய துர்க்கை மகிடாசுரனைக் கண்டு எதிர்த்து வந்தாள். 26

361 வெம்க டாமுகன் மேவலும், மாதர்கள்
தங்கள் ஆயுதம் கொண்டு தடுத்தனர்;
சிங்கம் ஊர்தி அவன்எதிர் சென்று,கைச்
சங்கை ஊதினள் மேரு சலிக்கவே.

(பொருள்) வெப்பம் பொருந்திய எருமைக் கடா முகத்தையுடைய ஓர் அரசன் போருக்கு வந்த அளவில் சபத மாதர்களும், தங்கள் படைக் கருவிகளால் அவன் விட்ட படைக் கருவிகளை விலக்கினார்கள்; அவ் வேளையில் சிங்க வாகனத்தில் ஏறி வந்த துர்க்கா தேவியானவள், அவனுக்கு எதிரே போய்த் தன் கையில் ஏந்தியுள்ள சங்கத்தை மகாமேரு அசையும்படி வாயில் வைத்து ஊதினாள். 27

362 செருவில் அங்குஅவள் சங்கொலி செய்திட,
ஒருவர் இன்றி அவுணர் உறங்கினர்;
பெருவ ரங்களில் பெற்ற சரங்களை
இருவ ரும்சொரிந் தார்மழை என்னவே.

(பொருள்) வல்லமை பொருந்திய சிங்க வாகனத்தையுடைய துர்க்கையானவள் போர்க்களத்தில் சங்கு ஒலி எழுப்ப, அசுரர்கள் ஒருவரும் இல்லாமல் மயக்கத்தை அடைந்தார்கள்; அருமையாகிய பெரிய வரத்தினால் பெற்றுக்கொண்ட அம்புகளை இருவரும் மழைபோலச் சொரிந்தார்கள். 28

363 எந்த எந்தக் கணைஇவள் ஏவினும்,
அந்த அந்தக் கணையால் அறுத்தனன்;
விந்தை மீண்டுஇரு வெம்பிறை வாய்க்கணை
சிந்தினாள்,அவன் சென்னி அழுந்தவே.

(பொருள்) எந்த எந்த அம்புகளைத் துர்க்கை விட்டாலும், அவைகளை அந்த அந்த அம்புகளினாலே மகிடாசுரன் அறுத்துத் தள்ளினான், அதன் பிறகு துர்க்கா தேவி, பின்னும் இரண்டு அர்த்த சந்திர அம்புகளை அவனுடைய தலையில் அழுந்தும்படியாக விட்டாள். 29

364 வெம்பு செம்புனல் வெள்ளம் உருக்கிய
செம்பு போலச் சிதற விடும்கணை
அம்பு போல இருக்கினும், ஆங்குஅவன்
கொம்பு போல விளங்கின கோடியே.

(பொருள்) கொடிய போர்க்களத்தில் ஓடும் இரத்த வெள்ளம் உருக்கின செம்பு போல் சிதறி விழவிட்ட அர்த்த சந்திர அம்புகள் அம்பாக இருந்தாலும், அசுரன் தலையில் முளைத்து இருந்த கொம்பு இரண்டுபோல் தலையில் தைத்து அழுந்தி வளைந்து தோன்றின. 30

365 வெற்றி கொண்டவள் வில்லை முறித்தனன்;
உற்ற அம்பில் சிலைநுதல் ஊன்றினாள்;
கொற்ற அம்பின் குலங்கள் விடுத்தவன்
நெற்றி யில்கண் அழலின் நிமிர்ந்ததே.

(பொருள்) வெற்றி கொண்டவளாகிய துர்க்கையின் கையில் இருந்த வில்லை இரண்டாக முறித்தான்; அம்பினால் அசுரனுடைய நெற்றியில் அடித்தாள்; மிகப் பலம் வாய்ந்த பற்பல அம்புகளை விட்டவன் ஆகிய அந்த மகிடாசுரன் நெற்றியில் பரமசிவனுடைய நெற்றிக்கண் நெருப்புப் போலச் சுறுக்கு என்று தாக்கியது. 31

366 சாப வெம்சிலை போகத் தரிப்பளோ?
கோபம் விஞ்சிக் கொதித்துஎழும் கூற்றத்தில்
தீபம் என்னத் திகிரிஒன்று ஏவியே,
பாப காரி தலைவிழப் பண்ணினாள்.

(பொருள்) துர்க்கையானவள் வில் ஒடிந்ததும், பொறுக்காமல் அதிக கோபம் கொண்டு கொதித்து எழும் எமன்போல் ஒளிவிடுகின்ற அக்கினிச் சுடர் போன்ற ஒரு சக்கிராயுதம் விட்டுப் பாவியாகிய மகிடாசுரனுடைய தலை அறும்படிச் செய்தாள். 32

367 கன்னி ஆழி எறியக் கடாமுகன்
சின்ன பின்னங்கள் ஆயும் சிதைந்திலன்;
முன்னை மாதவத்து உண்மையின் மும்மதம்
துன்னும் மால்கரி யாய்எதிர் தோன்றினான்.

(பொருள்) என்றும் அழிவில்லாத துர்க்கையானவள் சக்கிராயுதத்தை விட்டு எறிய, மகிடாசுரன் உடல் சின்னபின்னம் ஆகியும் சாகாதவன் ஆகி, முன்னர்செய்த தவ வல்லமையினால் மும்மதங்களைப் பொழிகின்ற பெரிய யானை உருவம்கொண்டு எதிராக வந்து எதிர்த்தான். 33

368 ஆளி ஏறுசென்று அங்குஅதன் உச்சியில்
மூளை வாரி நுகர்ந்தது; மொய்ம்பினான்
மீள வும்கதை கொண்டுஎதிர் வீசினான்;
கூளி நாயகி கூரவேல் ஏவினாள்.

(பொருள்) அப்படி யானை உருவம் கொண்டு எதிர்த்த அளவில் துர்க்கை ஏறுகின்ற ஆண் சிங்கம் போய் அந்த யானை உச்சியில் இருக்கின்ற மூளையைக் கையினால் அறைந்து தோண்டி எடுத்துத் தின்றது; அதிக வல்லமையுடைய அவன் அதனாலேயும் சாகாமல் கையினால் திரும்பியும் தண்டாயுதம் கொண்டு எறிந்தான்; பேய்களுக்குத் தலைவியாய் இருக்கிற துர்க்காதேவி கூர்மைபொருந்திய வேலாயுதத்தை விட்டாள். 34

369 விடம்த தும்பிய வேல்பட, வெம்சமர்க்கு
இடைந்த தும்பி முகனும் இறந்தனன்;
அடைந்த தும்பிகள் ஆயிரம் ஆயிரம்
குடைந்த தும்பி மரம்எனக் குன்றியே.

(பொருள்) விடத்தைக் கக்கிக்கொண்டு இருக்கிற வேல்படை பாய்ந்த உடனே, கொடிய போரில் தோல்வி அடைந்து நின்ற யானைமுகன் அதைச் சகிக்க மாட்டாமல் இறந்துவிட்டான்; அநேகம் ஆயிரம் வண்டுகள் குடைய உள்ளே ஒன்றும் இல்லாமல் தொளையோடு கூடிய அத்திமரம் போல் குன்றினான். 35

370 வீழ்ந்த பின்,பரி வேடமது ஆய்எதிர்
போந்து, வெம்கதை கொண்டு புடைத்தனன்;
சேர்ந்த வன்கதை யும்அவன் சென்னியும்
நாந்த கம்கொண்டு அறுத்தனள் நாரணி.

(பொருள்) அப்படி விழுந்து இறந்துபோன உடனே, குதிரை முகம் உள்ள அசுரனாகி எதிரே வந்து கொடிய தண்டாயுதத்தினால் அடித்தான்; அவ்வாறு அடித்த தண்டாயுதத்தையும் அவனுடைய தலையையும் கத்தியினால் அறுத்துத் தள்ளினாள் துர்க்கை. 36

371 அங்குஅ தன்பின், அழல்உருவு ஆயினன்;
கங்கை ஆயினன்; கார்இருள் ஆயினன்;
பங்க யாசனன் ஆயினன்; பங்கய
மங்கை நாயகன் ஆயினன், மாயையால்.

(பொருள்) அதன் பின்பு அசுரன் நெருப்பு உருவம் கொண்டு வந்தான்; அதன் பின்பு பொங்கும் தண்ணீர் உருவம் கொண்டும், இருள் ஆகியும், தாமரை மலரில் இருக்கின்ற நான்முகன் ஆகியும், செந்தாமரை மலரில் வசிக்கும் இலக்குமியின் கணவராகிய திருமால் ஆகியும் எதிர்த்தான், மாயையினால். 37

372 ஈது கண்டு,அவள் என்செய்வள்? மாயையால்
வாதை செய்தனன் என்று தளர்ந்து,உமை
பாதம் நெஞ்சினில் பற்றினள்; பற்றிய
போதில் ஓர்மொழி விண்ணில் புகன்றதே.

(பொருள்) அப்படி அசுரன் பலப்பல வடிவம் கொண்டு வருவதைப் பார்த்து, மாயையினாலே துன்பப்படுத்துகின்றான்; என்ன தந்திரம் செய்தாலும் இவன் சாகிறதில்லை; இதற்கு என்ன செய்வேன் என்று துர்க்கையானவள் பார்வதி தேவியினுடைய இரண்டு திருவடிகளையும் மனத்திலே எண்ணித் துதித்தாள்; அப்படித் துதித்த உடனே வானத்தில் நின்று அசரீரி ஒரு வார்த்தை சொல்லிற்று. 38

373 மாய வேடங்கள் அன்றி, மகிடமே
ஆய போதில் அவன்தலை தள்ளியே,
தூய தாளின் மிதிக்கத் தொலைந்திடும்
தீய மாயை எனச்சொலத் தேறினள்.

(பொருள்) அனேக விதமான மாயாவேடங்கள் அல்லாமல், இயற்கை வடிவமான எருமை முகவடிவம் கொண்டபோது, அவன் தலையை அறுத்துக் கீழே தள்ளி உனது தூய்மையான காலினாலே மிதித்தால், தீமை பொருந்திய மாயை தொலைந்துபோம் என்று சொல்ல, துர்க்கை தேறினாள். 39

374 மட்டில் மாயை வடிவின் மலைந்தபின்,
நெட்டு இலைத்தலை சூலத்தின் நீக்கினாள்;
துட்டன் மேதிய தாய்ப்படை தொட்டனன்;
வெட்டி வீழ்த்தி அடியின் மிதித்தனள்.

(பொருள்) அளவிலலாத மாயை வடிவம் கொண்டுவந்து பெரிய போர் புரிந்தபின் கொடுமையான தகட்டு வடிவமாகச் செய்யப்பட்ட சூலத்தினால் குத்திக் கொன்றாள். பின்பு அத் துட்டன் பழைய எருமைக் கடா முகத்தை உடையவனாகி, படைக் கருவிகளைச் செலுத்திய அளவில், அவைகளை விலக்கி வாட்படையால் அவன் தலையை வெட்டித்தள்ளிக் காலினால் மிதித்துக் கொன்றாள் துர்க்கை 40

375 ஒப்புஇல் லாப்பதம் ஊன்றி மிதித்திடில்
தப்பின் மாயை தவிர்ப்பது பாரமோ?
அப்ப தத்தை நினைக்கினும் ஆணவம்
செப்பு காமியம் மாயையும் தீர்க்குமே.

(பொருள்) துர்க்கை பாதத்தை நினைத்தாலும், அதை நினைத்தவருடைய ஆணவம், மாயை, காமியம் என்கிற மும்மலங்களையும் நீக்கிவிடும்; அப்படிப்பட்ட ஒப்பு இல்லாத பதம் படும்படி ஊன்றி மிதித்தால், பொய்யாகிய மாயை மாத்திரம் தவிர்ந்து ஒழிவது பெரியதோ? 41

376 போத வானவர் பூமழை பெய்தனர்;
மேதி மாமுகன் மெய்க்கதி உற்றனன்;
தீதுஇல் லாஅவன் செம்களம் தன்னில்,ஓர்
சோதி லிங்கம் இருந்தது தோன்றவே.

(பொருள்) தேவர்கள் மிகவும் மலர் மழை பொழிந்தார்கள்; மகிடாசுரனும் அம்மை கையினால் இறந்ததினாலே மெய்ம்மையான முத்தியைச் சேர்ந்தான்; யாதொரு குற்றமும் இல்லாத அவன்சிவப்பாகிய கண்டத்தில் ஒரு சோதிமயமாகிய படிக இலிங்கம் இருந்தது. 42

377 கண்ட மட்டில்அக் கைக்கொளக் கார்நவ
கண்ட மட்டில் புரந்த கடாமுகன்
கண்ட மட்டில் இருந்த கடவுளைக்
கண்ட மட்டில் எடுத்தனள் கன்னியே.

(பொருள்) ஒன்பது கண்டங்களையும் ஆண்ட எருமைக் கடா முகத்தையுடைய மகிடாசுரனது கழுத்தை இலக்காக வைத்துத் துர்க்கை அறுக்க, அக்கழுத்தில் இருந்த படிக இலிங்கத்தைக் கண்டபோதே கையினால் எடுத்தாள். 43

378 கொண்டு சென்று,உமை கோகந தப்பதம்
கண்டு போற்றிக் கடவுளை ஈந்தனள்;
வண்டு வார்குழல் வாங்கினள்; செங்கையை
அண்டர் நாயகன் விட்டிலன் ஆசையால்.

(பொருள்) படிக இலிங்கத்தை எடுத்துக்கொண்டு போய் உமாதேவியின் தாமரை மலர் போன்ற திருவடிகளைத் தொழுது நடந்த காரியம் எல்லாம் சொல்லி இலிங்க வடிவாகிய பரமசிவனைக் கொடுத்தாள்; வண்டுகள் சூழ்ந்த நீண்ட கூந்தலையுடைய பார்வதி கையினால் வாங்கினாள்; எல்லாத் தேவர்கட்கும் தலைவராகிய பரமசிவன் அம்மை கைமேல் கொண்டுள்ள ஆசையினால் செந்தாமரை மலரை ஒத்த கையை விடாமல் கெட்டியாக இருந்தார். 44

379 தாயும் அங்குஅது கண்டு மகிழ்ந்து,"இறை
ஏய என்கரம் பற்றியது ஏது?"என
வாயை அங்கை புதைத்து மகபதிக்கு
ஆயி ரம்கண் அளித்தவன் கூறுவான்.

(பொருள்) பார்வதி அந்த ஆச்சரியத்தைப் பார்த்து மகிழ்ச்சி அடைந்து, "பரமசிவம் அன்புடனே என் கையை விடாமல் இருந்தது எதனால்?" என்று கேட்க, தேவேந்திரனுக்கு ஆயிரம் கண் கொடுத்த கௌதமர் வாயைக் கையினால் பொத்திக்கொண்டு அம்மைக்குச் சொல்லத் தொடங்கினார். 45

380 முன்அகத்தி யன்முதல்ஆம் முனிவர்கள்ஐம்
பதின்மர்வர முனிபால் செல்ல,
அன்னவன்தன் தவமதிப்பால் அவமதிப்பாய்
இருந்திடவும், அவனை நோக்கிப்
பொன்அனைய தவமுனிவர் வெகுண்டுஉரைப்பார்:
"எமைஇகழ்ந்த புன்மை யாலே
உன்னரிய கருங்கடவாய் இனிப்பிறக்கக்
கடவாய்"என்று உளையச் சொன்னார்.

(பொருள்) முன் காலத்தில் அகத்தியர் முதலான ஐம்பது தவமுனிவர்கள் கூடி, வரமுனி என்பவருடைய குடிலுக்குப் போனார்கள். அந்த வரமுனி தம்முடையதபோ பலத்தினால் மரியாதையாக உபசாரம் செய்யாமல் அவமதித்து இருந்தார்; அப்போது அவரைப் பார்த்து, பொன்போலும் அரிய தவத்தையுடைய எல்லா முனிவர்களும் கோபித்து, "எங்களை அவமரியாதை செய்த குற்றத்தினால் யாவராலும் குறைவு சொல்லப் பட்ட கரிய எருமைக் கடாவாகப் பிறப்பாய்" என்று அவர்கள் மனம் வருந்திச் சபித்தார்கள். 46

381 அருந்தவர்ஐம் பதின்மரும்அன்று உரைத்தமொழிக்
கொடுமையைக்கண்டு அச்சம் ஆகி,
இருந்தவனும் எழுந்துபணிந்து, "எனதுபிழை
பொறுத்தருள்வீர்!'' என்றான்; அந்தப்
பெருந்தவர்அன் புடன்உரைப்பார்: "மகிடமுகத்து
அவுணன்எனப் பிறக்க, பின்னர்த்
திருந்தஅரன் இடம்வேண்டித் தவம்புரியும்
உமை,கணத்தில் தீர்ப்பாள்'' என்றார்.

(பொருள்) அரிய தவத்தையுடைய ஐம்பது முனிவர்களும் அன்று சொல்லிய சாபத்தின் கொடுமையைக் கேட்டுப் பயப்பட்டு, பெருமை பொருந்திய தவம் செய்த வரமுனியும் எழுந்து வணக்கம் செய்து, முனிவர்களே! தெரியாமல் நான் செய்த பிழையைப் பொறுத்து வேறு சாபம் தாருங்கள் என்றார். அதற்கு முனிவர்கள் ''நீர் எருமை முகம் பொருந்திய அசுரன் ஆகி, அரசு ஆளும் காலத்தில், பரமசிவனது இடப்பாகத்தைப் பெறுவதற்கு தவம் செய்து கொண்டிருக்கிற அம்மை உம்முடைய சாபத்தை நொடிப் பொழுதில் தீர்ப்பாள்'' என்று சொன்னார்கள். 47

382 ஆங்கவர்சொற் படிஅவனும் அசுரர்பெரும்
குலத்தில்உதித்து, அரசன் ஆகி,
ஓங்கியபேர் மகிடன்எனக் கொடும்கோன்மை
புரிகுதலும், ஒருநாள் வேட்டைத்
தீங்குசெய வனத்தில்அடைந்து, அழல்பசியால்
இளைத்துஓடித் திரிந்தான்; ஆங்கே
நீங்குஅரிய அருச்சனைசெய் மன்னதன்என்று
ஒருமுனிவன் நேர்பட் டானே.

(பொருள்) அந்த முனிவர்கள் சொன்னபடி வரமுனி அசுரர் குலத்தில் பிறந்து, அரசனாகி மகிடாசுரன் என்ற பெயரை அடைந்து கொடும் கோல் அரசு செய்துகொண்டு வருகையில், ஒருநாள் வேட்டை ஆடும்படி வனத்தில் வந்து சுட்டு வருத்துகின்ற மிகுந்த பசியினால் இரை ஒன்றும் அகப்படாமல் ஓடித் திரிந்துகொண்டு இருந்தான். அவ்வாறு அலையும் காலத்தில் அவ்விடத்தில் நீங்குதற்கு அரிய தவம் செய்கின்ற மன்னத முனிவன் என்பவன் எதிர்ப்பட்டான். 48

383 மன்னதனும் அவனை;இவன் கரத்துஇலிங்கத்
துடன்விழுங்கி மகிழ்ந்து போனான்;
பின்அதனால் அவன்மிடற்றில் சிவன்உருவம்
இருந்தது;அந்தப் பெருமை யாலே
புன்னிதம்ஆ யினன்;சிவனும் உருத்தரித்த
உடலும்இறை உருவம் அன்றோ?
அன்னதனால் வினைஅடைந்தது; அதுதவிரும்
நவதீர்த்தம் ஆடில் என்றான்.

(பொருள்) எதிர்ப்பட்ட அம்மன்னதன் என்கின்ற முனிவரைக் கையில் இருக்கும் இலிங்கத்தோடே இம் மகிடாசுரன் எடுத்து விழுங்கி விட்டு மகிழ்ச்சியுடன் போனான். பின்பு அவன் கண்டத்தில் சிக்கிக்கொண்டு படிகலிங்கம் இருந்ததினால் மிகுந்த பெருமையை அடைந்து மேன்மை உற்றான். அந்த இலிங்கம் இருந்த கண்டத்தை உடையவனும் சிவவடிவம் அன்றோ? அவனைக் கொன்றபடியினால் பாவம் ஏற்பட்டது; நவதீர்த்தங்கள் ஆடினால் அப் பாவம் போம் என்றார் கௌதமர். 49

384 அன்புமுனி உரைத்தளவில் ஒருமொழிஅந்
தரத்தில்எழுந்து, "அரிய தீர்த்தம்
ஒன்பதும்இவ் இடத்தில்வரும்; அவைவருமாறு
இயற்றும்"என, உமையும் விந்தை
தன்பதும முகம்நோக்கி, "உனதுகைவாள்
எறிந்து,கங்கை தருவாய்!" என்றாள்;
வன்பணிலம் எடுத்தாளும் தொழுது,கைவாள்
நிலத்துஎறிந்து வாங்கும் போதில்,

(பொருள்) மிகவும் பக்தியுடைய கௌதமர் இப்படிச் சொன்ன அளவில், 'பாவம் தீர ஆடுவதற்கு ஒன்பது தீர்த்தமும் இவ்விடத்தில் வரும்படிச் செய்" என்று' வானத்தில் இருந்து ஒரு வார்த்தை பிறந்தது. அதைக் கேட்டுப் பார்வதியும், துர்க்கையின் தாமரை மலர் போன்ற முகத்தைப் பார்த்து, "உன்னுடைய கையில் இருக்கிற வாளினால் பூமியைப் பிளந்து கங்கை வரும்படி செய்" என்று சொல்ல, வெற்றிச் சங்கைக் கையில் ஏந்திய துர்க்கையும் வணங்கித் தனது கையில் உள்ள வாளைப் பூமியில் வீசி எடுத்தபோது, 50

385 நவநதியும், பிறஉளநல் நதிகளும்,அச்
சோகம்தீர் நல்ல தான
சுவைஅதிகம் உதவுபல தடங்களும்,அங்கு
எழுந்த;அந்தச் சுனையின் ஊடே,
பவம்அகல ஒருமாதம் முழுகிஇருந்
தாள்;கரத்தைப் பற்றி நீங்காச்
சிவவடிவும் அகன்றது;தன் உளம்மகிழ்ந்து
கரையில்வந்தாள், தேவர் போற்ற.

(பொருள்) ஒன்பது தீர்த்தங்களும், மற்றும் உள்ள நதிகளும், விடாயாறும்படி உதவி செய்யும் நல்ல இனிமையைத் தருகின்ற அனேகம் தடாகங்களும் அவ்விடத்தில் உண்டாயின; அந் நதிகளில் ஒரு மாதம் வரைக்கும், அம்மை குற்றம் நீங்கும்படி குளித்துக் கொண்டு இருந்தாள். கையைப் பற்றிக்கொண்டு விடாமல் இருந்த இலிங்கமும் கையை விட்டு நீங்கிற்று. அப்போது தேவர்கள் போற்றும்படி மனம் களித்து, அம்மை கரையில் வந்து சேர்ந்தாள். 51

386 அருஉருவாம் ஒருசிவனை, அதன்கரைமேல்
புறத்துஇருத்தி அருச்சித் தாள்;நம்
இருவினையும் தவிர்ப்பானுக்கு "என்பாவம்
தீர்த்தான்"என்று இயல்பேர் இட்டாள்;
திருமருவும் பெரும்சுனைக்கு "இனியகட்க
தீர்த்தம்"எனத் திருப்பேர் இட்டாள்;
குருமணியை அருணகிரிப் பெருமானைத்
தொழக்கனகக் கோயில் சார்ந்தாள்.

(பொருள்) அருவமாயும், உருவமாயும் விளங்கும் ஒப்பற்ற சிவனை அந்த நதிக் கரையில் மேல் புறத்தில் எழுந்தருளச் செய்து அருச்சனை செய்தாள்; நம்முடை நல்வினை தீவினை இரண்டையும் நீக்குகின்ற அப் பரமசிவனுக்கு "என் பாவம் தீர்த்தார்" என்று பேரைத் தரித்து, அழகிய அச்சுனைக்கு "கட்க தீர்த்தம்" என்று பெயர் இட்டாள்; திறம் பொருந்திய மணி ஒத்தவரை, அண்ணாமலையில் எழுந்தருளியிருக்கிற அண்ணலை வணங்கப் பொன்மயமாகிய கோவிலுக்குப் போனாள். 52

387 முருகுமலர் அயன்தடத்தில் படிந்து,வெண்ணீறு
அணிந்து,செங்கை முடியில் கூப்பி,
அருகுவரும் கோதமன்சொற் படிதொழுது,உள்
புகுந்து,கண்ஆர் அமுதைக் கண்ணால்
பருகி,நிலம் உறவிழுந்து, பணிந்து,எழுந்து,
பரவசமாய்ப் பாடி, ஆடி,
உருகி,உவந்து, அழுது,உயிர்த்து, வலம்புரிந்து,
தனதுகுறை உரைத்துப் போற்றி,

(பொருள்) மணம் பொருந்திய தாமரை மலர்கள் இருக்கிற நான்முகனால் உண்டாக்கப் பெற்ற பிரம தீர்த்தத்தில் முழுகி, திருநீறு பூசி, சிவந்த கைகளைத் தலைமேல் வைத்து வணங்கித் தன்னருகே வருகிற கௌதமர் சொன்னபடியே போய்க் கண்நிறைந்த அமுதம் போன்ற பரமனைக் கண்ணால் பார்த்து, பூமியில் உடல் பொருந்த வணக்கம் செய்து, எழுந்து, இருந்து, பரவசம் ஆகிப் பாடி, ஆடி, உருக்கம் அடைந்து, களித்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கிப் பெருமூச்சு எறிந்து, வலமாக வந்து, தன்னுடைய குறையைச் சொல்லி வணங்கினள். 53

388 கார்த்திகைத்திங் களில்திருநாள் ஆகமத்தின்
படிநடத்தி, கனல்கண் ணனைத்
தோத்திரம்பண் ணுதலும்,ஒரு சுடர்மலைமேல்
எழுந்தது;அந்தச் சுடரின் ஊடே,
ஏத்துஅரிய பலகோடி இரவிஎன
ஒருசோதி எழுந்து, "மின்னே!
வாய்த்தமலை வலமாக நடத்தி"என
உரைத்து,உடனே மறைந்தது அன்றே.

(பொருள்) கார்த்திகை மாதத்தில் ஆகமத்தின்படி திருநாள் செய்து, நெருப்பு உருவம் ஆகிய அழகிய கண்களையுடைய சிவபெருமானைப் பணிந்த அளவிலே, மலைமேல் ஒரு ஒளி உண்டாகி, அதில் சொல்லுதற்கு அரிய பல கோடி இளம் கதிர் ஒளியாய் பரமசிவன் எழுந்து, "பெண்ணே? இம் மலையை வலமாக நடந்து வா!" என்று சொல்லி, அக்கணமே மறைந்துவிட்டார், 54

389 நாரிதனைச் சிலைஆக்கும் முனிவனும்,"அப்
படிவலமாய் நடத்தி" என்றான்;
வாரிஎன மறைபுகழக் காரிகையும்
நடந்தனள்தன் மலர்க்கை கூப்பி;
பேரிகையும் காகளமும் சல்லரியும்
மல்லரியும் பெரிய வானில்
தூரியமும் துந்துமியும் மத்தளமும்
குடமுழவும் துவைத்த அன்றே.

(பொருள்) தன் மனைவியாகிய அகலிகையைக் கல்லாக்கிய கௌதம முனிவனும் "அம்மா! அப்படியே வலமாக வா" என்று சொல்ல, கடல் போல் வேத ஒலி முழங்கவும், பேரிகை, காகளம், சல்லரி, மல்லரி, முரசு, துந்துமி, மத்தளம், குடமுழா இவை முதலான இசைக் கருவிகள் வானத்தில் ஒலிக்கவும், பார்வதி இரண்டு கைகளையும் கூப்பிக்கொண்டு நடந்தாள். 55

390 அரம்பைஉருப் பசிமுதலாம் மகபதிநாட்டு
அரிவையர்கள் ஆடல் காட்ட,
குரும்பைஎன நெருங்குமுலை வரைஅரமங்
கையர்மலரின் குப்பை கொட்ட,
கரும்புகனிந்து அனையமொழிப் புனல்அரமங்
கையர்இரட்டும் கவரி ஆட்ட,
இரும்புஉருக நகைபுரியும் அரவமின்னார்
மணிவிளக்கம் எடுத்து நீட்ட,

(பொருள்) இப்படிப் பார்வதி வலம் வரும்போது, அரம்பை, ஊர்வசி முதலான தேவலோகப் பெண்கள் நாட்டியம் ஆடவும், தென்னங் குரும்பையை ஒத்து நெருங்கிய தனத்தையுடைய மலை அரமகளிர் அம்மை நடந்து வரும்போது, பாதம் பூமியில்பட்டு உறுத்தாமல் இருக்க மலர்களைக் குப்பையாகக் கொட்டவும், கருப்பஞ்சாறு போலும் சொற்களையுடைய நீர் அரமங்கையர் சாமரம எடுத்து வீசவும், இரும்பும் உருகும்படி நகை செய்கின்ற நாகலோகப் பெண்கள் இரத்தின தீபம் கையில் எடுத்துக்கொண்டு வரவும், 56

391 முண்டகமண் டபமயிலும், புலோமசையும்,
நறும்தவள முளரி மானும்,
கண்டகமும் வழிப்பரலும் ஒழித்துவர,
நிலமகள்தன் கைகள் நீட்ட,
அண்டர்குல மடந்தையரும் முனிவர்குல
வனிதையரும் அருவிப் பூந்தேன்
வண்டல்இடும் சேறுஅகற்ற, மலரின்நின்றும்
துகள்சொரிந்து வழிகள் ஆக்க,

(பொருள்) தாமரை மலராகிய மண்டபத்தில் இருக்கிற மயில் போலும் சாயல் உடைய இலக்குமியும், இந்திராணியும் நறுமணம் வீசும் வெண்தாமரை மலரில் இருக்கும் கலைமகளும், செல்கின்ற வழியில் இருக்கும் முட்களையும், கற்களையும் தள்ளிக்கொண்டு வரவும், பூமி தேவி கைகளை நீட்டி, இனிமையாகத் தாங்கவும், தேவலோகப் பெண்களும், முனிவர் குலப் பெண்களும், மலர்களில் இருக்கிற தேன் அருவியினால் வழி சேருகிக் கிடந்ததை நீக்க, மலர்களில் இருக்கிற பராகப் பொடிகளைக் கொட்டி நல்ல வழியாகச் செய்யவும், 57

392 "கன்றினது உன் இருசரணம்; பொறுத்துஅருள்வாய்!"
எனஅங்கை கங்கை கூப்ப,
மன்றுஅனலத் திசைஅணுகி, அழல்கிரியை
எதிர்முகமாய் வணங்கிப் போற்றி,
தென்திசையும் நிருதிபெரும் திசையினையும்
கடந்து,குட திசையில் சென்றாள்;
குன்றுஅரிய புகழானும் மழவிடைமீ
தினில்காட்சி கொடுத்துப் போனான்.

(பொருள்) கங்கையானவள், அம்மா பார்வதி! உன் திருஅடிகள் இரண்டும் பூமியிலே பட்டுக் கன்றிப் போய்விட்டன; அதைப் பொறுக்க வேண்டும் என்று இரண்டு கைகளையும் கூப்பவும், அழகிய அக்கினி திசையில் வந்து அக்கினி மலையை எதிர்முகமாகத் தொழுது துதி செய்தும், தெற்குத் திசையையும் நிருதியினது பெரிய திசையையும் தாண்டி மேற்குத் திசையில் போனாள்; குறைவு இல்லாத கீர்த்தியையுடைய அண்ணாமலையார், இளமை பொருந்திய இடபவாகனத்தில் எழுந்தருளி வந்து காட்சி கொடுத்து மறைந்தருளினார். 58

393 நாற்றிசையும் போற்றிசெயும் புகழ்அணிஅண்
ணுமலையான் நடத்தாள் போற்றி,
மேற்றிசையும் காற்றிசையும் கடந்து,வட
திசைஅணுகி, விரும்பி ஏத்தி,
ஏற்றுஇசையும் இறைதிசையும் மகிழ்ந்துகுண
திசைஅடைந்தாள்; இமய வெற்பில்
சேற்றுஇசையும் மணஅழலை வலம்புரிந்த
செயல்போலச் செறிந்தது அன்றே.

(பொருள்) நான்கு திக்கும் வணங்குகின்ற புகழையுடைய அழகிய திரு அருணாசலேசுரரது நடனத் திருவடியை வணங்கி, மேற்குத் திசையும் வாயு திசையும் தாண்டி, வடதிசையில் மறுபடியும் தொழுது, எருதில் ஏறுகின்ற ஈசானனுடைய திசையைக் கடந்து, கிழக்குத் திசைக்கு வந்தாள்; அப்படி வந்தது இமயமலையில் பரமசிவன் திருமணம் செய்த போது ஓமாக்கினியை வலம் வந்ததுபோல் இருந்தது. 59

394 பானு கம்பன்கைச் சங்கொலி,
நெடியமால் பணிலத்து
ஆன கம்பலை, நாரதர்
வீணையின் அரவம்,
வான துந்துமி கம்பலை,
திசைஎலாம் மறைத்த;
தேன்நி றைந்திடு மலர்மழை
இமையவர் சிதற.

(பொருள்) பானு கம்பன் என்பவன் தன்னுடைய ஆயிரம் கைகளிலிலும் சங்கத்தை வைத்து ஊதுகிற ஒலியும், திருமால் தனது சங்கத்தை ஊதுகிற ஒலியும். நாரத முனிவர் வீணையைத் தடவும் ஒலியும், வானதுந்துமியினுடைய ஒலியும் திசைகள் எல்லாம் செவிடுபடச் செய்தன; தேன் நிறைந்த மலர் மழையைத் தேவர்கள் சொரிந்தனர். 60

395 கற்றை வார்சடை இளம்பிறை
நெடுநிலாக் கமழ,
புற்றுஅ ராமணி இளவெயில்
விரித்திட, புவியைப்
பெற்ற மாதினுக்கு ஒருபுறம்
அளித்திடப் பிடித்த
எற்ற நூல்எனப் புரிமுந்நூல்
மார்புஅகத்து இலங்க,

(பொருள்) கற்றையாகிய நீண்ட சடையில் தரிக்கப்பட்ட இளமையாகிய பிறையின் நெடுமையான நிலவு ஒளி வீசவும், அணிகலமாகிய புற்றில் இருக்கிற பாம்பின் தலையில் இருக்கிற மாணிக்கம் ஒளியைப் பரப்பவும், உலக சராசரங்களை ஈன்று அருளிய தாயாகிய பார்வதிக்குப் பாதி உடலைக்கொடுப்பதற்கு நடுவாகப் பிடித்த ஏற்ற நூல்போல், புரியாகிய பூணூல் ஒளி வீசவும், 61

396 பிறப்பி லாமுதல்; மறைஎலாம்
அளவிடாப் பெரியோன்;
இறப்பி லாஇறை, விடையின்மேல்
இனிதுஎழுந்து அருள,
அறத்தின் நாயகி அடிபணிந்து,
இறைஞ்சினள்; அனைத்தும்
துறக்கும் அண்ணலும், அவளுடன்
இவைஇவை சொல்லும்.

(பொருள்) பிறப்பு இல்லாத முதல்வர், மறைகளாலும் அறியப்படாத பெரியவர், இறப்பு இல்லாத பரமசிவன், இடப வாகனத்தில் மனம் மகிழ்வோடு எழுந்தருள, அறம் வளர்க்கின்ற அம்பிகை, அண்ணலின் திருவடியைத் தொழுது வணங்கினள். எல்லாவற்றையும் நீக்கியருளிய கடவுளும் அவ் அம்மையோடு சொல்லுவார். 62

397 "பெண்ணும் ஆணுமாய் உலகுஉயிர்ப்
பொருள்எலாம் பிரித்தோம்;
அண்ணி தாகிய பீடமும்
இலிங்கமும் ஆனோம்;
எண்ணும் நீஎன நான்என
இரண்டுஇலை; மரமும்
உண்ணி லாகிய வயிரமும்
நிகர்த்துஉடன் உறைவோம்".

(பொருள்) உமையே! நீயும் நானும் பெண்ணும் ஆணுமாகி உலகத்தில் அநேகம் உயிர்க் கூட்டங்களை வேறு வேறு உண்டாக்கினோம்; அண்மையில் விளங்கும் ஆவிடையாரும் இலிங்கமும் ஆனோம்; நீ என்றும் நான் என்றும் வேறு இரண்டு பேதம் இல்லை; மரமும் அதற்குள்ளே இருக்கிற வயிரமும் போல் ஒன்றாய்ச் சேர்ந்து இருப்போம். 63

398 "அங்கம் யாவும்நம் பொருட்டுவிட்டு
இமயவெற்பு அடைந்தாய்;
இங்கு நாம்உனக்கு ஒருபுறம்
அளிப்பதே இயற்கை;
மங்கை யே!நமது இடப்புறத்து
உறை!"என மகிழ்வுற்று
அங்கை யால்அணைத்து அருளினன்;
உருகிஒன்று ஆனார்.

(பொருள்) உடலை அடியோடு விட்டு நம் பொருட்டாக இமயமலையில் வந்து பிறந்தாய்; இவ்விடத்தில் நாம் உனக்கு உடம்பில் ஒருபுறம் தருவதே இயல்பு. பெண்ணே! நம்முடைய இடப்பாகத்தில் சேர்ந்து இரு என்று மகிழ்ச்சி அடைந்து அழகிய கையினால் அணைத்துக்கொண்டார்; இரு உடலும் உருகி ஒரு உடல் ஆனார்கள் அம்மையும் அப்பனும். 64

399 அடுத்த செஞ்சடை ஒருபுறம்;
ஒருபுறம் அளகம்;
தொடுத்த கொன்றைஓர் புறம்;ஒரு
புறம்நறும் தொடையல்;
வடித்த சூலம்ஓர் புறம்;ஒரு
புறம்மலர்க் குவளை;
திடத்தில் ஆர்கழல் ஒருபுறம்;
ஒருபுறம் சிலம்பு.

(பொருள்) அப்படி இருவரும் உருகி, சிவனுடைய பாதியும், அம்பிகையினுடைய பாதியும் ஒரு உடல் ஆனபோது, ஒரு பக்கத்தில் ஒன்றோடு ஒன்று அடுத்து உள்ள சிவந்த சடையும், ஒரு பக்கம் கூந்தலும், ஒரு பக்கம் கொன்றை மாலையும், ஒரு பக்கம் மணம் மிக்க மலர் மாலையும், ஒரு ப்கம் சூலமும், ஒரு பக்கம் நீலோற்பல மலரும், ஒரு பக்கம் வீர கண்டாமணியும், ஒரு பக்கம் சிலம்பும் தோன்றின. 65

400 பச்சை வன்னம்மற்று ஒருபுறம்;
ஒருபுறம் பவளம்;
கச்சு லாமுலை ஒருபுறம்;
ஒருபுறம் கவின்மார்பு;
அச்சம் நீக்கிய வரதம்ஒன்று;
அபயம்ஒன்று அங்கை,
இச்சை யாஇவர் உறுதல்கண்டு
இறைஞ்சினர் இமையோர்.

(பொருள்) ஒருபுறம் பச்சை நிறமும் ஒருபுறம் பவள நிறமும், ஒருபுறம் கச்சணிந்த தனமும், ஒருபுறம் அழகான மார்பும், ஒருபுறம் அபயமும், ஒருபுறம் வரதமும் ஆகிய கைகளாக, ஆசையோடு இருவரும் பொருந்துதலைப் பார்த்துத் தேவரும் வணங்கினார்கள். 66

401 இந்த மாக்கதை படித்தவர்,
செவிகளில் கேட்டோர்,
சந்த ஞசல முனியினில்
தமிழ்க்கடல் கடப்பார்;
மைந்த ரேமுதல் கிளையுடன்,
உலகினில் வாழ்வார்;
பந்த பாசம்அற்று, அழிவுஇலாப்
பரகதி பெறுவார்.

(பொருள்) இந்தப் பெருமை தங்கிய கதையைப் படித்தவர்களும், செவியில் கேட்டவர்களும், சந்தன மரங்கள் சூழ்ந்த பொதிய மலையில் இருக்கிற அகத்தியர்போல் தமிழ்க் கடலைக் கடப்பார்கள்; மக்கள் செல்வத்தோடும் சுற்றத்தாரோடும் உலகத்தில் வாழ்வார்கள்; தங்களைப் பந்தமாகச் சூழ்ந்துகொண்டு இருக்கிற தீவினையைத் தள்ளி முத்தி பெறுவார்கள். 67

402 முனிவ னே!எனைப் பயந்தவன்
உரைத்திடும் முறைஎன்று
அனைய மாமுனிக்கு உரைத்தலும்,
அவன்எழுந்து இறைஞ்சி,
கனக வச்சிராங் கதன்உயர்
கதிபெறும் கதையை
வினவி ஞன்;முனி வினவலும்,
மகிழ்ந்துஇவை விளம்பும்.

(பொருள்) நந்திதேவர் மார்க்கண்டேயரைப் பார்த்து, என்னைப் பெற்ற பரமசிவன் சொன்ன சரித்திரத்தின் முறை இது என்று அவருக்குச் சொல்ல, அம் மார்க்கண்டேய மகரிஷி எழுந்து வணக்கம் செய்து, பின்பு, வச்சிராங்கத பாண்டியன் உயர்வாகிய முத்தி அடைந்த கதையைச் சொல்லுங்கள் என்று கேட்க, நந்தி தேவர் மகிழ்ச்சி அடைந்து சொல்லத் தொடங்கினர், 68

ஐந்தாவது

இறைவி இடப்பாகம் பெற்ற சருக்கம் முற்றிற்று.

## 6. வச்சிராங்கத பாண்டியச் சருக்கம்

403 தோடுகமழ் சந்தன வனத்திடை துளைந்தே,
நீடுதமி ழின்சுவை அளைந்து,நெடு நாளாய்,
ஆடுமயில் அன்னவர்கள் அன்னநடை போல,
வாடைமிசை தென்றல்புகும் வையைவள நாடு.

(பொருள்) மலர் இதழ் மணக்கும் சந்தன வனத்தின் நடுவில் உலவி, என்றும் வளர்ந்து ஓங்கும் தமிழின் இனிமையை அளைந்து, நெடுநாள் ஆடுகின்ற மயில் போன்ற சாயலையுடைய பெண்கள் நடைபோல, வாடைக் காற்றோடு தென்றல் காற்று வருகின்ற வையைஆறு பொருந்திய வளமுடையது பாண்டிய நாடு. 1

404 வெவ்இருகண் ணார்இடையை மின்என மருண்டே,
செவ்விபெறு கேதகை செறிந்துஅலரும் நாடு;
நவ்விஅனை யார்அளகம் நள்இருளது என்றே,
மவ்வல்அரு கேஅலரும் வையைவள நாடு.

(பொருள்) வெப்பத்தைச் செய்யும் கண்கள் இரண்டையுமுடைய பெண்களின் இடையைப் பார்த்து மின்னல் என்று மயங்கி, அழகு பொருந்திய தாழைகள் நெருங்கி மலரும் நாடு; மான் கண் போன்ற கணகளையுடைய பெண்களின் கூந்தலைப் பார்த்து, நடுச்சாம இருளென்று நினைத்து, முல்லைச் செடிகளைக் கரையில் மலர்விக்கும் வையை ஆற்றினால் வளம் பொருந்தியது பாணடிய நாடு. 2

405 அந்தவள நாடர்பெரு மான்,அரசர் கோமான்,
இந்திரன் முடிக்கிடை எறிந்த வளைவீரன்,
நிந்தைஅகல் தென்கயிலை நெற்றிவிழி போலே,
முந்திய திசைக்கரி முகத்துஎழுதி வைத்தோன்.

(பொருள்) அத்தகைய பாண்டி வள நாட்டாருக்கு அரசன் அரசர்கட்கு அரசனானவன்; தேவேந்திரன் மகுடம் சிதறும்படியாக வளை என்னும் படையைச் செலுத்திய வல்லமையுடையவன்; குற்றம் அற்ற தென் கைலாயத்துக்கு நெற்றிக் கண் போல் எட்டுத் திக்கிலும் இருக்கிற யானைகள் முகத்தில தன்னுடைய மீனக கொடியை எழுதி வைத்தவன். 3

406 ஆகம் ஆதி, மதனின் அழகினன்;
ஆக மாதி, தெளிந்த அறிவினன்;
பாகம் நாரியர் பத்தியி னன், மொழிப்
பாகு நாரியர் பற்றிய தோளினன்.

(பொருள்) உடல் முதலானவைகளால் மன்மதன் போல் அழகுள்ளவன்; ஆகம சாத்திரம் தெளிந்த சிறந்த அறிவை உடையவன்; பாகத்தில் பார்வதியை உடைய சிவன் மேல் அன்பு உடையவன்; பாகு போல் இனிய சொற்களையுடைய பெண்கள் விரும்புகின்ற தோள்களை உடையவன். 4

407 வான கத்திலும் மண்ணினிலும் எண்இம
வான்அ கத்திலும் வைத்த புகழினன்;
கான கத்துஒளி ஆர்கடைக் கண்ணிதன்
கான கத்துஒளி யாம்மனக் காப்பவன்.

(பொருள்) தேவலோகத்திலும், பூமியிலும் எண்ணத்தக்க மிக மேலான இமய மலையின் இடத்திலும் தன் புகழை நாட்டியவன். பரமசிவன் தரிக்கின்ற சடைக் காட்டினிடத்தில் ஒளிவிடும் ஆத்தி மாலையினது மணத்தைத் தன் மனதில் நினைத்துக்கொண்டு பூமியைக் காக்கிறவன். 5

408 தங்கள் நாயக னைத்தலை சூடிய
எங்கள் நாதர் அடித்தலை ஏத்தினன்;
பொங்கு நன்றி அறிந்துஅது போற்றுவார்
இங்குஇ வற்குஇணை யாவரும் இல்லையே.

(பொருள்) தங்கள் குலத்துக்குத் தலைவனாகிய சந்திரனை முடியில் தரித்த எங்கள் தலைவராகிய பரமசிவனுடைய திருவடிகளைத் தலையினால் வணங்குகிறவன். மிகுந்த நன்றியை அறிந்து, அதைப் பாதுகாக்கின்றவர்களில் இவனுக்கு ஒப்பானவர் ஒருவரும் இல்லை. 6

409 பத்து வார்திசை மீதும், படர்புகழ்
வித்து வாரி இறைக்கின்ற மேன்மைபோல்,
தத்து வாரியில் வாரினர் நல்கிய
முத்து வாரி இறைத்திடும் முன்றிலான்.

(பொருள்) நீண்ட பத்துத் திக்கிலும் பரவும்படி புகழாகிய விரையை வாரி இறைக்கின்ற தன்மைபோல், சங்குகள் தவழ்கின்ற கடலில் குளித்து வாரி வந்தவர்கள் கொடுத்த முத்துக்களை வாரி இறைத்துக் கிடக்கின்ற முற்றத்தை உடையவன் 7

410 ஆடு அலர்ந்த அரசன் புகழ்க்கடற்கு
ஓடு கின்ற கலம்,கதிர் ஓட்டுதேர்
கூடு செக்கர்; பவளக் கொடிகளே,
நீடு திக்கினர், நீரின் மனிதரே.

(பொருள்) வெற்றி அமைந்த அரசன் புகழாகிய கடலில் ஓடுகின்ற கப்பலானது, சூரியன் ஏறிச் செல்கின்ற தேர்கூடிய செக்கர் வானமே. அக்கடலில் படர்ந்த பவளக் கொடிகள், நீண்ட எட்டுத் திக்கிலும் உள்ள மனிதர்களே, அக்கடலில் உலவும் நீர் மனிதர்கள். 8

411 எச்ச ராசர் முச்களிப்பு எய்தவே,
நக்சுஅ ராஉலகு ஆளும் நலத்தினன்;
கச்சுஅ ராவு கழல்பொலி காலினன்;
வச்சி ராங்கதன் என்றுஒரு மன்னவன்.

(பொருள்) அசையும் பொருள் அசையாப் பொருள்களாகிய எல்லாப் பொருள் களும் மகிழ்ச்சியை அடைய, விடத்தை உடைய ஆதிசேடன் தாங்கும் உலகத்தை ஆளும் தன்மை உடையவன்; கச்சு அராவிய வீர கண்டாமணியைத் தரித்த காலை உடையவன்; வச்சிராங்கத பாண்டியன் என்று ஒருவன் இருந்தான். 9

412 படையில் தோற்ற அரசரைப் பல்சிறை
இடையில் போட்டனன் என்கை வியப்பதோ?
கொடையில் தோற்றிடும் கொண்டலை யும்சிறை
இடையில் போட்டனன் என்றது இருக்கவே.

(பொருள்) அவன் போரில் தோல்வி உற்ற பற்பல அரசர்களைச் சிறையில் இட்டான் என்பது என்ன வியப்பு! தன் கொடைக்குத் தோற்ற மேகத்தையும் சிறையில் போட்டான் என்னும் வார்த்தை இருக்கும்போது. 10

413 நாட்டும் அவ்அர சன்ஒரு நாளிலே,
வேட்டை ஆட விரும்பினன் ஆகியே,
மூட்டு சேனை, கரி,பரி மொய்த்திட,
ஓட்டி னன்,பரி உத்தர திக்கிலே.

(பொருள்) இப்படி வெற்றியை நாட்டிய வச்சிராங்கத பாண்டியன் ஒரு நாள் வேட்டை ஆடும்படி மனத்தில் எண்ணினவனாய், நெருங்கிய யானை, குதிரை, சேனைகள் சூழக் குதிரையை நடத்திக்கொண்டு வட திசையில் நடந்தான். 11

414 துங்க வாம்பரி மீதுஇவன் தோன்றலும்,
அங்கை வேழம் அகன்றுஅகன்று ஓடின;
திங்க ளின்குலச் செல்வன்என்று அஞ்சியே,
எங்கும் ஓடும், இருள்கணம் என்னவே.

(பொருள்) சந்திரன் மரபில் பிறந்த அரசன், தாவும் சிறந்த குதிரை மேல் ஏறின வுடன், தங்களை வெருட்டும் பகைவனாகிய சந்திரனது வடிவத்தில் தோன்றியவன் என்று நினைந்து, பயந்தோடும் இருள் கூட்டம் போல், துதிக்கையை உடைய யானைக் கூட்டங்கள் அஞ்சி ஓடின. 12

415 வீறும் அம்புலி இன்குல மேன்மையான்,
வீறும் அம்,புலி யின்குலம் வீட்டினன்;
ஆறில் ஒன்று கடமைகொண்டு ஆள்பவன்,
ஆறில் ஒன்று கடமைகொன் றுன்அரோ.

(பொருள்) சிறப்புள்ள அம்புலி என்னும் பெயரினையுடைய சந்திர குலத்தில் பிறந்த மேன்மையினால், இறுமாப்பு அடைந்த அழகிய புலிகளைக் கொன்றான்; ஆறில் ஒரு கடமை வாங்கிக்கொண்டு ஆள்கின்றவன், போகும் வழியில் நேர்ப்பட்ட கடமை என்னும் விலங்குகளைக் கொன்றான். 13

416 சேர மான்,இனம் தன்னைச் சிதைத்தவன்,
சேர மான்இனம் தன்னைச் சிதைத்தனன்.
வாரம் ஆய்கலைச் சங்கம் வளர்த்தவன்,
வார மாய்கலைச் சங்கம் வளைத்திட்டான்.

(பொருள்) சேரமான் என்னும் பெயரையுடைய சேரனது சேனையை வென்றவன், ஒருமிக்க மான். இனங்களை எல்லாம் கொன்றான். அன்போடு ஆராய்கின்ற கல்விச் சங்கத்தை வளர்த்த அவன், அநேக கலைமான் கூட்டங்களை வளைத்துக்கொண்டான். 14

417 சோனை போல்மத மாரி சொரிந்திடும்
யானை, தேர்,பரி ஆள்முதல் ஆகிய,
தானை பின்னிடத் தான்தனி வாசிமேல்
கான நாவியைக் கண்டுதொ டர்ந்தனன்.

(பொருள்) சோனை மழை போல் மதத்தைச் சொரிகின்ற யானை, தேர், குதிரை, காலாள் முதலாகிய நால்வகைச் சேனைகளும் பின்னிட்டுப் போகத் தான் ஒருவனாகவே குதிரைமேல் கொண்டவனாய், காட்டில் வசிக்கும் ஒரு புழுகு பூனையைத் தொடர்ந்தான். 15

418 அந்த நாவி அகன்று,அரு ணாசலத்து
உந்தி யேவல மாய்விரைந்து ஓடலும்,
முந்தி வாசிஅ தன்பின் முடுக்கினான்;
கந்த நாவி விழுந்தது கண்முனே.

(பொருள்) அப்படி அரசனாலே துரத்தப்பட்ட புழுகுபூனை விரைவில் அவ்வனத்தை விட்டு அருணாசலத்தை வலமாகச் சுற்றி ஓடின அளவிலே, வேகத்தோடு குதிரையை அதன் பின் நடத்தினான்; மணமுடைய அந்தப் புழுகு பூனை அவன் கண் முன்னே வந்து விழுந்தது. 16

419 பச்சை நாவி பருகினர் போல்விழுந்து,
அச்ச நாவி,தன் ஆகம் விடுத்து,எழில்
விச்சை வேந்தர் துதிக்க, விமானம்மேல்
இச்சை மேனிகொண்டு ஏகி எழுந்ததே.

(பொருள்) பச்சையாகிய நாவி என்கிற விடம் சாப்பிட்டவர்கள் போல் விழுந்து, பயத்தை உடைய புழுகு பூனை, தன் உடலை விட்டு, உடல் அழகு உள்ள வித்தியாதரர் முதலானவர்கள் துதிக்க, விமானத்தின் மேல் யாவரும் விரும்பும்படியான சிறந்த உடலைப் பெற்றுக்கொண்டு எழுந்தது. 17

420 மேவும் அந்த அரசன் விழுந்திட,
மாவும் வீழ்ந்து, வடிவு தனைத்துறந்து,
ஓவி யர்க்குஎழு தாஉருக் கொண்டு,ஒரு
பூ,வி மானமது ஏறிப் பொலிந்ததே.

(பொருள்) தற்செயலாய் ஏறின அரசன் விழவே, குதிரையும் இடறி விழுந்து, தன் உடலை விட்டுச் சித்திரக்காரரும் எழுதக் கூடாத சிறந்த உருவம் பெற்று, ஒரு மலர் விமானத்தில் ஏறிச் சொலித்தது. 18

421 கைவி லங்குஅனை யான்,பரிக் காலின்வீழ்ந்து,
அவ்இ லங்கை அரசனைப் போலவே,
செவ்வி லங்கல் அடியினில் தேம்பினன்;
வெவ்வி லங்குஉடன் ஓடின் விழார்களோ?

(பொருள்) துர்க்கையினுடைய ஊர்தியாகிய யானை போல்பவனான வச்சிராங்கத பாண்டியன், குதிரைக் காலின் அருகில் விழுந்து, இலங்கையை ஆண்ட இராவணன் போல், அருணாசலத்தின் அடியில் வருந்தினன்; கொடிய விலங்கின் பின் ஓடினால் யார்தான் விழார்கள்? 19

422 பாய்ந்த நாவி பரிப்பெயர் போய்ப்,பழம்
காந்தி சாலி, கலாதரப் பேர்படைத்து,
ஆய்ந்த நண்பொடு, அருவிஅம் கண்ணராய்,
மோந்து, அணைந்து, மகிழ்ச்சியின் மூழ்கினர்.

(பொருள்) பாய்ந்து செல்லுகின்ற குதிரை என்றும், நாவி என்றும் சொல்லப் பட்ட பேர் போய், பழைய காந்திசாலி கலாதரன் என்கிற பேர்படைத்தவராய், மிக்க நண்பராய், அருவி போல் கண்ணிலிருந்து நீர் பெருக ஒருவர்க்கு ஒருவர் கட்டி அணைத்து, உச்சி மோந்து மகிழ்ச்சியில் மூழ்கினர்கள். 20

423 அன்ன வீரர்கள் அவ்விடம் நின்றுழி,
ஒன்ன லர்க்கும் உருத்துயர் உய்த்திடும்
மன்னர் மன்னவன், மற்றது வந்தஆறு
என்ன என்னஎன்று ஏங்கி இரங்கினன்.

(பொருள்) அவ்வீரர்கள் அவ்விடத்தில் நின்றபோது, தன் பகைவர்களுக்கு வந்த துக்கத்திலும் அதிகமாய் வருந்துகின்ற அரசர்க்கு அரசனாகிய பாண்டியன், இது வந்த கதை என்ன என்று இரங்கி வருத்தம் உற்றான். 21

424 விஞ்சை மன்னர் விமானத்தர் ஆகியே,
தஞ்சம் இல்லவன் தன்புடை சூழ்ந்து,நீ
அஞ்சல் அஞ்சல்என்று அங்கை அமைத்தனர்;
பஞ்ச வன்மகிழ் வோடும் பகருவான்.

(பொருள்) வித்தியாதர்களாகிய இருவரும் விமானத்தில் ஏறிக்கொண்டவர்களாய்த் தஞ்சம் இல்லாத பாண்டியனிடத்தில் வந்து சேர்ந்து, நீ பயப்படவேண்டாம் பயப்படவேண்டாம், என்று கை அமர்த்தினார்கள். அப்போது பாண்டியன் மிகவும் மகிழ்ச்சியோடு சொல்வான். 22

425 நீதி யாய்வரும் நீர்எவர்? இத்துயர்க்கு
ஆதி காரணம் யாது? வரும்துயர்,
போது மாறுஎது? போதியும் என்று,அவன்
ஓத ஓதக் கலாதரன் ஓதுவான்.

(பொருள்) நீதி வழிகளில் தவறாதவராய் வந்த நீங்கள் இருவரும் யார்? உங்களுக்கு இப்படி வந்த துக்கத்திற்கு மூலகாரணம் என்ன? அது சென்றது எவ்விதத்தினால்? சொல்லுங்கள் என்று சொல்லக் கேட்டு, கலாதரன் என்பவன் சொல்லுவான். 23

426 வாய்ந்த சாலி மதுரையின் மன்னனே!
ஏய்ந்த விஞ்சையர் யாங்கள்; இவன்பெயர்
காந்தி சாலி; கலாதரன் என்பெயர்;
ஆய்ந்த நண்பின ராய்விளை யாடினோம்.

(பொருள்) பொருந்திய செந்நெல் விளைகின்ற மருத நிலங்களையுடைய மதுரைக்கு அரசனே! நாங்கள் ஒப்பற்ற வித்தியாதரர்கள்; இவன்பேர் காந்திசாலி; என் பெயர் கலாதரன்; நாங்கள் இருவரும் மிகுந்த நண்பராய் விளையாடிக் கொண்டிருந்தோம். 24

427 மார வேளும் வசந்தனும் போலவே,
ஆர வே,பிரி யாதுஉறை நாளிலே;
சேர ஊழ்வினை சென்று தொடர்ந்திட,
மேரு மால்வரைச் சாரலின் மேவினோம்.

(பொருள்) மன்மதனும் அவன் நண்பனாகிய வசந்தனும் போல, ஒருவர்க்கு ஒருவர் பிரியாமல் வசிக்கும் நாளையில், முன்செய்த ஊழ்வினை வந்து அடைய, மகாமேரு மலையின் சாரலில் போய்ச் சேர்ந்தோம். 25

428 மாச்சரியம் மிக்கதுரு வாசமுனி வாழும்
ஆச்சிரமம் மேல்அருகில், அந்தமுனி தானே
நீர்ச்சொரிய, நெஞ்சுஉருகி நின்றமரம் எல்லாம்
பூச்சொரியும் நந்தவனம் மீதின்இடை புக்கோம்.

(பொருள்) கோபம் மிக்க துருவாசமுனி வாழ்கின்ற ஆச்சிரமத்தின் அருகில், அந்த முனி மனம் உருகித் தண்ணீர் சொரிய வளர்ந்த மரங்கள் எல்லாம் மலர்களைச் சொரியும் நந்தவனத்தில் புகுந்தோம். 26

429 புக்கவன் அதிற்சிறு புதர்களை மிதித்தான்;
மிக்கவினை யேனும்அதன் மென்மலர் பறித்தேன்;
அக்கணம் உணர்ந்துமுனி அங்கிவிழி யாலே,
கக்கஒளி மிக்கசடை கட்டுஅவிழ வந்தான்.

(பொருள்) அப்படிப் புகுந்த வனத்தில் இக் காந்திசாலி அங்கு உள்ள சிறுபுதர்களை மிதித்தான்; மிகுந்த தீவினையுடைய நானும் அவைகளில் இருக்கும் மென்மையாகிய மலர்களைப் பறித்தேன்; அக்கணமே துருவாச முனிவர் அறிந்து, விழிகளாலே நெருப்பைக் கொட்டிக்கொண்டு சடை அவிழ்ந்து விழக் கோபித்து வந்தார். 27

430 முத்துமணி யாம்என முகத்தினில் வியர்ப்ப,
வித்துருமம் வைத்துஅனைய மெல்இதழ் துடிப்ப,
உத்தரியம் வீழ்வதை அடிக்கடி உயர்த்திச்
சித்திர அழல்பொறி தெறிக்கஇவை சொன்னான்.

(பொருள்) அழகிய முத்துக்கள் போல் முகத்தில் வேர்வை உண்டாகவும், பவளம் போன்ற மென்மையாகிய இதழ் துடிக்கவும், நழுவிப் போகின்ற மேல் ஆடையை அடிக்கடி உயர்த்திக்கொண்டு, சித்திரமாகிய நெருப்புப் பொறி தெறிக்க இவைகளைச் சொன்னார். 28

431 செம்தபனர் தம்கதிர் உருது,சிறு காலும்
நந்தும்அறு காலும்ஒரு காலும்இதை நண்ணா;
முந்துஇலைஉ திர்ந்துபுல ராது;முடிவு எய்தாது;
இந்தவனம் மீதுஒருவர் எய்தஎளி தாமோ?

(பொருள்) சிவப்பாகிய சூரியனின் கதிர் என்னுடைய பயத்தினாலே வராது, தென்றல் காற்றும், வண்டுகளும் ஒரு போதும் இவ்வனத்தை அடையமாட்டா; இலை பழுத்திராது; வாடாது; நாசம் அடையாது; இத் தன்மையுடைய இவ் வனத்தில் ஒருவர் வருவதற்கு எளிதோ? 29

432 சேவிஞர்க்கு இனிய பூசைக்கு
அணிமலர் செலுத்தும் காவில்,
பாவிகாள்! புகுந்துஎன் கோபக்
கனல்இடைப் பஞ்சது ஆனீர்!
மேவிய துரங்கம் ஆக,என்று
இவற்குஉரை விடத்தை ஈந்தான்;
நாவியாய்ப் பிறப்பாய் என்ருன்,
நாள்மலர் பறித்த என்னை.

(பொருள்) இடப வாகனராகிய சிவபிரானுக்கு இனிமையாகிய பூசைக்காகச் சாத்தும் அழகிய மலர்கள் இருக்கும் சோலையில், பாவிகளே! நீங்கள் புகுந்து என்னுடைய கோபமாகிய நெருப்பின் இடத்தில் அகப்பட்டுப் பஞ்சு ஆனீர்கள்; குதிரையாகப் போகக் கடவாய்! என்று விடம்போல் இக் காந்தி சாலிக்குச் சாபம் கொடுத்தார்; மலர் பறித்த என்னைப் புழுகு பூனையாகப் போ என்று சபித்தார் துருவாசமுனி. 30

433 கோபமே தவம்அது ஆகப்
பலித்திடும் கொடியோன் இட்ட
சாபம்மேல் வரவே, நாங்கள்
இருவரும் தளர்ந்து, "ஞானத்
தீபமே! அருளே! அன்பர்
செல்வமே! எனச்சென்று ஏத்திப்
பாவம்மே விடும்இச் சாபம்
ஒழியும்நாள் பகர்தி!" என்ருேம்.

(பொருள்) கோபமே தவமாகப் பலித்த பொல்லாத இருடி இட்ட சாபம் எங்கள் மேல்வர, நாங்கள் இருவரும் தளர்வடைந்து, ஞானவிளக்கே! அருட்கடலே! அன்பர்கள் உடைய செல்வமே! என்று எதிர் சென்று வணங்கி, பாவம் உண்டானதிஞல் எங்கள்மேல் வந்த சாபம் ஒழியும் நாள் என்றைக்கு, சொல்லும்! என்று கேட்டோம். 31

434 முனிவது தவிர்ந்து சாப
முனிவனும் மொழிவான்; இந்தத்
தனிவரும் சாபம், சோணா
சலத்தினை வலம்செய் தால்போம்;
மனிதரும் சுரரும் போற்றும்
மலைவலம் புரிகை தானும்,
இனிமையாம் பாண்டி நாட்டின்
இறைவனால் எய்தும் என்றார்.

(பொருள்) தூருவாச முனிக்கு உண்டாகி இருந்த கோபம் நீங்கி, நான் இட்ட இவ் ஒப்பற்ற சாபம், நெருப்பு மலையாகிய திருவண்ணாமலையை வலமாக வந்தால் போகும்; மனிதரும் தேவரும் வணங்கும் அந்த மலையை வலமாகச் சுற்றிவருதல் பாண்டிய நாட்டு அரசனால் கிடைக்கும் என்றார். 32

435 என்றுஒரு கதையும் சொல்வான்;
எரிஅழல் கிரிய தாக
நின்றஎம் இறைவன், முன்னாள்
நெடுவனக் கடவுள் ஈந்த
மன்றல்சேர் கனியைத் தன்சேய்
இருவரும் வருந்திக் கேட்க,
இன்றுஉலகு அனைத்தும் சூழ்ந்தோர்க்கு
அளிப்பம்என்று இறையும் சொன்னான்.

(பொருள்) இப்படிச் சொல்லி ஒரு கதையும் சொல்வார்; கொழுந்து விட்டு எரிகின்ற நெருப்பு மலையாய் நின்ற எமது பரமசிவம், முன் காலத்தில் தண்ணீருக்குத் தலைவனாகிய வருணன் கொடுத்த வாசனை பொருந்திய மாங்கனியைத் தமது பிள்ளைகளாகிய விநாயகர், சுப்பிரமணியர் இருவரும் வருந்திக் கேட்க, இன்றைக்குள் உலகம் முழுவதும் சுற்றி வந்தவர்க்கு இக்கனியைக் கொடுப்போம் என்று பரமசிவன் சொன்னார். 33

436 கந்தனும் மயிலில் ஏறிக்
கடல்உலகு அனைத்தும் சூழ
முந்தினன்; கரிய யானை
முகத்தவன் எழுந்து,எல் லோர்க்கும்
தந்தையாம் தனது தாதை
தனைவலம் புரிந்தான்; தந்தை
மைந்தனைத் தழுவி, வேண்டும்
வரத்துடன் கனியும் ஈந்தான்.

(பொருள்) முருகனும் மயில்வாகனம் ஏறிக்கொண்டு எழுகடல் சூழ்ந்த பூமி முழுவதும் சுற்றிவந்தார்; கருமையாகிய யானைமுகம் உடைய விநாயகர் எழுந்திருந்து உலகில் உள்ள எல்லா உயிர்களுக்கும் தந்தையாய் உள்ளவர் தனது தந்தை அல்லவா என்று சிந்தித்து, (அவரைச் சுற்றி வந்தால் உலகத்தைச் சுற்றி வருதல் ஒக்கும் என்று) தன் தகப்பனை வலமாகச் சுற்றிவந்தார்; பரமசிவன் மகனைத் தழுவிக்கொண்டு வேண்டிய வரங்களும் பழமும் கொடுத்தார். 34

437 வேலினன் கடிது மேவிக்
கனிதர வினவ, நம்மைக்
காலினல் வலமாய் இந்தக்
கரிமுகன் வந்தான்; ஏழு
தாலமே வலம்செய் தாலும்,
பலபல தவம்செய் தாலும்,
பாலகா! நமைச்சூழ் தெய்வப்
பலத்தினுக்கு இணையோ பார்க்கின்?

(பொருள்) சக்தி வேலைக் கரத்தில் ஏந்திய முருகன் விரைவில் சென்று பூமியைச் சுற்றிவந்து, பழத்தைக் கொடுக்கும்படி கேட்க, நம்மை விநாயகன் காலால் நடந்து சுற்றி வந்தான்; ஏழு உலகத்தை வலம் செய்தாலும், பலபலவாகிய தவத்தைச் செய்தாலும் மகனே! நம்மைச் சுற்றிவரும் மேலான பலனுக்கு ஒப்பாகுமோ? பார்க்குமிடத்தில் 35

438 செம்மலை உருவாம் நம்மைத்
தினம்வலம் புரிந்தோர், வேதன்
தம்மிலும் அதிகர்; மாயோன்
தனக்குமேல் அதிகர்; பார்க்கின்,
உம்மிலும் அதிகர்; இந்த
உமையினும் அதிகர்; மைந்தா!
எம்மிலும் அதிகர் என்றான்;
எவர்க்கும்மேல் அதிகம் ஆனோன்.

(பொருள்) சிவப்பான மலை உருவமாகிய நம்மைத் தினம்தினமும் வலம் வந்தவர்கள் நான்முகனிலும் அதிகராவர்; திருமாலினும்மிக்கவராவர்; பார்க்கில் உம்மிலும் அதிகராவர்; இந்தப் பார்வதியிலும் மேலானவராவர்; மகனே! எம்மைப் பார்க்கிலும் அதிகராவர் என்றார், எல்லார்க்கும் மேலாகிய சிவபெருமான். 36

439 மாசு இலா நமது மேனி
வரைதனக்கு அமரர் தாமும்
பூசனை புரிய மாட்டார்;
அதைவலம் புரிந்த பேருக்கு
ஆசையாய் அளிக்கும் பூசை
நமக்குஇனிது அளிக்கும் பூசை;
கூசுமாறு இழைத்த தீங்கு
நமைச்செயும் கொடுமை யாகும்.

(பொருள்) குற்றம் இல்லாத நம் வடிவம் ஆகிய இம்மலைக்குச் சாக்காடு அற்றவர்களாகிய தேவர்களும் பூசை பண்ணமாட்டார்கள்; அதை வலமாகச் சுற்றிவந்தவருக்கு ஆசையுடனே செய்கிற பூசை நமக்கு இனிதாகச் செய்கிற பூசையேயாம்; அவர்களுக்குக் கூசும்படி செய்த தீமை நமக்குச்செய்த தீமையே ஆகும் என்று பரமசிவன் முருகனுக்கு அருளினர். 37

440 என்பது மொழிந்தான் அத்தன்,
எனச்சொல்லி முனிவன் போனுன்;
பின்புஅதன் படியே நாவி
புரவியாய்ப் பிறந்தோம்; இன்று,
தென்புவி உடையாய்! நின்னுல்
திருமலே வலமும் பெற்ருேம்;
மின்பொலி பழைய கோலம்
படைத்து,எழில் விமானத்து ஆனேம்.

(பொருள்) இப்படிப் பரமசிவன் சொன்னுர் என்று துருவாசமுனி சொல்லிப் போனுர். பின்பு அப்படியே புழுகு பூனையாகவும், குதிரையாகவும் பிறந்தோம் பாண்டிய நாட்டையுடைய அரசனே! இன்றைக்கு உன்னுல் திருமலேயை வலம் செய்தோம் மின்னல் போல் ஒளிவீசுகின்ற பழைய வடிவம் பெற்று, அழகு பொருந்திய விமானத்தில் ஏறின வர்களானேம். 38

441 எங்கள்தம் வரவுஈது; உன்பால்
இடுக்கண்வந்து அடைந்தது, இந்த
வெம்கனல் வரையை மாவின்
மிசைவலம் வருகை யாலே;
பொங்கியது அதுவும் பூசை
புரிந்திடில் போம்என்று ஓதி,
தங்கள்ஊர் புகுந்தார், காந்தி
சாலியும் தானும் ஆக.

(பொருள்) எங்களுடைய சரித்திரம் இது; நெருப்பு வடிவமாகிய இம்மலேயைக் காலினுல் வலம் செய்யாமல் குதிரையில் ஏறி வலம் செய்தபடியினுல் உனக்குத் துன்பம் வந்து சேர்ந்தது; அதுவும் பரமசிவனேப் பூசை செய்தால் போய்விடும் என்று சொல்லிக் காந்திசாலியும், கலாதரனும் தங்கள் ஊருக்குப் போனுர்கள். 39

442 வேழமும் பரியும் தேரும்
வீரரும் சுவடு நாடிச்
சூழ,மந் திரிக ளோடும்
சூழ்ந்தனர்; துயரம் தீர்ந்தான்;
தாலமுயின், கமுகின், காடும்
தவளவான் கதிரைத் தீண்டும்
வாழையும், கரும்பின் சாற்றின்
வளர்ந்திடும் வையை நாடன்.

(பொருள்) அதன் பின்பு யானையும், குதிரையும், தேரும், காலாள்களும் அடி பற்றிக்கொண்டு மந்திரிகளுடனே அரசனைச் சுற்றிக்கொண்டார்கள்; அப்போது கவலை நீங்கினான்; தென்னை மரங்களும், கமுக வனமும், சந்திரனைத் தழுவும் வாழை மரங்களும் ஆகிய இவைகள் கரும்பின் சாற்றினால் வளர்ந்திடும் வளப்பமுள்ள பாண்டிய நாட்டுக்கு அரசனாகிய வச்சிராங்கத பாண்டியன். 40

443 அரதனங் கதனும் மைந்தன்
தனைக்கடிது அழைப்பித்து, ஆதி
பரதனும் எனஇப் பாரைப்
புரஎனப் பகர்ந்தான்; சீல
விரதன்ஆங்கு அதனைக் கேளா,
அதன்முனம் விடைபெற்று, ஆனை
இரதம்நான் மருங்கும் சூழப்
பதிபுகுந்து இறைமை செய்தான்.

(பொருள்) வச்சிராங்கத பாண்டியன் தன் பிள்ளையாகிய இரத்தினாங்கத பாண்டியனை விரைவில் வரவழைத்து, முன்னாள் நமது மரபில் புகழுடன் இருந்த பரதன்போல் இந்த நாட்டைக் காப்பாற்று என்று சொன்னான், நல்ஒழுக்கத்தையே விரதமாகக்கொண்ட இரத்தினாங்கதனும் அவ்வார்த்தையைக் கேட்பதற்கு முன்னமே விடைபெற்றுக்கொண்டு யானை, தேர் முதலாகிய சேனைகள் நான்கு பக்கத்திலும் சூழ மதுரைக்குப் போய் நாட்டை ஆட்சி செய்தான். 41

444 முறையினல் இறையின் வந்த
கனகமும், முத்தும், தெவ்வர்
திறையினல் அளந்த பொன்னும்,
தினம்தொறும் களிற்றின் மேலே
இறைவனும் தனது தாதைக்கு
அளித்திட, இறைவன் வேணிப்
பிறையினற்கு இனிய பூசை
திருப்பணி பெரிதும் செய்தான்.

(பொருள்) நீதியாக ஆறில் ஒரு கடமைகொண்ட செல்வமும், கடலில் குவித்து வாரிவந்த முத்துக்களும், பகைவர்களால் திறையாகக் கொடுக்கப்பட்ட பொன்னும் தினந்தோறும் யானையின் மேல் ஏற்றி அரசனுகிய தன் தகப்பனுக்கு அனுப்புவிக்க வச்சிராங்கத பாண்டியன், சடையில் சந்திரனைத் தரித்த பரமசிவனுக்கு இனிமையாகிய பூசை, திருப்பணி பெரிதாகச் செய்தான். 42

445 செய்தபின் தவமது ஆகிக்
கௌதமஆச் சிரமத்து ஒர்பால்,
எய்திய பன்ன சாலை
இயற்றி,நம் பாவம் தீர்க்கும்
மைதவழ் மிடற்ருற்கு, அன்பாய்
மலைவலம் செயுநாள், அந்தக்
கைதவற்கு எதிரே வந்தான்,
கைதவர்க்கு எதிரே வாரான்.

(பொருள்) அருணசலேசருக்குத் திருப்பணியும், பூசை முதலானவைகளும் சிறப்பாக நடந்தபின்பு, தவம் செய்வதற்கு நினைந்து, கௌதமருடைய குடிசையில் ஒரு பக்கம் பர்ணசாலை கட்டி, நம்முடைய பாவத்தைத் தீர்க்கின்ற நீலகண்டமுடைய பரமசிவனுக்கு அன்பாய், மலையை வலமாகச் சுற்றி வருகின்ற நாளில், கைதவனுகிய பாண்டியனுக்கு எதிரே தோன்றினர், வஞ்சம் பொருந்திய மனத்தை உடையவர்கள் எதிரே வராத பரமசிவன். 43

446 அணிச்சிறு பிறையும், போதம்
அருள்பொழி விழியும், நீல
மணிக்கறை மிடறும், நாலு
புயங்களும், மலர்க்கை மானும்,
கணிச்சியும், விடையின் மீதில்
இருப்பதும் கண்டு,என் பாவப்
பிணிச்சிறை விடுப்பது என்றோ?
எனச்சொலிப் பெரிதும் தாழ்ந்தான்.

(பொருள்) அழகு அமைந்த சிறிய சந்திரனையும், மிகவும் கருணை பொழிகின்ற கண்களையும், நீலமணிபோல் ஒளிவிடுகின்ற கண்டத்தையும், நான்கு கைகளையும், மலர் போன்ற கையில் மானும் மழுவும் உடையவராய் இடப வாகனத்தின் மேல் இருப்பதையும் பார்த்து, என்னுடைய பாவப் பிணிப்பு என்னை விடுவது என்றைக்கோ என்று சொல்லி, மிகவும் பாண்டியன் வணங்கினான். 44

447 அண்ணமலை உடையாய்!மழ
விடையாய்!அணி சடைசேர்
தண்ணும்அலை உடையாய்!எமை
உடையாய்!நுதல் தழுவும்
கண்ணமலை உடையாய்!வினை
கடவார்அறிவு அறிதற்கு
ஒண்ணமலை உடையாய்!உமை
உண்ணமுலை தலைவா!

(பொருள்) அண்ணமலை என்னும் பெயரை உடையவரே! இளமையான இடப வாகனத்தை உடையவரே! அழகுள்ள சடையில் குளிர்ந்த கங்கையை உடையவரே! எங்களை ஆட்கொள்ள உடையவரே! நெற்றியில் பொருந்திய கண்ணுடையவரே! மயக்கம் உடையவரும் பாவங்களைக் கடக்காத பாவிகளும் அறியப் படாத கைலாய மலையில் இருக்கின்றவரே! உண்ணமுலையாகிய பார்வதியினது தலைவரே! 45

448 "மையாகிய வினையேன்,உனை
ஒருமாவினில் வலமாய்ச்
செய்யாதது செய்தேன்;இது
தீர்"என்றுஉரை செய்தான்;
பொய்யாதவன் மொழிகின்றது
கண்டே,அருள் பொலிஉற்று,
ஐஆனனம் உடையான்,மழ
விடையான்இவை அருள்வான்.

(பொருள்) தீவினையை உடையவனாகிய நான், உம்மை ஒரு குதிரையில் ஏறி வலமாக வந்து செய்யத் தகாத காரியம் செய்ததினால், பொறுத்து அருளவேண்டும் என்று பொய் இல்லாத பாண்டியன் சொல்ல, அதைக் கேட்டு அருள் உண்டாகி, இளமை பொருந்திய இடபவாகனராகிய ஐந்து திருமுகத்தை உடைய பரமசிவன் அருளிச் செய்தார். 46

449 "மன்னா!மக பதி!நீஎமை
மதியாது ஒரு குலிசம்
அந்நாள்விடல் உற்றாய்;அத
னாலேநரர் வடிவாய்,
இன்னாதன பெற்றாய்;இனி
இமையோர்அதி பதியாய்ப்
பொன்நாடுஅணை," என்றேவரம்
பொழிந்தே,இறை மறைந்தார்.

(பொருள்) வச்சிராங்கத பாண்டியனே! நீ முற்பிறவியில் தேவேந்திரனாய் இருந்தாய்; அந்நாளில் நம்மை மதியாமல் வச்சிரப்படையை நம்மேல் செலுத்தினாய்; அதனால் பூமியில் மனிதனாகப் பிறந்து வெறுக்கத் தக்கனவாகிய துன்பம் அடைந்தாய்; அதன் பின்பு (இப்போது நீ) நம்மைப் பூசித்து வலம் வந்தபடியினால் இனித் தேவர் களுக்குத் தலைவனாய் தேவலோகத்துக்குப் போ என்று வரம் கொடுத்துப் பரமசிவன் மறைந்தார். 47

450 "அருணைப்பதி வளம்இப்படி;
அருணபுரி நினைவோர்
மரணத்துகள் அடையார்;சிவன்
வடிவுஆகுவர்" என்ருன்;
"கருணைக்குஒரு கடலே!பர
கதிபெற்றனம்" என்றே
சரணத்துஇடை பணிந்தான்;நமன்
தனைவாட்டிய தவத்தோன்.

(பொருள்) அருணசலத்தின் வளப்பம் இதாகும்; இந்நகரை நினைப்பவர்கள் மரணத் துன்பம் பொருந்தாமல் சிவனுடைய வடிவம் பெறுவார்கள் என்று நந்தி தேவர் சொல்ல, எமன் வாடும்படிச் செய்த தவமுடைய மார்க்கண்டேயர் கேட்டு, கருணைக் கடலானவரே! உம்மால் பரகதி அடைந்தேன் என்று அவர் திருவடிகளில் வணங்கினர். 48

451 இக்காதையின் பொருளானதுஓர்
எழுத்தாகிலும், தெளிந்தோர்
தக்காருடன் படித்தோர்சிவ
சாயுச்சியம் பெறுவார்;
முக்காலமும் இதுகற்றவர்
வினவிப்பொருள் முடிப்பார்;
புக்கார்சிவ கதிஎன்பது
புதுமைப்பொருள் அன்றே?

(பொருள்) இக்கதையில் ஒரு எழுத்தினது பொருளாயினும் அறிந்தோரும், பெரியோர்களோடு படித்தவர்களும் சிவசாயுச்சியம் அடைவார்கள்; முக்காலத்திலும் இதைக் கற்றவர்கள், இதன் பொருளைக் கேட்டு முடிபபவர்கள் ஆகிய இவர்கள் எல்லோரும், சிவகதியில் சேர்வார்கள் என்பது ஆச்சரியம் ஆமோ? 49

ஆருவது
வச்சிராங்கத பாண்டியச் சருக்கம்
முற்றிற்று.

# 7 வல்லாள மகராசன் சருக்கம்

452 பாசம் உற்றவச் சிராங்கத
பாண்டியன் சீரை
வாச மாய்நவின் றேம்;இனி,
நாம்வல்லா ளனுக்கு,
ஈச னேமக வாகவந்து
எய்திப்பின் உறுதி
ஓசை யாய்அருள் செய்ததை
உமக்குஉரை செய்வாம்.

(பொருள்) பரமசிவனுடைய திருவடி மலர்களில் மிகவும் அவாவினையுடைய வச்சிராங்கத பாண்டியன் சரிதையை முறையாகச் சொன்னேம். இனி வல்லாள மகாராசனுக்கு (திருமால், நான்முகன் முதலான தேவர்கட்கு அரியவராகியும், பார்வதி அம்மையோடு தேவகணங்கள் பணிந்து போற்றப்படுபவராகியும், கைலாய மலையில் வீற்றிருக்கும்) பரமசிவனே மகனாகத் தோன்றி மறைந்த பின்னர், அக்கடவுள் விசும்பின்கண் வெள் விடையின் மீது எழுந்து அவ் அரசனுக்கு அருள் சுரந்ததையும், மார்க்கண்டேயரே! உமக்குச் சொல்லுகிறேம் என்று நந்தி தேவர் திருவாய் மலர்ந்து அருளினர். 1

453 மணிகொ ழித்திடும் மாடம்மா
ளிகைதவழ் சோலை,
திணிகொள் அம்பரத் திளையுறு
சிறப்பினை ஆர்ந்த,
கணிகை யாம்அவர் கற்பினை
அருந்ததி தனக்கே
இணைஎ னச்சொல இசைக்குமா
அருணையம் பதியாம்.

(பொருள்) மாணிக்கம், மரகதம், வயிரம், வயிடூரியம், கோமேதகம், புட்பராகம், இந்திரநீலம், முத்து, பவளம் என்னும் ஒன்பது மணிகளால் அலங்கரிக்கப்பட்ட மேல் நிலைகளையுடைய மாட மாளிகைகளும் வானத்தை அளாவி உயர்ந்து, தீம்சுவைக் கனிகளை உதிர்க்கும் மலர்ச் சோலைகளும் எங்கும் நிறைந்து மணம் வீசுவது, அருந்ததிக்கு ஒப்பான வடிவமும் கற்பும் வாய்ந்த கணிகையர்கள் வசிக்கும் அருணசலம் என்னும் நகராம். 2

454 இத்தகைச் சிறப்பை வகித்திடும் நகருக்கு
இறைவன்வல் லாளன்என்று இசைக்கும்,
சத்திய மொழியான்; நற்குணம் உடையான்
தன்உயிர் மன்உயிர் ஆகப்
பத்தியாய் நாளும் பாதுகாத் திடுவோன்;
பகர்அரும் சீர்அனல் குலத்தோன்;
அத்தனர் அடியை நித்தமும் துதித்தே
அவர்திருப் பணிசெய வந்தோன்.

(பொருள்) இத்தகைய புகழினையுடைய அவ் அருணாசலம் என்னும் நகரில் அரசனாய் விளங்கிய வல்லாள மகாராசன் என்பவன், உண்மையே பேசுபவன்; மிக மேலான குணம் உடையவன்; எல்லா உயிர்களையும் தன் உயிர்போல் பாதுகாப்பவன்; அக்கினி மரபில் தோன்றியவன்; உலகத் தந்தையாகிய பரமசிவனுடைய இரண்டு திருவடிகளையும் ஒவ்வொரு நாளும் மூன்று பொழுதும் துதி செய்து, அக் கடவுளது திருப்பணி செய்ய வந்து உதித்தவன். 3

455 பிறர்பொருள் ஆசை அற்றவன்; தனது
பெண்டிரை அன்றிமற் றோரை
முறையுடன் தமக்கை தங்கையர் எனவும்
மொழிந்திடும் நன்னடை உடையோன்;
நெறிஉடன் ஆறில் ஒருபங்கு குடிகள்
நிலையுடன் தரப்பெறும் புனிதன்;
கறைமிடற்று அண்ணல் ஆலயப் பணியைக்
கருத்துஉகந்து இயற்றும்நல் அன்பன்.

(பொருள்) மற்றவர் பொருள் மீது விருப்பம் இல்லாதவன்; தன் மனைவியரை அன்றி மற்ற பெண்களைத் தமக்கைமார்களாகவும், தங்கைமார்களாகவும் மனத்தில் பரிவு கொண்டு பேசும் வன்மை உடையவன்; நீதி தவறாமல் குடிகள் இடத்தில் ஆறில் ஒரு பங்கு பகுதிபெறும் தூய்மையாளன்; ஆலாலம் உண்ட திருக் கண்டராகிய அருணாசலேசர் ஆலயத் திருப்பணியை முனைக்களிப்போடும் நடத்தும் மேன்மை பொருந்திய பத்தியை உடையவன் 4

456 நீதியாய்ப் புலியும் பசுவும்ஓர் துறையில்
நெருங்கியே புனல்உண்டு வசிக்கும்;
போதனை அருளும் வேதியர் மறையைப்
புகன்றிட யாவரும் கேட்பார்;
ஆதியாம் கடவுள் அருள்பெற நகரை
அலங்கரித்து அற்புதம் செய்வார்;
வீதியில் புனலைத் தெளித்துமின் னார்கள்
மேம்படு கோலமும் இடுவார்.

(பொருள்) அரசனின் ஆணையால் புலியும் பசுவும் ஒரு துறையில் நீர் அருந்திக் களிப்புடன் விளையாடிச் சேர்ந்து வசிக்கும்; வேதம், ஆகமங்கள் உணர்ந்து பிறருக்கு எடுத்து உரைக்கும் அந்தணர்கள் ஓதும் வேதத்தை அன்போடு அனைவரும் கேட்பர்; முழுமுதல் கடவுளாகிய அருணாசலேசர் உடைய திருவருளைப் பெறும் பொருட்டு, அந்நகர் முழுவதும் வீதிகள் தோறும் வரிசை வரிசையாய் மகர தோரணங்களும், மா இலைத் தோரணங்களும், இடப துவசங்களும் தூக்கி, எங்கும் மலர்களால் அலங்காரம் செய்வர், வீதிகளில் மங்கையர்கள் வாசனை கமழும் நீர் தெளித்து, விசித்திரங்களாகிய கோலங்களை இடுவார்கள். 5

457 மாதம்மும் மாரி சொரிந்து,வே ளாண்மை
மாறுஇலாச் செழிப்புஉற விளையும்;
சாதம்என் போரை அக்கணம் அழைத்தே
தழைக்கஓர் அறுசுவை அளிப்பார்;
மாதவர்க்கு ஏவல் புரிந்துஅவர் கேட்கும்
வகைஎலாம் தந்துஅருள் பெறுவார்;
நீதன்ஆ லயத்தில் நெய்விளக்கு அமைத்து
நிரந்தரம் பூசித்து வருவார்.

(பொருள்) அருணை நகரில் மாதம் மும்மாரி பொழிந்து வேளாண்மை குறையாது செழித்து ஓங்கிவிளையும்; பசி என்று யாராவது வந்தால் அறுசுவையோடு கூடிய உணவை அளித்து உபசரிப்பர்; தவத்தில் வல்லவர்கட்கு ஏவல்கள் புரிந்தும், அவர்கள் விரும்பிய பொருள்களை எல்லாம் கொடுத்தும் அவர்கள் அருளைப் பெறுவார்கள்; நீதனாகிய அருணாசலேசர் கோயிலில் எங்கும் ஒளி வீசக்கூடியதாய் நெய்யினால் திருவிளக்குகள் அமைத்து. அக்கடவுளை என்றும் அன்புடன் போற்றிப் பூசித்து பணிந்து வருவார்கள். 6

458 இந்த வண்ணம் இறைவன் விதிப்படி
அந்த மாநகர் ஆனது இலங்குநாள்,
எந்தச் சீரும் இருக்க,மன் பேர்சொல
சந்த திஇல்லை என்று தளர்ந்தனன்.

(பொருள்) இத் தன்மையாய் அரசன் செங்கோல் முறைமையால் அந்நகரம் செழித்து ஓங்கி இருக்கையில், ஓர் நாள் வல்லாள மகாராசன் தனக்கு ஆண்டவன் அருளால் எல்லாச் சிறப்பும் பொருந்தி இருக்க, (நாம் எடுத்து அணைத்து உச்சி மோந்து முத்தம் இடவும், இனிய மழலைச் சொற்களைக் கேட்டு ஆனந்தம் உறவும்) பின்னர் நம் பெயரைச் சொல்லவும் பிள்ளை இல்லையே என்று மனம் வெதும்பி மிகவும் துன்பம் உற்றான். 7

459 ஐயன் பூசை யதில்குறை வோ?இந்த
வையம் நீதியின் மாறுஉள தோ?அன்றிக்
கொய்ம்ம லர்களில் கோதுஉறச் செய்தனோ?
செய்யும் வண்ணம்என்? செப்பும்அ மைச்சரே!

(பொருள்) தலைவராகிய அருணசலேசருக்குப் பேதையனாகிய என்னால் செய்யப் பட்ட பூசையில் ஏதேனும் குறை உளதோ? அல்லது, இவ் உலக நீதி நடத்துவதில் மாறுபாடாகிய குற்றங்கள் உண்டோ? அல்லது, பரமசிவனை அருச்சித்துப் பணியக் கொய்த மலர்களில் ஏதேனும் குற்றம் குறைகள் உண்டோ? என் செய்வேன், அறியேன், இனிச் செய்யும் விதியாது? கூறுவீர் மந்திரிகளே! என்றான் அரசன். 8

460 அண்ண லேநமை ஆதரித்து ஆண்டிடும்
கண்கள் மூன்றுஉடை யான்நல் கருணையால்,
நண்ணும் ஆதுலர் யார்க்கும்நல் அன்புடன்
திண்ண மாய்அறம் செய்யில், மகவுஉண்டாம்.

(பொருள்) பெருமை பொருந்திய எம் அரசனே? நம்மை அன்புடன் ஆதரித்து ஆட்கொள்ளும் மூன்று கண்களையுடைய அருணசலேசுரரது மேன்மை பொருந்திய கருணையினால் நம் பதியை நாடிவரும் ஆதுலர் முதலிய அந்தணர்களும், மற்றவர்களும் எதைக் கேட்ட போதிலும் இல்லை என்னாது அவர்கள் மனம் மகிழும்படி உள் அன்போடும் நல்குவோமாயின் (பரமசிவன் அருளால்) புத்திரன் உண்டாம் என்று சொன்னார்கள் மந்திரிகள். 9

461 சுந்தர் அருணை நாதர்
துலங்கும்இந் நகரின் உள்ளே,
வந்தவர் எதுகேட் டாலும்
வழங்குதும்! எனஇப் போது
அந்தரம் அளாவ, நீங்கள்
அழகிய கொடியை நாட்டி,
எந்தன்நல் பெயர்வி ளங்க,
எழின்முரசு அறையச் செய்ம்மின்!

(பொருள்) சோமசுந்தரக் கடவுளாகிய அருணாசலேசுரர் வாழும் இப்பதியின்கண் வந்தவர்கள் எந்தப் பொருளை விரும்பிக் கேட்டாலும் குறைவு இன்றித் தருகிறோம். இப்போதே வாருங்கள் என்று கரங்களை நீட்டி அழைப்பன போலும், இவ் எல்லையுள் புக்க மாந்தர்களைக் கலி என்னும் பிணி அணுகாமல் துரத்த வான் அளாவி உயர்ந்த அழகிய ஓர் கொடி நாட்டி, என் பெயர் எங்கணும் சிறக்கும் பொருட்டு இடி முழக்கம் போல் பேர் ஒலி காட்டும் முரசம் ஆர்ப்பச் செய்யுங்கள் என்றான் வல்லாளமகாராசன் 10

462 தாத்திரி முற்றும் நற்சீர்
தழைக்கும்எம் கோனே! கேண்மோ!
சாத்திரம் புகழும் ஈசர்
தாள்தொழும் தொண்டர் மூப்பர்
தோத்திர இரவ லோர்கள்
தோன்றிய வண்ணம் ஈயப்
பாத்திரர் ஆனோம் என்று
பகர்ந்தனர் அமைச்சர் ஆனோர்.

(பொருள்) நெடிய கடல் சூழ்ந்த உலகம் எங்கும் மிகுந்த புகழை விரியச் செய்த எங்கள் அரசே! கேளீர்! நான்கு வேதங்கள், ஆறு சாத்திரங்கள் புகழும் அருணாசலேசருடைய இரண்டு திருவடிகளையும் பணியும் மெய்யன்பர்கள், தவவலிமை பெற்ற விருத்தர், போற்றுதல் செய்யும் பாவலர் முதலியவர்களின் மனத்தில் தோன்றிய வண்ணம் அளித்துக் களிப்பு அடையச் செய்விக்கும்படியாகிய பாத்திரர் ஆனோம் இறைவனே! என்று மொழிந்தார்கள் மந்திரிகள். 11

463 பூவிலாப் பொருளைக் கேட்கப்
போகுமோ? கேட்கில், அவ்வாறு
யாவரா யினும்தான் நல்கார்;
ஆதலால் புகன்ற வண்ணம்
தீவிர மாகச் செய்வீர்
எனத்துவ சத்தை நாட்டித்
தேவநா டளவும் ஓங்கச்
செயமுரசு அறைவித் தாரால்.

(பொருள்) இவ்வுலகில் இல்லாத பொருளைக் கேட்கப் போமோ? அவ்வாறு கேட்ட போதிலும் யாவரேனும் எத்தன்மை வாய்ந்தவராயினும் கொடார்கள். ஆகையால், யான் உங்களுக்கு உரைத்த விதியின்படி மிக விரைவில் செய்வீர்கள் என்று மொழியக் கேட்டு மந்திரிகள் கொடி நாட்டி வெற்றி முரசு அறைவித்தார்கள். 12

464 நாதன்வாழ் அருணை நகரினில், வேந்தன்
நாட்டிய கொடிதனை ஓர்ந்து,
பூதலத்து உள்ள விருத்தர்கா வடிகொள்
பூரியர், உடன்மிகச் சிறந்த
மாதவர், மறையோர், ஆதுலர்ஏனை
மாந்தர்வந்து அணுகிமற்று அன்னோர்
ஏதம்இல் வேண்டும் பொருள்அடைந்து என்றும்
இலகுவாழ்வு உறுவம்என்று இசைவார்.

(பொருள்) தலைவனாகிய அருணாசலேசுரர் வாழும் அருணையம் பதியின்கண் வல்லாள மகாராசன் தருமக் கொடி நாட்டி இருப்பதாய்க் கேள்வி உற்ற நெடிய கடல் சூழ்ந்த பூமியில் இருக்கும் விருத்தர், தீர்த்தக்காவடி ஏந்திவரும் அந்தணர், தபோதனர், பாவாணர், மறையோர் முதலிய யாவரும் அன்போடு கூட்டம் கூட்டமாய்க் கூடி, தத்தம் வறுமை நீங்கும்படியாய் அரசனிடம் வேண்டியவைகளைப் பெற்று குறைவு இன்றி வாழ வந்தார்கள். 13

465 வதுவைசெயப் பொன்வேண்டி வந்தோருக்கு
ஆயிரம்பொன் வழங்கி, பின்னும்
கொதுவை,மனை, நிலம்,பணதி, கொற்றவனே!
அதைமீட்டுக் கொடும்என் றோர்க்கு,அத்
தருயில்ஈ ராயிரப்பொன் தந்துஅவரை
மகிழச்செய்து அதன்பின், ஆங்கு
முதுமறையோர் உபநயனம் முடிக்கஎன்றால்
அவர்க்குநிதி முந்நூறு ஈவான்.

(பொருள்) திருமணம் செய்துகொள்ளவேண்டும் என்று அரசனை நாடிவந்து கேட்டவர்களுக்கு ஆயிரம் ஆயிரமாகப் பொன் கொடுத்தும், பின்னர், அணிகலன்கள், மண், மனை யாவும் கொதுவை வைத்து மீட்டுக் கொளவதற்கு வழி இல்லாமல் மூழ்கிப் போகின்றன, அதை மீட்டுக் கொள்வதற்குத் திருவருள் புரியவேண்டும் என்று வேண்டிக் கொண்டவர்கட்கு, மனம் இரங்கி, அககணமே ஈராயிரம் பொன் கொடுத்து அவர்கள் மனம் மகிழச் செய்வித்தும், அதன் பின்பு பழமையான வேதாகமங்களை உணர்ந்த அந்தணர்கள் வந்து அரசனுக்கு ஆசி கூறி, உபநயனம் செய்யவேண்டும் என்று அறிவிப்பார்களாயின், அவர்கட்கும் முந்நூறு பொன் கொடுத்தும் மகிழச் செய்வான். 14

466 ஆலயத்தில் உற்றமணி மண்டபமும்
சூழ்மதிலும் அவமாம் தன்னைக்
கோலம்உற அமைப்பதனுக்கு இறையவனே!
திரவியங்கள் கொடுப்பாய்! என்னச்
சீலமுடன் இருபதினா யிரம்பொன்னும்
தந்து,சீர் செய்என் றான்;பின்
ஞாலம்அதில் மடம்தருமம் செய்யஐம்பது
ஆயிரம்பொன் நல்கி னால்.

(பொருள்) திரு அருணாசலேசுரர் அமர்ந்திருக்கும் கோயிலினுள் நவமணிகளினாலும், சந்திரகாந்தக் கற்களினாலும் அமைத்து ஒளி வீசும் மண்டபங்களும், சூரியனும் ஒதுங்கிப் போகும்படி உயர்ந்த மதில்களும் கிலப்பட்டு இருக்கின்றமையால், அவைகளைத் திருத்தம் செய்யும் பொருட்டுப் பொருள் உதவி செய்யவேண்டும் மகாராசனே! என்று கேட்குங்கால், அரசன் மிகவும் பயபக்தியுடன் இருபதினாயிரம் பொன் கொடுத்துச் சீர் திருத்தம் செய்தும், பின்பு சிவசரணர்கள் வசிக்கும் மடாலயங்களைப் புதுக்க வேண்டும் என்றால், அவைகளுக்கு ஐம்பதினாயிரம் பொன்னும் கொடுப்பான். 15

467 அந்தகர்க்கும் சங்கமர்க்கும் முடவருக்கும்
ஏழைகட்கும், ஆபத்து என்று
வந்தவர்க்கும் ஆதுலர்க்கும், மாருத
சஞ்சலத்தால், வறுமை நோயால்
நொந்தவர்க்கும், சொல்லும்இன்ன மற்றவர்க்கும்
தினம்தினமும் நுவன்ற வாறு,
சந்தமொடு பரிசுஅளித்தல் நாரதரும்
ஓர்ந்துஅங்கண் சார்ந்திட் டாரால்.

(பொருள்) கண் இல்லாதவர்கட்கும், சங்கமர்களுக்கும், கை கால்கள் அற்றவர்களுக்கும் ஏழைகட்கும், வினைவழியால் கொடிய ஆபத்து அடைந்து வந்தவர்களுக்கும், இரவலர்களுக்கும், கெடாத துன்பத்தை அடைந்து வறுமை என்னும் பிணியால் மெலிந்து மனம் நொந்தவர்களுக்கும், பின்னும் சொல்லும் இரவலர்களுக்கும் எப்பொழுதும் அவர் அவர்கள் விரும்பிக் கேட்டுக் கொண்ட வண்ணம் மனக் களிப்போடும் உதவி செய்வதை நாரத முனிவர் கேள்விப்பட்டு, வல்லாள மகாராசனிடம் மிகுந்த கருணையோடும் எழுந்தருளி வந்தார். 16

468 மாதவ முனிவர் ஆங்கு
வந்ததை மன்னன் ஓர்ந்து,
காதல்கொண்டு அமைச்சர் சூழக்
கடிதினில் அரசை விட்டுப்
பூதலன் எதிர்சென்று ஏத்திப்
புனிதனை அழைத்து வந்து,
ஏதம்இல் பீடம் நல்கி,
இருந்தபின், இயம்பு வானல்.

(பொருள்) பெரிய தவத்தினராகிய நாரதமுனிவர் அவ்விடம் வந்த வரவைக் காவலாளிகளால் கேள்விப்பட்ட வல்லாள மகாராசன், மிகவும் அன்போடும் சிங்காதனத்தை விட்டு எழுந்து, மந்திரி முதலியவர்கள் புடை சூழ்ந்துவர எதிர் சென்று பணிந்து, தமியேங்களை ஆட்கொள்ளும் பொருட்டு திருஅருள் பொழிய வந்த மாதவமே! புண்ணியப் பொருளே! என்று போற்றி மிக்க களிப்போடு அழைத்து வந்து, குற்றம் அற்ற அழகு பொருந்திய பீடம் அளித்து, அதில் அமர்ந்த பின் சொல்லல் ஆனன். 17

469 "அயன்தவத் தினில்உ தித்தே
அழகிய கரத்தில் வீணை
வியம்உறக் கொண்டு பாடும்
மேன்முனி வரனே! தாங்கள்
நயம்உடன் நாயன் மீது
நாட்டம்உற்று, எழுந்த செய்தி
தயைஉடன் அருள்க!" என்னத்
தாபதர் இசைப்பது ஆனர்.

(பொருள்) படைக்கும் தலைவராகிய நான்முகன் தவவலிமையால் உதித்து, அழகிய கரத்தில் வீணை இலங்கக்கொண்டு கானம் செய்யும் மேன்மை பொருந்திய முனிபுங்கவரே? தாங்கள் நாயினும் கடையேன் ஆகிய பேதை என்மேல் கருணை வைத்து, இங்கு வந்த செய்தியை அருள் செய்யவேண்டும் என்று பணிந்து நின்ற வல்லாள மகாராசனைப் பார்த்து, நாரத முனிவர் கூறுவார். 18

470 "தலத்தினில் மகிமை உற்ற
தாபதர் புகழும் மாஜம்
புலத்தினை வென்ற மோனர்
புகலும்மூ வகையுள் வன்னி
குலத்தினில் வருமன் னு! நின்
கோதுஇலாத் தருமம் கேட்டுஅந்
நலத்தினை அறிய வந்தோம்;
நவின்றிடாய்!" என,உ ரைப்பான்.

(பொருள்) உலகின்கண் பெருமை பொருந்திய முனிவர்களும் புகழத்தக்க பெருமை வாய்ந்த ஐம்புலன் நுகர்ச்சிகளையும் வென்று, மெய் உணர்ச்சி பெற்ற புண்ணியர்களால் சொல்லப்பட்ட சந்திரன், சூரியன், அக்கினி என்னும் மூன்று மரபில், அக்கினி குலத்து உதித்த அரசே! நின் குற்றம் அற்ற பெரிய ஈகையின் பெருமையைக் கேள்வி உற்று, அதை அறியும் பொருட்டு வந்தோம்; ஆதலால், உன் கருத்தை வெளியிடுவாய் என்று நாரத முனிவர் கேட்க, அரசன் சொல்லுவான். 19

471 "மனுமுறை அறிந்த தாபதர் புகழும்
மாதவ முனிவரே! கேண்மோ!
தனியில்என் அரசைத் தாங்கவும் என்பேர்
சாற்றவும் மகவுஇலன்; அதனால்
பனிமலர்க் குழலாள் பாகனார் தொழும்பர்
பரிவுடன் கேட்டவை, மண்மேல்
கனிவுடன் அளிக்கத் துவசமது உயர்த்தேன்;
கடவுளின் செயல்அறி யேனே!"

(பொருள்) வேத சாத்திர மந்திரங்களை உணர்ந்த முனிவர்கள் புகழத்தக்க பெரிய தவவலிமையுடைய நாரதமுனிவரே! எளியேனது ஒப்பற்ற ஆளுகையைத் தாங்கிக்கொள்ளவும், பின்னர் எளியேன் பெயரைச் சொல்லவும் மைந்தன் இல்லாமையால் குளிர்ந்த தேனைச் சொரிகின்ற பூங்குழலையுடைய உமாதேவி பாகனாகிய திரு அருணாசலேசுரர் அடியார்கள் விரும்பிக் கேட்டவைகளை இல்லை என்னாது கொடுக்கும் நியமம் கொண்டு, கொடி நாட்டி நடத்தி வருகின்றேன்; நம்மை ஆட்கொள்ளும் கடவுளின் திருஉளம் யாதோ? அறியேன்! என்றான் வல்லாள மகாராசன். 20

472 "திருஉயர் தருமம் நடத்துவர் மண்மேல்
சேயரைப் பெறுவரென் றேநல்
தருமநூல் களிலும் செப்புவது அன்றித்
தக்கவ ரும்புகல் வதனால்,
பெருகுமா நதியும் மதியமும் சடையில்
பெட்புடன் உற்றுஎலாம் காக்கும்
குருபரன் அருளால் குழவியும் உண்டாம்;
கொற்றவா! செலவிடை தருவாய்!"

(பொருள்) அழகில் உயர்ந்த முப்பத்திரண்டு அறங்களையும் இரப்பவர்கட்கு இல்லை என்னாமல் நடத்துபவர்கள் பூமியில் புத்திரப் பேற்றைப் பெறுவார்கள் என்று பெருமை மிக்க சாத்திரங்களில் சொல்லி இருப்பதல்லாமலும், மறைவிதி உணர்ந்த பெரியோர்களும் சொல்லுவார்கள், ஆதலால், எங்கும் பரவிய பெருமையுடைய கங்கையையும், சந்திரனையும் சடையில் அழகாக அணிந்து எண்பத்து நான்கு நூறு ஆயிரம் சீவபேதங்களைப் படைத்து அளிக்கும் பரமசிவனின் திருவருளால் மக்கள் பேறு பெறுவாய்; எனக்கு விடை தருவாய் அரசனே! என்றார் நாரதமுனிவர். 21

473 மன்னவன்தன் நீதிதனைக் கயிலைவளர்
பரமனுக்கு வழங்க வேண்டித்
துன்னுமுனி காதல்உற்றுச் செல்லுகையில்,
சிவகணங்கள் துதித்து நிற்க,
முன்னிலங்கும் சங்கரனை நாரதனும்
பணிந்து,பின்னர் முனிவர் சூழச்
சென்னிமதி அணிந்தபிரான் திருக்கோலம்
கண்டுஇறைஞ்சிச் செப்பு வானால்.

(பொருள்) வல்லாள மகராசனுடைய நல்வழியையும், அறங்காவலையும் கயிலையில் அமர்ந்திருக்கும் பரமசிவனுக்கு அறிவிக்க எண்ணம் கொண்டு, தவத்தில் சிறந்த நாரதமுனிவர் விருப்பத்தோடு சொல்லுகையில், சிவகணங்கள் அடி பணிந்து துதித்து நிற்க, முன்னே ஒளிவீசிக் கட்டளைகள் விதித்துக் கொண்டிருக்கும் இரண்டாம் சங்கரனாகிய நந்திதேவரைப் பணிந்து, பின்பு தவத்தில் சிறந்தவர்களும், தேவர்களும், முனிவர்களும் புடைசூழும்படி உமையவள் இடப்பாகத்தில் இலங்கக் கொலு வீற்றிருக்கும் திங்கள் அணிந்த சிவபெருமானின் திருக்கோலம் கண்டு பணிந்து எழுந்து போற்றிக் கூறுவார் நாரதமுனிவர். 22

474 "தேசின்மிகு கயிலையில்வாழ் தேவாதி
தேவே!நின் திருத்தாள் போற்றி!
மாசுஇன்றி விளங்குஅருணை அம்பதியின்
வல்லாள மன்னன் என்போன்,
ஓசைபெறச் சுதன்வேண்டிக் கொடிநாட்டி,
உலகின்உள்ளோர் உவந்து கேட்கும்
பாசமுடன் எதையேனும் தருவன்என்று
பறைசாற்றும் பண்பைக் கேண்மோ!"

(பொருள்) ஒளி பொருந்திய கயிலாயமலையில் வீற்றிருக்கும் தேவதேவனே! உன் இரு திருவடிகட்குப் போற்றி செய்கின்றேன்; நிலஉலகில் குற்றம் அற்று விளங்கும் அருணையம்பதிக்கு அரசனாகிய வல்லாள மகாராசன் என்பவன், தன் பெயரை விளக்கம் செய்ய ஓர் புதல்வனை வேண்டி, யாவர் எப்பொருளை விரும்பிக் கேட்ட போதிலும், அவர் மனம் நிறைவு எய்தும்படி விருப்பத்தோடு தருகிறேன் என்று கொடிப்போட்டு, பறை சாற்றி நடத்திவரும் பெருமையைக் கேளும்! எந்தையே! என்று கூறுவார் நாரத முனிவர். 23

475 நீதியை வளர்ப்போன்; உண்மையைக் காப்போன்;
நெறிமுறை தனில்பிற ழாதோன்;
கோதினைக் களைந்த அறம்எனும் உருவாய்க்
குவலயத்து உதித்தநல் பூபன்;
பூதலத்து உயிர்கள் யாவும்தன் உயிர்போல்
புந்தியுள் கருதியே காப்போன்;
ஆதியே நினது பதமலர் துணைஎன்று
அனுதினம் தொழுதுவாழ் அன்பன்.

(பொருள்) நல்வழிகள் பெருகும்படி வளர்ப்பவன்; வாய்மையைக் காப்பாற்றத் தக்கவன்; செங்கோல் விதிபிசகாதவன்; பாவங்கள் என்னும் இருளைத் துரத்தி எழுந்த மதிபோன்ற தருமம் ஆகிய ஒளியே ஓர் உருவங்கொண்டு உலகில் பிறந்த மேன்மை பொருந்திய அரசன்; அல்லாமலும், பூமியில் வாழும் சராசரங்களாகிய எல்லா உயிர்களையும் தன்உயிர்போல மனத்தில் எண்ணிக் காப்பவன்; ஆதிக்கடவுளாகிய தங்கள் திருவடிக் கமலங்களில் மனம் பொருந்தி எக்காலமும் பணிந்து, துதி செய்து, வாழ்ந்து வரும் மெய்த் தொழும்பன் என நாரதமுனிவர் கூறினர். 24

476 வந்தமா முனிவன் கூறும்
வாய்மையை, ஈசன் ஓர்ந்து,
அந்தவல் லாளன் தன்மை
யாமும்கண்டு அறிவோம் என்று,
சிந்தைசெய் முனிக்கும் மற்றத்
தேவர்க்கும் இருடி கட்கும்
தம்தம்ஆச் சிரமம் எய்தச்
சாற்றினன், தன்னேர் இல்லான்.

(பொருள்) அங்ஙனம் வந்து வல்லாளமகராசன் பெருமையைச் சொல்லும் நாரதமுனிவன் மொழியைப் பரமசிவன் கேட்டு, அவ்வல்லாள மகராசனின் தன்மையை நாமும் கண்டு அறிய வேண்டும் என்று மனத்தில் நினைந்து, துதிசெய்து கொண்டு நிற்கும் முனிவரையும், மற்றத்தேவர்கள், இருடிகள் யாவர்களையும் தத்தம் இருப்பிடம் போய்ச் சேரும்படி திருவாய் மலர்ந்து அருளினர், ஒப்பு ஒருவரும் இல்லாத உமை கேள்வர். 25

477 அக்கணம், கயிலை நாதன்
அளகைக்கோன் தனைஅ ழைக்க,
திக்குஎலாம் மதிக்க அன்னோன்
திரண்டபொன் குவியல் தாங்கி,
அக்குஅரவு அணிந்த ஈசன்
அருள்பதம் வந்து போற்றச்
செக்கர்மே னியனும் ஆங்குச்
சிலமொழி அருளல் உற்றான்.

(பொருள்) அக்கணமே, கயிலாய பதியாகிய பரமசிவன், அளகாபுரிக்குத் தலைவனாகிய குபேரனை வரும்படிக் கட்டளை இட, எண் திசையில் உள்ளார் எவரும் மதிக்கும்படி அவ் அரசன் அளவு இறந்த பொற்குவியல்களோடும் புறப்பட்டு, எலும்புகளையும், பாம்புகளையும் அணிகலமாக அணிந்துள்ள சிவபெருமானிடம் வந்து அடிபணிந்து போற்றிநிற்கச் செவ்வானம் போன்ற உடல் ஒளியை உடைய பரமசிவன் அங்குச் சில சொற்களை அருளுவார். 26

478 அளகைஆள் அரசே! கேளும்;
அருணைஅம் பதிவாழ் வேந்தன்
உளம்உறு தியைச்சோ திக்க
உன்னிய படியால், நீயும்
வளம்உறும் சீடன் ஆகி,
மாநிதி உடன்எம் மோடு
புளகமாய் வருக! என்று
புகன்றனன், கயிலை நாதன்.

(பொருள்) அளகாபுரிக்கு இறைவனாகிய குபேரனே! கேள்! பூமியில் அருணையம் பதியில் வாழும் வல்லாள மகாராசனின் மனவலியைச் சோதிக்கும்படி நாம் எண்ணம் கொண்டிருக்கின்றமையால், நீயும் சிறந்த சீடனாகி அளவு இறந்த பொருளோடும், நம்முடன் மனம் உவந்து வரக் கடவை, என்று கூறினார், கயிலாய பதியாகிய பரமசிவன். 27

479 மால்அயன் இருவர் கண்டு
மனத்தினில் என்றும் இல்லா
மால்கொள, உம்ப ராரும்
மலர்மழை சொரிய, வேத
நூல்களும் துதிக்க, யாரும்
நுவலுதற்கு அரிய மாதுஓர்
பால்ஒளிர் பரமன், யாரும்
பரவும்சங் கமராய் நின்றார்.

(பொருள்) திருமாலும் நான்முகனும் கண்டு மனத்தில் ஒருநாளும் இல்லாத மகிழ்ச்சி கொண்டு ஒருபால் நின்று போற்றவும், தேவர்கள் மலர்மாரி பெய்யவும், வேத சாத்திரங்கள் துதிக்கவும், யாவராலும் சொல்லுதற்கு அரிய உமைஅம்மையை ஒரு கூறுகக் கொண்ட பரமசிவன் சகலரும் பணியும்படி சங்கமராய் வேடம் கொண்டு நின்றார். 28

480 தேவுறை கயிலை வாழும்
திருஉயர் சிவக ணங்கள்
யாவும்,எம் ஐயன் நற்சீர்
அருளினால், ஆண்டி ஆனார்;
பூவுல கினில்வல் லாளன்
பொருந்துநல் பதியை நாடிக்
கோமுறை யோர்கொண் டாடக்
கூட்டமாய் வருவது ஆனார்.

(பொருள்) தேவதேவனாகிய பரமசிவன் வாழும் கயிலை மலையில் வாழ்ந்துகொண்டு இருக்கும் அழகிய சிவகணங்கள் எல்லாம் எமது ஐயனின் கருணையினால் ஆண்டிகள் உருவம் கொண்டு, உலகில் இணை இல்லாப் புகழை எய்தி ஒளிவீசிக்கொண்டு இருக்கும் வல்லாள மகாராசன் வாழும் பதியை நோக்கி அரச நீதியோர் கொண்டாடிப் பணியத்தக்க தாரகக் குருமூர்த்தமாய் எழுந்து அருளி இருக்கும் சிவபெருமானைச் சூழ்ந்து வந்தார்கள். 29

481 கற்பினில் உயர்ந்தும், கணவனை இறைபோல்
கருதுதாய் ஒருவரும் இலையோ?
பொற்புறும் மைந்தர் இல்லையோ? பசிக்குப்
போனகம் அளிப்பவர் இலையோ?
விற்பனம் உடைய அரசர்கள் இலையோ?
வியப்புடன் எங்களைக் கூவி,
கற்பனை யோடும் அமுதினைப் படைக்கும்
கன்னியர் இல்லையோ என்பார்.

(பொருள்) கற்பினில் அருந்ததியைப்போல் மிகுந்தும், தத்தம் கணவனையே தெய்வமாகப் பாவித்து நடக்கும் தாய்மார்கள் ஒருவரும் இல்லையோ? அழகிய பெருமை தங்கிய வாய்மைகள் வாய்ந்த மைந்தாகள் இல்லையோ? அடியார்கள் பசிவேளை அறிந்து அன்னம் கொடுப்பார் இல்லையோ? மனு நீதியோடும் கூடிய அரசர்கள் இல்லையோ? முழு மனதோடு எங்களை அழைத்துக்கொண்டு போய்அன்னம்] பாவிக்கும் கன்னியர்களும் இல்லையோ என்று கூறுவார்கள். 30

482 பொன்னளித் தாலும் வேண்டுவது இலை; நல்
பூடணம் தரினும்யாம் வேண்டோம்;
துன்னுமா மணிகள் நல்கினும் விரும்போம்;
தொங்குமுத் தாரமும் கருதோம்;
மன்னர்கள் செங்கோல் அரசினை எமக்கு
வழங்கினும் மனம்அதில் இல்லை;
அன்னம்ஈந்து எம்மை ஆதரிப் பாரேல்
அன்புடன் உண்ணுவோம் என்பார்.

(பொருள்) செம்பொன் அளித்தாலும் விரும்போம்; நவமணிகள் அழுத்தி இலங்கும் அழகிய பணிகளைத் தரினும் யாம் விரும்போம்; ஒளி பொருந்திய இரத்தினங்களை அளித்தாலும் விரும்போம்; தாழ்வட மிகத் தொங்குகிற முத்துமாலைகளினும் மனம் வையோம்; அரசர்கள் செங்கோலின் விதியைத் தந்த போதிலும் மனம் மகிழ்ந்து வேண்டோம்; அறுசுவைக் கறிகளோடும் அமுது அளித்து எங்களைப் பாதுகாப்பார்களானால், மிகவும் அன்பாய் உண்ணுவோம் என்று அடியார்கள் கூறுவார்கள். 31

483 நவ்விஅம் கரத்தில் இருந்ததை நீத்த
நாதர்சங் கமருமே, நற்சீர்
ஒவ்விய அருணை மாநகர்த் தெருவில்
ஒலிஎழக் குமுதவாய் மலர்ந்து
வெவ்விய பசியால் மெலிந்தவர் ஏற்க
மேவுவ போலவும், கூவி
செவ்விய கொவ்வை வாயராம் கணிகைத்
தெருவினைச் சார்ந்தவர் ஆனார்.

(பொருள்) அழகிய கரத்தில் தாங்கிய மானைத் துறந்தவராகிய சங்கமர் சிறப்பு ஓங்கி இலங்கும் அருணையம்பதி வீதியில் ஒலி பெறத் தக்கதாகச் செங்குமுதம் போன்ற திருவாய் மலர்ந்து, கொடிதாகிய பசிப்பிணியால் துன்புற்று இரப்போரைப் போல அரற்றிச் சிவந்த கொவ்வைக் கனிபோன்ற அதரங்களையுடைய கணிகை மாதர்கள் வசிக்கும் வீதியில் வந்தார். 32

484 கெண்டைபோல் விழியும், கிளிநிகர் மொழியும்,
கிளர்மதி வதனமும், மென்பூச்
செண்டைஆர் குழலும், கந்தம்அது உலவும்
தெங்கதிர் குரும்பை நேர்முலையார்
அண்டையில் இருந்து, அல்விடிவு அளவும்
ஐங்கணை மாரனால் புரியும்
சண்டையை அகற்றத் தருபொனை, மின்காள்!
சாற்றுவீர்! எனஅவர் மொழிவார்.

(பொருள்) சேல் கெண்டை போன்ற அழகிய விழிகளையும், கிளிபோல் பேசும் இனிய வார்த்தைகளையும், விளங்கும் சந்திரனைப் போன்ற முக ஒளியையும், குளிர்ந்த களப மலர்களால் ஆன பூச்செண்டு அணிந்த கூந்தலையும், வாசனைத் திரவியங்கள் பூசப் பெற்ற தென்னங் குரும்பைகளைப்போல் ஒளிபொருந்திய இரண்டு குயங்களையும் உடைய பெண்களின் பக்கலில் இன்றிரவு விடியளவும் இருந்து, ஐந்து கணைகளையுடைய மன்மதன் ஏவும் கணைவலியைத் தடுத்து ஓட்டும் பொருட்டுக் கொடுக்கும் பொன்னைப் பகருவீர்கள் பெண்களே! என்று சங்கமர் வினவியபோது, அக்கணிகை மாதர்கள் கூறுவார்கள். 33

485 பைஅரவு அணிந்த பரமனைப் போன்ற
பகர்அரும் ஐய!கேள்! யாங்கள்
பொய்யதும் உரையோம்; வஞ்சகம் உணரோம்;
புணர்தலுக்கு ஓர்இருள் முற்றும்
தையலர் ஒருத்திக்கு ஆயிரம் கனகம்
தருவது;அவ் வாறுஅளித் திடில்,யாம்
மெய்யுடன் மெய்யும் பொருந்திடக் கலவி
விளைத்துமன் மதன்வினை தவிர்ப்போம்.

(பொருள்) படத்தையுடைய பாம்புகளை அணிகலன்களாய் அணிந்த கைலாய பதியாகிய பரமசிவனைப் போல் சொல்லுதற்கு அரிய சங்கமரே! கேளுங்கள்! நாங்கள் பொய் பேசோம்; வஞ்சகம் கருதோம்; ஓர் இரவு முழுமையும் சுகலீலைகளை அனுபவிப்பதற்கு ஒவ்வொரு பெண்ணுக்கு ஆயிரம் பொன் கொடுக்கும் நியமம்; ஆதலால், அதுபோல் தருவீராயின், நாங்கள் உடம்பும் உடம்பும் ஒன்றுபடத் தக்கதாக எட்டுவித ஆலிங்கனமும் செய்து, அனங்கன் கணையும் கருத்தும் நாணும்படிப் புணருவோம் என்றார்கள் கணிகை மாதர்கள். 34

486 பரத்தையர்கள் உரைத்தவணம் தந்து,உடன்ஒவ்
ஒருத்திக்குஓர் பண்டா ரத்தைக்
கரத்துஅமைத்துப் பிரியாதீர் என்னவும்,கண்
சாடைமிகக் கட்டுப் பாடாய்
உரைத்து,விலை மாதர்களின் வீதிஎல்லாம்
சங்கமராய் ஒளிரச் செய்து,
வரத்தைமிகத் தரும்அருணை நகரினில்எண்
காதம்மட்டும் மருவச் செய்தார்.

(பொருள்) அக்கணிகையர்கள் சொல்லியவை போல், அவர் மகிழும்படி கனகம் சொரிந்து ஒவ் ஒருத்திக்கு ஓர் சங்கமரைக் கைவசமாக நியமித்து, கங்குல் விடியும் அளவும் விட்டு நீங்காதீர்கள் என்று கண் சாடையினால் தெரிவித்து, மிகவும் கட்டுப்பாடாக அக் கணிகையர்கள் வாழும் வீதி எல்லாம் சிவன் அடியார்களாகவே பிரகாசிக்கும்படி செய்து, எண்ணிய எண்ணங்களை எல்லாம் முற்றச்செய்யும் அழகிய அருணையம்பதி எண் காதம் வரையிலும் சுரதலீலை புரியச்செய்தார், சங்கமராகிய பரமசிவன். 35

487 விலேமாதர் தனில்ஒருவர் இல்லாமல்
அரிதுஆக்கி, வெய்ய காமன்
கலேமார்க்கப் படிமருவச் செய்தசங்க
மரும்நீங்கிக் கமழும் மாநன்
நிலேமார்க்கம் ஆய்ந்திட்ட சீடன்உடன்
மேவ,அந்த நிலத்தை ஆளும்
சிலேமார்க்கம் அறிந்தமன்னன் கண்டு,எதிர்சென்று
அஞ்சிஅழைத்து இருத்திச் செப்பும்.

(பொருள்) விலே மாதர்கள் தனித்து எங்கும் கிடைக்காது அரிதாகச் செய்து, கொடிய மன்மத சாத்திரவிதியின்படி அறுபத்து நான்கு வித லீலேகளேச் செய்யச் செய்த சங்கமராகிய பரமசிவன் அவண் நின்று எழுந்து, ஒளியும் பெருமையும் வாய்ந்த நல்வழியை ஆராய்ந்த சீடனுகிய அளகேசனேடும், அரசனது மாளிகையை நோக்கிச் செல்லுகையில், அந்நகரை ஆள்கின்ற வில் வேத வழி முழுதுமாய் உணர்ந்த வல்லாளமகாராசன் சங்கமர் வருதலேக் கண்டு, எதிர் சென்று, பணிந்து போற்றி அழைத்துக்கொண்டு போய், நவ மணிகள் பதித்து ஒளிவிடும் ஆதனத்தில் இருக்கச் செய்து கூப்பிய கரங்களேயுடையவனும் நின்று கூறுவான். 36

488 பண்ணிய தவமோ? அன்றிப்
பாரினில் யான்இ யற்றும்
நண்ணிய கருமம் யாதோ?
நயக்கின்,அவ் வாறு நல்கப்
புண்ணிய வசமோ? தேவர்
பொன்அடி வருந்த இங்குக்
கண்ணியம் உறுவேன் தங்கள்
கடைக்கணும் பெறுவேன் என்முன்.

(பொருள்) தமியேன் செய்த தவப்பலனே? அல்லது இவ் அருணேயம்பதியில் என்னுல் செய்யப்பட்ட நற்செயல்களின் புண்ணியமோ? நினேத்துப் பார்க்கும் இடத்து பரமசிவத்தைப் போல் எழுந்த, சங்கமதேவரின் ஒளி பொருந்திய பொன்மயமான இரண்டு திருவடிகளே வருத்தம் உறும்படி இஙஙனம் அருள் சுரந்த விதி யாதோ? அவற்றைச் சொல்லி அருளினுல் அதன்படி அடியேன் நடத்திக் கண்ணியன் ஆவது அல்லாமலும், தங்கள் கருணேப் பார்வையிலும் தோய்வேன் என்முன் வல்லாள மகாராசன். 37

489 மன்ன!கேள்! அரசு நீதி
மார்க்கமும், நீடு வாழி!
உன்னையாம் கருதி வந்தது
ஓதுவம்; உருவில் மாரன்
பன்னும்ஐங் கணையால் இன்று
படுத்திடும் துயரை மாற்றக்
கன்னியை நல்கில், கீர்த்தி
கடல்எழும் வழங்கும் என்றார்.

(பொருள்) இப்பூ உலகில் புகழ் பொருந்திய வல்லாள மகாராசனே! மனம் மகிழ்வுடன் கேட்பாயாக! உன் அரசும், செங்கோல் முறைமையும் நீடு ஊழி காலம் வாழி! இப்போது உன்னை யாம் வேண்டி வந்த காரணம் யாதெனில், சொல்வோம்; உருவிலியாகிய மன்மதனால் எய்யும் ஐந்து வகை மலர்களாகிய ஐந்து கணைகளினாலும் இன்று யாம்படும் துன்பத்தை நீக்கும் பொருட்டு, ஒரு பெண்ணை எனக்குக் கிட்டும்படி செய்வையானால், உன் புகழ் எழுகடல் சூழ்ந்த இவ் உலகில் ஒளிரும் என்றார், சங்கமராகிய பரமசிவம், 38

490 இதைவிடத் தேவ ரீருக்கு
எழில்மணம் முடிப்பிப் பேன்என்ற
அதைஉணர்ந்து ஐய ரானோர்,
அரச!கேள்! அதுமா தொல்லை;
வதைசெயும் காம நோயை
மாற்றுதல் விலைமா தர்க்கே
புதையல்போல் தெரியும் என்று
புகன்றனர் பெரியோர் ஆங்கு.

(பொருள்) பரமாதரை விரும்பித் திரிவதைக் காட்டிலும், எப்போதும் தங்களை விட்டு அகலாது இருக்கும்படி, சிறப் போங்கிய திருமணம் செய்து வைக்கிறேன் என்று பரிவுகொண்டு அன்போடு உரைத்த அரசனின் அன்பு நிலையை அறிந்த சங்கமர் ஆகிய சிவபெருமான் சொல்லுகின்றார்; அரசனே! நான் சொல்வதைக்கேள்! இப்போது நீ சொல்லிய வார்த்தை கொடிய துன்பத்திற்கு இடமாகும்; ஐம்பொறிகளும் தடுமாறி, வருந்தச் செய்யும் காமப் பிணியைப் போக்கும் மருந்து விலை மாதர்களுக்கே கண்டெடுத்த புதையலைப் போலக் கைவரப்பட்டதே அன்றி. வேறு மாதர்கள் அறியார்கள்; ஆதலால், அவரால் என் பிணியை மாற்றுவிப்பாய் என்று பெரியாராகிய சங்கமர் கூறினார். 39

491 நிட்டைசெய் வோர்க்கும் போதம்
நிகழ்த்துசங் கமரே! தாங்கள்
இட்டதின் படியான் செய்வேன்;
என்று,இறை காவ லோரை
விட்டனன்; "விரைவில் சீரார்
வேசையாம் ஒருமின் றனை
இட்டமாய் அழைமின்" என்ன,
ஏகினர் காலின் மிக்கார்.

(பொருள்) இல் வாழ்க்கையைக் கடந்து நிட்டை செய்யும் தவவலிமையுடையவர்களுக்கும், அறிவு புகட்டும் பெருமை பொருந்திய சங்கம வடிவு உடையவரே? உமது கருத்தின்படியே நடத்துகிறேன் என்று அங்கு உள்ள காவல்காரரை அழைத்து, 'நீங்கள் அதி விரைவில் சிறப்பு ஓங்கிய கணிகை மாதர்கள் வாழும் வீதியில் சென்று, மிகவும் அழகுள்ள ஓர் மாதரை அழைத்து வாருங்கள்" என்று விடைதரக், காற்றினும் அதி வேகமாய் நடக்கும் காவலர்கள் சென்றார்கள். 40

492 சென்று,வே சையர்கள் வாழும்
தெருமனை தோறும் புக்கு,
நின்றுஅங்கு நோக்கும் காலை,
நேயமாய் நடன கீதம்
கொன்றைசூ டியஎம் மான்தன்
குழுமுனர் ஆடல் கண்டு,
இன்றுஉத வாதுஎன்று எண்ணி
இறைக்குவந்து உரைப்பது ஆனார்.

(பொருள்) அரசனின் கட்டளையை ஏற்றுச் சென்ற தூதர்கள் அழகிய விலை மாதர்கள் வாழும் வீதிகளில் மனைகள் தோறும் புகுந்து பார்த்து வருகையில், ஒரு வீடாகிலும் நீங்காமல் சுரம், இலயம் தாளத்தோடு உகந்த பரத நாட்டியங்கள் வீணைகான இசை முழக்கத்தோடும், பொன் நிறம் போன்ற கொன்றை மாலையைச் சூடிய சிவனடியார்கள், வீடுகள் தோறும் தனித்தனியாய் இருந்து, ஆனந்தித்துக்கொண்டு இருக்கும் செயல்முறைகளைக் கண்டு, இன்று முடியாது என்று கருதினவராய்த் தமது அரசனிடம் வந்து கூறினார்கள், 41

493 அம்மொழி ஓர்ந்த மன்னவன், வெகுண்டே
அமைச்சரை நோக்கியே புகல்வான்;
நம்மொழி பிறழ்வது அரன்திருச் செயலோ?
நாம்செய்த பூசையின் குறையோ?
செம்மொழி ஆர்ந்த சங்கமர் கேட்ட
தெரிவையர் கிடைப்பதும் அரிதுஎன்று
இம்மொழி அவர்முன் இசைப்பது முறையோ?
என்னவும், அமைச்சர்கள் இசைப்பார்.

(பொருள்) தூதர்கள் உரைத்த மொழியைக் கேட்ட அரசன் கோபித்துத் தன் அமைச்சர்களைப் பார்த்துச் சொல்லுவான்; நாம் பரமசிவனின் அடியவராகிய சங்கமருக்கு உரைத்த மொழி மாறுவது திரு அருணாசலேசுரரின் திருஉளச் செயலோ! அல்லது நாம் ஆண்டவனுக்குச் செய்த பூசையின் குறையோ! என்செய்வேன்; செவ்விதாகிய இனிய சொற்களையுடைய சங்கமர் நம்மை நாடிக் கேட்ட மாதர் கிடைப்பது அரிது என்று அவர்முன் நாம் புகலுவது தருமமோ என்று துன்பப்படும் வல்லாள மகராசனைப் பார்த்து, மந்திரிகள் சொல்கின்றார்கள், 42

494 சிந்தையில் கவலை உற்றிட வேண்டாம்;
செல்வனே! பேதையாம் சென்று
விந்தைகொள் வேசை மாதினைக் கொணர்வோம்;
வியாகுலம் விடும்என அவர்வாழ்
சந்தைகொள் வீதி அடைந்து,அவர் மனையில்
தங்கிய கோலமும் நோக்கிப்
பந்துநேர் முலைமேல் கந்தமும் அணிந்த
பரத்தையர்க்கு எடுத்துரைப் பாரால்.

(பொருள்) மனத்தில் கவலை கொள்ள வேண்டாம்; திருமகள் பார்வையுள்ள அரசனே! கடையர்களாகிய நாங்கள் சென்று அடியவர் எண்ணிய வண்ணம் மிகவும் அழகு பொருந்திய கணிகை மாதைக் கொண்டு வருவோம்; தாங்கள் கவலையை விடுங்கள் என்று சொல்லி, அவர்கள் வாழும் வீதியில் சென்று, அவர்களின் மனைகளில் புகுந்து பார்க்கையில், எங்கும் சிவனடியார்கள் இருப்பதைப் பார்த்துப், பந்து போன்ற அழகிய தனங்கள் மீது சுகந்த பரிமளங்களை அணிந்திருக்கும் விலைமாதர்களுக்குச் சில வார்த்தைகளை எடுத்துச் சொல்லுவார்கள், 43

495 மைஉலாம் விழிநேர் மாதர்கள் நெருங்கி
வாழும்இவ் வீதியில், ஒருத்தி
மெய்உலாம் அரசை நாடிய பெரியோர்
விரகத்தைத் தணித்திடு வாரேல்,
கைஉலாம் கடகப் பணிமணி வடமும்
கலித்திடும் சதங்கையும் அணிந்து
நெய்உலாம் தயிர்பால் அறுசுவை அன்னம்
நிரந்தரம் உண்டுவாழ் குவரே.

(பொருள்) நீலோற்பலம் போல் ஒளிவீசும் கண்களை உடைய பெண்கள் கூட்டமாய் வாழ்ந்துகொண்டு இருக்கும் இவ்வீதியில், யாராவது ஒருத்தி உண்மை விளங்கும் எங்கள் இறைவனை நாடி நயந்த சங்கமருடைய வெவ்விய காமநோயைத் தணிப்பாரேயானால், அவர்கள் இரு கரங்கட்கு கடகமும், நவமணிகள் பொதித்த அணிகலன்களும், முத்துமாலைகளும், ஒலி உண்டாக்கும் பாதச் சதங்கை முதலிய நூபுரங்களும் அணிவது அல்லாமல், நெய், பால், தயிர் அறுசுவைப் பண்டங்களோடும் அமுது உண்டு எக்காலத்தும் யாதும் குறைவு இன்றி வாழ்வார்கள். 44

496 இன்னவாறு அமைச்சர் உரைக்கஅம் மின்னார்
இறைஞ்சியே, "யாங்கள் எல்லோரும்
முன்னம்இவ் அடியா ரிடம்பொருள் இரவு
முழுமையும் இருந்திடப் பெற்றோம்;
துன்னும்இவ் இரவு கழிந்தபின், நீவிர்
சொற்றதாம் என்றிட, அமைச்சர்
தன்அகம் சலித்து மன்னனுக்கு அதனைச்
சாற்றவும், ஆங்குஅவன் மொழிவான்.

(பொருள்) இவ்வண்ணமாய் அமைச்சர்கள் உரைத்த மொழியைக் கேட்ட மின்னல் போன்ற இடையினையுடைய அக்கணிகை மாதர்கள், எதிர்வந்து, பணிந்து, போற்றி, "நாங்கள் எல்லோரும் இன்று பகற்பொழுதிலேயே பரமசிவனது மெய்த்தொழும்பராகிய இவ் அடியார்களிடம் இன்று இரவு விடியும் அளவும் சுகலீலைகட்கு இணங்கி நடப்பதாய்ப் பொன்னைப் பெற்றுக்கொண்டோம்; ஆதலால், இந்நாள் செல்லுமானால், தேவரீர் சொல்லியபடி நடக்கலாம்" என்று மொழிந்ததைக் கேட்ட அமைச்சர்கள், தம்தம் மனம் சலித்து, அரசனிடம் வந்து உரைக்க, அப்போது கூறுவான் வல்லாள மகாராசன். 54

497 அற்பம்இது நமக்குஅரிதாய் இருப்பதுஎன்கொல்?
அந்தோ!என்று அயர்வுற்று, ஆங்குப்
பற்பலவாய்ச் சிந்தைதனில் ஏக்கம்உற்று,ஈது
இறையருளும் பான்மை தானோ?
தற்பரனைப் போல்எழுந்த சங்கமருக்கு
உரைத்தவண்ணம் தருவேன் என்று
விற்பொருதும் வேந்தன்அதி விரைவாகக்
கணிகையர்பால் மேவி னானே.

(பொருள்) அற்பமாகிய இச்செய்கை நமக்குக் கிடைப்பது அரிதாக இருக்கும் காரணம் யாதோ? ஐயோ! என்று அரசன் துன்பம் அடைந்து, பின்பு பலவிதமாய் மனத்தில் ஏக்கம் கொண்டு, இதுவும் பரமசிவனுடைய திருவிளையாடல்தானோ? சகதீசனைப்போல் வடிவு கொண்டு எழுந்தருளி வந்த சங்கமருக்குக் கொடுத்த வாக்கின்படி எவ்வகையிலாவது ஒரு பெண்ணைத் தேடித் தருவேன் என்று எழுந்து, வில் ஏந்தி ஒளிரும் வல்லாள மகராசன் மிகவும் விரைந்து விலைமாதர்கள் வாழும் வீதிக்குச் சென்றான். 46

498 வந்தவர் எதுகேட் டாலும்
வழங்குதும் என,ப தாகை
அந்தரம் அளாவ நாட்டி,
அளித்திடும் நாளில், இன்று
சுந்தர சங்க மர்க்குச்
சொன்மொழி பிறழாது என்னைப்
பந்தமாய்க் காப்ப வட்குஇப்
பதியினைத் தருவேன் என்றான்.

(பொருள்) நம் பதியை நாடிவந்தவர்கள் எந்தப் பொருளை எண்ணிக் கேட்ட போதிலும் கொடுக்கின்றோம் என்று வானம் அளவும் உயர்ந்து பறக்கும்படியாய்த் துவசம் உயர்த்தி நடத்திவரும் நாட்களில், இன்று விரக வேதனையால் மெலிந்து நம்மை நாடி வந்த அழகிய சங்கமருக்கு உமது நோயை மாற்றுவோம் என்று கூறிய வண்ணம் மாறாது ஆசையோடும் காப்பாற்றுகின்ற கணிகைக்கு என் அரசுக்கு உரிய இப்பதியை அளிப்பேன் என்று உரைத்தான் வல்லாள மகராசன். 47

499 கரி,பரி உடனும், வேண்டும்
கனகமும் தருவேன்; முத்துச்
சொருகிய சிவிகை ஈவன்;
தொல்உலகு ஆள்வ தற்குஇங்கு
அரியசெங் கோலும் நல்கி,
அவர்க்குயான் பணியும் செய்வேன்;
பெரியவர் விரகம் தீர்த்தால்
பெற்றதாய் எனக்குஆம் என்றான்.

(பொருள்) யானை, குதிரை முதலியவைகளோடும், தாங்கள் வேண்டிய பொன்னும் தருவேன்; மேலும் முத்துக்களால் அழகு செய்யப்பட்ட பல்லக்கும் கொடுப்பேன்; இந் நில உலகம் அனைத்தையும் ஆள நினைத்தபோதிலும், என் செங்கோலைக் கொடுத்து ஆளும்படிச் செய்து, அவர்கட்கு யான் தொண்டும் புரிவேன்; இன்று நாடி வந்த சங்கமரது காம நோயைத் தணித்தால் என்னைப் பெற்ற அன்னையும் ஆவார்கள் என்று அரசர்க்கு அரசனாகிய வல்லாள மகராசன் புகன்றான். 48

500 உலகினில் வரும்சு கத்துள்
உயர்சுகம் இஃதே என்று
கலைஉணர் முனிவ ராரும்
கழறுவர்; ஆத லால்,நம்
தலமதில் உற்ற செய்ய
சங்கமர் விரகம் தீர்த்தால்
இலகும்என் உயிர்கேட் டாலும்
ஈகுவேன்; வருவீர்! மின்காள்!

(பொருள்) கடல் சூழ்ந்த இவ் உலகில் வாழும் இன்பங்களுக்கு எல்லாம் மேலாகிய மானனர் விழியினுடைய பெண்களின் கலவித் தொழிலின் இன்பமே மேலானது என்று வேதநூல் உணர்ந்த முனிவர்களும் கூறி இருக்கின்றார்கள். ஆதலால், நமது பதியை நாடி வந்த மேன்மை பொருந்திய சங்கமரை வருந்தும் விரக வேதனையை இன்று மாற்றினவர்களுக்கு ஒளி பொருந்திய என் உயிரைத் தானமாகக் கேட்டபோதிலும் அளிப்பேன்; வருவீர்! கணிகை மாதர்களே! என்று கூறினான், வல்லாள மகராசன். 49

501 ஆதர வாகத் தங்கள்
ஆணையின் படியே, யாங்கள்
ஏதம்இல் அடியர் தம்மோடு
இன்புறப் பொருளும் பெற்றோம்;
நாத!என் செய்வோம்? என்று
நங்கையர் பணிந்துஉ ரைக்கப்,
பூதல மன்னன் வெட்கிப்
புகழ்மனை வந்து சார்ந்தான்.

(பொருள்) அரசன் சொன்ன மொழியைக் கேட்ட விலைமாதர்கள், தேவரீர் கட்டளையின்படி நடந்து வரும் நாங்கள், இன்று குற்றம் அற்ற பரமசிவனின் அடியார்கள் இடத்தில் கலவித் தொழில் புரியும் பொருட்டுப் பொருள் பெற்றுக்கொண்டோம்; ஆதலால், எங்களை ஆட்டுக்கொள்ளும் இறைவனே! யாங்கள் என் செய்வோம்? என்று அடி பணிந்து உரைத்த மொழியைக் கேட்ட இந் நில உலகை ஆளும் வல்லாள மகராசன் நாணம் உற்றவனாய், புகழ் பொருந்திய தன் அரண்மனையைச் சேர்ந்தான். 50

502 இல்லம்உற்ற மன்னன்மதி வதனம் மாறி
இருப்பதனை, மங்கையர்கள் இசைந்து நோக்கி
மல்லமா தேவியரும், இளையாள் ஆகும்
வண்மைமிகு சல்லமா தேவி யாரும்,
தொல்உலகைப் புரக்கவல்ல எங்கள் கோவே!
துன்பம்உற்ற காரணம்என்? அவற்றை நீவிர்
சொல்லும்!என அடிபணிந்து வினவ, ஆங்குத்
தூயநெறி யோன்அவருக்கு இதுசொல் வானால்,

(பொருள்) மாளிகையை அடைந்த வேந்தனின் முழுமதிபோன்ற முகம் கவலையால் வேறுபட்டு இருப்பதைக் கண்ட, அவன் மனைவிமார்களில் மல்லமா தேவியும், மிக்க வள்ளல் தன்மை பொருந்திய இளையள் ஆகிய சல்லமா தேவியும் நெருங்கி வந்து, பழமையான உலகம் முழுவதையும் ஒரு குடை நிழலில் ஆட்சி புரியும் எங்கள் காதலனே! எந்நாளும் இல்லாது இன்று மனத்தில் துன்பம் நேர்ந்தவாறு என்னை? அவைகளைத் தாங்கள் சொல்ல வேண்டும் என்று, அடிகளில் பணிந்து கேட்க, அப்போது, தூய்மையான நிலையினையுடைய வல்லாள மகராசன் மங்கையர்கட்கு நடந்த செய்தியைக் கூறுவான். 51

503 இன்று,ஒரு முதியோர் மானார்
இன்பத்தில் இச்சை கொண்டு,
வென்றிசேர் நம்மை நாடி,
வினவிய படிக்குஇப் போது,
மன்றதில் விலைமின் னார்கள்
வாய்ப்பதும் அரிதால், நொந்தேன்;
என்றுஅவர் வாய்மை கேட்ட
எழில்மனை யாரும் சொல்வார்.

(பொருள்) இன்று ஒரு பெரியவர் மான் போன்ற விழியினையுடைய பெண்களின் மயக்கத்தின் மேல் மனம் வைத்து, வெற்றி பொருந்திய நம் பதியைச் சேர்ந்து நம்மை வினவிய வண்ணம் தருவதாகச் சொல்லி நம் நகரில் விலைமாதர் வாழும் வீதி எங்கணும் தேடியும் கிடைப்பது அரியதாய் இருப்பதால் துன்பம் உற்றேன்; என் செய்வேன்? அடியவருக்கு உரைத்த மொழி தப்பிப் போகின்றதே! என்று கூறித் துன்பம் அடைந்துள்ள அரசனின் வாய்மையைக் கேட்ட மங்கையர்கள் சொல்வார்கள். 52

504 விரகம்உற்ற அடியவர்க்கு வாக்குஅ ளித்த
வேந்தே!நின் மனம்யாதோ அறிகி லோம்யாம்?
இருவர்களில் சிறியவளாம் என்னை அன்னோற்கு
இசைத்திடவும் கருத்துஉளதேல், இசைவேன் என்றாள்;
திருவளரும் மன்னன்அகம் மகிழ்ந்து நோக்கிச்
சேயிழையே! அடியவரோடு அறையில் சேர்ந்து
உருவிலியால் படும்துயரம் ஒழிப்பாய்! என்று
உத்தமனும் பெரியவருக்கு உரைத்திட் டானால்.

(பொருள்) விரக வேதனையால் வந்த சங்கமருக்கு அந்நோயைத் தணியச் செய்கிறேன் என்று வாக்குத் தத்தம் செய்த எங்கள் அரசே! தங்களுடைய கருத்து எத்தன்மையதோ? சிறியேங்கள் அறியோம்; ஆதலால், எங்கள் இருவரில் இளையவளாகிய என்னை அடியவருக்கு இசையச் செய்யும்படியாய்க் கருத்து இருக்குமானால், தேவரீர் எண்ணம் குறைவுபடாமல் அவ்விதமே நடக்கிறேன் என்று கூறியபோது, திருமகளின் கருணைக்கு உகந்த வல்லாள மகராசன் மனம் மகிழ்ந்து தன் மனைவியைப் பார்த்து, பெண்கள் நாயகமே! என் எண்ணத்தை முற்றுவித்த என் இரு கண்மணியே! நம்மை நாடி வந்த சங்கமரோடு பள்ளி அறையில் சேர்ந்து அவர் மன்மதனால் படும் துன்பத்தைப் போக்குவாய் என்று சொல்லி விடை கொடுத்துப் பின்னர், உத்தமனாகிய மன்னன் பெரியவரிடம் சென்று, தங்கள் கருத்தின்படி அமைத்தேன் ஏற்றுக்கொள்ளுங்கள் என்று மிகவும் அன்புடன் கூறினான். 53

505 அக்கணம் நன்னீர் ஆடி,
அழகுஉற அறையுள் சேர்ந்து
மிக்கநல் யாழை மீட்டி,
விநோதமாய்க் கீதம் பாடி,
பக்கலில் நெருங்கி அந்தப்
பரமனைப் பார்க்கும் காலை
அக்குஅணி மெய்யன் ஆங்கே
அரியயோ கத்தில் உற்றான்.

(பொருள்) அரசன் மனைவியாகிய சல்லமா தேவி உடனே மணம் கமழும் நீரில் முழுகி ஆடை அணிகலன்கள் அணிந்து, மணம் வீசும் வாசனைத் திரவியங்களைப் பூசிக் கொண்டு, வீணை எடுத்து, பள்ளி அறையுள் புகுந்து இந்திர நீல மரகதங்களால் அமைத்த தொரு மஞ்சத்தில் அன்னத் தூவிப் படுக்கையில் படுத்துக் கொண்டிருக்கும் அடியவர் பக்கலில் நின்று, மிக்க இன்னோசையைத் தரும் வீணையை மீட்டிக் கீதம் பாடிக்கொண்டு சில நேரம் சென்ற பின்பு, பெரியவர் சித்திரப் பாவை போல அசைவற்று இருப்பதை நோக்குகையில், உருத்திராக்க மாலை அணிந்து விளங்கும் உடலினையுடைய அவர் யோக நித்திரையில் இருப்பதைக் கண்டாள் சல்லமாதேவி. 54

506 பின்னும்அம் மங்கை அந்தப்
பெரியவர் மகிழ எண்ணித்
துன்னும்அங்கு அவர்மீது உற்ற
சுகந்தநீர் எடுத்துத் தூவி,
நன்நயத் துடனே நிற்க,
நயனமும் திறவாது அன்னோர்
தன்னையும் நோக்கா தாலும்
தயங்கிஅங்கு உரைப்பது ஆனாள்.

(பொருள்) பின்னையும் அருந்ததிக்கு ஒப்பாகிய அவ்அரசி, அங்ஙனம் யோக நித்திரையில் இருக்கும் சங்கமர் மனம் மகிழத் தக்கதாக நினைந்து, ஒளி பொருந்திய அவர் மீது சுகந்தம் பனி நீரை எடுத்துத் தெளித்து, நன்னய வசனத்தோடு நிற்கக் கண் விழியாமலும் தன்னை நோக்காமலும் இருப்பதை உணர்ந்த தேவி, சிந்தை மெலிந்து கூறுவாள். 55

507 வேந்தனால் உரைத்த வாய்மை
வீண்படல் முறையோ? அந்தோ!
ஏந்தலே! என்றுஇ றைஞ்சி,
எழில்உறும் மடந்தை ஆங்குச்
சாந்தமாய் மேல்வி ழுந்து
தழுவ,அப் பரமர் ஆனோர்
ஏந்தவும் குழந்தை ஆகி
இன்புஉற் அழுவது ஆனார்.

(பொருள்) அரசர்க்கு அரசனாகிய எம்கோமான் உரைத்த வாய்மை வீணாவது தருமம் ஆமோ? ஐயோ! கடவுளே! என்று தொழுது அழகு உலாவும் அவ் அரசனின் மனைவி, அங்கு நித்திரையில் இருக்கும் பெரியவர் மேல் மெதுவாய்ச் சார்ந்து, ஆலிங்கனம் செய்கையில், கயிலாய பதியாகிய சிவபெருமான் ஏந்தும் குழந்தை வடிவம் ஆகி, அவ் அணங்கு களிப்பும் ஆச்சரியமும் கொள்ளத்தக்கதாகச் செங்குமுதம் போன்ற அழகிய வாயைத் திறந்து அழ ஆரம்பித்தார். ௫௬

508 அரன்ஒரு குழவி ஆகி,
அலறியே அழும்போது, அங்கே
பரமனார் செயல்என்று எண்ணிப்
பார்த்திபன் விரைவில் வந்து,
கரம்அதில் எடுத்துஅ ணைத்துக்
களிப்புடன் உச்சி மோந்து
விரகுடன் இருக்கும் போது,அவ்
விமலனும் மறைந்திட் டானால்.

(பொருள்) பரமசிவன் ஒரு குழந்தை வடிவாய் அலறி அழுகின்ற செயல் அறிந்த அரசன், இது ஆண்டவன் ஆகிய அருணாசலேசரின் திருவிளையாடல் என்று எண்ணி விரைந்து அங்குச் சேர்ந்து, தாமரை மலர் போன்ற இரு கரங்களால் எடுத்து அணைத்து, முத்தம் இட்டு, உச்சி மோந்து, மிக்க காதலோடும் பேர் ஆனந்தம் கொண்டு இருக்கையில், எம்பெருமான் மறைந்தார். 57

509 ஐயனே! நினது திருஉளச் செயலை
அறிவமோ? அறிவிலோம் யாங்கள்;
மெய்யனே! கண்கள் மூன்றுஉடை யானே!
வேதனே! வேதநா யகனே!
துய்யனே! எம்மைச் சோதனை செயவோ
சுதன்எனத் தோன்றியே மறைந்தீர்?
செய்யனே! எங்கட்கு என்விதி என்று
தேவியோடு அரசனும் மெலிந்தான்.

(பொருள்) தலைவனே! தங்களது திருஉளச் செயலை மடமையோமாகிய யாங்கள் தெரிந்துகொள்வோமோ? வேதத்தின் வடிவம் ஆனவனே! மறைகளுக்குத் தலைவனே! தூய்மையானவனே! முக்கண்களை உடையவனே! உண்மைப் பொருளானவனே! உமது தொண்டராகிய எளியோங்களைச் சோதனை செய்யும் பொருட்டோ புதல்வனாகத் தோன்றி மறைந்தீர், மேன்மைஉற்றவனே! எங்களுக்கு என்ன விதி என்று மங்கையரும் தானும் ஆற்றப்படாத துன்பத்தில் அழுந்தினார்கள். 58

510 கொற்றவன் இவ்வாறு உளம்மெலிந்து, ஆங்குக்
கோஎனக் கதறும்அக் காலை,
நற்றவத் தோர்கள் துதிசெயும் ஈசன்,
நாயகி யுடன்விடை ஏறிச்
சுற்றிலும் கணங்கள் சூழ்ந்திட, விதி,மால்
தொடரவும், அருணைஅம் பதிவாழ்
வெற்றிகொள் இறைக்குத் தெரிசனம் உதவ,
விரகுடன் பணிந்துஅவன் துதிப்பான்.

(பொருள்) அரசன் இவ்வகையாய் மனம் வெதும்பி, "கோ" என்று வாய்விட்டு அலறி நிற்கும் காலத்தில், பெருமை பொருந்திய தவத்தினை உடையவர்கள் போற்றிப் பணியத்தக்க பரமசிவன், பார்வதி தேவியோடும், வெண்ணிறமான இடபத்தின்மீது அமர்ந்தவராய், சிவ கணங்கள் சூழத்தக்கவராகவும், நான்முகன் திருமால் தத்தம் வாகனங்களில் ஏறி வரவும், அருணை நகரை ஆட்சிபுரியும் வல்லாள மகராசனுக்குக் காட்சி தந்த மாத்திரத்தில், ஆவலோடும் பூமியில் பணிந்து, எழுந்து, தலைமேல் இரு கரங்களையும் கூப்பித் துதித்தான். 59

511 ஆதியே! சரணம்! மண்மேல்
அடியரைக் காக்க வல்ல
சோதியே! சரணம்! கங்கைத்
தூயசெஞ் சடையில் துண்டப்
பாதிமா மதிஅ ணிந்த
பரமனே! தமியேற்கு உற்ற
நீதியைத் தாங்க ஓர்சேய்,
நின்மலா! அருளு வாயே!

(பொருள்) முழுமுதல் தலைவனாகிய தேவனே! சரணம், உலகில் அடியவர்களைச் சோதித்து ஆட்கொள்ள வல்ல ஒளி வடிவான பூரணனே! சரணம், அருள் பெரும் சுடரே! சரணம். கங்கையையும், சந்திரனையும் தூய்மையாய்ப் பொன் போல் ஒளிவீசும் சடையில் அணிந்த பரம்பரனே! அடியேன் செங்கோல் விதியை ஏற்றுக்கொள்ளும்படி ஓர் புதல்வனைத் தந்து அருளல் வேண்டும் என்று தொழுதான். 60

512 சுந்தர மன்னு! கேண்மோ!
சுதன்உனக்கு யாமே ஆனோம்;
அந்தத்தில் நாம்உ னக்கே
அறைவிதி முடிப்போம் என்று
சந்த்ரசே கரனார் வாழ்த்திச்
சார்ந்தனர் கயிலை; பின்னர்ப்
பந்தமாய் உலகை வேந்தன்
பண்புடன் ஆண்டு வந்தான்.

(பொருள்) அழகு உலாவும் புகழ் பொருந்திய அரசனே! கேட்பாயாக! யாமே உனக்குப் பிள்ளையாய்த் தோன்றினபடியால், உன் அந்திமகாலத்தில் வேதவிதியில் கூறும் சடங்குகளைச் செய்து வருவோம் என்றும், சந்திரனைச் சடையில் தரித்த சிவபெருமான், வாழக் கடவை என்று கூறித், தேவகணங்களுடன் கயிலாய மலையைச் சேர்ந்த பின்பு, மிகுந்த ஆவலோடும் வல்லாள மகராசன் அருணையம்பதியை ஆண்டு வாழ்ந்து வந்தான். 61

ஏழாவது
வல்லாள மகராசன் சருக்கம்
முற்றிற்று.

## 8. தீர்த்தச் சருக்கம்

513 செருமலையும் களிற்றுமுகப் பிள்ளைஇரு
பதம்போற்றி, திரையால் முத்தம்
தரும்அலையும், ஒருமலையும் தொலைத்தமலைக்
கிழவன்இரு சரணம் போற்றி,
பொருமலையும் இரங்கலையும் அடியாருக்கு
ஒழிக்க,அழல் பொருப்பாய் நின்று,என்
கருமலையும் செம்மலையும், பச்சைமலை
மடந்தையையும், கருத்துள் சேர்ப்பாம்.

(பொருள்) போர் புரியத் தக்க யானை முகத்தையுடைய மூத்த பிள்ளையாருடைய இரண்டு திருவடிகளையும் வணங்கி, அலைகளாலே முத்துக்களைக் கொழிக்கும் கடலையும், கிரௌஞ்சம் என்னும் மலையையும் அடக்கிய குன்றுதோறு ஆடலுக்குரிய முருகனின் திருவடிகளை வணங்கி. துன்பத்தையும், சோர்வையும் அடியார்களுக்கு ஒழிக்க அக்கினி மலையாக நின்று. என்னுடைய பிறவியைக் கெடுக்கும் சிவபெருமானையும், மரகத நிறம் பொருந்திய மலைமகளையும் மனத்தில் சேர்ப்பாம். 1

514 தேங்கும் அன்பில், சிவபுரா ணம்தனில்
ஓங்கு,உ ருத்திர சங்கிதை ஓதினன்;
பாங்குஇ லிங்க புராணப் பரப்பினும்
ஈங்குஅ றிந்த படியும் இயம்புவேன்.

(பொருள்) பெருகிய அன்பினாலே சிவபுராணத்தில் உயர்ந்து இருக்கின்ற உருத்திர சங்கிதையை முன் சொன்னேன். பெருமையாகிய இலிங்க புராணத்துள் விரித்துச் சொல்லப்பட்டதை நான் அறிந்தவாறு சொல்வேன். 2

515 ஆதி வேதன் அருள, சனகனும்
வேதம் வல்ல வியாதனுக்கு ஈந்தனன்;
சூத னுக்கவன் சொல்லினன்; சூதனும்
ஏதம் அற்ற இருடியர்க்கு ஈந்தனன்.

(பொருள்) ஆதியிலே நான்முகன் சனகரிஷிக்குச் சொல்ல, அச்சனகர் வேதங்களில் வல்லவராகிய வியாசருக்குச் சொல்ல, அவ் வேதவியாசர் சூதரிஷிக்குச் சொன்னர்; அச்சூதமகாமுனிவரும் குற்றம் அற்ற நைமிசாரணிய முனிவர்க்குக் கூறினர். 3

516 வன்னி மாமலைத் தோற்றமும், வான்மலைக்
கன்னி பாகம் கலந்ததும், முன்னமே
சொன்னது ஆதலின், ஆங்குஅது ஒழித்து,அதன்
பின்னர் உள்ள கதைசில பேசுவாம்.

(பொருள்) அக்கினி மயமான பெரியமலை தோன்றியதும், பெருமை அமைந்த மலை அரசன் மகளாகிய பார்வதி பரமசிவனது இடப்பாகம் பெற்றதும், முன்னமே சொன்ன படியினுல், அதை நீக்கி, அதற்குப் பின்னுண்டாகிய சில சரித்திரங்களையும் சொல்லுவோம். 4

517 தீர்த்த மும்,அதில் செய்தரு மங்களும்,
வாய்த்த வெற்பின் வலமும்,இ லிங்கமும்
ஏத்தி டாதவர் எய்தும்இ கழ்ச்சியும்,
பார்த்துஅ ரன்பொருள் கொண்டவர் பாவமும்,

(பொருள்) தீர்த்தங்களின் பெருமையும், அதில் செய்யப்பட்ட தருமங்களும், அக்கினி மயமாய் தோன்றிய மலையை வலம் சுற்றி வருதலின் பெருமையும், பரமசிவனை வணங்காதவர் அடையும் இகழ்ச்சியும், பரமசிவனின் பொருளை எடுத்துக்கொண்டவர்களுக்கு வரும் பாவமும், 5

518 பந்த மாய்அறி யாதுசெய் பாவமும்,
சிந்தை ஆர அறிந்துசெய் தீமையும்,
முந்தை யோர்கள் ஒழித்த முறைமையும்,
எந்தை யால்ம கிழ்வும்இ யம்புவேன்.

(பொருள்) முன் செய்த வினையால் மயங்கி அறியாமல் செய்த பாவமும், மனதார அறிந்து செய்த பாவமும், முற்காலத்தில் உள்ளவர்கள் அப்படி வந்த பாவத்தைப் போக்கிக் கொண்ட முறைமையும், பரமசிவனுல் மகிழ்ச்சி அடைந்த புழுகு பூனையின் செய்கையும் சொல்லுகின்றேன். 6

519 விருப்புஇல்கோ தமனார் ஈசன்
திருமுன்னே வேள்வி நாட்ட,
திருப்பொலி சடையோன் தன்னால்
செனித்திடும் மறையோன், அங்கு,
உருப்பொலி அழலோன் என்ன
உதித்தனன்; அவனை நோக்கிப்
பொருப்புஇதை அவனைப் பூசை
புரிஎனப் புகழ்ந்து சொன்னான்.

(பொருள்) உலகத்தில் ஆசை இல்லாத கௌதமரிஷி சுவாமி சந்நிதி முன் வேள்வி ஒன்று செய்வதற்கு எத் தனித்து அக்கினி வளர்க்க, அழகு பொருந்திய சடையை உடைய பரமசிவனின் கருணையால் முன்னமே தோன்றி இருக்கிற சிவப்பிராமணன், அந்த யாகத்தில் அக்கினி வடிவமாய்ப் பிறந்தான்; அவனைப் பார்த்து மலை உருவமாய் விளங்கிய அருணாசலேசுரரைப் பூசை செய் என்று புகழ்ச்சியாக உபசாரம் சொன்னார். 7

520 மற்றும்ஏழ் தருப்பை தீயில்
விடுதலும், மலர்மாது என்னக்
கற்றைஅம் குழல்ஏழ் மின்னார்
உதித்தனர்; கணிகை மாராய்
நிற்றலும், இறைவர் முன்னே
நிருத்தமே புரியும் என்றான்;
நல்தடம் பலவும் கண்டு
நகரமும் சிறப்பும் செய்தார்.

(பொருள்) அதன்பின் கௌதமர் ஏழு தருப்பையை எடுத்துக் குண்டத்தின் அக்கினியிலே போட்ட அளவில், இலக்குமி போலக் கற்றையாய் இருக்கிற கூந்தலையுடைய மின்னல் கொடி போன்ற ஏழு பெண்கள் தேவதாசிகளாகப் பிறந்தார்கள்; அவர்களைப் பார்த்து, நீங்கள் பரமசிவனின் சந்நிதியில் நாட்டியம் செய்து வாருங்கள் என்றார்; அவர்கள் நலன்கள் நல்கும் ஊருணிகள் பல உண்டாக்கி ஊரைச் சிறப்பு செய்தார்கள். 8

521 மந்திரம் பரவும் வன்னி
மலைதனுக்கு அடுத்த கீழ்பால்,
இந்திர தடம்உண்டு; அந்த
இந்திரன் முதலே கண்டது;
அந்தரத்து அமரர் தாமும்,
அதில்தினம் மூழ்க லாலே,
சந்தனக் குழம்பு நாறும்,
மணக்கும்ஐந் தருவின் மாலை.

(பொருள்) தேவர்கள் மந்திரங்களாலே துதி செய்யப்பட்ட அக்கினி மலைக்கு அடுத்த கிழக்குத் திசையில் இந்திர தடாகம் என்று ஒன்று உண்டு; அது இந்திரன் முன் உண்டாக்கினது; தேவர் உலகில் உள்ள தேவர்கள் அதில் தினமும் முழுகுவதால், சந்தனக் குழம்பின் வாசனையும், கற்பக மலர்களாகிய மாலையினுடைய மணமும் கமழும். 9

522 பரமம்ஆம் அதில்தைப் பூசம்
படிந்திடில், பருகில், கோடி
பிரமபா தகம்போம் என்ருல்,
அதன்நலம் பேச லாமோ?
சுரர்பதி மூழ்கி முன்னே
தொடர்ந்ததீ வினைகள் தீர்ந்தான்;
இரவிஉள் அளவும் வாழ
இமையவர் உலகம் பெற்ருன்.

(பொருள்) மேன்மையான அந்த இந்திர தீர்த்தத்தில் தைப்பூசத்தில் மூழ்கி, ஒரு கைநீர் உட்கொண்டால் கோடி பிரமஹத்தி தோஷம் போம் என்ருல், அதன் பெருமையைப் பேசக் கூடுமோ? இந்திரன் முன் அதில் மூழ்கித் தன்னைப் பற்றிய தீவினை தனை நீக்கிக் கொண்டு சூரியன் உள்ள அளவும் வாழத் தெய்வ உலகத்தையும் பெற்ருன். 10

523 அங்கிதன் பெயராம் தீர்த்தம்
அருணைமால் வரைத்தென் கீழ்ப்பால்;
பொங்கிய அதனில் மீனத்
திங்கள்பூ ரணையின் மூழ்கில்,
செங்கயல் கருங்கண் செவ்வாய்த்
திருந்துஇழை யவரால் வந்த
தங்கிய வினையும் தீரும்;
தருமமும் தவமும் சாரும்.

(பொருள்) அருணாசலத்துக்குத் தென் கிழக்கில் அக்கினி தீர்த்தம் என்று ஒன்று உண்டு; அதில் பங்குனி மாதம் பௌர்ணமியில் மூழ்கினால், செம்மையான கயல்மீன் போன்ற கரிய கண்களையும், சிவப்பாகிய பவளம் போன்ற வாயையும், திருத்தமாகச் செய்யப்பட்ட அணிகலன்களையும் உடைய மாதர்களால் வந்து பொருந்திய பாவமும் தீரும்; தருமமும், தவமும் சேரும். 11

524 வன்னிமுன் ஒருநாள், ஏழு
மறைக்குல முனிவர் காதல்
துன்னிய மடந்தை மாரை
விரும்ப,தன் சுவாகை அந்தப்
பன்னியர் வடிவம் ஆகப்
புணர்ந்து,மேல் படர்ந்த பாவம்
தன்னைத்தான் கண்ட அந்தத்
தடத்தினில் படிந்து சாய்த்தான்.

(பொருள்) முற்காலத்தில் அக்கினி தேவன் ஒருநாள் வேதம் உணர்ந்த ஏழு முனிவர்களுடைய ஆசைக்கு உரிய பத்தினிமார்களை விரும்ப, அதைத் தன் மனைவியாகிய சுவாகாதேவி அறிந்து, அந்த மாதர் வடிவத்தைத் தான் எடுக்கப் புணர்ந்து, மேலே நினைத்த பாவத்தைத் தீர்க்கத் தன்னாலே உண்டாக்கப்பட்ட அத்தடாகத்தில் முழுகிப் பாவத்தைப் போக்கிக் கொண்டான். 12

525 தென்திசைத் தரும தீர்த்தம்
உளது;அதில் செறிந்து மூழ்கில்
பொன்திகழ் வடிவம் ஆகும்;
உடற்பிணி பொடிபட்டு ஓடும்;
வென்றியில் காலன் முன்னாள்
விதிப்படை தொடர, மேனி
குன்றிய சாபம் தீர்ந்தான்,
அதன்இடைக் குளித்து மாதோ.

(பொருள்) பின்னும் அந்த மலைக்குத் தென்பாகத்தில் எமன் தீர்த்தம் என்று ஒன்று உண்டு; அதில் அடைந்து மூழ்கினால் உடல் பொன் வடிவம் ஆகும்; உடலில் உள்ள பிணிகள் பொடிபட்டு ஒழிந்து போகும்; வெற்றி பொருந்திய நான்முகனது படை தொடர்ந்துவர அதனால் உடல் குன்றியசாபத்தை இயமனானவன் அதில் மூழ்கித் தீர்த்துக்கொண்டான், 13

526 நீங்குஅரும் நிருதி தீர்த்தம்
உளது;மேல் நிருதி கோணத்து;
ஆங்குஅதில் முழுகி னோருக்கு
அரும்பகை அனைத்தும் தீரும்;
ஓங்கும்அத் தடத்தின் முன்னே
உருகியே நிருதி மூழ்கி,
வீங்கிய கனல்கண் பேழ்வாய்
அலகையின் விசயம் பெற்றான்.

(பொருள்) நீங்குதற்கு அரியதாகிய நிருதி தீர்த்தம் என்று நிருதி மூலையில் இருக்கிறது; அதில் மூழ்கினவர்களுக்கு அரிய பகைகள் எல்லாம் தீரும்; உயர்ந்த அந்த நீரில் முன்னே முழுகின பலத்தினால், நிருதியானவன் மிகுந்த நெருப்பு நிறம் போன்ற கண்களையும், பிளவுபட்ட ஆழமாகிய வாயையும் உடைய ஒரு பேயைத் தன் வசம் ஆக்கிக் கொண்டான் 14

527 வசைஅறு மலைக்கு மேல்பால்
வளம்பெறு வருண தீர்த்தம்;
நசைபெற அதனில் மூழ்கில்
கிரகம்ஒன் பானும் நன்றாம்;
இசைபெறக் கிரகம் எல்லாம்
முழுகும்;அவ் இடத்தில் வாயு
திசையினில் பவன தீர்த்தம்
முழுகில்எத் துயரும் தீரும்.

(பொருள்) குற்றம் அற்ற அருணகிரிக்கு மேற்குத்திக்கில் வளப்பமுள்ள வருண தீர்த்தம் என்று ஒன்று உண்டு; ஆசை உண்டாக அதில் முழுகினால் ஒன்பது கிரகங்களும் நன்மையைக் கொடுக்கும். ஏனெனில், முன் அந்த கிரகங்களும் மூழ்கித் தங்கள் இஷ்ட சித்தி அடைந்தன. அந்தத் தீர்த்தத்திற்கு வாயுதிக்கில் வாயு தீர்த்தம் என்று ஒன்று உண்டு; அதில் முழுகினால் எல்லாத் துன்பமும் தீரும். 15

528 வடதிசை குபேர தீர்த்தம்;
முழுகினார் வறுமை போம்;அத்
தடமதில் குணபால் ஈசன்
மருத்துவர் சமைத்த தீர்த்தம்;
புடைசெறிந்து அதனில் மூழ்கில்
புலையரில் கடைய ரேனும்
அடைவுடன் வருணம் நான்கில்
அதிகராய் அரனைச் சேர்வார்.

(பொருள்) வடக்குத் திக்கிலே குபேர தீர்த்தம் என்று ஒன்று உண்டு; அதில் முழுகினவருடைய வறுமை நீங்கிப்போகும்; அத் தீர்த்தத்திற்குக் கிழக்கே, ஈசானியத்தில் அசுவினி தேவர்களால் உண்டாக்கப்பட்ட தீர்த்தம் இருக்கின்றது; அதனிடத்தில் சென்று அதில் முழுகினால் நீசரைப்பார்க்கிலும் இழிந்தவராய் இருந்தாலும் பெருமையோடு நான்கு வருணத்தாரினும் அதிகராகிப் பரமசிவனைச் சேர்வார்கள். 16

529 அந்தகத் தடத்தின் தென்பால்
அக்த்தியத் தடம்உண்டு; அங்கே
முந்திய கன்னி மாதம்
மூழ்கி,உள் கொண்ட பேர்கள்
சந்திர வதனம் கண்டார்,
தமிழ்க்கவிக்கு அரசர் ஆவார்;
செந்திரு மயிலும் கல்விச்
செல்வியும் சேரும் அன்றே.

(பொருள்) முன் தெற்காகச் சொன்ன எமதீர்த்தத்துக்குத் தெற்காக அகத்திய முனிவரால் ஏற்படுத்தப்பெற்ற அகத்திய தீர்த்தம் என்று ஒன்று உண்டு; அதில் புரட்டாசி மாதத்தில் முழுகி, தண்ணீரை உட்கொண்ட பேர்களுடைய சந்திரனை ஒத்த முகத்தைப் பார்த்தவர்கள், தமிழில் கவி அரசர் ஆவார்கள்; இலக்குமியும், கலைமகளும் அவர் இடத்தில் சேர்ந்து இருப்பார்கள், 17

530 தனபதி தடத்தைச் சேர
வசிட்டனார் தடம்உண்டு; அந்த
முனிவர்,ஐப் பசியின் மூழ்கி
முனிவரில் தலைமை பெற்றார்;
அனையதில் மூழ்கி னார்கட்கு
அங்கமும் செங்கை நெல்லிக்
கனிஎன விளங்கும்; பாவக்
கடலதும் கடப்பர் அன்றே

(பொருள்) முன் சொன்ன குபேர தீர்த்தத்து அருகே வசிட்ட முனிவரால் ஏற்படுத்தப்பட்ட வசிட்ட தீர்த்தம் என்று ஒன்று உண்டு; அதில் வசிட்டர், ஐப்பசி மாதத்தில் முழுகி, முனிவர்களுக்கு எல்லாம் முதன்மையாய் இருக்கப்பெற்றார்; அப்படிப்பட்ட தீர்த்தத்தில் முழுகினவர்கட்கு வேதத்திற்கு அங்கமாய் உள்ள சாத்திரங்கள் எல்லாம் உள்ளங்கனி நெல்லிக்கனி போல விளங்கும்; அவர்கள், பாவமாகிய கடலையும் கடப்பார்கள், 18

531 கங்கைவேல் குமரன், ஆனை
முகத்தவன், கதிரோன், வெற்பின்
மங்கை,ஓர் வடுகன், கன்னி,
மதியன்,எண் வசுக்கள், வெள்ளைப்
பங்கய மடந்தை, தேவர்
குடைதடம் பலவும் சூழும்;
அங்கதோர் தடத்தின் மேன்மை
மறைகளும் அறிவு ருவே.

(பொருள்) கங்கை, வேலாயுதம் ஏந்திய சுப்பிரமணியர், யானை முகத்தையுடைய விநாயகர், ஆயிரம் கதிர்களையுடைய சூரியன்; மலை அரசன் மகளாகிய பார்வதி, வயிரவர், சத்த கன்னிகள், சந்திரன், அட்டவசுக்கள், வெண் தாமரை மலரில் வசிக்கும் கலைமகள், மற்றும் உள்ள தேவர்கள் முழுகிய தீர்த்தங்கள் அனேகம் உண்டு; அவைகளில் ஒவ்வொரு தீர்த்தத்தின் பெருமையை வேதங்களும் சொல்ல அறியா. 19

532 ஒருநதி தானும் ஒவ்வாத்
திருநதி வடபா லாக,
வருநதி முழுகிப் பூமான்
மாயவன் உரத்தில் சேர்ந்தாள்;
நருமதை பரவும் சோண
நன்னதி தென்பால் தோன்றும்;
சுரநதி யமுனை பொன்னி
படிந்து,தம் துயரம் தீர்ந்தார்.

(பொருள்) ஒரு நதியையும் ஒப்புச் சொல்லக்கூடாத திருநதி என்ற ஒரு நதி அருணாசலத்தில் வடக்குப்பக்கத்தில் உண்டு; அதில் இலக்குமி முழுகித் திருமாலின் மார்பைச் சேர்ந்தாள். நருமதை ஆற்றினுல் வணங்கப்படும் சோணமென்று ஒரு நதி அருணாசலத்துக்குத் தென்பாரிசத்தில் இருக்கும்; அதில் கங்கை, யமுனை, காவிரி முதலிய நதிகள் எல்லாம் வந்து முழுகித் தங்கள் துன்பத்தைப் போக்கிக்கொண்டார்கள். 20

533 புண்ணிய ஆறு தெய்வ
மலைக்குமேல் திசையில் பொங்கும்;
நண்ணிய புண்ணி யாற்றூர்
என்றுபேர் நகரம் தானும்;
எண்ணிய நதியின் மூழ்கி
ஈழன்என்ற அரசன் தீங்காம்
பெண்ணியல் வடிவம் தீர்ந்தான்;
வடிவமும் பேறும் பெற்றான்.

(பொருள்) தெய்வீகம் பொருந்திய அம்மலையின் மேற்பக்கத்தில் புண்ணிய நதி என்று ஒன்று உண்டு. அதன் அருகில் புண்ணியாற்றூர் என்று ஒரு நகரம் உண்டு. அதில் இருந்த ஈழன் என்கின்ற அரசன் தனக்குத் தீங்காக வந்தடைந்த பெண்ணுருவை அந் நதியில் முழுகித் தீர்த்து, நல்ல உருவமும் வேண்டிய பேறும் பெற்றான். 21

534 திருந்துசே யாறு முன்சொல்
திருநதி வடபால் தோன்றும்;
பொருந்தவேல் எறிந்து செவ்வேள்
அழைத்தஅப் புனித நீரில்,
அரும்திகழ் அயிலோன் மூழ்கி,
அசுரரைத் தொலைக்கும் சீரும்,
மருந்துஅயில் அமரர் சேனா
பதிஎனும் வரமும் பெற்றான்.

(பொருள்) அழகிய சேயாறு என்னும் நதி முன் சொன்ன அழகு அமைந்த புண்ணிய நதிக்கு வடபக்கத்தில் இருக்கும்; அது முன் சுப்பிரமணியர் வேல் எறிந்து உண்டாக்கிய தூய்மையான தீர்த்தம்; அதில் மிகவும் ஒளி வீசுகின்ற வேலையுடைய அச் சுப்பிரமணியரே முழுகி, அசுரர்களைக் கொல்லும் வரமும், அமிழ்தை உண்ணும் தேவர்களுடைய சேனாபதி என்கின்ற பேறும் பெற்றார். 22

535 நிருத்தர்ஆ லயத்தின் உள்ளே
சிவதடம் உளது; நித்தம்
கருத்தினில் நினைத்தால், தெய்வக்
கங்கையில் படிந்தது ஒக்கும்;
உருத்திரர் பலரும் மாசி
மகத்திலே உகந்து மூழ்கி,
எருத்தினில் இருந்து தேவர்
எவரினும் ஏற்றம் பெற்றார்.

(பொருள்) அனந்தம் திருவிளையாடல்களைச் செய்யும் அண்ணாமலையார் ஆலயத்தில் சிவகங்கை என்று ஒரு தீர்த்தம் உண்டு; அதைத் தினந்தோறும் தன் மனத்திலே நினைத்தால், கங்கையில் முழுகிய பலன் உண்டாகும்; அநேக உருத்திரர்கள் மாசி மாதத்தில் முழுகி, இடபவாகனருடராய் எல்லாத்தேவர்களிலும் மேன்மை பெற்றார்கள். 23

536 சக்கர தீர்த்தம் அந்தத்
தடத்தினில் குணபால் தோன்றும்;
மைக்கடல் அனைய மேனி
வராகமால் படிந்த தாகும்;
அக்கரை வலமாய் வந்தோர்,
முழுகினோர், அருந்தி னோர்கள்,
துக்கசா கரம்விட்டு ஈசன்
துணைப்பதம் பெறுவர் அன்றே.

(பொருள்) சக்கர தீர்த்தம் என்று ஒரு தீர்த்தம் முன் சொன்ன சிவகங்கை என்னும் தீர்த்தத்துக்குக் கிழக்கில் இருக்கின்றது; அது முன்னமே கடலின் நிறம் போன்ற கருநிறம் உடைய திருமால் வராக அவதாரத்தில் முழுகிப் பேறு பெற்றதாகும்; அத் தீர்த்தத்தை வலமாக வந்தவர்களும், அதில் முழுகினவர்களும், அந்நீரை உட்கொண்டவர்களும் துக்கக் கடலில் இருந்து நீங்கிச் சிவபிரானது இரண்டு திருவடிகளையும் இடமாகப் பெறுவார்கள். 24

537 நாயகன் அமரும் கோயில்
மருங்கினில், நளினக் கோயில்
தூயவன் பெயராம் தீர்த்தம்,
தீயவன் திசையில் தோன்றும்;
காயம்அத் தடத்தில் தோய்ந்தார்,
பிறவியாம் கடலில் தோயார்;
ஆயிரம் சனனம் தோறும்
அடைந்ததீ வினையும் தீர்ப்பார்.

(பொருள்) அருணாசலேசுவரர் எழுந்து அருளி இருக்கின்ற கோயிலுக்குப் பக்கத்தில் அக்கினி திசையில் தாமரையாகிய சிறந்த ஆலயத்தில் வசிக்கும் நான்முகனால் அமைக்கப்பட்ட பிரமதீர்த்தம் என்று ஒரு தீர்த்தம் உண்டு; அதில் முழுகினவர்கள் பிறவிக் கடலில் முழுகார்கள். கீழ்ச் சென்ற ஆயிரம் பிறப்புகள் தோறும் சேர்ந்த தீவினையும் தீர்ப்பார்கள். 25

538 அத்தடம் முழுகிச் செம்பொன்
அணுஅளவு அளிப்பார் ஆகில்,
சத்தசா கரம்சூழ் இந்தப்
புவிஎலாம் தனத்தி னாலும்
முத்தணி மணியி னாலும்
இழைத்தது முழுதும், ஈசன்
பத்தர்பால் அளிக்கும் அந்தப்
பலத்தினும், அதிகம் ஆகும்.

(பொருள்) அத் தீர்த்தத்தில் முழுகிப் பின் தங்கம் ஒரு அணு அளவு கொடுப்பாரானால், எழுகடலால் சூழப்பட்ட இப் பூமி முழுதும் தங்கத்தினாலும், நவரத்தினத்தினாலும் நிறைத்து அவைகளை எல்லாம் பரமசிவனுடைய பக்தர்களிடத்தில் கொடுக்கும் பலனிலும் அதிகமாகும். 26

539 தேன்நகு தடத்தின் மூழ்கிச்
செய்யஆன் ஈந்தோர், வெள்ளைத்
தானவா ரணம்சூழ் செம்பொன்
சயிலம்நேர் விமானத்து ஏறி,
மேனகை, அரம்பை, தூய
கவரிகள் இரட்ட மேவி,
ஆனில்ஓர் மயிர்க்குஓர் கற்பம்
அரன்பதத்து இருப்பர் அன்றே.

(பொருள்) தேன் பொருந்திய மலர்களையுடைய அத் தீர்த்தத்தில் முழுகிச் சிவப்புப் பசுவைத் தானம் செய்தவர்கள், மதங்கொண்ட வெள்ளை யானைகள் சூழ்ந்து தாங்கப்பட்ட மகாமேரு போலும் பொன்மயமான விமானத்தில் ஏறிக்கொண்டு, மேனகை, அரம்பை என்கிற தேவதாசிகள் இருவரும் தூய்மையான கவரி வீசப்போய், அப் பசுவின் மயிர் ஒன்றுக்கு ஒரு கற்பகாலம் சிவபதத்தில் இருப்பார்கள். 27

540 காலமே அதனின் மூழ்கிக்
கரியஆன் அளித்தோர், கோல
நீலமால் வரைபோல் நீலம்
நெருங்கிய விமானந்து ஏறி,
சூலமே பிடித்துப் பூத
கணத்தவர் தொடர்ந்து போற்றப்
பாலலோ சனர்வாழ் கின்ற
பரபதத் திருப்பர் அன்றே.

(பொருள்) அத் தீர்த்தத்தில் சூரியோதய காலத்தில் விதிப்படி முழுகிக் கருப்புப் பசுவைத் தானம் செய்தவர்கள், அழகு பொருந்திய உத்தமமான நீலமலைபோல் விளங்கும் நீல ரத்தினம் இழைத்த விமானத்தில் ஏறிச் சூலப்படை பிடித்துக்கொண்டு பூதகணங்கள் தொடர்ந்து வந்து வணங்க, நெற்றிக் கண்ணை உடைய சிவனது பரபதத்தில் இருப்பார்கள். 28

541 வெள்ளைஆன் அளித்தோர், வெள்ளை
விடைகள்ஆ யிரம்சூழ் முத்தின்
கொள்ளைஆம் விமானத்து ஏறி,
இமையவர் குழாம்கொண்டு ஏத்த,
வள்ளலார் பதத்தில் சேர்வர்;
மழைக்குடை செருப்புத் தந்தோர்,
எள்ளரும் பரிமா ஈந்தோர்,
இந்திர பதத்தில் சேர்வார்.

(பொருள்) அத் தீர்த்தத்தில் முழுகி வெள்ளைப் பசுவை விதிப்படி தானம் கொடுத்தவர்கள், ஆயிரம் வெள்ளை இடபங்கள் சூழ்ந்த முத்தினால் அலங்கரிக்கப்பட்ட தெய்வத் தன்மை பொருந்திய விமானத்தில் ஏறிக்கொண்டு, தேவர்கள்கூட்டமாகச் சேர்ந்து வணங்க, திரு அருணாசலேசருடைய திருவடி நிழலில் சேருவார்கள்; மழைக்குக் குடையும், வெயிலுக்குச் செருப்பும் கொடுத்தவர்களும் இகழ்தல் இல்லாத குதிரை கொடுத்தவர்களும் இந்திர பதவியில் சேர்வார்கள். 29

542 கன்னியைத் தான மாய்அக்
கரைதனில் அளித்தோர், தேவர்
பொன்னியல் உலகில், போக
பூமியில், அளகை நாட்டில்,
மின்திகழ் மலரோன் நாட்டில்,
விரும்பின நுகர்ந்து, தேவர்
சென்னியால் வணங்கிப் போற்றச்
சிவபதத்து இருப்பர் அன்றே.

(பொருள்) அத் தீர்த்தக்கரையில் கன்னிகாதானம் செய்தவர்கள், தேவர்கள் வாழும் பொன்மயமான போகபூமி என்கிற புண்ணிய இடத்திலும், சுவர்க்க உலகிலும், குபேரனுடைய அளகாபுரி நகரிலும், ஒளி பொருந்திய நான்முகன் உலகிலும், சில சில நாட்கள் இருந்து, விரும்பினவற்றை எல்லாம் அனுபவித்து, தேவர்கள் தலையாலே வணங்க, அதன்பின் சிவபதவியில் சேர்வார்கள். 30

543 உத்தம தலத்தில், கோடி
அருந்தவர்க்கு உதவும் அன்னம்,
நித்தமாம் காசி மீதுஓர்
அவிர்ப்பலன் தனக்கு நேராது;
அத்தலத்து அனந்த கோடி
அருந்தவர்க்கு உதவும் அன்னம்,
சத்திய அருணை நாட்டில்
அவிர்ப்பலன் தனக்குஒவ் வாதே.

(பொருள்) உத்தமம் ஆகிய தலங்களில் கோடி அருமையாகிய சிவயோகிகளுக்குப் படைத்த அன்னத்தின் பலன், நித்தியமாய் இருக்கிற காசியில் பெரியோர்களுக்குப் படைத்த அன்னத்தில் ஒரு பருக்கைப் பலனுக்கும் ஒவ்வாது. அப்படிப்பட்ட காசி நகரத்தில் அனேக கோடி சிவ யோகிகளுக்குப் படைத்த அன்னத்தின் பலன், உண்மையாகிய அருணாசலத்தில் படைத்த அன்னத்தில் ஒரு சோற்றுப் பருக்கைக்கு ஈடாகாது. 31

544 ஆஅடி அளவு பூமி
அந்தணர்க்கு அளித்தோர், ஈசன்
சேஅடி நிழலில், தங்கள்
கிளைஉடன் செருக்கி வாழ்வார்;
மாவிடை அரற்கு விட்டோர்,
மற்றுஒரு விடைமேல் ஏறி,
மேவிடும் சிவலோ கத்தில்
பவனிபோய் வியப்பர் அன்றே.

(பொருள்) பசுவின் குளம்பு அடி அளவு உள்ள பூமியை விதிப்படி அந்தணர்களுக்குத் தானம்செய்தவர்கள், பரமசிவன் சிறந்த பாதநிழலிலே தங்களுடைய சுற்றத்தோடு களித்து வாழ்வார்கள்; பரமசிவனுக்குப் பெருமை பொருந்திய இடபங்களைத் தானம் செய்தவர்கள், வேறு இடபவாகனத்தில் ஏறிக்கொண்டு, சிவயோகிகளாலும் அமைத்தற்கு அரிய சிவலோகத்தில் பவனியாகப் போய் வியந்து இருப்பார்கள். 32

545 சாலைகள் சமைத்தோர், நந்த
வனம்சமைப் பித்தோர், கேணி,
கூலமார் தடங்கள் கண்டோர்,
குலிசனார் பதத்தில் சேர்வார்;
ஆலயம் மெழுகித் தூர்த்து
விளக்கிட்டோர், அலங்க ரித்தோர்,
வேலையின் நடுவில் பாந்தள்
மெத்தையில் துயில்வர் அன்றே.

(பொருள்) அருணசலத்தில் மரங்களைச் சாலையில் வைத்தவர்களும், நந்தவனம் வைத்தவர்களும், கிணறுகள், மணல் குன்றுகள் பொருந்திய குளங்கள் வெட்டினவர்களும், வச்சிராயுதத்தைக் கையில் தாங்கிய இந்திரபதவி அடைவார்கள்; ஆலயத்திலுள்ள பள்ளங்களை நிரவி, மெழுகி, விளக்கு ஏற்றிவைத்தவர்களும், அலங்காரம் செய்தவர்களும், திருமாலாய், திருப்பாற்கடல் மத்தியில் சர்ப்ப சயனத்தில் யோகநித்திரை செய்வார்கள். 33

546 மழைப்புனல் அரிதுஆம் நாளில்,
மருவுநீர்ப் பந்தர் வைத்தோர்,
செழிக்கும்மேல் பதவி தன்னில்
தேவரும் துதிக்க வாழ்வார்;
உழைக்கை,மா உரியர் அன்பர்க்கு
அணிகலை உதவித் தோர்,ஓர்
இழைக்குஅளவு இறந்த காலம்
இறைபதத்து இருப்பர் அன்றே.

(பொருள்) யாவர்க்கும் களிப்பை உண்டாக்கும் நீர் அரிதாகிய கோடைக் காலத்தில் பலர்க்கும் பயன்படும்படி தண்ணீர்ப்பந்தல் வைத்தவர்கள், செழிப்பான மேலாகிய பதவியில் தேவர்களும் புகழும்படி வாழ்வார்கள்; மான் பொருந்திய கையினையுடைய, யானைத் தோலைப் போர்த்த சிவனுடைய அன்பருக்கு ஆடைகொடுத்தவர்கள், ஓர் இழைக்கு அளவு இறந்த காலம் சிவபதத்தில் இருப்பார்கள். 34

547 மடம்சமைத் தவர்கள் அந்த
மடத்தில்,ஓர் துகட்குஓர் கற்பம்
இடம்பிடித்து அழியா வீட்டில்
இருப்பர்;வேறு இறந்த பேர்க்கும்
விடம்குடித்து இறந்த பேர்க்கும்
விதியினால் உறுதி வேள்விக்
கடன்கழித் தனரேல், அந்தக்
குலம்எலாம் கதியில் சேரும்.

(பொருள்) இத் தலத்தில் ஒருமடம் கட்டினவர்கள், அம்மடத்தில் இருக்கிற ஒரு துகளுக்கு ஒரு கற்பகாலம் கெடுதல் இல்லாத முத்தி உலகில் நிலைபெற்று இருப்பார்கள். பின்னும் வேறுவிதமாய் இறந்தவர்கட்கும், விடம் குடித்து இறந்தவர்கட்கும், விதியாக உறுதி பொருந்திய பிதிர்யாகம் முதலியவற்றை அந்நகரில் செய்தால், அவர்கள் குலத்தார் எல்லோரும் கதியில் சேருவார்கள். 35

548 காகம்முன் பலிபீ டத்தில்
பலிதனைக் கவரும் போதில்,
ஆகம்ஆர் சிறையைக் கீழே
புடைத்ததுஆ லயத்தின் ஊடே;
ஓகையால் நமது கோயில்
விளக்கியது எனஉள் கொண்டு,
பாகசா தனனார் வாழும்
பதியினைப் பரமன் ஈந்தான்.

(பொருள்) ஒரு காக்கையானது, அந்நகரத்துக் கோயிற்கு எதிரில் உள்ள பலி பீடத்தில் வைத்து இருக்கிற பலிச் சோற்றை வாயினால் உட்கொள்ளும்போது, தன்னுடைய உடலில் உள்ள சிறகால் கீழே அடித்தது. அதைப் பரமசிவன் பார்த்து ஆலயத்தின் மேலுள்ள விருப்பத்தினால் நம்முடைய கோயிலை விளக்கினது என்று கருதி, இந்திரன் வாழ்கிற தேவர் உலகத்தை அக் காக்கைக்குக் கொடுத்தருளினார். 36

549 மூடிகம் ஒன்று கோயில்
முழையினைக் கிளறும் போது,
தேடுஅரும் மணிஒன்று அங்கே
சிதறியோர் விளக்கம் காட்ட,
ஆடிய பெருமான், தீபம்
அளித்ததுஎன்று அதற்கு நல்ல
வீடுஉயர் நெறியும் காட்டி,
விரைந்துசா லோகம் ஈந்தான்.

(பொருள்) ஒரு பெருச்சாளி கோயிலில் வளை உண்டாக்கும் பொருட்டுக்கிளறும் போது தேடுதற்கு அரிய மாணிக்கம் ஒன்று அங்கே சிதறிச் சந்நிதியில் திருவிளக்குப் போல ஒளிவிட, நடனமூர்த்தியாகிய பரமசிவன், நமக்குத் தீபம் இட்டது என்று அதற்கு முத்தி சாதனத்துக்குக் கருவியாய் உள்ள அறிவு வழியைத் தெரிவித்துச் சாலோக பதவியைக் கொடுத்தார். 37

550 சிலந்திஒன்று ஒருநாள் அந்தத்
திருமலை இடத்து, நூலைக்
கலந்துஉடன் இழைக்க, ஈது
கலைநமக்கு அளித்தது என்று,
நலம்திகழ் அரசன் ஆக்கி,
அதற்குநல் அறிவு நல்கி
உலந்தபின், நெடிய மாயன்
உலகினை உதவி னானே.

(பொருள்) அழகு பொருந்திய அம்மலையின்கண் ஒரு நாள் ஒரு சிலந்தியானது தன் வாயின் நூலால் பின்னல் இட, இது நமக்கு ஆடை நெய்து கொடுத்தது என்று, அச் சிலந்தியை நற்குணமுள்ள அரசனாகப் பிறப்பித்து, நல்ல அறிவைக் கொடுத்து உடலை விட்ட பிறகு விட்டுணு லோகத்தைக் கொடுத்தார். 38

551 ஒருமணலைச் சிவன்உருவம் எனநினைத்துஅவ்
இடத்தில்வைத்தோன் ஒருவன், பின்னைப்
பரகதிபுக்கு அடைந்து,சிவன் என்னவேற்
றுமைஅகன்ற பதவி சேர்ந்தான்;
பொருவுஅரிய அருணகிரிப் பதிவளம்ஈது
எனஉரைத்து, புண்ட ரீகத்
திருமுகமண் டலம்மலர்ந்தே இருந்தனரால்,
மறைபுகன்ற செல்வன் தானே.

(பொருள்) பின்னும் அந்நகரில் ஒருவன் ஒரு மணலைச் சிவன் உருவம் என்று நினைத்து வைத்ததனால், அவன் மேலாகிய கதியைச் சேர்ந்து சிவன் என்றும் பேதம் இல்லாமல் இருக்கின்ற உமாதேவி நீங்கிய சிவ உருவமான சாருப்பிய பதவியைப் பெற்றான்; ஒப்பு இல்லாத அருணாசலத்தின் வளம் இது என்று தாமரை மலர் போன்ற முகம் மலர்ந்து சொல்லி இருந்தார் வேதங்களைச் சொன்ன நான்முகக் கடவுள். 39

எட்டாவது
தீர்த்தச் சருக்கம்
முற்றிற்று

## 9. திருமலை வலம்புரி சருக்கம்

552 "கனகமல! கனகம்மலர்த் தடங்கள்அது
பெருமையினுல் களித்தேன்; அந்த
அனகமலை வலம்புரியும் செயலினையும்
தெரியஉரைத்து, அருள்வாய்!" என்று,
சனகமுனி பணிந்து,எழுந்து சாற்றுதலும்,
மனம்மகிழ்ந்து, கிரணக் கோலில்
தினகரனுர் திறந்துஅடைக்கும் திருக்கோயில்
கடவுள்இவை செப்பல் ஆனுன்.

(பொருள்) மேலான நான்முகனே! சிறந்த பொன் போன்ற நிறத்தை உடைய தாமரை மலர்கள் சூழ்ந்த தீர்த்தங்களின் பெருமையைச் சொல்லக் கேட்டு மகிழ்ந்தேன்; பாவத்தைப் போக்கக்கூடிய சோணமலையை வலம் செய்யும் பெருமையும் தெரிய அருளிச் செய்யும் என்று சனக முனிவர் எழுந்து வணங்கிச் சொன்ன அளவில் மனம் களித்து சூரியன் தன் கதிர்களாகிய திறவுகோலால் 'திறந்து மூடும் தாமரை மலராகிய கோயிலில் வசிக்கும் நான்முகனுர் சொல்லத் தொடங்கினுர். 1

553 "கற்பம்எலாம் அரியதவம் புரிந்தவரும்
அதன்பெருமை காண மாட்டார்;
அற்பதவம் புரிந்தவரும் அருணகிரி
வலத்தின்நலம் அறிய லாமோ?
சிற்பரன்தன் புகழ்கேட்கும் விருப்புடையாய்
என,உனக்குச் செப்பா நின்றேன்;
அற்புதம்இக் கதைஅமுதைச் செவிவழியே
புகட்ட,இன்பம் அருந்துக!" என்ருன்.

(பொருள்) அனேக கற்பகாலம் வரையில் அரிதாகிய தவம் செய்தவர்களும் அதன் பெருமையை அறியமாட்டார்கள். அற்பமான தவத்தைச் செய்தவர்களுக்கு அருணசலத்தை வலம் செய்யும் பெருமையை அறியக்கூடுமோ? அறிவு வடிவாகிய பரம சிவனுடைய புகழைக் கேட்கும் ஆசை உள்ளவன் என்று உனக்குச் சொல்லத் தொடங்கி னேம்; அற்புதமான இக்கதையாகிய அமுதத்தை உன் காதாகிய வாய்வழி புகட்ட இன்பமாக அருந்துக என்று சொன்னுர் நான்முகனுர், 2

554 சோணகிரி வலம்புரிதல் பிறவிஎனும்
பெருங்கடற்குத் தோணி ஆகும்;
ஏழ்நரகக் குழிபுகுதாது அரியமுத்தி
வழிக்குஏற ஏணி ஆகும்;
காண்அரிய தவத்தினுக்கும் அறத்தினுக்கும்
அரும்பொருட்கும் காணி ஆகும்;
வாள்நுதல்மின் இடத்துஇருக்கும் கண்ணுதலை
மனம்உருக்கும் மகிழ்ச்சி ஆகும்.

(பொருள்) திரு அருணசலத்தை வலம் செய்வது பிறப்பு என்னும் பெரிய கடலைத் தாண்டுவதற்கு ஒரு தோணியாகும்; கும்பி பாகம் முதலிய ஏழு நரகக் குழியிலும் புகுதாமல் அருமையாகிய வீட்டுலகு ஏறுவதற்கு ஏணியாகும்; காணுதற்கு அரிய தவத்திற்கும், தருமத்துக்கும், அரிதாகிய செல்வத்துக்கும், ஒரு காணியாயும் இருக்கும்; ஒளி உள்ள நெற்றியையும் மின்னல் போன்ற இடையினையும் உடைய பார்வதியை இடப் பாகத்தில் வைத்திருக்கின்ற பரமசிவனை மனம் உருக்கிக் களிப்பிக்கும். 3

555 காசிமுதல் சிறப்புடைய தலங்களிலே
இருந்து,இறையைக் கற்ப காலம்
பூசைசெயும் ஒருபலமும், நெடுங்காலம்
அரியதவம் புரிகை தானும்,
தேசிகனர் உரைத்தபடி சமாதியிலே
இருந்துபெறும் சித்தி தானும்,
நேசமுடன் அருணகிரி வலம்வருகஎன்று
உரைப்பதற்கு நிகர தாமோ?

(பொருள்) காசி முதலாகச் சொல்லப்பட்ட சிறப்பையுடைய சிறந்த நகர்களிலே இருந்து பரமசிவனைக் கற்பகாலம் பூசை செய்த பலமும், அநேக காலம் அருமையாகத் தவம் செய்தலும், குரு சொல்லிய முறைப்படி சமாதியில் இருந்து அடைகிற சித்திகளும், பக்தி விசுவாசத்துடன் அருணசலத்தை வலம் வரவேண்டும் என்று சொல்லிய பலனுக்கு நிகராகுமோ என்று சொன்னர். 4

556 அருணகிரி வலம்வருகஎன்று உரைப்பளவில்
அதிகபிர மத்தி நீங்கும்;
நருமதையின் அளவும்மது அருந்துபவம்
வருந்தி,நடு நடுங்கி யோடும்;
மருவுபெரும் பொருள்கவர்ந்த பழவினையும்
கரம்குவித்து வழிக்கொண்டு ஏகும்;
குருபரற்குத் தவறிழைத்த கொடுவினையும்
பயந்துகருக் குலையும் தானே.

(பொருள்) திரு அருணசலத்தை வலம் செய் என்று சொல்லும் அளவில் நீங்கற்கு அரிய பிரமஹத்தி காதகம் போய்விடும்; நருமதை ஆற்று நீர் அளவு கள்ளைக் குடித்த பாவமும் வருத்தம் உற்று, நடுநடுங்கி ஓடிப் போகும்; பிறருடைய மிகுந்த பொருளைக் களவு செய்த பழமையாகிய பாவமும் கைகுவித்து வணக்கம் செய்துகொண்டு ஓடிப்போகும்; குருவாகிய பரமசிவனுக்குத் தவறு செய்த பாவமும் பயந்து கருப்பம் குலைந்து ஓடிப் போகும். 5

557 அந்தவினை, உடன்படரும் பெரும்காற்றின்
எரிசுடர்போல் அவியா நிற்கும்;
தந்தையரைக் கடிந்தவினை, கருடன்உற்ற
அரவுஎனவே தளர்ந்து மாயும்;
மைந்தரையும் மகளிரையும் தொலைத்தவினைக்
கடல்,சுவறி வறிய வாகும்;
எந்தைபொருள் கவர்ந்தவினை, தனக்குஇருக்கும்
இடம்ஏதுஎன்று இசைக்கும் தானே.

(பொருள்) இறுதியைக் கொடுக்கும் பாவமும், அருணசலத்தை வலம் செய்ய வேண்டும் என்று நினைத்த அளவில், சூறைக் காற்றின் எதிரில் இருக்கும் தீபம் போல் அழிந்து போம்; தந்தைமாரைக் கொன்ற பாவமும், கருடனைக் கண்ட பாம்பு போல் நடுக்கம் அடைந்து ஓடிப்போம்; குழந்தைகளையும், மாதரையும் கொன்ற பாவமாகிய கடலும், வற்றிச் சிறிதும் இல்லாமல் நீங்கிப்போம்; எம்முடைய பரமசிவனது செல்வத்தைத் திருடின பாவமும், தான் இருக்கும் இடம் எங்கே என்று தேடிக்கொண்டு ஓடிப்போம். 6

558 ஓர்அடிக்கு யாகம் செய்த
பலத்தினை உதவா நிற்கும்;
ஈர்அடி இராச சூய
பலன்தரும்; இனிய மூன்று
நேர்அடி பரிமே தத்தின்
பலத்தினை நிறைக்கும்; நாலு
பார்அடி இடுவார்க்கு யாகப்
பலன்எலாம் பலிக்கும் தானே.

(பொருள்) திரு அருணாசலத்தை வலம்வர வேண்டும் என்று, நினைத்து, ஓர் அடி எடுத்து வைத்தவர்க்கு யாகம்செய்த பலன் சித்திக்கும்; இரண்டு அடி வைத்தவர்க்கு இராசசூய பலன் சித்தியாகும்; மனத் தூய்மையுடன் மூன்று அடி வைத்தவர்க்கு அசுவமேதம் செய்த பலன் உண்டாகும்; நாலடி வைத்தவர்க்கு எல்லா யாகத்தின் பலனும் உண்டாகும். 7

559 வலம்கொள்ஓர் அடியே பூமி
வலம் செயும் பலத்தை நல்கும்;
அலங்கும்ஈர் அடியே தீர்த்தம்
ஆடிய பலன்கள் ஈயும்;
தலம்கொள்மூன்று அடிகள் ஈர்எண்
தானத்தின் பலத்தை நல்கும்;
இலங்குநால் அடிக்கு யோகத்து
எண்வகைப் பலத்தை நல்கும்.

(பொருள்) வலம் செய்கையில் தூக்கிவைத்த ஓர் அடியின் பலன் பூமியை வலம் செய்த பலன் உண்டாகும்; காலைத் தூக்கிவைத்த இரண்டு அடியின் பலன் எல்லாப் புனித நீர் ஆடிய பலன்தரும்; மூன்று அடியின் பலன் சோடசதானப் பலன் தரும்; விளங்காநின்ற நாலடியின் பலன் அஷ்டாங்க யோகம்செய்த பலன் தரும். 8

560 வைத்தஓர் அடியே பூசைப்
பலன்எலாம் வழங்கும்; அங்கே
உய்த்தனர் அடியே லிங்கம்
தாபித்த உறுதி நல்கும்;
மெத்தவே அடிமூன்று இட்ட
பலன்சொலின், விமானம் கோடி
எத்தனை தூபிக் கோயில்
சமைத்தபேறு எல்லாம் நல்கும்.

(பொருள்) அது அல்லாமலும், வலமாக வைத்த ஓர் அடிக்குச் சிவபூசா பலன்கள் எல்லாம் பலிக்கும்; இரண்டு அடிக்குச் சிவலிங்கம் பிரதிட்டை செய்த பலன் கொடுக்கும்; மூன்று அடிக்கு எத்தனையோ கோடி விமானம், தூபிகளை உடைய கோயில் கட்டிய பேறு தரும். 9

561 நீடுஅருண கிரிவலத்துஓர் அடிஇட்டோர்,
உருத்திரர்ஆள் நிலைகைக் கொண்டோர்;
நாடிஇரண்டு அடிஇட்டோர், மகேசுரர்தம்
பதத்தடைந்தார்; நதியும் சூடி
ஆடுஅரவம் புனைந்தமலை வலம்ஆக
எழுந்து,ஒருமூன்று அடியிட் டார்க்கே
கோடிதலை முறைஅவர்அச் சிவலோகம்
தனில்கொடுபோய்க் குடிவைத் தாரே.

(பொருள்) நீண்ட அருணாசலத்தை வலம் செய்ய வேண்டும் என்று நினைத்து ஓர் அடி எடுத்து வைத்தவர்கள், உருத்திரபதம் அடைந்தவர்கள் ஆவர்; அன்புடனே இரண்டு அடி வைத்தவர்கள், மகேசுரபதம் அடைவார்கள்; சந்திரனைத் தரித்தும், படம் எடுத்து ஆடுகின்ற பாம்புகளை அணிந்த பரமசிவன் உருவமான அவ் அருணாசலத்தை வலம் வர நினைத்து மூன்று அடி வைத்தவர்கள், கோடி தலைமுறையில் உள்ள மனிதரையும் சிவபதவியில் கொண்டுபோய்ச் சேர்ப்பவராவர். 10

562 நன்றிதரும் அருணகிரி வலமாகச்
சிறிதுவழி நடந்த பேர்க்குத்
துன்றுநெடும் கிரணவெள்ளிக் கயிலைமலை
வழிகடுகித் தொலையா நிற்கும்;
அன்றியும்அம் மலைவலமாய் நடந்தவழிப்
பரல்உறுத்தும் அழற்சி யாலே,
கன்றியகா லரைக்காணில் கன்றியகா
லரைப்போலக் காணும் பாவம்.

(பொருள், நன்றியைக் கொடுக்கும் அருணாசலத்தை வலமாகச் சிறிது தூரம் நடந்தவர்களுக்கு நெருங்கிய கிரணத்தை வீசுகின்ற வெள்ளிமலையாகிய கைலாயத்திற்குப் போகும் வழி விரைவில் தொலையும்; அல்லாமலும், அம்மலையை வலமாகப் போம்போது வழியில் உள்ள பருக்கைக் கற்களாலும் அழற்சியினாலும் கன்றிப்போன காலை உடையவரைக் கண்டால் எமன் என்று பயந்து பாவங்கள் ஓடிப்போம். 11

563 வன்னிமலை வலம்புரிந்தோர் பதத்துகள்ஒன்று,
ஒருவாயு வசத்தி னாலே,
புன்நரகம் அனையஇடம் புகுதில்அது
கயிலைஎனப் புனிதம் ஆகும்;
இன்னும்அவர் பதத்துகள்ஓர் மனிதர்உடல்
செறியில்அவர் இறப்பு நீங்கும்;
துன்னும்அவர் பிறப்புஒழியும்; வலம்புரிந்தோர்
பெருமைகள்என் சொல்லு வோமே.

(பொருள்) அக்கினி மலையாகிய அவ் அருணகிரியை வலம் வந்தவர்கள் பாதத்தில் ஒட்டிய துகள் ஒன்று ஒப்பற்ற சிறு காற்றினால் நரகத்தை ஒத்த இடங்களில் சேர்ந்தால், அதுவும் கைலாயம் போல் தூய்மையாகும், இன்னும் வலம் வந்தவர்கள், பாதத் துகளில் ஒன்று மனிதர் உடலில் பட்டால், இறப்பும் அவர்கள் பின்பற்றி வருகிற பிறப்பும் நீங்கும்; அப்படி ஆகும்போது வலம் சுற்றி வந்தவர்களுக்கு உண்டாகும பெருமைகளை என்சொல்லுவோம். 12

564 இந்தமலை வலம்புரிந்தோர் சிவன்இருக்கும்
கயிலையினில் ஏகும் போதில்
சந்திரன்வெண் குடைஎடுக்கும்; இரவிவிளக்கு
எடுக்கும்;அங்கை தருமம் தாங்கும்;
அந்தரமே இந்திரன்,அவ் வழிக்குமலர்
பரப்பிடுவான்; அளகைக் கோமான்
வந்தனைசெய்து அருகுவரும்; கந்தமலர்
மழைசொரிவர் வசுக்கள் தாமே.

(பொருள்) அவ் அருணசலத்தை வலம் செய்தவர்கள் பரமசிவன் வாசம் செய்கின்ற கைலாய மலையைச் சேரும்போது, சந்திரன் வெள்ளைக் குடை பிடிப்பான்: சூரியன் தன் கையினலே விளக்கு எடுப்பான்; தருமதேவதை கையைத் தாங்கிவரும் வானுலகத்தில் வசிக்கும் இந்திரன் வருகிற வழியில் மலர்களைப் பரப்புவான்; அளகாபுரிக்கு அரசனகிய குபேரன் தண்டம்செய்து சமீபத்தில் வருவான்; அட்டவசுக்கள் மலர் மழை பொழிவார்கள், 13

565 மேனகையும் அரம்பைஉடன் உருப்பசியும்
திலோத்தமையும் வீணை ஆர்க்கும்
கானநடம் புரிவர்;கங்கா நதியுடனே
யமுனைநதி கவரி வீசும்;
போனகஇன் அமுதும்மலைத் துகிலும்,முகில்
எடுத்துஎதிரே போகும்; போதும்
நானமும்கொண்டு அலர்மடந்தை நணுகும்;முன்னே
மறைபுகழ்ந்து நடக்கும் தாமே.

(பொருள்) மேனகையும், அரம்பையும், ஊர்வசியும், திலோத்தமையும், ஆகிய நான்கு தேவதாசிகளும் வீணை வாத்தியத்துடனே இசைபாடி நடனம்செய்துகொண்டு வருவார்கள்; கங்கையும் யமுனையுமாகிய இரண்டு நதிகளும் சாமரம் வீசிக்கொண்டு வரும்; சாப்பிடத் தகுந்த அமிர்தத்தையும், மலை அளவு ஆடைகளையும் மேகம் எடுத்துக்கொண்டு எதிரே வரும்; இலக்குமி பூவும் கத்தூரியும் கொண்டுவருவாள்; முன்னே நான்கு வேதங்களும் புகழ்ந்துகொண்டு வரும், 14

566 சேல்பொதிந்து உகளும் கங்கை
படிவதும், சிறந்த தானம்
பார்ப்பதும், யோகத் தாலே
வருதலும், பலம்ஒவ் வாஆல்;
ஆர்ப்பொலி சடையான் அண்ணா
மலையினை வலமாய்ச் சூழல்,
காற்பலன் என்றுஎண் ணாதே,
முழுப்பலம் கருதும் காலே.

(பொருள்) சேற்கெண்டை குதித்து விளையாடும் கங்கை முதலிய நதிகளில் ஆடிய பலனும், சிறந்த சிவத்தலங்களைத் தரிசனம் செய்த பலனும், யோகம் செய்தலினால் வந்த பலனும் ஒப்பாகா; ஆத்திமாலை தரித்த சடையை உடைய சிவ வடிவம் ஆகிய அருணாசலத்தை வலம்செய்தால், காற்பலம் என்று எண்ணாமல் முழுப் பலம் என்றே நினைப்பாயாக. 15

567 நிரந்தரம் இமையோர் போற்றும்
நெடியமால் வரையைச் சூழ்வோர்,
பரந்திடும் வழியில் தோன்றும்
பரலினால் சிவந்த பாதம்,
வரம்கொள வணங்கும் வானோர்
மகுடகோ டிகளில் தைத்து
விரிந்தசெம் மணிகள் தாக்கி
மீளவும் சிவக்கும் மாதோ.

(பொருள்) எப்போதும் தேவர்கள் வணங்கும் பெருமை உள்ள நீண்டு உயர்ந்த அருணாசலத்தை வலம் செய்வோர்களுடைய வழியில் கிடக்கிற பரல் கற்களை மிதித்துச் சிவந்த பாதம், பின்பு வரத்தைப் பெறுவதற்கு வணங்கும் தேவர்களுடைய மகுடகோடிகளில் பதித்து ஒளிவிடுகின்ற இரத்தின கோடிகள் தாக்கி மறுபடியும் சிவக்கும். 16

568 கால்நடை கொடுக்கப் பெற்றுஎன்?
கரியகண் அறியப் பெற்றுஎன்?
மானுடப் பிறவி உற்றுஎன்?
மலைவலம் புரியா மாந்தர்,
ஊன்உடைப் புழுக்கூடு ஏறி,
நரகுஇடை ஊசல் ஆடி,
தான்இடர்ப் படுவது அல்லால்,
உய்கிலா; சனக! என்றார்.

(பொருள்) அப்படிப்பட்ட அருணாசலத்தை வலம் செய்யாதவர்கள் கால்நடை உண்டாய் நடந்து திரியப்பெற்று என்ன பயன்? கருத்த கண்கள் நன்றாகத் தெரியப் பெற்றென்ன பயன்? பெறுதற்கு அரிய பிறவியாகிய மானுடப் பிறப்பாகப் பிறந்து என்ன பயன்? மாமிசம் திரண்ட புழுக்களை உடைய உடலில் சேர்ந்து நரகத்தில் வீழ்ந்து அலைந்து துன்பப்படுவது அல்லாமல் பிழைக்கமாட்டார்கள். சனகனே! என்றார் நான்முகனார். 17

569 வஞ்சியர் புணர்ச்சி வேண்டின்,
மன்னர்கை வசமா வேண்டின்,
அஞ்சிய பகைமை எல்லாம்
அக்கணத்து அகற்ற வேண்டின்,
பிஞ்சுஇள் மதிபோல் நல்ல
புதல்வரைப் பெறுதல் வேண்டின்,
சஞ்சிதம் முதலா மூன்று
கருமமும் தவிர்க்க வேண்டின்,

(பொருள்) அஃதல்லாமல், வஞ்சிக்கொடி போன்ற இடையினை உடைய நல்ல மாதர் உடைய போகம் வேண்டினாலும், அரசர்கள் கைவசம் ஆக வேண்டுமானாலும், அஞ்சத் தகுந்த பகை எல்லாம் அக்கணத்திலே நீக்க வேண்டுமானாலும், பால சந்திரன் போல நல்ல பிள்ளைகளைப் பெற வேண்டுமானாலும், ஆகாமிய, சஞ்சித, பிராரத்துவமாகிய மும்மலங்களையும் நீக்கவேண்டுமானாலும், 18

570 முயலகன், அலகை, பூதம்,
கணங்களை முனிய வேண்டின்,
துயர்உறு பிணியும், ஆகச்
சோகமும், தவிர்க்க வேண்டின்,
இயல்,இசை அறிய வேண்டின்,
எழுதரும் கோலம் வேண்டின்,
மயல்உறு புகழை வேண்டின்,
மலைவலம் புரிவார் நல்லார்.

(பொருள்) முயலகன் போன்ற இராக்கதரையும், பிசாசுகளையும், பூதக் கூட்டங்களையும் கோபித்து ஒழிக்க வேண்டினாலும், துன்பம் செய்யும் நோயையும், தேகத்தில் வரும் சோகத்தையும் நீக்க வேண்டினாலும், இயல் இசை முதலாகிய கல்வியை அறிய வேண்டினாலும், அழகை வேண்டினாலும், குற்றம் அற்ற புகழை வேண்டினாலும், அம்மலையை வலம் செய்வார்கள் பெரியோர்கள். 19

571 வரம்தரும் அருக்க வாரம்
மலைவலம் புரிந்தோர், வெய்யோன்
தெரிந்தமண் டலத்தைக் கீறிச்
சிவகதி பதியாய்ச் சேர்வார்;
திரம்தரும் சோம வாரம்
திருமலை வலமாய் வந்தோர்,
புரந்தரன் எனஏழ் பாரும்
புரந்துஅரன் தன்மை பூண்பார்.

(பொருள்) நினைத்த காரியத்தைச் சித்திக்கச் செய்யும் சிறந்த ஆதிவாரத்தில் அத்திருமலையை வலம் செய்தவர்கள், சூரியமண்டலத்தைப் பிளந்து சிவபதத்திற்கு அதிபதிகளாய்ச் சென்று சேர்வார்கள்; ஸ்திரமாகிய சோமவாரத்தில் அத் திருமலையை வலமாய் வந்தவர்கள், இந்திரன்போல ஏழுலகத்தையும் ஆண்டு சிவசாரூப்பியம் அடைவார்கள். 20

572 மங்கல தினத்தில் சூழ்வோர்,
கடன்உடன், வறுமை நீங்கிச்
சங்கிலித் தொடராம் ஏழு
பிறப்பையும் தவிர்ப்பார்; புந்திக்கு
எங்கள்நா யகரைச் சூழ்வோர்,
இருங்கலை மறைகள் நாலாறு
அங்கமும் தெளிந்து, முத்திக்கு
அருகராய் அமரர் ஆவார்.

(பொருள்) செவ்வாய்க்கிழமை மலையை வலம்செய்வோர், தங்களுக்கு உண்டாகிய கடனையும், வறுமையையும் நீக்கிச் சங்கிலிபோல் தொடர்ந்து வருகிற எழுபிறப்பையும் நீக்கு வார்கள்; புதன்கிழமை பரமசிவனை வலம்செய்வோர், நாலு வேதங்களும், ஆறு சாத்திரங் களும், அறுபத்துநாலு கலைகளும் தெரிந்து முத்திக்கு நெருங்கினவராய்த் தேவர்கள் ஆவார்கள். 21

573 மா,வியா ழத்தில் செய்ய
மணிவரை வலமாய்ச் சூழ்வோர்,
மூவரும் புகழத் தேவர்
முனிவர்தம் குரவர் ஆவார்;
தாவிலா வெள்ளி வாரம்
தனில்வலம் புரிந்தோர், கஞ்சப்
பூவையைப் புணரும் பூவைப்
புணரும்மால் புரத்தில் சேர்வார்.

(பொருள்) பெருமை பொருந்திய குருவாரத்திலே சிவந்த அரதனங்களை உடைய அம்மலையை வலமாக வந்தவர்கள், திரிமூர்த்திகளும் புகழும்படி தேவர்கள் முனிவர்களுக்கு ஆசிரியராவார்கள்; குறைவு இல்லாத சுக்கிரவாரத்திலே வலம் செய்தவர்கள், தாமரை மலரில் இருக்கின்ற இலக்குமியைச் சேரும் விட்டுணுபதத்தைச் சேருவார்கள். 22

574 உதயமே சனிநாள் சூழ்வோர்க்கு,
ஒன்பது கிரகம் நன்ருய்ப்
பதினேராம் இடத்தில் தூய
பலன்களைப் பலியா நிற்கும்;
மதிஅணி சிவன்இ ராவும்,
வருடம்வந்து உதிக்கும் நாளும்,
அதிகமாம் அதிகம் ஆகும்,
ஐப்பசி முதலாம் மூன்றும்,

(பொருள்) சனிவார உதயத்தில் வலம் செய்வோர்களுக்கு, நவக்கிரகங்களும் பதின் ஒன்ரும் இடத்தில் இருந்த பலனைக் கொடுப்பார்கள்; சந்திரனைத் தரித்த பரம சிவனுக்கு உரிய சிவராத்திரியிலும், வருடப் பிறப்பிலும். ஐப்பசி, கார்த்திகை, மார்கழி இந்த மூன்று மாதமும் வலம் செய்பவர்களுக்கு மேற்சொன்ன பலன்களிலும், அதிக பலன் சித்தியாகும். 23

575 அயனசங் கிராமம் மாசி
மகத்தில்அர்த் தோத யத்தில்,
வெயில்உறும் கதிரைப் பாம்பு
விழுங்குநாள் விதிபா தத்தில்,
பயன்உற வலம்செய் வோர்க்குப்
பலன்களில் கோடி ஆகும்;
அயர்வுஅறத் தினமும் சூழ்வார்
பேற்றையார் அறிய வல்லார்.

(பொருள்) உத்தராயண புண்ணிய காலத்திலும், தக்ஷிணயன காலத்திலும் மாசி மகத்திலும், அர்த்தோதய காலத்திலும், சூரியகிரகண காலத்திலும், விதிபாத யோகத்திலும், இஷ்ட சித்தியை அடைய விரும்பி வலம் செய்தவர்களுக்குக் கோடி பங்கு அதிகமாகப் பலன் கிடைக்கும்; தளர்ச்சி அடையாமல் தினந்தோறும் வலம் செய்தவர்களுக்கு உண்டாகும் பலனை யார் அறிந்து சொல்ல வல்லவர். 24

576 காரிகை அவரை அற்றைக்
கனவிலும் புணர்ந்தி டாமல்,
நீரினில் மூழ்கித் தூயது
உடுத்து,வெண் ணீறு சாத்தி,
ஆரிடை முறையே தானம்
அளித்து,தாம் அவைகொள் ளாமல்
பாரிடை நடந்து, சூழ்ந்த
தேவரைப் பணிந்து போற்றி,

(பொருள்) மிக அதிக பலனைத் தரும் அருணாசலத்தை வலம் வரும் விதம் எப்படி எனில், வலம் வரும் அன்றைக்குப் பெண்களைக் கனவிலும் நினையாமலும், அவர்களோடு கலவாமலும் நீரில் மூழ்கி, தூய்மையான ஆடையை உடுத்திக்கொண்டும், விபூதி அணிந்து, அவ் இடத்திலே தானம் கிரமமாகக் கொடுத்துத் தாம் ஒருவரிடத்திலும் தானம் வாங்காமல் பூமியிலே காலினால் நடந்து மலையைச் சுற்றி இருக்கின்ற தேவர்களைப் பணிந்து வணங்கி, 25

577 கஞ்சுகம், போர்வை நீத்து,
கவிகையும், செருப்பும், நீத்தே
அஞ்சுதல், வெகுளி, சோகம்,
அக்கணத்து அகற்றி, வாசி
குஞ்சரம் முதலா உள்ள
வாகனம் குறுகி டாமல்,
விஞ்சிய அடைக்காய் உண்டி
வழியிடை வெறுப்ப தாக்கி,

(பொருள்) உடலில் தரிக்கும் சட்டையும், போர்வையும் நீக்கிக் குடைபிடிக்காமலும், கால்களுக்குச் செருப்புப் போடாமலும், பயமும், கோபமும், சோகமும் ஆகிய இவற்றை நீக்கி, குதிரை, யானை முதலாகிய வாகனங்களில் ஏருமலும், வழியில் தாம்பூலம் தரிக்காமல் உணவையும் வெறுத்து, 26

578 செங்கைவீ சாமல், சோராது,
உவகையால், சிரத்தில் கூப்பி,
மங்கையர், பதிதர், நீசர்,
உறுப்புஇலா வடிவு நோக்காது,
அங்குஉறும் அடியின் ஓசை
செவிப்புகாது, அரச மாதர்
திங்கள்ஐ யிரண்டும் சென்று
நடந்திடும் செயல்போல் சென்று,

(பொருள்) கைகளை வீசிக்கொண்டு போகாமல், மனச்சோர்வு இல்லாமல், களிப்போடு தலையின்மேல் கையைவைத்துக் கூப்பிக்கொண்டு, மாதர்களையும், பாவிகளையும், சண்டாளர்களையும், உடல் உறுப்பு ஊனம் அடைந்தவர்களையும், பாராமல், நடக்கிறபோது அடியினுடைய ஒலி காதில் கேட்காமல், மெள்ள அரச குமாரிகள் பத்துமாதக் கருப்பத்தோடு நடக்கிறதுபோல நடந்து, 27

579 இருவினை அகற்றும் அந்த
மலையைஎண் திசையும் வீழ்ந்து,
பரவிஅங்கு அதனைச் சூழ்ந்த
கடவுளர்ப் பணிந்து போற்றி,
அருவமாய் வலமாம் சித்தர்
அமரரை மனத்தால் போற்றி,
உருகிஅங்கு அவர்மேல் கைகால்
படும்என ஒதுங்கிச் சென்று,

(பொருள்) நல்வினை தீவினைகள் இரண்டையும் போக்கி, சிவபதவியை அளிக்க வல்ல அக்கினியை எட்டுத் திக்கும் வணங்கி, உருவம் தெரியாமல் வலம் செய்துகொண்டு வரும், சித்தர்களையும், தேவர்களையும் மனத்தினால் வணக்கம் செய்து, அவர்கள் மேல் தங்கள் கை கால்கள் படும் என்று பயந்து வழியினின்றும் ஒதுங்கிச் சென்று, 28

580 வானம்ஆர் மலையைப் பொன்னில்
படிகநல் மணியாய் எண்ணி,
மோனமாய் நடக்க; அல்லது
இறைபுகழ் மொழியைக் கேட்க;
ஆனஇச் செயலி னாலே
வலம்செய்துஆ லயத்தில் நண்ணி
ஏனம்முன் அறியான் தாளைப்
பணிந்து,தன் இருக்கை எய்தி,

(பொருள்) வானத்தை முட்டும்படி வளர்ந்துள்ள அம்மலையைப் பொன்போலவும், ஸ்படிகம் போலவும், இரத்தினம் போலவும் நினைந்து, மௌனமாய் நடக்க வேண்டியது; அல்லது பரமனது துதிகளைக் கேட்கவேண்டியது; இப்படிப்பட்ட தன்மையாக வலம் வந்து, கோயிலுள் சென்று விட்டுணுவாகிய பன்றியானது முன் அடியைத் தேடி அறியாத பரமசிவனது திருவடிகளை வணங்கித் தாங்கள் இருக்கும் இடத்துக்கு வந்து, 29

581 குன்றுஎனும் குணத்தார் சூழ
இருந்து,தீம் கனிபால் கொள்க;
அன்றியே புலவு நீத்த
அடிசிலை உண்க; நீதி
நின்றஅத் தலத்தோர் செய்யும்
நிலைமைஈது; அதிதூ ரத்தில்
சென்றவர் வருத்த மாய்எவ்
வகைவலம் செயினும் சீராம்.

(பொருள்) மலைபோல் உயர்ந்த குணத்தையுடைய சிவனடியார்கள் சூழ இருந்து, இனிமையான பழங்களும், பாலும் உண்ணக் கடவர்; அப்படி இல்லாவிட்டால் மாமிச பதார்த்தம் இல்லாமல் தூய்மையான சோற்றை உண்ணக் கடவர்; இப்படிப்பட்ட செய்கைகளை நீதி பொருந்திய அத்தலத்தில் இருக்கிறவர்கள் செய்ய வேண்டியது; அதிக தூரத்தில் நின்றும் வந்தவர்கள் தங்களுடைய வருத்தத்தால் எவ்விதமாக வலம் செய்தாலும் நன்மையாம். 30

582 தண்டுதல் இலாத ஞானச்
சனக! இச் சயிலம் சூழ,
எண் திசை புரப்போர், தம்பே
ரினில்சிவ உருவம் கண்டார்;
வண்டுஇசை பெருகும் ஓதி
மலைமகள், மலையின் கீழ்பால்
கண்டனள், பவள வெற்பில்
கயிலைவெற்பு இறைவன் காட்சி.

(பொருள்) கெடுதல் இல்லாத அறிவை உடைய சனக ரிஷியே! இம் மலையின் எட்டுத் திக்கிலும் சூழ்ந்து விளங்கும்படி, திக்குப் பாலகர் எட்டுப்பேரும் தங்கள் பேரினாலே இலிங்கங்களை நிலைநாட்டிப் பூசித்து இருக்கிறார்கள்; வண்டுகளின் ஒலி பொருந்திய கூந்தலை உடைய மலை அரசன் மகளாகிய பார்வதியானவள், மலையின் கிழக்குத் திசையில் பவள மலை போல் ஒரு இலிங்கத்தை ஏற்படுத்திப் பூசித்தாள். 31

583 மணிவரை பரியில் சூழ்ந்த
வச்சிராங் கதன், அப் போது
புணர்பவம் தவிர்க்கத் தென்பால்
புழுகுஅணி இறையைக் கண்டான்;
தணிவுஇலா வினைகள் நீக்கத்
தமியனேன் மலையின் மேற்பால்
அணிஅண்ணா மலையான் என்னும்
அருவுரு இறையைக் கண்டேன்.

(பொருள்) நவமணிகள் ஒளிவிட்டு விளங்கும், திரு அருணாசலத்தின் இடத்தில் குதிரையில் ஏறிக்கொண்டு வந்த வச்சிராங்கத பாண்டியன், அக்காலத்தில் தன்னை அடைந்த பாவத்தைத் தீர்க்கத் தென்திசையில் புழுகு அணி இறைவர் என்று ஒரு இலிங்கத்தை நிலைநாட்டிப் பூசித்தான்; தணியாத பாவங்களை நீக்கிக்கொள்ள, நானும் நான்(முகன்) அம்மலையின் மேற்குத்திக்கில் அணி அண்ணாமலையான் என்கின்ற, பெயர் இட்டு ஓர் இலிங்கத்தை நிலைநாட்டிப் பூசை செய்தேன். 32

584 வாலவெம் கதிர்,மேல் சோண
வரைகடந்து, ஒருநாள் பாய்ந்து
சாலும்அத் துயரம் தீரத்
தனதுபேர் இறையைக் கண்டான்;
ஆலயம் முழுதும் தேவர்,
அரவநாட்டு உறைவோர், சித்தர்,
சீலமா முனிவர் கண்ட
சிவன்உருத் தெரிக்கொ ணாதே.

(பொருள்) ஒளிபொருந்திய கதிர்களை உடைய சூரியன் முற்காலத்தில், அருணாசலத்தைத் தாண்டிப் போனதினால் வந்த மிகவும் பெரியதாகிய பாவம் தீரத் தன் பேர் இட்டு, ஒரு இலிங்கத்தை நிலைநாட்டிப் பூசைசெய்தான்; அஃதல்லாமல், அம்மலையில் இருக்கிற கோயில்கள் முழுவதும் தேவர்கள், நாக உலகத்தார்கள், சித்தர்கள், முனிவர்கள் இவர்களால் ஏற்படுத்திப் பூசை செய்யப்பட்ட சிவலிங்கங்களை இவ்வளவு என்று சொல்லக் கூடாது. 33

585 ஈசனார் வடிவம் ஆன
இலிங்கம்,அவ் எல்லை சூழ
யோசனை மூன்றும் சேர
நெருங்கும்,வான் உடுக்கள் போல;
பேசுவது எவனோ? அந்தத்
தலத்தினின் பெருமை, வேலன்,
தேசுஉறும் கவுரி, யானை
முகத்தனும் தெரிக்கொ ணாதே.

(பொருள்) பரமசிவனது உருவமான அனேக இலிங்கங்கள் அவ் எல்லையைச் சுற்றி மூன்று காதவழிமட்டும் வானத்தில் விளங்குகிற நக்ஷத்திரங்கள் போல நெருங்கி இருக்கும்; அப்படி இருக்கிறபோது, அத்தலத்தின் பெருமையைச் சுப்பிரமணியர், பார்வதி, விநாயகர் இவர்களாலேயே சொல்லக்கூடாமல் இருக்கிறபோது என்னால் சொல்லக் கூடுமோ? 34

586 தாதுஅவிழ் மலரோன் இவ்வாறு
உரைத்தலும், சனகன் போற்றி,
வேதனே! பிறவி தீர்க்கும்
விமலனே! விமலன் ஆன
ஆதியைப் பழித்தோர், செம்பொன்
கவர்ந்தபேர் அடையும் தீங்கும்
பாதகம் தவிரு மாறும்
பகர்எனப் பதுமன் கூறும்.

(பொருள்) தாது விரிந்த தாமரை மலரில் இருக்கின்ற நான்முகன் இப்படிச் சொன்ன அளவில், சனகமுனிவர் வணங்கி, வேதம் முழுதும் கற்று உணர்ந்தவரே! பிறப்பை நீக்கும் தூய்மையானவரே! மலரகிதரான சிவனைப் பழித்தவர்களுக்கு வந்த பாவமும், அரனடியார் பொருளைப் பறித்தோர் அடையும் தீமையும் அவைகள் நீங்கும் வகையும் சொல்லும் என்று கேட்க, நான்முகனார் சொல்லத் தொடங்கினார். 35

ஒன்பதாவது
திருமலை வலம்புரி சருக்கம்
முற்றிற்று



## 10. ஆதித்தச் சருக்கம்

587 அற்றம் அற்ற முனிவர் சூழும்
அருண பூத ரத்துடன்,
மற்ற வெற்பும் ஒக்கும் என்றுஇ
கழ்ந்து ரைத்த மனிதர்வாய்,
புற்றுள ழுந்து, புகைஎ ழுந்து,
புழுநெ ளிந்து, புலவுநீர்
சுற்றுள ழுந்து பெருகு மண்டு
சோரி மாரி சொரியுமே.

(பொருள்) குற்றம் நீங்கிய முனிவர்க்ள் சூழ்ந்து வலம்வரும் அருணசலம் என்னும் மலையோடு மற்ற மலைகளையும் ஒக்கும் என்று நிந்தை சொன்ன மனிதர் வாயில் புற்று உண்டாகிப், புகைந்து புழுக்கள் நெளிந்து, புலால் நாற்றம் நாறுகின்ற நீர் உடல் முழுதும் கசிந்து மிகவும் இரத்தமாரி சொரியும். 1

588 அந்த மைந்தர் தம்மை எற்றி,
அந்த கன்தன் ஏவலால்
வந்த தூதர் செக்கில் இட்டு,
அரைத்து அரைத்து, எடுப்பர்,வாய்
வெந்த வாளி ஞல்அ றுப்பர்;
"எந்தை சோண வெற்பையோ
நிந்தை செய்வை" என்றுஅ டித்து,
நெய்யில் வேக வைப்பரே.

(பொருள்) அருணசலத்தை நிந்தித்த அம்மனிதர்களைப் பின்பு, எமனுடைய ஏவலாய் வந்த தூதர்கள் தொடர்ந்து செக்கில் அநேகதரம் போட்டு அரைத்து அரைத்து எடுப்பார்கள்; அவர்கள் வாய்களை, நெருப்பில் போட்டுக் காய்ச்சிய கூரிய வாளிஞல் அறுப்பார்கள்; "எங்கள் ஆண்டவன் எழுந்து அருளி இருக்கும் மலையையோ நிந்தை செய்வாய்" என்று அடித்து நெய்யிலே வேகப்போடுவார்கள். 2

589 பஞ்ச டித்து வைத்து,அ ரக்குஉ
ருக்கி, வாய்ப ரப்பியே,
நஞ்சி ஊட்டப்பு கட்டி, வெய்ய
நரகி லேகி டத்துவார்;
அஞ்சி அந்த நரகு தானும்
அருவ ருத்துஅ லைத்திடும்;
நெஞ்ச கத்தில் எண்ணி ஞர்த
மக்கும் ஈது நிகழுமே.

(பொருள்) பின்னும் அவ் அருணாசலத்தை நிந்தித்தவர்களை எமதூதர்கள் பஞ்சு பஞ்சாக அடித்துவைத்து அரக்கை உருக்கி அரக்கை வாயிலேவிட்டு, நஞ்சைக் குடிப்பித்துத் தீமையாகிய நரகிலே தள்ளுவார்கள்; அந் நரகமோ என்றால், பயப்பட்டு இவர்களைத் தாங்குகிறதற்குச் சகிக்காமல் மிகவும் வருந்தும்; இப்படிப்பட்ட துன்பம் மனத்தில் இம் மலையைக் குறைவாக எண்ணினவர்களுக்கும் உண்டாம். 3

590 குருக்கள், தந்தை, தாயர் ஆவி
கொன்ற தீயர் முதலினோர்,
இருக்கும் வெய்ய நரகின் மீதின்
இட்ட போதில், அவர்களும்
பெருக்க நொந்து "பாவி" என்று
பேசு வார்கள்; தம்உடன்
சரிக்கொ ளாது, தள்ளும் என்று
தங்கள் கண்பு தைப்பரே.

(பொருள்) ஆசிரியர்களையும், தாய் தந்தையரையும், வருத்தி உயிரை வாங்கிய தீய பாவிகள் முதலானவர்கள் வசிக்கும் கொடிய நரகத்தில் இவ் அருணாசலத்தை நிந்தித்தவர்களைப் போட்டபோது, இவர்களை முன் இருக்கும் பாவிகள் மிகவும் மனவருத்தப்பட்டு, சுவாமியை நிந்தித்தபடியினால், நம்மிலும் மாபாவிகள் என்று சொல்லி நம்மோடு இவர்கள் சரியாய் இருக்கக்கூடாது தள்ளிவிடும் என்று தாங்கள் கண்களைப் பொத்திக்கொள்வார்கள். 4

591 என்று உரைத்து, நானும், வையம்
ஏழும் உண்ட மாலுமாய்,
அன்றும் இன்றும் அளவுஇ டாத
அருண பூத ரத்தை ஓர்
குன்றம் என்று இகழ்ந்து, சென்று
குன்றி, மெய்கு றைந்து,முன்
கன்றி னான்ஒ ருத்தன், என்று
கதைவி ளம்பல் ஆயினான்.

(பொருள்) நான்முகன் சனகமுனிவர்க்குப் பின்னும் சொல்லுவார். நானும் ஏழு உலகையும் உண்ட திருமாலும் சேர்ந்து, அன்று முதல் இன்று வரையிலும் அளவுஇடப் படாத பெருமையுள்ள அருணாசலத்தை ஒருவன் சாதாரணமான மலை என்று இகழ்ந்து போய் அதனால் குன்றுதல் அடைந்து, உடல் குறைந்து துன்பப்பட்டான்; முன் காலத்தில் என்று அக் கதையைச் சொல்லத் தொடங்கினார். 5

592 உலவு கின்ற சோதி யாவும்
உள்ளில் வைத்து,இவ் உலகில்ஓர்
மலைய துஆகி நின்ற தெய்வ
மலையை, மற்ற மலைகள்போல்
அலகு பெற்ற இரவி எண்ணி
ஆழி ஒன்று வாசிஏழ்
இலகு தேர்அம் மலையின் உச்சி
எல்லை யாய்ந டத்தினான்.

(பொருள்) நான்கு திக்கிலும் சென்று பரவி விளங்கும் ஒளிகளை எல்லாம் தனக்கு உள்அடக்கி வைத்துக்கொண்டு இப்பூமியில் ஒப்புஅற்ற மலை உருவம் கொண்ட தெய்வீக மாகிய அருணாசலத்தை மற்ற மலைகள் போல நினைத்து, ஒரு சக்கரமும் ஏழு குதிரைகளும் பூண்ட தேரை அவ் அருணாசலத்தின் உச்சி வழியின் எல்லையாக நடத்தினான் ஆயிரம் கதிர்களையுடைய சூரியன். 6

593 முகுந்தர் தேடும் அந்த வெற்பின்
முடியின் மேவும் முன்னமே,
மிகுந்த சோதி உள்ளி னும்வெ
டித்துள ழுந்து வெம்மையாய்
புகைந்து செல்ல, இரதம் மூவர்
புரம்எ னப்பொ ரிந்ததே;
உகைந்த பச்சை வாசி யோ,உ
லர்ந்த வாசி ஆனதே.

(பொருள்) சூரியன், விட்டுணுவினுல் தேடப்பட்ட அம்மலையின் உச்சியில் போவதற்கு முன்னமே, மிகுந்த ஒளிமயமான மலை வெடித்து, அவ் உள்ளிடத்தில் நின்று எழுந்து வெப்பம் கொண்டு புகைந்துவரத் தேரானது திரிபுரம் பரமசிவன் நகையாகிய நெருப்பிலே பொரிந்தது போலப் பொரிந்து போய்விட்டது; நடத்தப்பட்ட குதிரைகளோ சீவன் இல்லாத குதிரைகள் ஆயின. 7

594 குதிரையும் கரிகள் ஆகி,
கொடியதேர் அலகைத் தேராய்,
கதிரையும் தனது பாகன்
கால்என விழுந்த பானு,
மதிஅழிந்து இருந்தான்; அந்த
மலைவலம் செய்து ஞானக்
கதிபெறச் செல்வேன், கண்டு,
கதிரவற்கு இவைஉ ரைத்தேன்.

(பொருள்) அம்மலையின் இடத்தில் எழுந்த சிறந்த ஒளிக்கதிரின் வெப்பத்தினுல், குதிரைகள் ஏழும் கரிகளாகப் போய்க் கொடியையுடைய தேர்,கானல் போலத் தோன்றியும் உரு இல்லாததாய்த் தன்னுடைய பாகன் காலை இழந்தது போலக், கதிர்கள் எல்லா வற்றையும் தான் இழந்து, சூரியன் மதிமயங்கி இருந்தான்; அந்த மலையை வலம் செய்து கொண்டு மேலாகிய கதியை அடையும்படியாகப் போகின்ற நான், பார்த்து அச் சூரியனுக்கு இவ்வார்த்தைகளைச் சொன்னேன். 8

595 "ஐயனை மலையென்று எண்ணி,
அகந்தையால் இகழ்ந்து, வீழ்ந்த
கையனே! ஒருகா லத்தும்
கதிஇலை உனக்குஎன் றாலும்,
செய்யும்ஓர் தொழிலி னாலே
தீர்க்கலாம்; தெளிவுஉள் ளார்க்கு
மெய்யனை, அருணை யானை
வலம்செய்," என்று உரைத்து மீண்டேன்.

(பொருள்) அருணாசலேசுவரை ஒருமலை என்று நினைத்து, அகங்காரத்தினால் நிந்தித்து, கீழே விழுந்து கிடக்கின்ற ஆயிரம் கதிர்களை உடைய சூரியனே! உனக்கு எவ்வகையிலும் ஒரு காலத்தும் நற்கதி கிடைக்காது; அப்படி இருந்தாலும், ஒரு தொழிலினால் கிடைக்கலாம்; அது யாது எனில், தெளிவு உள்ளவருக்கு மெய்மையாய் விளங்கும் அருணாசலத்தை வலம் செய்து கொண்டு வா என்று சொல்லித் திரும்பினேன் என்றார் நான்முகனார். 9

596 போதித்த படியே சென்று
பொன்மலை வலமாய், முன்னம்
சாதித்த அருக்கன் சோணா
சலத்தினை வலமாய் வந்தான்;
வாதிக்கும் மழுவி னானும்
மழவிடை மீதில் கோடி
ஆதித்தர் எனவே தோன்றி
ஆதித்தற்கு அருளிப் போனான்.

(பொருள்) நான்முகன் சொன்னபடியே விரைந்து சென்று மகாமேருமலையை முன்னே வலமாக வருகின்ற சூரியன் அருணாசலத்தை வலம் செய்து கொண்டு வந்தான்; அச்சூரியனுக்கு எதிரே வாதித்துப் பகைவர்களைக் கொல்லுகின்ற மழுவை ஏந்திய பரமசிவன் இளமையாகிய இடபத்தின் மேல் கோடி சூரியர் ஒரே காலத்தில் தோன்றினால் போலத் தோன்றி அனுக்கிரகம் செய்து கைலாயத்துக்கு எழுந்து அருளினார். 10

597 பன்னிரு மாதம் தோறும்
பரிதிமுன் பயத்தி ஞலே
வன்னியின் வடிவது ஆன
மலையினை, வலமாய்ச் செல்வான்;
சென்னியின் எல்லை செல்லான்;
இடப்புறம் செல்லான்; தன்தேர்
அந்நிலை வரும்போது ஏத்தி
அலர்சொரிந்து அகலும் என்ருன்.

(பொருள்) சித்திரை முதல் பங்குனி ஈருகச் சொல்லப்பட்ட பன்னிரண்டு மாதமும் சூரியன் முன்னே தனக்கு உண்டான பயத்தினுல், அக்கினி வடிவமாகிய மலையை வலம் செய்து கொண்டு போவான்; அம்மலையின் உச்சியின் மேலும் போகான்; இடப்புற மாகவும் போகான்; தன்னுடைய தேர் அம்மலைக்குச் சமீபத்தில் வரும்போது துதி செய்து மலர்மாரி பொழிந்து செல்வான் என்று சொன்ஞர் நான்முகனுர். 11

பத்தாவது
ஆதித்தச் சருக்கம் முற்றிற்று.

## 11. பிரதத்தராசன் சருக்கம்

598 அருணைவாழ் இறைவன் திரவியம் அணுமட்டு
ஆயினும் கரந்தபேர், உடனே
மரணமாய் நமன்நாட்டு அழலிலே குளிப்பர்;
வச்சிர உலக்கையால் மறிவர்;
இருள்நிறை நரகம் இருபத்துஎண் கோடி
இடத்திலும் அடைவிலே இருப்பர்;
தரணியில் புழுவாய்ப் பிறப்பர்கள்; களவு
தனக்குஇயைந் தவரும்அத் தகையார்.

(பொருள்) அருணாசலத்தில் வீற்றிருந்து அருளும் தலைவனாகிய சிவபெருமானுடைய பொருளில் அணு அளவேனும் திருடினவர்கள் உடனே மரணம் அடைந்து, எமலோகத்திற்குப் போய், தீக்குழியில் விழுந்து துன்பப்படுவார்கள்; வயிர உலக்கையினால் அடிக்கப்பட்டு வருந்துவார்கள். இருள் நிறைந்த இருபத்தெட்டுக்கோடி நரகங்களிலும் அடைவாக விழுந்து கிடப்பார்கள். மறுபடியும் பூமியில் வந்து புழுவாய்ப் பிறப்பார்கள்; அத் திருட்டுக்கு உடன்பட டுஇருந்தவர்களும் அப்படிப்பட்ட துன்பத்தை அடைவார்கள். 1

599 ஓங்கிய தரையுள் இசைத்தபொன் எதிரே
உற்றபேர் உடலையும் ஒறுக்கும்;
தேங்கிய கருணை அருணைநா யகர்பொன்
செய்கையைப் படியினில் கரந்து,
வாங்கிய பேரைக் கிளைஉடன் சிதைக்கும்;
மலையினும் கடலினும் ஒளித்து
நீங்கிய பொழுதும் தொடர்ந்திடும்; விடுமோ?
நிழல்எனத் தொடரும்எந் நிலத்தும்.

(பொருள்) திருடி, பரந்த பூமியினுள் ஒளித்து வைக்கப்பட்ட பொன்னானது, அவ்விடத்தின் மேல் வந்தவருடைய உடலையும் தண்டிக்கும்; அப்படிச் செய்வது மிகுந்த கருணையை உடைய அருணாசலேசருடைய பொருளின் செய்தியாம்; அப்பூமியில் ஒளித்து வைத்து எடுத்துக் கொண்டவரையோ என்றால், அவர்கள் உறவோடு கெடுக்கும்; மலையிலும், கடலிலும் ஒளித்துக்கொண்ட பொழுதும் தொடர்ந்து வருத்தும்; விடமாட்டாது; எவ்விடத்துக்குப் போனாலும் நிழலைப் போலத் தொடரும். 2

600 கடிக்கலாம் சிலையை; விழுங்கலாம் நெருப்பை;
கடுவிடம் குழைத்துஇழைத்து எடுத்துக்
குடிக்கலாம்; இரும்பை அருந்தலாம்; கடும்பால்
கொள்ளலாம்; மருந்தின் நல் குணத்தால்
விடுக்கலாம் பகையை; அருணை நா யகர்பொன்
விழுங்கினுல் மிடற்றிலே பிடிக்கும்;
உடற்குளே கனலும் புகையும்,அவ் அளவோ?
உயிரையும் உளத்தையும் ஒறுக்கும்.

(பொருள்) மேலும் நான்முகன் சொல்லுவான்; கல்லைக் கடிக்கலாம்; நெருப்பை எடுத்து விழுங்கிவிடலாம்; விடத்தோடு கொல்லும்படியான பொருள்களைச் சேர்த்துக் குழைத்து எடுத்துச் சாப்பிடலாம்; இரும்பைப் புசிக்கலாம், கள்ளிப்பால் முதலியவற்றையும் குடிக்கலாம்; இவைகள் துன்பம் செய்யாமல் அவைகளாலே வரும் கெடுதிகளை நல்ல மருந்துகளால் குணப்படுத்திக் கொள்ளலாம்; அருணுசலேசரின் திரவியத்தைச் சாப்பிட்ட உடனே தொண்டையைப் பிடித்துக் கொள்ளும்; உடலுக்குள்ளே நெருப்பாகச் சுடும்; புகை உண்டாக்கும்; அவ்வளவுதான் செய்யுமோ என்ருல், அவர்கள் உயிரையும் கொன்று உள்ளத்தையும் கெடுக்கும். 3

601 முக்கணுன் பொருளைக் கவர்ந்த பேர்இருக்க;
முயன்றபேர், நினைந்தபேர் முதலாய்
அக்கணத்து அழிவர்; அவர்களும் இருக்க;
அடியவர் பொருள்கவர்ந்து அலைக்கத்
தக்கது நினைத்தார் கெடுவர்என்று உரைத்துச்
சத்தியம் பலபல சாற்றிச்
செக்கரும் கருக ஒளிவிடும் மணிப்பூண்
திசைமுகன் ஒருகதை செப்பும்.

(பொருள்) மூன்று கண்களையுடைய பரமசிவனது பொருள்களைத் திருடினவர்கள் படுகின்ற துன்பம் இப்படிப்பட்டது; அஃதிருக்கட்டும், அப்பொருளைத் திருடுகிறதற்கு முயற்சி செய்தவர்கள், திருட நினைத்தவர்கள், இவர்கள் அந்தக் கணத்திலே அழிவார்கள்; அவர்களும் இருக்கட்டும், சிவன் அடியார்களுடைய பொருளைத் திருடி அவர்களைத் துன்பப் படுத்த நினைத்த பேர்களும் கெடுவார்கள் என்று பலபல சத்தியத் தோடும் சொல்லிச், செவ்வானமும் கருகும்படி ஒளிவிடுகின்ற மணிகள் அழுத்திய அணிகலன்களைத் தரித்த நான்முகனுர் ஒரு கதை சொல்லத் தொடங்கினுர். 4

602 முன்னமே ஒருநாள், வடதிசைக்கு இறைவன்;
முழுமணிக் கங்கைநீர்த் துறைவன்;
இந்நிலத்து இழிந்த இந்திரன் அனையான்;
ஆண்தகை முருகவேள் நிகர்வான்;
மன்னவர் நிரைத்த மகுடகோ டிகளின்
வயிரநா யகங்களால் தேய்ந்த
பொன்அவிர் கழலான்; தருமமும் கழலான்;
புகழ்ப்பெயர் பிரதத்தன் என்பான்.

(பொருள்) நான்முகன் சொல்லுவான்; முற்காலத்தில் ஒரு நாள் வடநாட்டு அரசனுய் இருக்கிறவன்; விலை உயர்ந்த முத்துக்களுக்கு இருப்பிடமாகிய கங்கை நதித்துறை உடையவன்; தெய்வலோகத்தினின்று பூமியில் இறங்கிய தேவேந்திரன் போன்றவன்; ஆண்மைக் குணத்தில் சுப்பிரமணியருக்குச் சமான மானவன்; அரசர்கள் பணியும்போது அவர்களால் நிரை நிரையாகத் தாழ்த்தப்பட்ட கிரீட கோடிகளில் இழைக்கப்பட்ட உயர்ந்த வயிரங்களால் தேய்வு உற்ற பொன்னுல் செய்யப்பட்ட வீரகண்டையைத் தரித்தவன்; தருமம் என்பதை :இடைவிடாது செய்கிறவன்; கீர்த்தி பொருந்திய பிரதத்த மகராசன் என்னும் பெயரை உடையவன். ரு

603 காலன்நேர் விழியார் முகம்என விளங்கிக்
களங்குஉடைத்து ஒழுக்கிய மதிபோல்,
நீலமாம் மணிக்காம்பு இயைந்தவெண் கவிகை
நெடுநிலப் பரப்புஎலாம் நிகழ்த்துச்
சாலவே பணியா அரசர்கள் இவன்பொன்
சரணமே படிந்துஉயிர் பெறும்என்று
ஏலவே அழைக்கும் தருமதே வதைபோல்,
இரண்டுசா மரைகள்ஆர்த் திடவே,

(பொருள்) எமன் போலக் கொடுமை செய்கின்ற கண்களையுடைய பெண்கள் முகம்போல் விளங்கிக் களங்கத்தை உடைத்து ஒழுகவிட்ட சந்திரன்போல, நீல இரத்தினம் இழைத்து இருக்கின்ற காம்பை உடைய வெள்ளைக் குடை, நீண்ட சந்திரிகையைப் பூமியின் பரப்பு எல்லாம் நிகழ்த்தவும், மிகுந்த மரியாதையோடு பணியாத பகைவர்களாகிய அரசர்களைப் பாத்து, இந்த அரசனுடைய அழகிய பாதங்களை வணங்கி, உங்கள் உயிரை இறக்காமல் பெற்றுக்கொள்ளுங்கள் என்று பொருந்த அழைக்கும் தருமதேவதையைப் போல, இரண்டு சாமரங்கள் வீசவும், ௯

604 வருணமண் டலத்தில் புரவிபோல் கிளர்ந்த
மரகதக் குரகதம் வயங்க,
அருணமண் டலத்தை அளவிடும் கொடித்தேர்
அடவிகள் புடவியை அடைப்ப,
கிரணசிந் துரத்துப் புகர்முக மருப்பில்
கிம்புரிக் கதிர்திசை கிளர,
தரணிபர் நடுங்க, மந்திரி கணத்தோடு
எழுந்தனன் தண்டயாத் திரையே.

(பொருள்) வருண மண்டலத்தில் விளங்கும் குதிரைகள் போல் உயர்வாகிய மரகத நிறத்தையுடைய குதிரைகள் ஒளியுடன் விளங்கவும், சூரிய மண்டலத்தைத் தொடுகின்ற கொடிகள் கட்டிய தேர்க்காடுகள் பூமியை அடைக்கவும், கிரணம் பொருந்திய சிந்துரம் தீட்டிய புள்ளிகளையுடைய முகத்தையும், பூண் கட்டிய கொம்புகளையுடைய யானைகள் திசைகள் தோறும் விளங்கவும், பகை மன்னர் பயப்பட மந்திரி கூட்டத்தோடும் சேனைகளோடும் யாத்திரையாகப் பிரயாணப் பட்டான் பிரதத்த மாமன்னன். 7

605 அங்கர்புற்று ஏற, யவனர்வெற்பு அடைய,
அவந்தியர் வில்லின்நாண் கௌவ,
சங்கிலித் தொடக்காய் மற்றமண் டலிகர்
தம்இறை தாங்களே சுமக்க,
சிங்கஏறு எனவே சோழநாடு அணைவான்,
திருநதி கடந்து,தென் அருணைக்
கங்கைவாழ் சடையான் கோயிலிற் புகுந்தான்;
கங்கையும் காசியும் புரப்பான்.

(பொருள்) அங்கநாட்டு அரசர் பயந்து புற்றில் ஏறிக்கொள்ளவும், யவன நாட்டு அரசர் மலையில் ஒளித்துக்கொள்ளவும், அவந்தி நாட்டு அரசர் வில்லில் இருக்கின்ற நாணியைக் கவ்விக்கொள்ளவும், மற்ற நாட்டு அரசர்கள் சங்கிலி போலத் தொடர்ந்து நின்று தாங்கள் கட்டவேண்டிய கப்பங்களைத் தாங்களே சுமந்து வரவும், ஆண் சிங்கம் போலச் சோழநாட்டுக்குப் போகும்படி புறப்பட்டு, திருநதியைத் தாண்டி, அழகிய அருணாசலத்துக்கு வந்து, கங்கையைத் தரித்த சடையை உடைய பரமசிவனின் கோயிலில் புகுந்தான்; கங்கை நதியையும், காசி நகரையும் ஆளுகிற பிரதத்த மகராசன். 8

606 அரும்புஅவிழ் மலர்கொண்டு அருச்சனை புரிய,
அருணைநா யகர்திருக் கோயில்
விரும்பிஉள் புகுந்து பணியும்அவ் இடத்தில்,
விடத்தினும் கொடியகூர் விழியாள்,
இரும்பையும் உருக்கும் இசையினாள் ஒருத்தி,
இலங்குஇழை யாருடன் இறைபால்
கரும்புஎனும் மொழியால் பாடுதல் கேட்டான்;
கண்டனன் வளைத்தவேள் கரும்பை.

(பொருள்) பிரதத்த மகராசன் அரும்புகள் மலர்ந்த மலர்களைக் கொண்டு அருச்சனை செய்வதற்காக அருணாசலேசர் வீற்றிருக்கும் திருக்கோயிலுள் அன்போடு போய் வணக்கம் செய்யும்போது, அவ்விடத்தில் விடத்தினும் கொடுமை செய்யும் கூரிய கண்களை உடையவளும், இரும்பும் உருகும்படி செய்யும் இசைப் பயிற்சி உடையவளுமாகிய ஒரு தாசிப் பெண், ஒளிவிடும் அணிகலன்களை உடைய சில பெண்களோடு நின்று, சுவை நிறைந்த கரும்பின் இரசம் போன்ற மொழியினால் இறைவனைப் பாடுவதைக் கேட்டான். அக்கணத்தில் தான் மன்மதன் வளைத்த கரும்பு வில்லையும் கண்டான்; காமவிகாரம் கொண்டான். 9

607 அன்னமோ? கிளியோ? அமிர்தமோ? திருவோ?
அமிர்தம்அன்று அமரருக்கு அளித்த
வன்ன,மோ கினியோ? இரதியோ? பிரமன்
மனத்தினால் வகுத்த,மே னகையோ?
என்ன,மோ கமதாய்த் தனதுநாட்டி னில்கொண்டு
ஏகுவான் நினைந்தனன்; அதற்கு
முன்னமே குரங்கு முகமதாய் இருந்தான்;
முறுவலா யினதுஎவர் முகமும்.

(பொருள்) அப் பிரதத்த மகராசன் அத் தாசிப் பெண்ணைப் பார்த்து, "இவள் அன்னமோ? கிளியோ? தேவாமிர்தமோ? இலக்குமியோ? அசுரரைக் கொன்று அமிர்தத்தை முற்காலத்தில் தேவருக்குக் கொடுத்த அழகிய மோகினியோ? இரதி தேவியோ? நான்முகன் மனத்தினால் சிருட்டித்த மேனகையோ?" என்று நினைத்து, மோகத்தோடு தன்னுடைய நாட்டுக்கு அப்பெண்ணைக் கொண்டு போவதற்கு நினைத்தான்; அந் நினைப்பு உண்டாவதற்கு முன்னமே, குரங்கு முகத்தை உடையவனாய் இருந்தான்; அதைக் கண்டு எல்லாருடைய முகத்திலும் நகைப்பு உண்டாயிற்று. 10

608 மந்திரிக் கிழவர் அரசனை வினவி,
மன்னவா! நினைந்தவாறு அதனுல்
வந்தஇத் துயரம் தவிர்ந்திட, மலைமேல்
மருந்தினைப் பணிஎன, அவனும்
சிந்துரக் குவடும் கவனவாம் பரியும்,
செழுமணிச் சிவிகையும், தேரும்,
சந்தனம் அணியும் தனத்தினுர் பலரும்
தமனியக் கோயின்முன் விடுத்தான்.

(பொருள்) மந்திரிமார்கள் பிரதத்த மகராசனைப் பார்த்து, குரங்கு முகம் வந்ததற்குக் காரணம் கேட்டு அறிந்து கொண்டு, அரசனே! தீமையாகிய உமது நினைப்பினுல் •அடைந்த இத்துன்பம் நீங்கும்படி, மலைமேல் மருந்தாகிய அருணசலேசுரரை வணங்கு என்று சொல்ல, அவ் அரசனும் மலையை ஒத்த யானைகளையும், வேகமாய்த் தாவுகின்ற குதிரைகளையும், நல்ல இரத்தினங்கள் இழைத்த சிவிகைகளையும், தேர்களையும், சந்தனக் குழம்பைப் பூசுகின்ற தனங்களை உடைய பல பெண்களையும், பொன் ஒளி பொருத்திய அக் கோயிலுக்கு முன் காணிக்கையாகக் கொடுத்து விட்'டான். 11

609 பன்னரும் அனந்த பூசனை புரிந்தான்;
பரமனும் அவற்குஅருள் புரிந்தான்;
கின்னரர் மொழியால் விருப்பினுல் அடைந்த
கிலேசவா னரமுகம் ஒழிந்தான்;
நல்நர முகம்பெற்று இறையுநாடு அணைந்தான்;
ஆதலால், அரன்பொருள் கவர
உன்னிய பாவம், பதின்மடங்கு அரும்பொன்
உதவினுல் தவிரும்என்று உரைத்தான்.

(பொருள்) பிரதத்த மகராசன் பரமசிவனுக்குச் சொல்லுதற்கு அரிய பல அருமையான பூசைகள் செய்ய, அப்பொழுது பரமசிவனும் அவ் அரசனுக்குக் கருணை புரிந்தார்; வீணையின் இசை போலும் பேச்சை உடைய பெண்மேல் கொண்ட ஆசையினுல் அடைந்த துன்பம் பொருந்திய குரங்கு முகத்தை ஒழித்தான்; நல்ல மானிட முகத்தை அடைந்து அவ் அரசன் தன்னுடைய நாட்டுக்குப் போய்ச் சேர்ந்தான். ஆகையால், அருணசலேசருடைய பொருளைத் திருட நினைத்ததனுல் உண்டாகிய பாவம், அப் பொருளுக்குப் பதின் மடங்கு திரவியம் கொடுத்தால் தீரும் என்று சொன்னுர் நான்முகனுர். 12

610 மாதவனே! அருணகிரி வளம்இதுதான்
எனத்திருவாய் மலர்ந்தான்; அந்தப்
போதனைஅங்கு அடிபணிந்து,உன் போதனையால்
மகிழ்ந்தனம்;இப் புவியின் மீதே
கோதம்உடன் அறிந்துசெய்த பவம்தவிரும்
கதையினையும் கூறுக என்றான்;
முதுஅறிவாய் இன்நாலு முகத்தினும்ஆ
யிரம்முகமாய் மொழியல் உற்றான்.

(பொருள்) பெருமையாகிய தவத்தை உடைய சனகரிஷியே? அருணாசலத்தினது வளம் இதுதான் என்று சொன்னார். அந்நான்முகனை அவ் இடத்தில் சனக ரிஷி வணக்கம் செய்து, உம்முடைய சிறந்த உபதேசத்தினாலே ஆனந்தம் அடைந்தேன்; இவ் உலகில் குற்றமாக அறிந்து செய்த பாவம் நீங்கும்படியான கதையையும் அருள் செய்ய வேண்டும் எனப் பேர் அறிவுகொண்ட நான்முகனார் தம்முடைய வாய் நான்கும் ஆயிரம் வாயாகச் சொல்லத் தொடங்கினார். 13

பதினோராவது பிரதத்த ராசன் சருக்கம்

முற்றிற்று.

## 12. பாவம் தீர்த்த சருக்கம்

611 வாக்கினுல், வடிவினுல், மனத்தி னுல்,பவம்
தாக்கினுர், அருணைமா சயிலம் நோக்கினுல்
நீக்கினுர் என்பது நிகழ்த்தி, நான்மறை
தேக்கினுன் சிலகதை செப்பல் ஆயினுன்.

(பொருள்) வாக்கினுலும், உடலினுலும், மனத்தினுலும், கெட்ட விஷயங்களைச் சொல்லியும், செய்தும், நினைத்தும் பாவத்தை அடைந்தவர்கள், திருவண்ணுமலையைத் தரிசனம் செய்தால், அப்பொழுதே தங்கள் பாவத்தை நீக்குவார்கள் என்று சொல்லி, நான்கு வேதங்களையும் தன் இடத்திலுடைய நான்முகன் சில கதையைச் சொல்லத் தொடங்கினுர். 1

612 எம்பெரிய சபைஇடத்தில் இருநான்கு
வசுக்களும்வந் திருந்தார் முன்னே;
தம்பெரிய தவத்தினையும் புகழினையும்
வியந்துஉரைத்த தகைமை நோக்கி,
கும்பமுனி முதலானேர் இடையில்உமை
வியந்துஉரைத்த கொடுமை யாலே,
அம்புவியில் இழைத்ததவம் அனைத்தினையும்
அவம்ஆக்கி அகற்றும் என்றேன்.

(பொருள்) என்னுடைய பெரிய சபையில் அஷ்டவசுக்களும் முன் ஒரு காலத்தில் வந்திருந்தார்கள்; அப்பொழுது அவர்கள் தங்களுடைய தவத்தின் பெருமையையும் அதனுல் வந்த புகழையும் கொண்டாடி மகிழ்ந்தார்கள். அதைப் பார்த்து, அகத்தியர் முதலான ரிஷிகள் மத்தியில் உங்கள் பெருமையை நீங்களே எடுத்துச்சொல்லிச் செய்த தற்புகழ்ச்சியானது, நீங்கள் செய்த தவம் எல்லாம் அவம் ஆகச் செய்து விடும் என்று சொன்னேன். 2

613 உற்றபெரும் தவத்தினையும், தமதுஅறத்தின்
நலத்தினையும் உரைத்த பேரும்,
மற்றொருவர் தமைஇகழ்ந்த வரும்,துயரக்
கடல்மூழ்கி மறிவர் என்றேன்;
சிற்றறிவா கியவசுக்கள் அனைவர்களும்
நடுங்கி,இது தீரும் காலம்
சொற்றருளும் எனஉரைத்தார்; அரன்அருளால்
தீரும்உங்கள் துயர்தான் என்றேன்.

(பொருள்) பெருமை வாய்ந்த தம்முடைய தவத்தையும், தாங்கள் செய்த தருமத்தையும் சொன்னவர்களும், மற்றொருவரை இகழ்ந்து பேசினவர்களும், துக்கக் கடலில் முழுகி மறிபட்டுக் கிடப்பார்கள் என்றேன். சிற்றறிவுடைய வசுக்களும், அவ்வார்த்தையைக் கேட்டு நடுங்கி, இச்சாபம் எக்காலத்தில் தீரும் அருள் செய்ய வேண்டும் என்று கேட்டார்கள்; பரமசிவன் கருணை உங்கட்கு என்றைக்குக் கிடைக்குமோ, அன்றைக்குத் தீரும் என்றேன். 3

614 சொல்லுதலும் வசுக்கள்எலாம் எனைஅகன்று,
நெடியகங்கைத் துறையில் ஏகி,
எல்லைஇல்லா நெடும்காலம் இறையைநினைந்து
அரியதவம் இயற்றி னார்கள்;
வல்லிபங்கன் ஒருநாளில் மழவிடைமேல்
அடைந்து;தவம் வரம்ஏது என்றான்;
அல்லிமல ரவன்கொடுத்த கொடும்சாபக்
கடலில்எடுத்து அருளுக என்றார்.

(பொருள்) அப்படிச் சொன்ன உடன் வசுக்கள் எல்லோரும் என் சபையைவிட்டு நெடும் தூரம் செல்லுகின்ற கங்கா நதியின் ஒருதுறையில் போய், அளவில்லாத நெடுங் காலம் பரமசிவனை நினைந்து அரிதாகிய தவத்தைச் செய்தார்கள். பார்வதியை இடப்பாகத்தில் கொண்டு இருக்கும் எமது பரமசிவன் ஒருநாள் இளமையான இடபவாகனத்தில் எழுந்து அருளி வந்து, நாம் உங்களுக்குக் கொடுக்க வேண்டிய வரம் என்ன என்று கேட்டு அருள் செய்தார். அவ்வசுக்கள் இதழினையுடைய தாமரை மலரில் இருக்கின்ற நான்முகன் கொடுத்த கொடிய சாபமாகிய கடலினின்றும் எங்களை எடுத்து அருளவேண்டும் என்றார்கள். 4

615 கருணைமுகில் முகம்மலர்ந்து, வசுக்களுடன்
உமதுபவம் கடக்க வேண்டில்,
தரணியிலே ஒருநகரம் தலேச்சுரம்என்று
இலங்கும்;அந்தத் தலத்தின் மீதே
அருணகிரி எனும்மலையாய் இருக்கும்;அந்தப்
பதிஅணுகி, அசலம் சூழ்ந்த
வருணதிசை தொடங்கி,எட்டுத் திசைகளிலும்
இருந்துதவம் இயற்றும் என்றார்.

(பொருள்) அருள் மழை பொழிகின்ற மேகமாகிய பரமசிவன் திருமுகம் மலர்ந்து, அந்த எட்டு வசுக்களைப் பார்த்து, உங்களுடைய பாவத்தை நீங்கள் கடக்க வேண்டினால், பூமியில் தலேச்சுரம் என்று சொல்லப்பட்ட ஒரு சிறந்த நகர் விளங்குகிறது; அந்நகரில் அருணாசலம் என்று ஒரு மலை உண்டு. அத்தலத்தை அடைந்து அம்மலையைச் சூழ்ந்த கிழக்குத் திக்குத் தொடங்கி, எட்டுத் திக்குகளிலும் இருந்து தவம் செய்யுங்கள் என்று அருளிச் செய்தார். 5

616 அன்னவயல் அருணையில்சீர் அரியதவம்
இயற்றிடும்,அவ் வளவே, உங்கள்
முன்னர்அழல் கிரியும்எட்டு முகம்ஆக
விளங்கிஅட்ட மூர்த்தி ஆகும்;
மன்னும்உங்கள் அரும்பவமும் தவிரும்,என
உரைத்து,வெள்ளி மலையில் சேர்ந்தான்,
தன்னைஅடைந் தவர்கள்எல்லாம் தனைப்போல
இருக்கவரம் தருகு வானே.

(பொருள்) அன்னப் பறவைகள் தங்கிய வயல் சூழ்ந்த அருணாசலத்துக்குப் போய் நீங்கள் மேன்மையாகிய அரிய தவத்தைச் செய்யுங்கள்; அப்படிச் செய்த அளவிலே, அக்கினி வடிவமாய் விளங்கிய ஒப்பு அற்ற அம்மலையானது, எட்டு முகம் உள்ள வடிவத்தோடு உங்களுக்கு முன் வந்து காட்சி அளிக்கும். அப்போது நிலைபெற்ற உங்களுடைய பாவமும் நீங்கும் என்று திருவாய் மலர்ந்து, கைலாயத்துக்கு எழுந்தருளினார், தம் இடத்தில் அடைந்தவர்கள் எல்லாரையும் தம்மைப் போல உருவத்தை அடைந்திருக்க வரம் அருளிச் செய்யும் பரமசிவன், 6

617 முந்தஅசு ரரையும்அவர் புரத்தினையும்
எரித்தபிரான் மொழிந்த வாறே,
அந்தவசு அனைவரும்சென்று, அருணையிலே
அரியதவம் ஆற்றி னார்கள்;
இந்தவசு மதிதழைக்க அழல்கிரிஎட்டு
உருவாகி இருந்தது அங்கே;
தந்தவசு நிலைபுகழ்ந்த கொடும்சாபக்
கிரிகள்எலாம் தள்ளி னார்கள்.

(பொருள்) முன்பு அசுரர்களையும், அவர்கள் வசித்துக் கொண்டு இருந்த திரிபுரங்களையும், நகைத்து எரித்த பரமசிவன் சொன்னபடி, அவ் எட்டு வசுக்களும் போய் அருணாசலத்தில் அருமையான தவம் செய்தார்கள்; ஆங்கே இப் பூமிதழைக்கும்படி அக்கினி மலை எட்டு முகமாய் விளங்கி இருந்தன; முன்னே தங்களுடைய தவத்தைப் புகழ்ந்து சொல்லியதனால் வந்த கொடிய சாபம் என்று சொல்லப்பட்ட மலையைத் தாண்டி விட்டார்கள். 7

618 பூதரம்சூழ் திசைகள்எலாம் இருந்துஅட்ட
மூர்த்திதனைப் பூசித் தார்கள்;
ஆதலினால் பழையபடி தமதுபத
விகளைஅடைந்து, அருள்பெற் றார்கள்;
ஏதம்அறும் படிக்குஅரிய மறைப்பயன்எட்டு
உருவுஆகி இருந்த போதும்,
சீதரனும் பதம்,கிரமத்து உடன்அறியான்;
முடி,எனக்கும் தெரிந்தது இன்றே.

(பொருள்) அந்த மலையைச் சூழ்ந்த எட்டுத் திக்குகளிலும் இருந்து, வசுக்கள் அஷ்ட மூர்த்தமாகிய அருணாசலேசுவரரைப் பூசித்தபடியினால் பழையபடியே தமது பதவிகளைப் பெற்றுக்கொண்டு, பரமசிவனது கருணையையும் பெற்றுக் கொண்டார்கள்; குற்றம் நீங்கும்படி அருமையான வேதப் பொருளாகிய அப் பரமசிவன் எட்டு முகமாய் இருந்த போதும், விட்டுணுவும், திருவடியைக் கிரமத்துடன் அறியாமல் போனார், இன்றளவும் எனக்கு முடி தெரியவில்லை, 8

619 சண்முகனை அளித்தஐந்து முகத்தவன்எண்
வசுக்கள்செயும் தவத்தி ஞலே;
எண்முகமாய் இருந்ததுகண்டு, ஒருமுகமாய்
இமையவர்வாழ்த்து எடுத்தார் என்று,
தண்முகம்நான்கு உடையபிரான் சனகமுனிக்கு
உரைத்துஅருளிச், சயிலத்து ஊடே
பண்முகயாழ் அனையமொழித் திலோத்தமைசேர்
கதையினையும் பகரல் உற்முன்.

(பொருள்) ஆறுமுகம் உள்ள சுப்பிரமணியரைப் பெற்ற ஐந்து முகங்களையுடைய பரமசிவன் எட்டு வசுக்களும் செய்த தபோபலத்தினுல் எட்டு முகமாய்இருந்ததைப்பார்த்து தேவர்கள் எல்லாம் ஒன்ருய்க் கூடி வணங்கிப் பல்லாண்டு கூறிஞர்கள் என்று கருணை பொருந்திய நான்கு முகங்களையுடைய நான்முகன் சனகமுனிக்குச் சொல்லி, அத்திருமலையின், யாழின் இசை போன்ற சொல்லை உடைய திலோத்தமை வந்தடைந்த கதையையும் சொல்லத் தொடங்கிஞர் 9

620 தேவர்கோன் முன்னம்என் இடத்தில் சேர்ந்து,தன்
பாவன மானதன் பதவி வேண்டிய
யாவரும், அருந்தவம் இயற்றி ஞர்;அதற்கு
ஆவது செய்என அறைந்து போயிஞன்.

(பொருள்) நான்முகன் சொல்லுவார்: இந்திரன் முன்னே என் இடத்தில் வந்து, தன்னுடைய பரிசுத்தமான பதவியைச் சிந்தித்து, உலகத்திலுள்ள எல்லாரும் அருமையான தவத்தைச் செய்கிருர்கள்; அத்தவம் நிறைவேருதபடி ஏதாவது ஒரு விக்கினம் செய்ய வேண்டும் என்று சொல்லி விட்டுப் போஞன். 10

621 இந்திரன் போனபின், இயக்க மங்கையர்,
அந்தர மங்கையர், அரவ நாட்டவர்,
சுந்தரக் கடல்புவித் தோகை மார்,வரை
மந்தரம் முலேச்சியர் அழகு வாரியே,

(பொருள்) இந்திரன் இவ்வாறு சொல்லிவிட்டுப் போனபிறகு, இயக்க உலகப் பெண்கள், தேவர் உலகப் பெண்கள், நாகர் உலகப் பெண்கள், அழகு அமைந்த கடல் சூழ்ந்த பூஉலகப் பெண்கள், மந்தரகிரி போன்ற முலேகளேயுடைய வரையரமகளிர், ஆகிய இவர்களுடைய அழகுகளே எடுத்துக் கொண்டு. 11

622 வகுத்தனன் திலோத்தமை என்னும் வஞ்சியை;
உகுத்தனன் வலியை;நன் மதியை ஓட்டினேன்;
மிகுத்ததுஓர் விஞ்சையில் புவியின் வேட்டுவன்
அகத்துஉடல் அழித்துஉடல் அளிப்பது என்னவே,

(பொருள்) குளவி தன்னிடத்து ஒரு சாமர்த்திய விசேடத்தினுல், இவ் உலகத்தில் புழுவின் உடலேக் கெடுத்து, அதற்கு வேறு ஒரு உடலேக் கொடுப்பது போலத் திலோத்தமை என்னும் பெண்ணே உண்டாக்கினேன்; அப்பொழுதே அவள் மேற்கொண்ட ஆசையால் என்னுடைய வல்லமையை இழந்தேன்; ஞானத்தில் செல்லுகின்ற என்னுடைய புத்தியையும் துரத்தி விட்டேன். 12

623 மன்மதன் கணையினுல் மயங்கி வாடும்என்
தன்மையை அறிந்து,நான் தனக்குத் தாதைஎன்று
என்மனம் பொருந்திலாது, என்கை உருமல்என்
முன்பினில் ஒளிக்க,நான் முகமும் தேடினேன்.

(பொருள்) மன்மதன் பாணத்தினுலே மயக்கம் அடைந்து வாடுகின்ற என்னுடைய இயல்பை அறிந்து, நான் தனக்குத் தந்தை என்று என் கருத்துக்கு ஒவ்வாதவளாகியும், நான் பிடிக்கும் போது என் கைக்கு அகப்படாதவளாகியும், எனக்கு முன் நின்றும் ஓர் இடத்தில் நான் அறியாதபடி ஒளித்துக் கொள்ள, நான்கு பக்கங்களிலும் அவளேத் தேடினேன். 13

624 கன்னிமா ஞகச் சென்ருள்;
கலையதாய்த் தொடர்ந்தேன்; பேட்டு
வன்னியாய்ப் பறந்தாள்; சேவல்
வடிவமாய்த் தொடர்ந்தேன்; மங்கை
பின்னைஓர் கதியும் காணுள்;
பிறங்கலாம் அருணை நாதன்
தன்னையே தூரக் கண்டாள்;
"சரணம்"என்று உரைத்துச் சார்ந்தாள்.

(பொருள்) நான் தேடி அவளைக் கண்டு பிடிக்கும்போது, பிடிப்பதற்கு முன்னே அந்தக் கன்னியாகிய திலோத்தமை பெண் மானுகி ஓடிஞள்; நான் கலைமானுகத் தொடர்ந்தேன்; அதன் பின்பு அவள் பெண் கிளியாய்ப் பறந்தாள், நான் ஆண் கிளியாய்ப் பறந்து தொடர்ந்தேன்; அத்திலோத்தமை பிறகு என் கையில் அகப்படாமல் இருக்கிறதற்கு வேறு ஒரு கதியும் காணுமல் வருந்தும் போது, மலை உருவாகிய அருணுசலேசரைச் சிறிது தூரத்தில் கண்டு, "நீரே தஞ்சம்" என்று சொல்லி அடைந்தாள். 14

625 மாயமால் விடையின் பாகா!
வடிவுஇலா இடையின் பாகா!
காய்அழல் ஆன மெய்யா!
கானகத்து ஆடும் ஐயா!
ஆயும்ஆ ரணத்தின் சோதி!
அடைக்கலம் என்ருள்; ஐயன்
சேயிள மழலை போலத்
திருச்செவி சாற்றி ஞளே.

(பொருள்) மாயம் செய்கின்ற விட்டுணுவாகிய இடபத்தின் மேல் வருகின்றவரே! தோற்ருத இடையினை உடைய பார்வதியைப் பாகத்தில் வைத்துக் கொண்டிருப்பவரே! கொதிக்கும் அக்கினி மயமான வடிவை உடையவரே! திருவாலங்காட்டினிடத்தில் நடனம் செய்கின்ற பரமசிவனே! ஆராய்ந்து தேடுகிற வேதத்தை உடைய சோதியே! நான் அடைக்கலம் என்று சகலரையும் ஆளுகின்ற சிவன் திருச்செவியில் செல்லும்படி, குழந்தையின் இளமையாகிய குதலைச் சொல்லைப் போலச் சொன்ஞள். 15

626 முருகுஅலர்க் குழலி னாள்தன்
முறைஇடும் முறைக்கு,என் ஐயன்
திருஉரு அனைத்தும் தூய
செவிகளாய் இருந்த போது,
விரைவின்,மால் வரையைக் கீறி,
வேட்டுவன் ஆகி நாலு
சுருதியும் ஞமலி யாகத்
தோன்றினன் தோகை பாகன்.

(பொருள்) வாசனை அமைந்த மலர்மாலையை அணிந்த கூந்தலையுடைய திலோத்தமை முறை இடுதலுக்குப் பரமசிவனது அழகிய உருவம் எல்லாம் செவிகளாய் இருந்தன; அதனால் சீக்கிரத்தில் மலையைக் கீறி, அதினின்றும் தாம் வேடவடிவமாகவும், பார்வதி வேடச்சி உருவமாகவும், நாலு வேதங்களும் நாய்களாகவும் தோன்றினார் பார்வதியை இடது பாகத்தில் வைத்துக்கொண்ட பரமசிவன். 16

627 சூடகச் செங்கை பாகன்
சிலையொடு தோன்றும் போதில்
வாடிய மருங்கு லாள்மேல்
மயக்கமும் வருத்தம் தீர்ந்தேன்;
ஆடிய பெருமான் நம்மை
முனியும்என்று அஞ்சித் தாழ்ந்தேன்;
வேடனைப் பறவை கண்டால்
வெருவுமோ வெருவு றாதோ?.

(பொருள்) வளையல் அணிந்த செந்தாமரை மலர்போன்ற கையை உடைய பார்வதியை ஒரு பக்கத்திலே வைத்துக் கொண்டு இருக்கிற பரமசிவன் வேடனாகி வில்லைக் கையில் ஏந்திக்கொண்டு தோன்றியபோது, முன்னே நடனம் ஆடிய பரமசிவன் என்னைக் கோபித்துக் கொல்வார் என்று பயந்து, வளைகின்ற இடையினை உடைய திலோத்தமை மேல் உண்டாகிய மையலையும், அதில் உண்டாகிய வருத்தத்தையும் தீர்ந்து, பரமசிவனை வணங்கினேன்; வேடனைப் பறவை கண்டால் பயப்படுமோ பயப்படாதோ? 17

628 "வெற்புஎனும் முலையாள் தன்னை
விதித்து,நீ விரும்பும் தீமை
கற்பகோ டியினும் தீராது;
ஆயினும், கருணை யாம்இத்
தற்பர மலைகண் டாயே,
ஆதலால் தவிர்த்தோம் போ"என்று,
அற்புதன் மொழிந்து மீளப்
புகுந்தனன் அருணை வெற்பில்.

(பொருள்) "மலைக்கு நிகராகிய தனத்தை உடைய திலோத்தமையைப் படைத்து, நீயே விரும்பினதால் உண்டாகிய பாவம், கற்பகோடி காலம் மட்டும் தீரமாட்டாது. ஆனாலும், அருள் உருவமாகியும், தானே பரமாகியும் உள்ள இம்மலையைத் தரிசித்தாய்; ஆதலால், அப்படிப்பட்ட பாவத்தைத் தீர்த்து விட்டோம்; உன் இடத்திற்குப்போ" என்று திருவாய் மலர்ந்து, அம்மலைக்குள் ஞானவடிவம் ஆகிய பரசிவன் மறைந்து விட்டார். 18

629 தன்னைஅறி யாமல்வினை சாரும்உடல் தானும்,
தென்அருணை சேரில்அது தீருவது திண்ணம்;
இன்னல்வினை அற்று,அதனில் எண்ணியது பெற்றார்
முன்னம்உளர்; என்றுஅயன் முனிக்குமொழி கின்றான்.

(பொருள்) ஒருவனுக்குப் புத்தியின்மையினால் வந்த பாவம், அவன் அழகு பொருந்திய அருணாசலத்தை அடைந்தால் தீரும்; அது நிச்சயமே. முற்காலத்திலும், அநேகர் தங்களுடைய வினையை நீக்கி, அத்தலத்தில் தாங்கள் நினைத்தவரம் பெற்றுக் கொண்டார்கள் என்று நான்முகனார் சனகமுனிக்கு ஒரு கதை சொல்லுகிறார். 19

630 கற்பமுடி வாய்இருள் பெயர்ந்துபுலர் காலத்து,
அற்பஇருள் நின்றதும்உன் னுன்இறையி னுலே;
சொற்பரவை மாயன்உண ராதுதுயில் கொள்ளச்
சிற்பரம யோகியர்கள் செம்மலை நினைந்தார்.

(பொருள்) முற்காலத்தில் பரமசிவனுடைய திருவிளையாட்டினுல் கற்பகாலம் முடிவு உற்று, பெரிதாகிய அந்தகாரம் நீங்கி வெளிச்சம் உண்டாகிற காலத்தில், அவ் அந்த காரத்தில் கொஞ்சம் நின்ற அக் காலத்தில் இதனை அறியாமல் விட்டுணு கடலில் நித்திரை செய்து கொண்டு இருக்க, மேன்மையான சின்மயமாகிய யோகியர்கள் பரமசிவனை நினைத்தார்கள். 20

631 அத்தன்,அடி யார்கள்தமது ஆணவம் அறுக்கும்
சுத்தன்அழல் ஆனதுஒரு சோதிவடிவு ஆனுன்;
எத்தலமும் எத்திசையும் எங்கும்வெளி ஆனுன்,
உய்த்தபொறி தம்மில்உள வாயஉலகு எல்லாம்.

(பொருள்) எல்லாச் சீவராசிகளுக்கும் தந்தையாகியும், தமது அடியார்களுடைய ஆணவமலத்தை அறவே கெடுக்கின்ற சுத்தராகியும் இருக்கின்ற பரமசிவன் நெருப்பு மயம் ஆகிய ஒரு ஒளி வடிவத்தை அடைந்தார். எத்தலங்களிலும், எத்திக்குகளிலும், மற்ற எவ் இடங்களிலும் ஆகாயமே தமக்கு உருவாகிய அப் பரமசிவனுர், அப்போது சிந்திய பொறி களாலே உலகம் எல்லாம் உண்டாயின. 21

632 ஊழிமுடி வாய்இருள் புலர்ந்தும்உண ராதே,
ஆழிமிசை யில்துயிலும் அச்சுதனை எய்தி,
வாழிஎன யோகியர் எழுப்புதலும், மாயன்
பாழியிலும் நின்றுஅதி பயத்துடன் எழுந்தான்.

(பொருள்) ஊழிக்காலம் முடிந்து, பெரியதாகிய அந்தகாரம் நீங்கியும் அறியாமல் கடலில் பாம்புப் படுக்கையின்மீது நித்திரை செய்யும் விட்டுணுவினிடத்தில் வந்து, வாழி என்று சொல்லி யோகியர்கள் எழுப்புதலும், அவ்விட்டுணு பாம்புப் படுக்கையினின்றும் அதிக அச்சத்துடன் எழுந்திருந்தார். 22

633 வையகம் அளிக்கமல ரோனைஉத வாதே,
பைஅரவின் மிக்கதுயில் கொண்டபரி சாலே,
வெய்யபுன் வினைத்தொழில் விளைத்தனன்; எனத்தன்
ஐஉணர்வு மிஞ்சி,எனது ஐயனை நினைந்தான்.

(பொருள்) உலகம் உண்டாக்கும் பொருட்டு நான்முகனைச் சிருட்டிக்காமல், படத்தை உடைய பாம்பின் மேல் நித்திரை செய்த தன்மையினால் வெம்மையாகிய தீவினையைச் சம்பாதித்துக் கொண்டேன் என்று ஐம்பொறிகளும் கலங்கி மிகவும் பயந்தவராய் என்னுடைய ஆண்டவனாகிய அருணசலேசுவரரை நினைத்தார். 23

634 அன்பர்கரு தில்,கடுமை யாகிஎதிர் வந்தே
துன்பம்அகல் விக்கும்அது தூயதொழில் ஆனான்,
வன்படிக வெற்புமிசை மன்னுசுடர் போலே,
மின்படரும் மேனியுடன் வெள்விடையில் வந்தான்.

(பொருள்) அடியார்கள் நினைத்தால் விரைந்து தானே அவர்களுக்கு எதிராகத் தோன்றி, அவர்களுடைய துன்பங்களை நீக்குவதே தமக்குத் தூய்மையான தொழிலாகக் கொண்ட பரமசிவன், வலிமையாகிய படிகமலை மேல் விளங்கும் சோதிபோல வெண்மையாகிய இடபத்தின் மேல் மின்போன்ற நிறத்தோடும் எழுந்தருளி வந்தார், 24

635 பொருக்குஎன எழுந்து,அடி பணிந்து,அருள் புகழ்ந்தே
அருக்கிய முதல்புரி அருச்சனையி னாலே,
"உருக்கிஎன் வினைத்தொடர் ஒழித்துஅருள்தி" என்றான்;
எருக்குஅணிகு வான்இவை எடுத்துமொழி கின்றான்.

(பொருள்) அப்படிப் பரமசிவன் இடபவாகனத்தில் ஏறிவந்த உடனே, விட்டுணு திடுக்கிட்டு எழுந்து திருவடிக் கமலங்கட்கு வணக்கம் செய்து, அவருடைய மேலான கருணையைப் புகழ்ந்து, அவருக்கு அருக்கியம் முதலிய சோடசோபசாரங்களோடும், கூடிய பூசைகளினாலே பரமசிவனுடைய திருவுளத்தை இளகச் செய்து, "எனக்கு நித்திரையினால் வந்த வினை நீக்கி அருள் செய்ய வேண்டும்" என்றார். எருக்கம்பூமாலையைத் தரிக்கும் பரமசிவன் இவைகளைச் சொல்லத் தொடங்கினார். 25

636 வாசிமக மேமுதல் மகம்பலசெய் தாலும்,
பாசம்அக லாதவினை பற்றுஅறுதல் எண்ணில்,
தேசுமிகு தென்திசை செறிந்து,அருணை தன்னில்
பூசைபுரி; விட்டுவினை போகும்உனை என்றான்.

(பொருள்) ஒருவன் தனக்கு உண்டான பாசவினையை நீக்கும்படி நினைத்து அசுவமேதம் முதலிய பல யாகங்களைச் செய்தாலும், அது போகாது; ஆகையால், அது நீங்க வேண்டுமானால் ஒளிமயம் ஆகிய தெற்குத் திசையில் விளங்கும் அருணாசலத்திற்குப் போய் பூசை செய்தால் உன்னை விட்டு நீங்கும் என்றார் பரமசிவனார். 26

637 நாறுபொழில் அந்நகரும் நாமும்வடிவு ஒன்றே;
வேறுஅல; அதன்பெருமை வேதம்உண ராதால்;
நீறுபுனை யோகியர்கள் நீவிர்பலர் தொண்ணூற்று
ஆறுபிர மாஅதில் அருச்சனை புரிந்தீர்.

(பொருள்) வாசனையுடைய சோலைகள் சூழ்ந்த அவ் அருணாசலத்துக்கும் எனக்கும் வடிவம் ஒன்றுதான், பேதம் அன்று; அவ் அருணாசலத்தின் பெருமையை வேதங்களும் கூட அறியமாட்டா; திருநீறு அணிந்த யோகியர்களும், விட்டுணுக்களாகிய நீங்கள் பலரும், தொண்ணூற்று ஆறு பிரமர்களும் அந்நகரில் பூசை செய்தீர்கள், 27

638 முற்றுஇழை உரோகிணி முலைக்குஇடையின் மூழ்கா
மற்றஇரு பத்துஅறுவர் வாழ்வையும் மறந்தான்,
கற்றைமதி தக்கன்உடல் கன்றுஉறச் சபித்தான்;
அற்றமதி அப்பதியில் அத்துயர் ஒழிந்தான்.

(பொருள்) சந்திரன், நல்ல வேலைப்பாடு அமைந்த அணிகலன்களையுடைய உரோகிணி தனங்களின் போகத்தை விரும்பி அதில் முழுகினவனாய், மற்றை இருபத்து ஆறு நாயகிகளுடைய போக வாழ்வுகளையும் மறந்துவிட, அதை அவர்களின் தந்தையாகிய தக்கன் கேள்விப்பட்டு, எல்லா மனைவிகளிடத்தும் விருப்பம் வையாமல் ஒருத்தி மேல் மட்டும் வைத்ததனால், அவன் உடல் குன்றிப்போகக் கடவது என்று சபித்தான்; அச் சாபத்தை அடைந்த சந்திரன் அவ் அருணாசலத்தில் வந்து அத்துன்பத்தை நீக்கிக் கொண்டான். 28

639 நினைப்புஅளவில் முத்திதரும் நீள்நகர திற்போய்
மனக்குறை தவிர்த்திடுதி என்று,இறை மறைந்தான்;
அனல்கிரியை நாடி,அரி அத்திசையில் நண்ணிச்
சுனைக்கமல வாசமிகு சோணகிரி கண்டான்.

(பொருள்) நினைத்த மாத்திரத்தில் முத்தியைக் கொடுக்கும் அருணாசலம் என்னும் அந் நகருக்குப் போய் மனக்குறையை நீக்கிக் கொள் என்று பரமசிவன் மறைந்தார்; விட்டுணு அக்கினி வடிவாகிய மலையைத் தியானம் செய்து, அது விளங்கும் தென் திசையை அடைந்து, சுனையில் இருக்கும் தாமரைப் பூவின் வாசனை மிகுந்த அச் சோணாசலத்தைக் கண்டார். 29

640 ஈசர்வடி வானமலை கண்டு,இனிது இறைஞ்சி,
தேசுமிகு நன்னகர் செறிந்து, மகிழ்வாகி,
வாசவ தடத்துஇடை படிந்து,வலம் ஆகிப்
பூசனை புரிந்து,வினை போய்அமலன் ஆனான்.

(பொருள்) மலைவடிவமாகிய பரமசிவனை வணங்கி அன்போடு பணிந்து ஒளி அமைந்த அந் நகரத்திற்குப் போய்க் கரிப்படைந்து இந்திர தீர்த்தத்தில் முழுகி மலையை வலம் வந்து அனேககாலம் பூசை செய்து கொண்டுவரப், பிறகு தம்முடைய வினையை நீக்கி விட்டுணுமூர்த்தி தூய்மையானவர் ஆனார். 30

641 மேவிஅரு ணைப்பதியில் மிக்கபுகழ் மாயன்
பாவம்அகல் வித்துஇடு பலத்தினை உரைத்து,
தேவிஉமை பாகம்உறை செம்மலையின் நாதன்,
நாவியின் மகிழ்ச்சியையும் நான்முகன் உரைப்பான்.

(பொருள்) மிகுந்த புகழையுடைய விட்டுணு அருணாசலத்துக்குப் போய்த் தம்முடைய பாவத்தை நீக்கி அவர் அடைந்த பலனை நான்முகனார் சனகரிஷிக்குச் சொல்லிப், பார்வதி ஒரு புறத்தில் வாசம் செய்கின்ற அருணாசலேசர் புழுகு பூனையினாலே அடைந்த மகிழ்ச்சியைச் சொல்லத் தொடங்கினார் 31

பன்னிரண்டாவது
பாவம் தீர்த்த சருக்கம்
முற்றிற்று

## 13. புளகாதிபச் சருக்கம்

642 உருவுபல வேறுபுனை புளகன்எனும் ஓர்அசுரன்,
ஒருபொழுது, நாவி வடிவாய்
அருணகிரி மீதுஉலவி, அரியபுழு கேசிதறி,
அதிகபல மாய்அ வனியோர்
வெருவ,இமை யோர்முனிவர் ஒருவர்ஒழி யாதுஅரிய
வினைபுரிகை யால்,அ வர்எலாம்
கருணைமலை போல்இமய மலைஅமலை பாகர்உறை
கயிலைமலை மேவி மொழிவார்.

(பொருள்) நினைத்தபடி வெவ்வேறு உருவங்களை எடுத்துக்கொள்ளும் வல்லமை உள்ள புளகன் என்னும் ஓர் அசுரன், ஒரு நாள் புழுகு பூனை உருவம் அடைந்து செவ்விய நிறத்தை உடைய அம் மலையின் மேல் உலாவிக்கொண்டு புழுகைச் சிதறியபடியால், பரமசிவனால் அதிக பலம் பெற்றுப் பூமியில் உள்ளவர்கள் பயப்படவும், தேவர்கள் முனிவர்கள் எல்லாரும் துன்பப்படவும், கெட்ட செயல்களைச் செய்வதினாலே அவர்கள் எல்லாம் மலை அரசன் மகளாகிய பார்வதியை ஒரு பாகத்தில் வைத்து அருளி, கருணைமலை போன்ற பரமசிவன் வீற்றிருக்கின்ற கைலாய மலைக்குப் போய்ச் சொல்வார்கள். 1

643 புளகன்எனும் ஓர்அசுரன் மிருகவடி வாகிவதை
புரிய,உலகு ஏழும் முறைபோய்
விளைதுயரம் ஆயினர்கள் எனஉரைசெய் தார்அவர்கள்;
விமலன்,அவ ரோடு புகல்வான்;
அளவில்மண மானபுழுகு அருணகிரி மீதுஉதவி,
அதிகபலம் ஆய அன்னான்,
எளிதில்அழி யான்;அவனும் இனியகதி ஏற,உமை
இடர்அலையில் ஏற விடுவோம்.

(பொருள்) புளகன் என்னும் ஓர் அசுரன் புழுகு பூனை வடிவம் கொண்டு ஏழு உலகங்களிலும் முறையே புகுந்து சீவராசிகளையும் வதை செய்ய, அதனால் எல்லாரும் துன்பம் அடைந்தார்கள் என்று வந்தவர்கள் சொல்லிக்கொள்ள, பரமசிவன் அவர்களுக்குச் சொல்வார்; மணம் வீசும் அளவு இல்லாத புழுகை நமது உருவமாகிய அருணாசலத்தில் சிதறியதனால் அதிக பலம் அடைந்து இருக்கின்றான். அப்படிப்பட்டவன் எளிதில் அழிய மாட்டான். ஆனபடியினாலே அவனை முத்தியில் அடைவித்து உங்களைத் துக்கக் கடலினின்றும் கரை ஏற்றுவோம். 2

644 மேவும்என ஓதி,அரு ளோடுபுள காதிபனை
வேதமுதல் கூவி, "அவுண!
நாவிவடி வாகியஉன் ஆவிவிடு வாய்"என,
நாவிவடி வான்மொ ழிகுவான்;
"பாவைஒரு பாக!கரு ணாலய! புராதன!
பராபர!வி லோசன! அருளாய்!
ஏவல்எளி யேன்மொழியு மாறுஉதவு"எ ன,இறைவன்
ஈரடியின் மீது தொழுதே.

(பொருள்) நீங்கள் உங்கள் இடத்திற்குப் போய்ச் சேருங்கள் என்று விடை கொடுத்து அனுப்பிவிட்டு, மிக்க கருணையோடு புளகன் என்னும் அவ் அசுரனை வேத முதலாகிய பரமசிவன் அழைத்து, அசுரனே! "புழுகு பூனை வடிவம் கொண்ட உன் உயிரை விடக்கடவாய்!" என்று சொல்லிய அளவில், அவ் அசுரன் சொல்லுவான்; பார்வதியை ஒரு பக்கத்தில் கொண்டருளியவரே! கருணைக்கு இருப்பிடமாய் உள்ளவரே! பழமை யானவரே! பராபரம் ஆகியவரே! நெற்றிக்கண்ணை உடையவரே! உமக்கு ஏவல் செய்வதற்கு உரிய எளியேன் கேட்டுக்கொள்ளுகின்ற வரம் கொடுத்து அருளும் என்று பரம சிவனின் இரண்டு திருவடிகட்கும் வணக்கம் செய்து சொல்வான், 3

645 எனதுகிளை யாமிருகம் உனதுதிரு மேனிபுக
இனையபுழு காலும் ஒருபேர்
புனைக,என வேபரவி, உயிர்விடலும், நாவிகதி
புகுத,இறை யோன்அ ருளினன்;
மனம்உருகி யேமுனிவர், இமையவர்கள், மானிடர்கள்,
மதிமுடியின் மேல்அ ணியவே,
அனவரதம் மான்மதமும் இமசலமும் ஆலயம்
அருவிஎன வேபெ ருகுமே.

(பொருள்) நான் எடுத்த உருவமாகிய புழுகு பூனையின் மரபினால் உண்டாகின்ற புழுகை உம்முடைய திருமேனி ஏற்றுக்கொள்ளவும், அதனால் புழுகுஅணி இறைவன் என்று ஒரு நாமத்தை நீர்தரித்துக்கொள்ளவும், அருள்செய்ய வேண்டும் என்று வணங்கி, நாவி வடிவமாய் இருந்து, அவ் அசுரன் உயிர்விட்டஉடனே, அவ் அசுரன் கதி சேரும்படி பரமசிவன் அருள் பாலித்தார்; அப்படி அவனைக் காப்பாற்றியது கண்டு, முனிவர்களும், தேவர்களும், மனிதர்களும், மன உருக்கம் அடைந்து, சந்திரனைத் தரித்த பரமசிவனுக்குப் புழுகுக் காப்புச் சாத்த, எப்போதும் அப்புழுகு கரைந்து, பனி நீரோடு சுவாமி ஆலயம் அருவியை உடையதாகப் பெருகியோடும் 4

646 புழுகு,பனி நீர்,களபம் அணுஅளவ தேனும்,இறை
புனையும்வகை யால்உ தவினோர்,
விழிகுளிர நாடி,அரன் இணைஅடிக ளேபரவி
வினவினர்கள் வீடு பெறுவார்;
உழைமருவு பாணியினர் சரிதம்இது ஆகும்என
உவகைஉட னேஉ ரைசெய்தான்;
மொழியும்மல ரால்அயனை முனிவருட னே,சனக
முனிபுகழ்வி னோடு தொழுதான்.

(பொருள்) புழுகும், பனி நீரும், கலவைச் சந்தனமும் ஆகிய இவைகளில் அணுவளவேனும் சிவபெருமானுக்கு அணியக் கொடுத்தவர்களும், கண்கள் களிப்பு அடையும்படியாக அண்ணல் திருவடிகளை வணங்கி, அவர் காதையைக் கேட்டவர்களும் வீடு அடைவார்கள்; மானைக் கரத்தில் வைந்து அருளிய சிவபெருமானின் சிறந்த சரித்திரம் இது ஆகும் என்று களிப்பாய் நான்முகனூர் சொல்ல, அப்படிச் சொல்லிய நான்முகனைச் சனகரிஷி முனிவர்களோடு புகழ்ந்து பாராட்டி வணங்கினர். 5

647 அஞ்சுஎழுத்தும் வாழி!வாழி! அருணைவாழி! அருணையான்
கஞ்சம்உற்ற சரணம்வாழி! கருணைவாழி! கருணைபோல்
மஞ்சுபெற்ற வானம்வாழி! வையம்வாழி! வையமேல்
தஞ்சம்உற்ற நீறும்வாழி! சைவம்வாழி! வாழியே.

(பொருள்) பாவங்களைப் போக்கவல்ல திரு ஐந்து எழுத்தும் வாழ்க! வாழ்க! அண்ணாமலை வாழ்க! அண்ணாமலையார் உடைய தாமரை மலர்போன்ற திருவடிகள் வாழ்க! அப்பெருமான் கருணை வாழ்க! அக்கருணை போன்ற அழகாகிய வானமழை வாழ்க! நில உலகம் வாழ்க! உலகில் உயிர்களுக்குப் பற்றுக்கோடாகிய திருநீறு வாழ்க! சைவ சமயம் வாழ்க! வாழ்க! 6

648 ஞானம்வாழி! நன்மைவாழி! நாடுஇராச நீதிசீர்
தானம்வாழி! தருமம்வாழி! சாசுவேதம், ஆகமம்
கானம்வாழி! கல்விவாழி! கற்றுஅறிந்த கேள்விஅன்பு
ஆனபேர்கள் வாழி!ஈசன் அடியர்வாழி! வாழியே!

(பொருள்) ஞானம் வாழ்க! நன்மை வாழ்க! நாடும், அரசனும், அவனுக்கு உரிய நீதியும், புகழும், தானமும் வாழ்க! தருமம் வாழ்க; உண்மையாகிய வேதமும் ஆகமங்களும் வாழ்க! இசை வாழ்க! கல்வி வாழ்க! அவைகளைக் கற்று அறிந்தும், கேள்விப் பட்டும் யாவர் இடத்தும் அன்பு உண்டானவர்கள் வாழ்க! சிவன் அடியார்கள் வாழ்க! வாழ்க! 7

649 இக்கதை, படித்தோர், கேட்டோர்,
எழுதினோர், எழுதி வைத்தோர்,
மைக்கடல் சூழ்ந்த இந்த
வையகம் முழுதும் காத்து,
தக்கசந் தான போகம்,
சவுக்கியம் தழைய வாழ்ந்து,
திக்குஅரு ணேசர் அன்பால்
சிவபதம் பெறுவர் தாமே.

(பொருள்) இவ் அருணசலத்தின் பெருமைமிக்க சரித்திரத்தைப் படித்தவர்களும் கேட்டவர்களும், எழுதினவர்களும், எழுதி வைத்துக் கொண்டவர்களும், கரிய கடல் சூழ்ந்த உலகம் முழுவதும் ஆண்டு, தகுந்த மக்கட் செல்வமும், இன்பசுகமும் தழையும்படியாக வாழ்ந்து, யாவருக்கும் கதியாகிய அண்ணாமலை அண்ணல் அருளால் சிவபதம் அடைவார்கள். 8

பதின்மூன்றுவது
புளகாதிபச் சருக்கம்
முற்றிற்று.

அருணசலப் புராணம் மூலமும்-உரையும்
முற்றுப்பெற்றது.

உ

சிவமயம்

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

# பிழை திருத்தம்

| பாடல் எண் | அடி எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 2 | பதிகம்புனை பவனம்பினர் | பதிகம்புனை பவன்; நம்பினர் |
| 17 | 4 | பறவை எனத் திரிதல் போலும் | பறவைஎன எழுதல் போலும் |
| 19 | 2 | விழைவுதரு | இழைவுதரு |
| 22 | 3 | வருமகிடன் தொலைந்ததுவும் | வருமகிடற் றொலைத் ததுவும் |
| 24 | 1 | துகிர்க்குன்று ஊட | துகிர்க்குன்று ஊடே |
| 36 | 1 | பொய்ம்மகிட முகனை | பொய்ம்மயிட முகனை |
| ,, | 2 | கருமகிட முகமாகச் | கருமையிட முகமாகச் |
| 48 | 1 | சத்தியம் தான்மொழிவன் | சத்தியம தாமொழிவன் |
| ,, | 2 | அதில் ஓர் | அதில்ஓர் |
| 52 | 2 | சம்பு | சயம்பு |
| ,, | 4 | மேருடைப் | ஏருடைப் |
| 55 | 3 | பரவஅதில் | பரவுஅதில் |
| 57 | 4 | இமைய | இமய |
| 59 | 2 | வாழ்த்துவன் | வாழ்த்துவான் |
| 61 | 4 | உற்று, சீர் | உற்றசீர் |
| 68 | 1 | ஆர் ஊர் | ஆரூர் |
| 87 | 3 | பிரகலா தனனோடு | பிரகலா தன்னோடு |
| 102 | 3 | கோதமோடு | கோத மொடு |
| 119 | 3 | மேலா | மேலாம் |
| 122 | 2 | அடிமுடையை | அடிமுடியை |
| 125 | 3 | அகன்று அதற்பின் | அகன்றதற்பின் |
| ,, | 4 | சலிப்பதும்மற்று | சலிப்பதும் அற்று |
| 131 | 2 | உற்றஅரி | உற்றுஅரி |
| 133 | 3 | செம்அரன் | செம்மல்தன் |
| 152 | 2 | பறவைப்படு வானேன் | பறவைப்படிவு ஆனேன் |
| 163 | 1 | அறுபது கண்டு | அறுபதும்கண்டு |
| 168 | 4 | தலத்தை | கலத்தை |
| 189 | 2 | துண்டநா | துண்டம்நா |
| 193 | 2 | இரத்த மாவிகாரம் | இரத்தம் ஆவிசாரம் |

## பிழை திருத்தம்

| பாடல் எண் | அடி எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 196 | 4 | மேவினுன் | ஏவினுன் |
| 199 | 3 | கவிஉண்ட கனல்குண்டம் | கவிஉண்ட கனகலம்அப் |
| 217 | 2 | காமர் வேட்கை | காமவேட்கை |
| 236 | 1 | வரம்பெற்ற | வரம்பெறு |
| ,, | 2 | பரப்பியது | பரம்பியது |
| 236 | 3 | கொண்டார் | கொண்டான் |
| ,, | 4 | நீர் ஆஞ்சனம் | நீராஞ்சனம் |
| 244 | 1 | குடம்புழா | குடமுழா |
| 250 | 1 | நீர் அஞ்சனம் | நீ ராஞ்சனம் |
| 256 | 4 | இருத்தனன் | இருந்தனன் |
| 258 | 4 | புனைய | புனைவர் |
| 261 | 3 | கண்ணது ஆன | கண்ண ஆன |
| 265 | 3 | காசிஅவந் திதுவரை | காசி, அவந் திகை,துவரை |
| 268 | 1 | பழம்மதுவாய் | பழமதுவாய் |
| ,, | 2 | பழம்மதுவாய் | பழமதுவாய் |
| 269 | 1 | தாவரத்தை அறிவுஅளிக்கும் | தாபரத்தை அறிவு அழிக்கும் |
| 273 | 2 | வெற்பார் இமைய | வெற்புஆள் இமய |
| 274 | 4 | இரண்டுபோல் | இரண்டும்போல் |
| 278 | 4 | பிரிதுஒன்று | பிறிதுஒன்று |
| 289 | 4 | அனம், தமால், அமுதா | அனம், தமா லம்அதா |
| 293 | 2 | படிகஇலிங்கம் | படிகலிங்கம் |
| 297 | 1 | விதத்தில் | விதிர்த்துத் |
| 302 | 3 | தேறுகள் | தேறுகட் |
| 316 | 1 | மாதவர்க்குப் | மாதவற்குப் |
| 317 | 2 | சோதிஇவள் | சோதிஇவண் |
| 322 | 2 | திரு வாலை | திரு ஆவை |
| 325 | 4 | ஓதினள் | ஓதினள் |
| 327 | 1 | இதன்பெயர்த லேச்சரம் | இதன்பெயர் தலேசம் |
| 332 | 3 | பெருமளவும் | பெறுமளவும் |
| 337 | 4 | குருதிகொப் பளிக்கும் | குருதிகொப் புளிக்கும் |
| 340 | 2 | தொலைந்தார் | தொலைத்தார் |
| 358 | 3 | ஆல ஊரணி | ஆல ஊணி |

## பிழை திருத்தம்

| பாடல் எண் | அடி எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 359 | 3 | மிக்க | மிக்கு |
| 360 | 2 | செயிரியின் | செயிரின் |
| 365 | 3 | ஸிடுத்தவன் | விடுத்தவன் |
| 377 | 1 | மட்டில்அக் | மட்டுஇலக் |
| 383 | 3 | புன்னிதம்ஆ யினன் | உன்னதம்ஆ யினன் |
| ,, | 3 | சிவனும் | சிவனும் |
| 395 | 4 | எற்ற நூல் | எற்று நூல் |
| 397 | 4 | உண்ணி லாகிய | உண்ணி லாவிய |
| 399 | 3 | சூலப் ஓர் | சூலம் ஓர் |
| 407 | 3 | ஆர்கடைக் கண்ணி | ஆர்சடைக் கண்ணி |
| 410 | 2 | ஓட்டு தேர் | ஓட்டுதேர் |
| 410 | 3 | கூடு செக்கர்; பவளக்கொடிகளே | கூடு செக்கர் பவளக் கொடிகளே; |
| 433 | 4 | பாவம் | பாபம் |
| 442 | 3 | தாழையின், கமுகின், | தாழையும் கமுகின் |
| 445 | 1 | ஓர்பால் | ஓர்பால் |
| 447 | 3 | கண்ணுமலே உடையாய்! வினை | கண்ணு! மலேவு உடையார், வினை |
| 452 | 2 | நாம்வல்லா ளனுக்கு | வல்லாள மன்னுக்கு |
| 458 | 4 | சந்த தீஇல்லே | சந்த தீஇல்லே |
| 459 | 3 | செய்தனே | செய்தெனே |
| 461 | 4 | எந்தன் நல் | எந்தம் நல் |
| 465 | 3 | தகுயில் | ததியில் |
| 466 | 1 | தன்னைக் | தம்மைக் |
| 468 | 2 | அரசை | தவிசை |
| 476 | 1 | ஓர்ந்து | ஓர்தந்து |
| 478 | 1 | கேளும் | கேள்! நாம் |
| 483 | 2 | குழுதவாய் | குமுதவாய் |
| ,, | 3 | மேவுவ | மேவுவர் |
| 484 | 3 | இருந்து | இருந்தே |
| 487 | 1 | தனில் | தமில் |
| 489 | 4 | கடல்எழும் வழங்கும் | கடல்ஏழும் வயங்கும் |
| 491 | 1-2 | தாங்கள் இட்டதின் | தங்கள் இட்டத்தின் |

# பிழை திருத்தம்

| பாடல் எண் | அடி எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 494 | 1 | பேதையாம் சென்று | பேதையேம் சென்று |
| 504 | 3 | சேர்ந்து | சேர்ந்து அவ் |
| ,, | 4 | என்று | என்றே |
| 516 | 3 | சொன்னது | சொன்ன |
| 518 | 4 | எந்தை யால்ம கிழ்வும் | எந்தை நாணம் மகிழ்வும் |
| 519 | 2 | அங்கு | அங்கண் |
| 528 | 2 | தடமதில் | தடமதன் |
| 542 | 3 | மின்திகழ் | மின் நிகழ் |
| 545 | 3 | தூர்த்து | தூத்து |
| 546 | 3 | உதவித் தோர்ஓர் | உதவி னோர்ஓர் |
| 558 | 1 | ஓர் அடிக்கு | ஓர்அடி |
| 568 | 4 | உய்கிலா; | உய்கிலர்; |
| 569 | 3 | பிஞ்சு இள் | பிஞ்சுஇள |
| 572 | 1 | கடன்உடன் | கடனுடன் |
| 599 | 2 | செய்கையைப் | செய்கை; அப் |
| 610 | 4 | மூது அறிவாய் இன்நாலு | மூதறிவாயி னன்நாலு |
| 614 | 3 | அடைந்து; தவம் | அடைந்து உதவும் |
| 632 | 4 | பாழியினும் | பாழியினும் |
| 643 | 3 | அதிகபலம் ஆய அன்னன் | அதிகபல மாய்ம ருவினன் |
| 645 | 4 | ஆலயம் அருவினை | ஆலயம தருவினை |
| 648 | 2 | சாசுவேதம் | சரதவேதம். |